# எண்பத்து மூன்றில் தமிழ்

## பகுதி - 1




பதிப்பாசிரியர்:

டாக்டர் அன்னி தாமசு

# எண்பத்து மூன்றில் தமிழ்

## பகுதி-1

பதிப்பாசிரியர்
**டாக்டர் அன்னி தாமசு**
இணைப்பேராசிரியர்




**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**சென்னை-113**

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title | : | Eṉpathumūṉṟil Tamiḻ- Part-1 |
| Editor | : | Dr. ANNIE THOMAS<br>Associate Professor<br>International Institute of<br>Tamil Studies, Madras-113 |
| Publisher and copy right | : | International Institute of<br>Tamil Studies, Madras-113 |
| Publication No. | : | 207 |
| Edition | : | First |
| Date | : | 17-5-1995 |
| Language | : | Tamil |
| Paper Used | : | 16 kg white Priuting papet |
| Printing types used | : | 10, 12, 14, pts |
| Size of book | : | 21×18 cms |
| Price | : | Rupees Fourty Seven only<br>(Rs. 47/-) |
| No. of pages | : | VIII+ 292 |
| No. of copies | : | 1200 |
| Printers | : | Kavinkalai Achagam,<br>Kanthasami Nagar,<br>Palavakkam, Madras-600 041. |
| Artist | : | A.S. Natarajan |
| Subject | : | Tamil in 1983 |

# முன்னுரை

**டாக்டர் ச.சு. இராமர் இளங்கோ**
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

'பொருப்பிலே பிறந்து தென்னன்
புகழிலே கிடந்து சங்கத்(து)
இருப்பிலே யிருந்து வைகை
ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர்
நினைவிவே நடந்து ஓரேன
மருப்பிலே பயின்ற பாவை
மருங்கிலே வளருகின்றாள்'

இத்தகையதமிழை, நூற்றாண்டு வாரியாகவும் இலக்கிய, அரசியல்-சமயக் காலக் கட்டங்கள் வாரியாகவும் அணுகி அதன் வளர்ச்சியைக் கணித்த தமிழிலக்கிய வரலாற்று நிலையில் 'ஆண்டு தோறும் தமிழ்' என்பது ஒரு புதிய முயற்சியாகும்.

ஒவ்வொரு ஆண்டிலும் தமிழில் எந்தெந்தத் துறைக்குரிய எத்தனை நூல்கள் வருகின்றன; தமிழ் பற்றி என்னென்ன நிகழ்ச்சிகள் உலகம் முழுவதும் நடைபெற்றுக் கொண்டிருக் கின்றன என்பவற்றை அறிவதற்கு இத்தொகுப்புகள் துணையாக அமைகின்றன. 'எண்பதில் தமிழ்' என்ற நூலில் 35 கட்டுரைகள் இடம்பெற்றன. 'எண்பத்தொன்றில் தமிழ்' என்ற நூலில் 46 கட்டுரைகளும், 'எண்பத்திரண்டில் தமிழ்' என்ற நூலில் 44 கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. 'எண்பத்து மூன்றில் தமிழ்' என்ற இந்நூல் இரண்டு பாகங்களாக வெளியிடத் திட்டமிடப் பட்டு அவற்றில் முதல்பாகமாக இந்நூல் வெளிவருகின்றது. விரைவில் இதன் இரண்டாம் பாகமும் வெளிவரவுள்ளது. ஒவ்வொரு ஆண்டும் இதுபோன்ற தொகுப்புகள் வெளிவந்தால் உலகம் முழுவதும் தமிழில் என்னென்ன நடைபெற்றுக் கொண் டிருக்கின்றன என்பதை நாம் உணர அவை துணைபுரிவதோடு, பிற்கால ஆய்வுக்கும் மிகப்பெரிய பயனாக இத்தொகுப்புகள் அமையும்.

பல காரணங்களால் இந்நூல் பல ஆண்டுகளுக்குப் பின் இந்த 'யுவ' ஆண்டில் வெளிவருகின்றது. இந்நூல் வெளிவரக் கட்டுரைகள் வழங்கிய அறிஞர்களுக்கு எங்கள் நன்றி.

இந்நூலின் உருவாக்கப்பணிகள் அனைத்தையும் தெளிவாகவும் முறையாகவும் அமைத்துத் தந்த சமூகவியல் துறை இணைப் பேராசிரியர் முனைவர் அன்னி மிருதுலகுமாரி தாமசு பாராட்டிற்குரியவர்.

இதுபோன்ற நற்பணிகளுக்கெல்லாம் முழு நிலையில் ஒத்துழைப்புத் தருகின்ற மாண்புமிகு கல்வி அமைச்சர் பேராசிரியர் **க. பொன்னுசாமி** எம்.எஸ்ஸி.பி.எல்., அவர்களுக்கு நாங்கள் என்றும் நன்றி உடையோம்.

இந்நூலின் அச்சுப்பணியை மேற்கொண்ட கவின்கலை அச்சகத்தினர்க்கு நன்றி.

**இயக்குநர்**

# பதிப்புரை

ஆண்டு நூல்கள் (Year books) ஒரு நாட்டிலுள்ள அல்லது உலகிலுள்ள பல்வகையான தகவல்களின் பதிவை வழங்கும் தரவுகளாக அமைகின்றன.

அவைபோன்று, ஆண்டுகள் தோறும் தமிழில் ஏற்படுகின்ற வளர்ச்சியைக் கணிக்க வேண்டும் என்ற விருப்பு 1974-இல் அப்போதைய இயக்குநர் டாக்டர் ச.வே. சுப்பிரமணியன் அவர்களால் திட்டமாக உருவாயிற்று. ‘எழுபத்து நான்கில் தமிழ்’ எனும் இத்திட்டத்தின் முதற்பணி நிறுவன ஆய்வலுவலரொருவருக்கு வழங்கப்பெற்றது. ஆனால் பலஆண்டுகள் காத்திருந்தும் அப்பணி நிறைவுசெய்யப் பெறவில்லை. ஒருவர் உழைப்பைவிடப் பல்லோரர் கூட்டுமுயற்சி இத்தகு திட்ட நிறைவேற்றத்துக்கு உதவும் என்ற மறுசிந்தனையினடிப்படையில் மீண்டும் எண்பதில் இப்பணி மேற்கொள்ளப்பெற்றது.

நிறுவனத்தின் அப்போதைய இயக்குநர் டாக்டர் ச,வே. சுப்பிரமணியன் அவர்களை முதன்மையாகக் கொண்டு, ஆய்வலுவலரொருவரின் இணைப்பணியுடன், நிறுவனத்திற்கு உள்ளும் வெளியும், தமிழகத்திலும் பிற மாநிலங்களிலும், வெளி நாடுகளிலும் அறிந்த அறிஞர் ஒத்துழைப்புடன் ‘ஆண்டுகளில் தமிழ்’ தொகுதிகள் உருப்பெற்றன.

‘எண்பதில் தமிழ்’ 1982-இலும் (டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், டாக்டர் ர. விஜயலட்சுமி)

‘எண்பத்தொன்றில் தமிழ்’ 1983-இலும் (டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், டாக்டர் ந. கடிகாசலம்)

‘எண்பத்திரண்டில் தமிழ்’ 1985.இலும் (டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், டாக்டர் ந. கடிகாசலம், டாக்டர் அன்னிதாமசு)

நிறுவன வெளியீடாகத் தமிழுக்கும் தமிழாய்வுக்கும் தமிழ் வரலாற்றுக்கும் தனிப் பரிமாணம் வழங்கின. இவற்றின் தொடர்ச்சியாக,

‘எண்பத்து மூன்றில் தமிழ்’ நூல் தற்போது வெளிவருகின்றது.

'எண்பத்து மூன்றில் தமிழ்'—க்குக் கட்டுரைகள் கோரும் முதல் வேண்டுகோள் சுற்றறிக்கை 20-8-83-இல் அனுப்பப் பெற்றது. 16-10-84–இல் நினைவூட்டுக் கடிதங்கள் அஞ்சலாயின. இரண்டாம் நினைவூட்டல் 1-10-85–இல் அனுப்பப்பெற்றது. அதனால், 15ஆக அமைந்த கட்டுரைகள் 22ஆக வளர்ந்து 1986-இல் பதிப்புப்பணி நிறைவுற்றது.

முதற்பகுதியான இந்நூலில் பத்துக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

கட்டுரையாளர் பாராட்டுக்கும் நன்றிக்கும் உரியவர்.

அச்சுக்குச் செல்லுமுன் கட்டுரைகளை மறுபார்வையிட்டு உதவியவர் முனைவர் ந. கடிகாசலம், மெய்ப்புத் திருத்தும் பணியிலும் சொல்லகராதி உருவாக்கத்திலும் இவரும் முனைவர் ச. சிவகாமியும் உதவினர். நன்றி உரித்து.

எண்பத்து மூன்றில் தமிழ்-பகுதி 2 விரைவில் வெளிவரும். நூல் வெளிவரத் துணைநின்ற இயக்குநர், அச்சகத்தினர்க்கு நன்றி.

**அன்னிதாமசு**
பதிப்பாசிரியர்

1. பெ. அனந்தசயனம், மேனாள் ஆய்வாளர்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113

2. கி. இராசா, இணைப் பேராசிரியர், பாரதிதாசன் பல்கலைக் கழகம், திருச்சி

3. இராம. குருநாதன், பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை-10

4. வை. சோமசுந்தரம், மேனாள் ஆய்வாளர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113

5. பொ. திருஞான சம்பந்தம், தமிழாசிரியர், வெண்பாவூர் அஞ்சல், திருச்சி மாவட்டம்-621 116

6. வெ. நல்லதம்பி, தயாரிப்பாளர், சென்னைத்தொலைக் காட்சி நிலையம், சென்னை-600 005

7. தா. நீலகண்ட பிள்ளை, விரிவுரையாளர், இந்து கல்லூரி, நாகர்கோவில்

8. இரா. பாலசுப்பிரமணியன், பேராசிரியர், தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக் கழகம், காரைக்குடி

9. வெ. த. புகழேந்தி, துணையாசிரியர், தினமணி, சென்னை-600 002

10. சு. வேங்கடராமன், தமிழ்த்துறை, மதுரை-காமராசர் பல்கலைக் கழகம், மதுரை-21

# உள்ளே

# திரைப்படம்

வெ. த. புகழேந்தி

தமிழ்த் திரைப்படத்துறை முன் ஆண்டுகளை நோக்க இவ்வாண்டு எண்ணிக்கையில் குறைந்த படங்களையே வெளியிட்டுள்ளது. இந்த ஆண்டுதான் 'யு ஏ' என்ற புதிய தணிக்கை முத்திரை ஏற்பட்டது. நாடகங்களைப் படமாக்குவது இந்த ஆண்டு மிகுந்துள்ளது. நவீன அணுகுமுறையும், புதிய போக்கும் தமிழ் சினிமாவுக்கு வளம்சேர்த் துள்ளன.

## முன்னுரை

இந்தியாவின் முதல் பேசும் படமான 'அலம் அரா' 1931ஆம் ஆண்டு மார்ச் மாதம் வெளி வந்தது. அதே ஆண்டு அக்டோபர் மாதத்தில் தமிழிலும் (தெலுங்கிலும்) முதல் பேசும் படமான 'காளிதாஸ்' வெளியானது. 1930, 1940களில், பெரும்பாலான தமிழ்ப் படங்கள் பம்பாயிலேயே தயாரிக்கப்பட்டுக் கொண்டிருந் தன. இந்த நிலை கொஞ்சம் கொஞ்சமாக மாறியது. தமிழ்ப் படங்களுக்கு மட்டுமின்றி, தென்னிந்திய மொழிப் படங்களுக்கும் மையமாய் அமையும் வண்ணம் தமிழ் நாட்டில் படப்பிடிப்பு நிலையங்கள் தோன்றின. ஏனைய தென்னிந்திய மொழிப் படங்களைவிடத் தமிழ்ப் படங்களே எண்ணிக்கையில் அதிகமாய் இருந்தன. 1960களில் தான், தெலுங்கு மற்றும் மலையாளப் படங்களின் எண்ணிக்கை உயரத் தொடங்கியது. என்றாலும், எண்ணிக்கையளவில் தமிழ்ப் படங்களே முன்னணியில் இருந்தன. சென்ற ஆண்டு (1982) கூட, 119 படங்களைத் தயாரித்து வெளி யிட்டுத் தமிழ்த் திரையுலகமே முதன்மை வகித்தது. தெலுங்கில் 91 படங்களும், மலையாளத்தில் 102 படங்களும், கன்னடத்தில் 48 படங்களுமே அந்த ஆண்டில் வெளிவந்திருந்தன. 1983இல், தெலுங்கு, மலையாளம், கன்னட மொழிகளில் தயாரிக்கப்பட்டு வெளிவந்த படங்களின் எண்ணிக்கை, சென்ற ஆண்டைவிட

அதிகரித்திருந்தது. தெலுங்கில் 105 படங்களும், மலையாளத்தில் 104 படங்களும், கன்னடத்தில் 55 படங்களும் இந்த ஆண்டில் வெளிவந்திருந்தன. தமிழிலோ, சென்ற ஆண்டை விடக் குறைவாய், 96 படங்களே வெளிவந்தன. எண்ணிக்கையளவிலும், தெலுங்கு, மலையாளப் படங்களை அடுத்துத்தான் தமிழ்ப் படங்கள் இடம் பெற்றன.

## வெளிவந்த படங்கள்

| | |
|---|---|
| 1. அபூர்வ சகோதரிகள் | 2. அடுத்த வாரிசு |
| 3. ஆயிரம் நிலவே வா | 4. இமைகள் |
| 5. என்னைப்பார் என் அழகைப் பார் | 6. கை வரிசை |
| 7. சந்திப்பு | 8. சட்டம் |
| 9. சட்டத்துக்கு ஒரு சவால் | 10. சாட்சி |
| 11. சிகப்பு சூரியன் | 12. சில்க் சில்க் சில்க் |
| 13. சீறும் சிங்கங்கள் | 14. சுமங்கலி |
| 15. சூரக்கோட்டை சிங்கக்குட்டி | 16. சூரப்புலி |
| 17. தங்க மகன் | 18. தலை மகன் |
| 19. தாய்வீடு | 20. துடிக்கும் கரங்கள் |
| 21. தூங்காதே தம்பி தூங்காதே | 22. நான் சூட்டிய மலர் |
| 23. நீறு பூத்த நெருப்பு | 24. நீதிபதி |
| 25. பகவதிபுரம் ரெயில்வே கேட் | 26. பாயும் புலி |
| 27. போலீஸ்... போலீஸ்... | 28. மலையூர் மம்பட்டியான் |
| 29. முத்து எங்கள் சொத்து | 30. வளர்த்த கடா |
| 31. வெள்ளை ரோஜா | 32. ரத்தக் காட்டேரியின் மர்ம மாளிகை |
| 33. அலைபாயும் நெஞ்சங்கள் | 34. ஆனந்தக் கும்மி |
| 35. இளமைக் காலங்கள் | 36. இளைய பிறவிகள் |
| 37. இனிமை இதோ இதோ | 38. உயிருள்ள வரை உஷா |
| 39. உறங்காத நினைவுகள் | 40. என் ஆசை உன்னோடுதான் |
| 41. கசப்பும் இனிப்பும் | 42. கள்வடியும் பூக்கள் |
| 43. காஷ்மீர் காதலி | 44. காமன் பண்டிகை |
| 45. கிராமத்துக் கிளிகள் | 46. கொக்கரக்கோ |
| 47. சரணாலயம் | 48. தூரம் அதிகமில்லை |
| 49. தூங்காத கண்ணின்றுஒன்று | 50. நான் உன்னை நினைச்சேன் |

51. நெஞ்சோடு நெஞ்சம்
52. நெஞ்சமெல்லாம் நீயே
53. மண் வாசனை
54. மெல்லப் பேசுங்கள்
55. ராகங்கள் மாறுவதில்லை
56. ஜோடிப்புறா
57. ஜோதி
58. ஒண்ணும் தெரியாத பாப்பா
59. அண்ணே அண்ணே
60. ஒப்பந்தம்
61. ஒரு கை பார்ப்போம்
62. ஒரு புல்லாங்குழல் அடுப்பூதுகிறது
63. சாட்டை இல்லாத பம்பரம்
64. சுபமுகூர்த்தம்
65. டௌரி கல்யாணம்
66. பிரம்மச்சாரிகள்
67. புத்திசாலிப் பைத்தியங்கள்
68. பொய்க்கால் குதிரை
69. நாலு பேருக்கு நன்றி
70. யுத்த காண்டம்
71. வீட்டுல ராமன் வெளியில கிருஷ்ணன்
72. அந்த சில நாட்கள்
73. இன்று நீ நாளை நான்
74. உண்மைகள்
75. ஒரு ஓடை நதியாகிறது
76. சம்சாரம் என்பது வீணை
77. தம்பதிகள்
78. தங்கைக்கோர் கீதம்
79. தண்டிக்கப்பட்ட நியாயங்கள்
80. மனைவி சொல்லே மந்திரம்
81. மாறுபட்ட கோணங்கள்
82. முந்தானை முடிச்சு
83. யுக தர்மம்
84. உருவங்கள் மாறலாம்
85. சஷ்டி விரதம்
86. பக்த துருவ மார்க்கண்டேயா
87. யாமிருக்க பயமேன்
88. வில்லியனூர் மாதா
89. அனல் காற்று
90. இது எங்க நாடு
91. ஒரு இந்தியக் கனவு
92. கண் சிவந்தால் மண் சிவக்கும்
93. தோடிராகம்
94. மிருதங்க சக்கரவர்த்தி
95. எங்களாலும் முடியும்
96. பெண்மையின் உண்மை

இந்த 96 படங்களில் சரிபாதி (48 படங்கள்) வயது வந்தவர்கள் மட்டுமே பார்க்கத் தகுந்தவை என்று 'ஏ' முத்திரை பெற்றவை. வயது வந்தவர்கள் மட்டுமே பார்க்கத் தகுந்த சில படங்களை, பெற்றோரின் சம்மதத்துடன் வயதுக்கு வராதோரையும் பார்க்க அனுமதிப்பதென்று தணிக்கையாளர்கள் முடிவெடுத்தனர். அதன் பொருட்டு 'யு. ஏ' என்ற புதிய முத்திரையை அவர்கள் இந்த ஆண்டு முதல் வழங்கினர். இந்த 'யு.ஏ.' முத்திரை பெற்ற படங்கள் மூன்று. நெஞ்சோடு நெஞ்சம், ரத்தக் காட்டேரியின் மர்ம மாளிகை ஆகிய இரு படங்களைத் தவிர, ஏனைய படங்கள் வண்ணப் படங்கள், மிகவும் நீளமான படம் 'தங்கைக்கோர் கீதம்'

(4878 மீட்டர்). நீளம் குறைவான படம் 'ஒண்ணும் தெரியாத பாப்பா' (2505 மீட்டர்). 'எங்களாலும் முடியும்' என்ற படம் 'சில்ரன் ஃபிலிம் சொசைட்டி'யால் தயாரிக்கப்பட்டிருந்தது. இந்தப் படத்துக்கும், 'பக்த துருவ மார்க்கண்டேயா' படத்துக்கும் தமிழக அரசு 'வரி விலக்கு' அளித்திருந்தது. இந்த இரண்டு படங்களில் 'எங்களாலும் முடியும்' படத்தில் பெரும்பாலும் சிறுவர்களே நடித்திருந்தனர். 'பக்த துருவ மார்க்கண்டேயா'வில் முற்றிலும் சிறுவர்களே நடித்திருந்தனர். நீதிபதி, ஒரு புல்லாங்குழல் அடுப்பூதுகிறது, சட்டம், தாய்வீடு, பாயும்புலி, அடுத்த வாரிசு, தங்கமகன், மனைவி சொல்லே மந்திரம், தூங்காதே தம்பி தூங்காதே, வெள்ளை ரோஜா, உயிருள்ளவரை உஷா, தங்கைக் கோர் கீதம் ஆகிய பன்னிரண்டு படங்கள் நூறு நாட்கள் ஓடி வெற்றி பெற்றன. மண்வாசனை, முந்தானை முடிச்சு, மலையூர் மம்பட்டியான், சந்திப்பு ஆகிய நான்கு படங்கள் வெள்ளி விழா (175 நாட்கள்) கொண்டாடின. பத்து நாட்களுக்கும் குறைவாய் ஓடிய படங்கள் இருபத்து ஆறு. காமன் பண்டிகை, கசப்பும் இனிப்பும், நெஞ்சோடு நெஞ்சம் ஆகிய மூன்று படங்கள் சென்னை யில் வெளியிடப்படவில்லை. பாயும்புலி, தூங்காதே தம்பி தூங் காதே, முந்தானை முடிச்சு, சூரக்கோட்டை சிங்கக்குட்டி ஆகிய நான்கு படங்களைத் தயாரித்த ஏ.வி.எம். 'அதிக படங்களைத் தயாரித்த நிறுவனம்' என்ற பெருமையைப் பெறுகிறது.

### படங்களின் தன்மைகள்

படங்களின் தன்மையைக் கதையின் அடிப்படையில் பார்க்கும் போது, அவற்றைப் பொழுதுபோக்குப் (மசாலா) படங்கள், காதல் கதை சொல்லும் படங்கள், நகைச்சுவைப் படங்கள், குடும்பப் படங்கள், பக்திப் படங்கள் என்று பிரித்துக்கொள்ள முடியும். 1983இல் வெளிவந்த தமிழ்ப் படங்களில் மூன்றில் ஒரு பாகம் (32) பொழுது போக்குப் படங்களே. பட்டியலில் அபூர்வ சகோதரிகள்' முதல் 'ரத்தக் காட்டேரியின் மர்ம மாளிகை' வரை உள்ள 32 படங்கள் இத்தகையவை, 'அலை பாயும் நெஞ்சங்கள்' முதல் 'ஒண்ணும் தெரியாத பாப்பா' வரையிலான 26 படங்கள், காதல் கதை சொன்னவை. 'அண்ணே அண்ணே' முதல் 'வீட்டுல ராமன் வெளியில கிருஷ்ணன்' வரை உள்ள 13 படங்கள் நகைச் சுவைக்கு சிறப்பிடம் அளித்தவை. 'அந்த சில நாட்கள்' முதல் 'யுக தர்மம்' வரை உள்ள 12 படங்கள் குடும்பக்கதை சொன்னவை. 'உருவங்கள் மாறலாம்' முதல் 'வில்லியனூர் மாதா' வரை உள்ள

ஐந்து படங்கள் பக்திக் கதை கூறியவை. அனல்காற்று, இது எங்க நாடு, ஒரு இந்தியக் கனவு, கண் சிவந்தால் மண் சிவக்கும் ஆகிய நான்கு படங்களும், இந்திய அரசியலமைப்பை, ஏற்றத் தாழ்வுள்ள சமுதாயத்தை விமர்சித்தவை. தோடிராகமும், மிருதங்க சக்கர வர்த்தியும் இசைக்கலைஞர்கள் பற்றிய படங்கள். 'எங்களாலும் முடியும்' சிறுவர்களுக்கு ஒழுக்கத்தையும், தன்னம்பிக்கையையும் போதித்த படம். 'பெண்மையின் உண்மை' மருத்துவக் கல்வியின் பொருட்டு எடுக்கப்பட்டதால் விளம்பரம் செய்யப்பட்ட படம். கதை அமைப்பின் அடிப்படையில் அல்லாது, தரமான படங்கள், தரமற்ற படங்கள் என்று பாகுபடுத்திப் பார்த்தால், மண்வாசனை, உண்மைகள், மலையூர் மம்பட்டியான் ஆகிய மூன்று படங்களே 'தரமான படங்கள்' என்று சொல்லத் தக்கதாய் இருக்கின்றன.

**கலைஞர்கள்**

தொழில் நுணுக்கக் கலைஞர்களில், 1983இல் அதிகப்படங் களை இயக்கியவர்கள் எஸ். பி. முத்துராமனும், இராம. நாராயண னும் ஆவர். இருவரும் தலா நான்கு படங்களை இயக்கியிருந் தனர். மூத்த நடிகர்களில் சிவாஜிகணேசனும், ரஜினிகாந்தும் தலா ஆறு படங்களிலும், கமலஹாசன் இரண்டு படங்களிலும், முக்கியப் பாத்திரங்களில் நடித்திருந்தனர். இவர்கள் மூவரும் கௌரவ வேடங்களில் 'வந்துபோன' படம் 'உருவங்கள் மாறலாம்'. அதிகப் படங்களில் முக்கியப் பாத்திரமேற்று நடித்தவர்கள் சிவகுமாரும், மோகனுமே! அவர்கள் இருவரும் தலா எட்டுப் படங் களில் கதாநாயகனாய் நடித்திருந்தனர். நடிகைகளில் சுலக்ஷணா வும், ராதாவும் தலா பத்துப் படங்களில் கதாநாயகியராய் நடித்து முதன்மை வகித்தனர். துணைப் பாத்திரங்களில் நடித்தவர்களில் ஜெய்சங்கர் 15 படங்களுடனும், வனிதா 14 படங்களுடனும் முதன்மை வகித்தனர். நகைச்சுவை நடிகர்களில் ஒய். ஜி. மகேந் திரன் 24 படங்களோடு முன்னணி வகித்தார். அவற்றில் 'உருவங்கள் மாறலாம்' அவர் கதாநாயகனாக நடித்த படம். நகைச்சுவை நடிகையரில் 25 படங்களோடு முதன்மை வகித்தார் மனோரமா.

வசனகர்த்தாக்களில் தூயவனும், பஞ்சு அருணாசலமும் தலா ஐந்து படங்களோடு முன்னிலை வகித்தனர். அதிகப் படங்களுக்கு (30) இசையமைத்தவர் இளையராஜா. ஐந்து படங்களுக்கு ஒளிப்பதிவு செய்திருந்த என். கே. விஸ்வநாதன் அதிகப் படங் களுக்கு ஒளிப்பதிவு செய்தவர் ஆகிறார். தலா ஆறு படங்களுக்குப் படத்தொகுப்புப் பணி மேற்கொண்ட தேவனும், விட்டலும்

அதிகப் படங்களைத் தொகுத்தவர்களாகின்றனர். கவர்ச்சி நடிகை 'சில்க் ஸ்மிதா' 26 படங்களில் நடனமாடியுள்ளார். நடன இயக்குநர்களில் 'புலியூர் சரோஜா', 25 படங்களுக்குப் பணி புரிந்து முதலிடம் பெறுகிறார். அதிகமான (25) படங்களுக்குச் சண்டைக் காட்சிகளை அமைத்துத் தந்தவர் 'ஜூடோ ரத்னம்' ஆவார். பாடலாசிரியர்களில் 48 படங்களுக்குப் பாடலெழுதி முதலிடம் பெறுபவர் வாலி. சிவாஜிகணேசன் நடித்த ஆறு படங்களில், 'இமைகள்' ஒன்றைத் தவிர மற்ற ஐந்தில், அவரது மகன் பிரபுவும் அவருடன் நடித்திருந்தார். ரேவதி, நளினி, இளவரசி, ஊர்வசி, சசிகலா, பானுபிரியா, அஸ்வினி ஆகிய நடிகைகள் அறிமுகமாயினர். மலையாளப் படங்களில் கதாநாயகியாய் நடித்துவந்த ஜலஜாவும் இந்த ஆண்டு 'மாறுபட்ட கோணங்கள்' மூலம் தமிழில் அறிமுகமானார். பாண்டியன், ஆனந்த்பாபு, வசந்த், சங்கர், சே. கோபாலன், மனோஜ் ஆகிய நடிகர் அறிமுகமாயினர் பாடலாசிரியர் வாலி 'பொய்க்கால் குதிரை'யில் கதாநாயகியின் தந்தையாய் நடித்திருந்தார். கன்னடப் படங்களில் நடித்து வந்த ராமகிருஷ்ணாவும் இந்தப் படத்தின் மூலம் தமிழுக்கு அறிமுகமானார்.

புதிய இயக்குநர்களில் ஸ்ரீதர்ராஜன், கே. ரங்கராஜ், கார்த்திகேயன், விஜயசந்தர், சிறுமுகை ரவி ஆகியோர் குறிப்பிடத் தக்கவர். பின்னணிப் பாடகர் எஸ். பி. பாலசுப்ரமணியம் 'துடிக்கும் கரங்கள்' படத்தின் மூலம் தமிழுக்குப் புதிய இசையமைப்பாளராய் அறிமுகமானார். கதாசிரியராக அறிமுகமானவர்களில் கவிஞர் வைரமுத்து (ஆனந்தக் கும்மி)வும் ஒருவராவார்; பாண்டியன் (உண்மைகள்), ராகவன் தம்பி (மலையூர் மம்பட்டியான்) இருவரும் குறிப்பிடத்தக்க கதாசிரியர், தான் இயக்கும் படங்களுக்குத் தானே கதை-வசனம்-பாடல்கள் எழுதி இசையும் அமைத்துக் கொண்டிருந்த டி. ராஜேந்தர், இந்த ஆண்டு 'தங்கைக்கோர் கீதம்' படத்தின் மூலம் ஒளிப்பதிவாளராகவும் அறிமுகமானார். அந்தப் படத்தில், ஒரு முக்கிய பாத்திரத்தில் நடித்த அவர், 'ஒரே படத்தில் அதிகப் பொறுப்புகளை ஏற்றவர்' என்ற பெருமையினைப் பெறுகிறார். அந்தப் படத்தினைத் தயாரித்தது அவரது மனைவியே என்பதும் குறிப்பிடத் தக்கது. புதிய தயாரிப்பாளர்களில் சிவ. ராமதாஸ் (மலையூர் மம்பட்டியான்), சித்ரா லட்சுமணன் (மண் வாசனை), துவாரகீஷ் (அடுத்த வாரிசு), உஷா ராஜேந்தர் (உயிருள்ளவரை உஷா) ஆகியோர் குறிப்பிடத் தகுந்தோர்.

**கதைகளின் கதை**

இந்த ஆண்டில்தான் நாடகங்களைப் படமாக்குவது அதிகரித்தது. தனது நாடகங்களான ஒரு இந்தியக் கனவு, யுத்த காண்டம் ஆகியவற்றை அதே பெயரிலும், 'சொர்க்க பூமி'யை 'அனல் காற்று' என்ற பெயரிலும் படமாக்கினார் கோமல் சுவாமிநாதன். கிரேஸி மோகனின் 'திருமணங்கள் சலூனில் நிச்சயிக்கப் படுகின்றன' என்ற நாடகத்தைப் 'பொய்க்கால் குதிரை' என்ற பெயரில் இயக்குநர் கே. பாலசந்தர் திரைப்படமாக்கினார். தனது 'ஒரு புல்லாங்குழல் அடுப்பூதுகிறது' நாடகத்தை அதே பெயரில் திரைப்படமாக்கினார், மௌலி. 'டௌரி கல்யாண வைபோகமே' என்ற தனது நாடகத்தை, 'டௌரி கல்யாணம்' என்ற பெயரில் திரைப்படமாக்கினார், விசு. 'சுபமுகூர்த்த பத்திரிகை' என்ற பெயரில் வெற்றி பெற்ற நாடகம் ஒன்று 'சுப முகூர்த்தம்' என்ற பெயரில் திரைப்படமாய் வந்தது. அந்த சில நாட்கள், பிரம்மச்சாரிகள், ஜோடிப்புறா, புத்திசாலிப் பைத்தியங்கள், நாலுபேருக்கு நன்றி ஆகிய படங்களும் வெற்றிகரமாய் நடந்த நாடகங்களின் திரை வடிவமே! வெற்றி பெற்ற தமிழ் நாடகங்கள் மட்டுமின்றி, பிற மொழிகளில் வெற்றி கண்ட திரைப்படங்களும் தமிழில் தயாரிக்கப் பட்டு வெளிவந்தன. இந்தியில் வெளிவந்த 'ராஜா ஜானி', 'அடுத்த வாரிசு' என்ற பெயரிலும், 'நசீப்' 'சந்திப்பு' என்ற பெயரிலும், 'தோஸ்தானா' 'சட்டம்' என்ற பெயரிலும், 'ஆஷா' 'சுமங்கலி' என்ற பெயரிலும் தமிழில் வெளிவந்தன. மலையாளத்தில் வெளிவந்த 'ஈ நாடு' தமிழில் 'இது எங்க நாடு' என்ற பெயரிலும், 'மிஸ்டர் மைக்கேல்' 'கைவரிசை' என்ற பெயரிலும், 'போஸ்ட் மார்ட்டம்', 'வெள்ளை ரோஜா' என்ற பெயரிலும் வெளியாயின. தெலுங்கில் வெளிவந்த 'ஜஸ்டிஸ் சௌத்ரி' 'நீதிபதி' என்ற பெயரிலும், 'இன்டிலோ ராமையா வீதிலோ கிருஷ்ணையா' 'வீட்டிலே ராமன் வெளியிலே கிருஷ்ணன்' என்ற பெயரிலும் தமிழில் வெளிவந்தன. தமிழில் வெளிவந்த 'இமைகள்' படத்தின் மூலக்கதை ஒரு மராத்தி மொழிப் படத்தினுடையது. தெலுங்கில் வெளிவந்து வெற்றி பெற்ற 'பலிதானம்' படத்தை இயக்கிய எஸ். ஏ. சந்திரசேகரே, தமிழில் 'சாட்சி' என்ற பெயரில் இயக்கினார். 'பலிதானம்', 'சாட்சி' இவற்றின் மூலக்கதை ஆங்கிலத்தில் வெளிவந்து பெரும் வெற்றி பெற்ற ஆஸ்திரேலியப் படமான 'மேட்மாக்ஸ்' படத்தினுடையது. அந்தக் கதையைச் சிறிது மாற்றி, தெலுங்கிலும், தமிழிலும் எடுத்திருந்தனர். இவ்வாறு கதைகளைத் 'திருடி' ஒரு சில மாற்றங்களைச்

செய்து படமாக்குவதற்கு 'உல்ட்டா' என்று பெயரிடப்பட்டது. இந்த 'உல்ட்டா' பட வரிசையில் பல படங்கள் சேர்கின்றன. இந்தியில் வெளிவந்த 'யாதோன்—கி—பாராத்' சில மாற்றங்களுடன் 'அபூர்வ சகோதரிகள்' என்றாயிற்று, ஆங்கிலப் படமான 'OH GOD' 'உருவங்கள் மாறலாம்' என்ற பெயரில் உருமாறிற்று. 'பாயும் புலி' படத்தில் '36th Chamber of Shaolin' ஆங்கிலப் படத்தில் கையாளப்பட்டிருந்த பின்னணியைப் பயன்படுத்தியிருந்தனர். சென்ற ஆண்டுத் தமிழில் பெரும் வெற்றி பெற்ற 'சகல கலா வல்லவன்' படத்தை, சில மாற்றங்களுடன் 'சீறும் சிங்கங்கள்' என்ற பெயரில் வெளியிட்டனர். 'சகல கலா வல்லவன்' அதற்கு முன்னர் வெளிவந்த 'பெரிய இடத்துப் பெண்', 'பட்டிக்காடா பட்டணமா' என்ற இரண்டு படங்களின் கலவை என்பது குறிப்பிடத்தக்கது. பல ஆண்டுகளுக்கு முன் தமிழிலும் தெலுங்கிலும் பெரும் வெற்றி பெற்ற 'மனோகரா'வைச் 'சூரக் கோட்டை சிங்கக் குட்டி' என்ற பெயரிலும் 'குடியிருந்த கோயில்' படத்தின் கதை உல்ட்டா செய்யப்பட்டு 'தூங்காதே தம்பி தூங்காதே' என்ற பெயரிலும் வெளிவந்தன. 'இருவர் உள்ளம்' சிறிய மாற்றங்களுடன் 'ராகங்கள் மாறுவதில்லை' என்று மாறியது. இன்னும் பல படங்கள், ஒரே படத்தின் கதையைத் தழுவி மட்டும் இராது, பல படங்களின் கலவையாக இருந்தன.

படங்களின் கதைகளை மட்டுமல்லாது, நாவல்களைத் திருடும் போக்கும் காணப்பட்டது. ஆங்கில நாவலான 'Man Woman And The Child' தமிழில் 'ஒரு ஓடை நதியாகிறது' என்ற பெயரில் தழுவி எடுக்கப்பட்டது. இதே நாவல் இந்தியில் 'மசூம்' என்ற பெயரிலும், மலையாளத்தில் 'ஓளங்கள்' என்ற பெயரிலும் ஏற்கெனவே வெளிவந்துவிட்டது. எந்த மொழித் தயாரிப்பாளரும், மூலக்கதாசிரியரிடம் அனுமதி பெற்றதாய்த் தெரியவில்லை. 'மலையூர் மம்பட்டியான்' படக்கதை, சேலம் மாவட்டத்திலுள்ள மலையூரில் வாழ்ந்து வந்த மம்பட்டியானின் வாழ்வில் நடைபெற்ற சம்பவங்களை அடிப்படையாய்க் கொண்டதென்று கூறப்பட்டது. மம்பட்டியானின் வரலாற்றைப் படமாக்குவதற்கான உரிமைகளைத் தான் வாங்கி வைத்திருப்பதாயும், மற்றவர்களுக்கு அதனைப் படமாக்கும் உரிமையில்லையென்றும் சட்ட மேலவைத் துணைத் தலைவர் புலவர் புலமைப்பித்தன் வழக்கு தொடர்ந்தார். என்றாலும், மலையூர் மம்பட்டியான் வெளிவந்து பெரும் வெற்றி பெற்றது. இந்தப் படத்தில் இடம்பெற்ற சில நகைச்சுவைக் காட்சிகள், தான் கதை எழுதும் 'ஆனந்தக் கும்மி' படத்தில்

வருபவை என்று கவிஞர் வைரமுத்து கூறியதால், மலையூர் மம்பட்டியானிலிருந்து அந்தக் காட்சிகள் அகற்றப்பட்டன. 'தூரம் அதிகமில்லை' என்ற படமும் 'ஜோதி' என்ற படமும் ஒரே மூலக்கதையைக் கொண்டு வெளிவந்தன. பெரும் வெற்றிபெற்ற 'முந்தானை முடிச்சு' படத்தின் கதை, தனது 'கற்பகம்', 'சித்தி' என்ற இரண்டு படங்களின் கலவையே என்று கூறிய இயக்குநர் கே.எஸ். கோபாலகிருஷ்ணன், 'முந்தானை முடிச்சு' படத்தை எழுதி இயக்கிய 'பாக்கிய ராஜ்' மீது இது குறித்து ஒரு வழக்கு தொடர்ந்தார். 'என் ஆசை உன்னோடு தான்' என்ற படத்தின் 'கிளைமாக்ஸ்' சரியில்லாததால் தான் அது தோல்வியடைந்தது என்று கருதிய அதன் தயாரிப்பாளர்கள், முடிவை மாற்றி, மீண்டும் ஒருமுறை அந்தப்படத்தை வெளியிட்டனர். படம் அப்போதும் தோல்வியையே கண்டது. சி.ஏ. பாலன் எழுதிய 'இன்று நீ நாளை நான்' என்ற நாவல், அதே பெயரில் படமாக்கப்பட்டது. தமிழ் எழுத்தாளர்களின் நல்ல நாவல்களைக் கூட ஏற்றுக்கொள்ள மறுத்தது தமிழ்த் திரைப்பட உலகம். தமிழில் வெளிவந்த 'வாஸந்தி'யின் நாவலொன்று 'கூடெவிடே' என்ற பெயரில் மலையாளப் படமாய் வெளிவந்து பெரும் வெற்றி கண்டும், தமிழ்த் தயாரிப்பாளர்கள் தமிழ் எழுத்தாளர்களைப் புறக்கணித்தனர். தமிழ்ப் படக் கதைகளில் 'முந்தனை முடிச்சு' தெலுங்கில் 'மூடு முள்ளு' என்ற பெயரிலும், 'சுப முகூர்த்தம்' அதே பெயரிலும் தயாரிக்கப்பட்டு வெளிவந்தன.

## மொழி மாற்றப் படங்கள்

முன்னர் குறிப்பிட்ட 96 படங்கள் தமிழில் நேரடியாகத் தயாரிக்கப்பட்டவை. இவை மட்டுமின்றி, 20 படங்கள் மற்ற மொழிப் படங்களின் மொழிமாற்றப் (Dubbing) படங்களாக வெளிவந்தன. அவற்றில் 'சலங்கை ஒலி' என்ற படம் நூறு நாட்கள் ஓடி வெற்றிகண்டது குறிப்பிடத்தக்கது. தெலுங்கிலிருந்து தமிழில் மொழிமாற்றம் செய்யப்பட்ட படங்கள் 14. அவை—

1. அந்தப்புர மர்மம்
2. சண்டி சாமுண்டி
3. கரம் மசாலா
4. இரு முகங்கள்
5. கேடிபில்லா கில்லாடி ரங்கா
6. நான்கு தூண்கள் ஆட்டம்
7. நான் நினைத்தால்
8. நான் பொல்லாதவன்

9. பழிக்குப் பழி
10. ரோஷக்காரன்
11. சலங்கை ஒலி
12. கல்யாணமானவரே சௌக்யமா
13. ரகசிய போலீஸ் நெ. 1
14. பழிவாங்கும் புலி

கன்னடத்திலிருந்து, நீதிநேர்மை தர்மம், ஏழுமலையான் தரிசனம் என்ற இருபடங்களும், மலையாளத்திலிருந்து முரடன், டக்கர் பேபி, ஸ்ரீ ஐயப்பதரிசனம் ஆகிய மூன்று படங்களும், ரஷ்ய மொழியிலிருந்து 'சர்க்கஸ் உலகம்' என்ற படமும் தமிழில் மொழி மாற்றம் செய்யப்பட்டு வெளிவந்தன, இந்த இருபது மொழி மாற்றப் படங்களில் 'முரடன்' மட்டுமே கறுப்பு வெள்ளைப் படம். அந்தப்புர மர்மம், கரம் மசாலா, ஸ்ரீ ஐயப்ப தரிசனம் ஆகிய மூன்று படங்களும் 'சினிமாஸ்கோப்' படங்கள். நேரடித் தமிழ்ப் படங்களில் ஒன்று கூட 'சினிமாஸ்கோப்' படமில்லை என்பது இந்த இடத்தில் குறிப்பிடத்தக்கது. சர்க்கஸ் உலகமும், சலங்கை ஒலியும் பெரும் வெற்றி பெற்றன. 'சர்க்கஸ் உலகம்' படத்துக்கு வரிவிலக்கு தரப்பட்டிருந்தது. 1982ஆம் ஆண்டை விட நேரடிப் படங்களின் எண்ணிக்கை குறைந்திருந்தாலும், மொழிமாற்றப் படங்களின் எண்ணிக்கை கூடியிருந்தது. 1982இல் வெளிவந்த மொழிமாற்றப் படங்களின் எண்ணிக்கை 9 தான். தமிழிலிருந்தும் சில படங்கள் பிற மொழிகளில் மொழி மாற்றம் செய்யப்பட்டன. சட்டம், போலீஸ் போலீஸ், பாயும் புலி, உயிருள்ள வரை உஷா, சட்டத்துக்கு ஒரு சவால் போன்ற படங்கள் தெலுங்கிலும், வில்லியனூர் மாதா, உண்மைகள் என்ற இரண்டு படங்கள் மலையாளத்திலும் 1983இலேயே மொழி மாற்றம் செய்யப்பட்டன. இவற்றில் தெலுங்கில் மொழிமாற்றம் செய்யப்பட்ட 'உயிருள்ள வரை உஷா' பெரும் வெற்றி பெற்றதென்பது குறிப்பிடத்தக்கது.

**சினிமா பத்திரிகைகள்**

தமிழில் பொம்மை, பேசும்படம், சினிமா எக்ஸ்பிரஸ், ஜெமினி சினிமா, வண்ணத்திரை, திரைச் சுவை போன்ற பத்திரிகைகள் முழுக்க முழுக்க சினிமாச் செய்திகளையே தாங்கி வெளிவந்த வார, மாத, மாதமிருமுறை இதழ்கள், இவை மட்டுமின்றித் தமிழில் வெளிவந்த எல்லா வார இதழ்களுமே சினிமாவுக்கு முக்கியத்துவம் கொடுத்து வந்தன. இந்த வார இதழ்களின் சினிமா விமர்சனங்கள், வாசகர்களால் வரவேற்கப்பட்டன. இவற்றிலும், 'ஆனந்த விகடன்' சினிமா விமர்சனம் முக்கியமானதாய்க் கருதப்பட்டது,

மசாலா படங்கள்

''மசாலா படத்துக்குச் செக்ஸ் (Se ), சண்டைக் காட்சிகள் இடம்பெறும் கதையைத் தேர்ந்தெடுக்கிறோம்'' என்றார் இயக்குநர் எஸ்.பி. முத்துராமன். கதைக்கு அதிக முக்கியத்துவம் தராமல், சண்டை மற்றும் அரை நிர்வாணக் காட்சிகளுக்கு அதிக இடம் தந்த சில இந்திப் படங்கள் சென்னையில் பெரும் வெற்றி பெற்றதையடுத்து, அதுபோன்ற படங்கள் தமிழிலும் வெளிவரத் தொடங்கின. ஏறக்குறைய பத்து ஆண்டுக்காலமாக இந்தப் போக்கு அதிகரித்து வருகிறது. தனக்கோ தன்குடும்பத்துக்கோ தீங்கிழைத்த ஒருவனை, யாராலும் வெல்ல முடியாத ஒரு கதா நாயகன் பழிதீர்த்துக் கொள்வதே இது போன்ற படங்களின் கதையாக அமையும். தமிழில் வெளிவந்த சில 'மசாலா' படங் களும் பெருவெற்றி பெற்றமை இதுபோன்ற படங்களின் எண்ணிக் கை மேலும் உயர வழி வகுத்தது. மசாலாப் படங்களின் கதை அனேகமாக 'உல்ட்டா' செய்யப் பட்டவையாகவே இருப்பது வழக்கம். இந்த ஆண்டும் அதே நிலைதான். 'அபூர்வ சகோதரிகள்' (தயாரிப்பு-தேவர் பிலிம்ஸ்)படக்கதை இந்தி 'யாதோன் கி பாராத்' பட்த்தின் 'உல்ட்டா', 'யாதோன் கி பாராத்' தில் மூன்றுசகோதரர் கள் ஒரு கொடியவனால் பிரிக்கப் படுகின்றனர். அந்தக் கொடிய வன் அவர்களது கண்ணெதிரேயே அவர்கள் பெற்றோரைக் கொலை செய்கிறான். வெவ்வேறு சூழ்நிலையில் வளரும் அந்த மூன்று சகோதரர்களும் சிறுவயதில் சேர்ந்து பாடும் ஒரு பாடலால் இணைகின்றனர். 'அபூர்வ சகோதரிகளி'ல் மூன்று சகோதரர் களுக்குப் பதிலாய் மூன்று சகோதரிகள். மற்றபடி மேலே சொன்ன அதே கதை. சிறுவயதுப் பாடலொன்று அந்த மூன்று சகோதரி களையும் சேர்த்து வைக்கிறது. இந்தப் படத்தில் இடம் பெற்ற காட்சிகளும், திரைக்கதையும் படு அபத்தமாயிருந்தன, காரண மில்லாமலேயே பல திருப்பங்கள் நிறைந்திருந்த இந்தப்படம், பெரும் பொருட் செலவில் எடுக்கப்பட்டிருந்தும் பெரிய அளவு வெற்றி பெறவில்லை. 'என்னைப்பார் என் அழகைப் பார்' என்ற படமும் 'மசாலா' பாணி கதையைக் கொண்டதே. இந்தப் படத்தில் மூன்று புகழ் பெற்ற கவர்ச்சி நடிகைகள் இணைந்து நடித் திருந்தும், பெரும் தோல்விப்படமாய் அமைந்தது.

1983இல் கவர்ச்சி நடிகை 'சில்க்சுமிதா'வைக் கதாநாயகியாய்க் கொண்டு, அவரை விதவிதமான உடைகளில் காட்டிய 'சில்க் சில்க் சில்க்' படம் பெரும் தோல்வியைத் தழுவியது. 'சட்டம்'

படமும் சாதாரண மசாலா படம் தான் என்றாலும், அந்தப் படத்தில் இன்றைய போராட்டங்களால் ஏற்படும் சூழ்நிலை ஒரு காட்சியில் சிறப்பாகச் சித்தரிக்கப்பட்டிருந்தது. 'முழு அடைப்பு போராட்டம்' (பந்த்) நடைபெறும் ஒரு நாளன்று கதாநாயகனின் நண்பனது உடல் நிலை ஆபத்தான கட்டத்தி லிருக்க கதாநாயகன் அவனை மருத்துவமனைக்கு எடுத்துச் செல்ல வாகன வசதியில்லாமல் தவிப்பதும், கடைசியாய் நண்பன் இறப்பதும் சமூகப் பிரக்ஞையோடு எடுக்கப் பட்டிருந்தன என்பதை ஏற்றுக் கொள்ள வேண்டும். 'கல்யாண பரிசு', 'நெஞ்சில் ஓர் ஆலயம்' போன்ற தரமான படங்களை அறுபதுகளில் தந்த ஸ்ரீதர் இயக்கியிருந்த 'துடிக்கும் கரங்கள்' என்ற மசாலா படமும் இந்த ஆண்டில் வெளிவந்தது. தொழில் நுட்பத்தில் பல புதுமை கள் இருந்ததும், தெளிவான—கொஞ்சம் வித்தியாசமான'மசாலா' கதையும் இந்தப் படத்தின் சிறப்பம்சங்கள். என்றாலும், இந்த காலகட்டத்தில் பிரபலமான கதாநாயகனாய் இருந்த ரஜனிகாந்த் இந்தப் படத்தின் கதாநாயகனாய் நடித்ததால், சில காட்சிகளை அவருக்காகவே உருவாக்கியிருந்தது தெரிந்தது. இது கதையமைப் பைப் பாதித்தது. இந்தப் படம் எதிர்பார்த்த அளவு வெற்றி பெறாதது ஸ்ரீதரைப் பாதித்தது. ''இந்தப் படத்தில் என்னை நானே 'காம்ப்ரமைஸ்' செய்து கொண்டேன். ஆனாலும் ரசிகர் களைத் திருப்திப்படுத்த முடியவில்லை. அதற்காக வருந்து கிறேன். இன்றைய ரசிகர் கண்ணோட்டத்தைப் புரிந்து கொள்ளத் தவறியதற்காகக் குறுகிப் போகிறேன்'' என்றார் அவர். 1982இல் பெரும் வெற்றி பெற்ற 'மசாலா' படமான 'சகல கலா வல்லவன்' கதையை லேசாகமாற்றிச் 'சீறும் சிங்கங்கள்' என்றபெயரில் இயக்கி யிருந்தார் இராம. நாராயணன். ஆனால், இன்னொரு முறையும் அந்த 'குப்பை'யை ஏற்றுக் கொள்ள ரசிகர்கள் தயாராயில்லை. 'டைட்டிலில்' இராம. நாராயணன் பெயரை மட்டும் போட்டு விட்டு, மற்றக் கலைஞர்க்கு ஒட்டு மொத்தமாக நன்றி தெரிவிக் கிறார்கள். பெயரைப் போடாது விட்டதற்கு மற்றக் கலைஞர்கள் தான் நன்றி சொல்ல வேண்டும்' என்று கிண்டல் செய்திருந்தது 'ஆனந்த விகடன்'. இதே 'ஆனந்த விகடன்' நூற்றுக்கு 46 மதிப் பெண்களைத் தந்து பாராட்டிய படம் 'மலையூர் மம்பட்டியான்'. மலையூர் மம்பட்டியானும் மசாலா படம் தான் என்றாலும், அது சொல்லப்பட்டிருந்த விதம், மற்றவற்றிலிருந்து அதை வேறு படுத்திக் காட்டியது. மற்றப் படங்களைப் போல், பெற்றோரைக் கொன்றவனைப் பழிதீர்க்கும் உச்சகட்டக் காட்சி இதிலில்லை

அந்த 'உச்சகட்டம்' படத்தின் ஆரம்பக்கட்டத்திலேயே வந்து விட்டது. இதில் பெற்றோரைக் கொன்றவனை ஆரம்பத்தில் வரும் சில காட்சிகளுக்குள்ளேயே கொன்று விடுகின்றான் மம்பட்டியான். அதற்குப் பிறகு நடக்கும் போராட்டம் அவனுக்கும், காவல் துறைக்கும் இடையேதான். இந்தக் கதையமைப்புதான் இப் படத்தின் வெற்றிக்குக் காரணம். ஏனைய படங்களில், கடைசி கட்டத்தில் 'கடமையே' என்று வருவது போல் காட்டப்பட்ட காவல்துறை, இந்தப் படத்தில் அதற்குரிய மரியாதையோடு காட்டப்பட்டது. மம்பட்டியானுக்கும், டி. எஸ். பி. ரஞ்சித்துக்கும் இடையே நடக்கும் போராட்டம் தெளிவாகக் காட்டப்பட்டிருந்தது. மம்பட்டியானின் தோழர்கள் அவனுக்காக மேற் கொள்ளும் தியாகம் நேர்த்தியாகச் சொல்லப்பட்டிருந்தது. எல்லா வற்றுக்கும் மேலாக, நாட்களை எண்ணிக் கொண்டிருக்கும் மம்பட்டியானையே எண்ணிக் கொண்டிருக்கும் கண்ணம்மா என்ற பாத்திரப் படைப்பும், அவனுக்காக ஏங்கும் ஒரு நடனக்காரியின் பாத்திரப் படைப்பும் ஆழமானதாய் இருந்தன. தெளிவான ஒளிப்பதிவும், வலுவான கதையும், எளிமையான திரைக்கதையும், சீரான இயக்கமும் இந்தப் படத்தைத் தரமான படமாய் ஆக்கி யிருந்தன. 'வெள்ளை ரோஜா'வும் வெளிவந்த மசாலா படங் களில் வித்தியாசமான ஒன்று. சில ஆங்கிலப் படங்களின் காட்சி கள், இந்தப் படத்தில் சிறப்பாகக் கையாளப்பட்டிருந்தன. முன்னதாக மலையாளத்தில் வெளிவந்து வெற்றிகண்ட இப்படம், தமிழிலும் வெற்றிப் படமாக அமைந்தது. ஏனைய மசாலா படங்கள் குறிப்பிட்டுச் சொல்லும்படி இல்லை.

**காதல் கதைகள்**

"இன்றைய சினிமா காதல் கதைகள் அனைத்துக்கும் ஷேக்ஸ் பியரின் 'ரோமியோ—ஜூலியட்' தான் அடிப்படை" என்றார், 'உயிருள்ள வரை உஷா' என்ற பெரும் வெற்றிப் படத்தை அளித்த டி. ராஜேந்தர். இந்தப் படத்தின் வெற்றிக்கும் தரத்துக்கும் சம்பந்தமே இல்லை. காதலை, உள்ளத்திலிருந்து எழுவதாய்க் காட்டாமல், உடல் சம்பந்தப் பட்டதாய்க் காட்டியிருந்தார் ராஜேந்தர். படம் முன்வரிசை ரசிகர்களைப் போய்ச் சேரும் விதத்தில் கதாநாயகியைக் கவர்ச்சியான கோணங்களில் காட்டியி ருந்தார், காதலைத் தெய்வீகமாய்ச் சொல்லாமல், ஆபாசம் கலந்து சொல்லியிருந்தார். கல்லூரியில் ஆசிரியரைக் கிண்டல் செய்யும் மாணவர்கள், மாணவிகளும் மாணவர்களும் செய்யும் ரகளை, மாணவிகளின் பின்னால் மாணவர்கள் அலைவது—என்று

திரும்பத் திரும்பக் காட்டி, 'கல்லூரி மாணவர்கள் பொறுப் பற்றவர்கள்' என்று கூறும் வகையில் இந்தப்படம் எடுக்கப் பட்டிருந்தது.

''ஒண்ணு ரெண்டு மூணு எண்ணிக்க
உங்கப்பன் பேரைச் சொல்லிக்க''.
''காளி...இன்னியோட நீ காலி''

போன்ற வசனங்கள் ரசிகர்களால் வரவேற்கப் பட்டன. '''கட்'டடிப்போம் 'கட்'டடிப்போம் காலேஜுக்கு...'', ''அடி என்னாடி பந்தாடும் பாப்பாக்களே...'' போன்ற பாடல்கள் பிரபல மாயின. பத்திரிகைகளாலும், படித்தவர்களாலும் கடுமையாக விமர்சிக்கப் பட்ட தென்றாலும், 'உயிருள்ள வரை உஷா' ஒரு மகத்தான வெற்றிப்படமாக அமைந்து விட்டது.

தன் கண் முன்னரேயே காதலி எரிந்து சாம்பலாவதைப் பார்க்க நேரிடும் ஒரு காதலனின் மனோ நிலையும், எதையும் முன் கூட்டியே அறியும் அவனது ஆற்றலும் தெளிவாக, குழப்பமில் லாமல் சொல்லப்பட்டிருந்தது 'உறங்காத நினைவுகள்' படத்தில்! வியாபார ரீதியாய் இந்தப் படம் வெற்றி பெறவில்லை என்றாலும் தமிழ்த் திரையுலகுக்குக் கௌரவம் தரும் வகையிலிருந்தது. ஒரு தமிழ் வார இதழின் விமர்சனப் பகுதி, ''திரைக்கதையமைப்பில் அசாத்திய மெச்சூரிட்டி'' என்று இந்தப் படத்தைப் பாராட்டியது. மிகச் சிறந்த ஒளிப்பதிவாளர்களில் ஒருவரான பாலுமகேந்திரா இந்தப் படத்தை ஒளிப்பதிவு செய்திருந்தார் என்றாலும், அவரது ஒளிப்பதிவு கதையின் போக்கில் தன் ஆதிக்கத்தைத் திணிக்க வில்லை, கதையோட்டத்தைப் பாதிக்காதவாறு, அவர் தமது பணியைச் சிறப்பாகச் செய்திருந்தாரென்பது, இந்தப் படத்தின் சிறப்பம்சங்களில் ஒன்று. கண்டிப்பு மிக்க நிறுவன நிர்வாகியாக நடித்த ராதிகாவின் நடிப்பும் குறிப்பிடத் தக்க விதத்தில் இருந்தது. இவ்வளவு சிறப்பம்சங்கள் இருந்தும், 'உறங்காத நினைவுகள்' தோல்வியையே தழுவியது. இந்தப் படத்தின் இயக்குநர் ஆர். பாஸ்கர் படத்தொகுப்புப்பணியில் பல்லாண்டு கால அனுபவ முள்ளவர். சிறந்த ,எடிட்டர்'களில் ஒருவரான இவர், தான் ஒரு 'சிறந்த இயக்குநரும் கூட' என்பதை இப்படத்தின் மூலம் நிரூபித்தார். இயக்குநர் ஆர். சுந்தர்ராஜன் இயக்கிய 'தூங்காத கண்ணின்று ஒன்று' ரசிகர்களுக்குப் பிடிக்காமல் போய்விட்டது, உயிருக்குயிராய்க் காதலித்தவர்களின் பிரிவை வித்தியாசமாகச்

சொல்லியிருந்தார், சுந்தர்ராஜன். சுவாரஸ்யமான திரைக்கதை யமைப்பும், புதுமையான காட்சியமைப்பும் இருந்தும், இப்படம் பெரும் வெற்றியைப் பெறமுடியவில்லை. இந்தப் படத்தின் தோல் விக்கு, படத்தின் தலைப்பும் ஒரு காரணம் என்பது ஏற்றுக் கொள்ளக் கூடியதுதான்.

இயக்குநர் பாரதி ராஜாவின் 'மண் வாசனை' பெயருக்கு ஏற் றாற்போல் தமிழ் மண்ணின் மணத்தை வெளிப்படுத்தியது. தாய் மாமனைக் காதலிக்கும் முத்துப் பேச்சி—காதலைக் கூட அதற்குரிய மென்மையோடு வெளிப்படுத்தத் தெரியாத முரட்டுத் தாய்மாமன் வீரையன்— 'ஊசி வெடி பாசி வெடி விருதுநகர் ஆனைவெடி, கேட்டுக்கடி கொக்கு நான் வத்தல குண்டு ருக்கு' என்று நீட்டி முழக்கும் வீரையனின் தாய்கிழவி ஒச்சாயி என்று சுவாரஸ்யமான கதைமாந்தர்கள் படத்தில் இடம் பெற்றிருந்தனர். முறைப் பெண் 'பெரியவளான' விஷயத்தைத் தனக்குச் சொல்லியனுப்ப வில்லை என்ற கோபத்துடன், அவள் வீட்டின் முன் சானை பிடிப்பவனை நிற்க வைத்து, தன் அரிவாளை அவனிடம் கொடுத்து— "தீட்டு. தீட்டு, நல்லாத்தீட்டு, இன்னைக்கு ஒண்ணுல ரெண்டு பாத்துடனும்" என்று வீரையன் அனல் பறக்க நிற்பது, பட்டாளத்துக்குப் போன தாய் மாமன் நாளை திரும்பி வருகிறான் என்ற மகிழ்ச்சியில் இரவு முழுதும் தூங்காது விழித் திருக்கும் முத்துப் பேச்சி 'எப்போ விடியும்' என்று காத்திருந்து காத்திருந்து கூரை மேல் படுத்துறங்கும் சேவல் மேல் கல்லெறிந்து அது கூவுவதைக் கேட்டு 'விடிஞ்சிடுச்சி' என்று மகிழ்ச்சியடைவது என்பது போன்ற காட்சிகள் படத்துக்கு மேலும் சுவையூட்டின. படத்தின் பிற்பகுதியில், வீரையன் வடநாட்டுப் பெண்ணொருத்தி யுடன் கிராமத்துக்கு வருவதும். அதற்கு அவன் சொல்லும் காரணமும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாயில்லை, படத்தில் வரும் ஒரு கதாபாத்திரமே "வீரையன் நல்லாத்தான் காது குத்துறான்" என்று சொல்ல, ரசிகர்களும் அதையேதான் சொன்னார்கள், திரைக்கதையில் ஏற்பட்ட இந்த சிறிய குறை மட்டும் இல்லாது போயிருந்தால், 'மண்வாசனை' இன்னும் பெரிய அளவில் வெற்றி பெற்றிருக்கும்.

### நகைச்சுவைக் கதைகள்

பல நகைச்சுவை நாடகங்கள் இந்த ஆண்டு படமாக்கப் பட்டன. ஆனால், நாடகமாய் இருந்தபோது அவற்றில் காணப் பட்ட நகைச்சுவையின் அளவு, படமாக்கப்பட்ட போது குறைந்து

விட்டது. இதற்குக் காரணம், நாடகத்தைப் படமாக்கும்போது ஏற்படக் கூடிய தொழில் நுணுக்கப் பிரச்னைதான். நாடகத்தில், ஒரு வசனத்துக்கும், இன்னொரு வசனத்துக்கும் இடையே விடப் படும் இடைவெளி மிகவும் முக்கியம். உரையாடலின்போது தேவைப்படும் இந்த 'டைமிங்'கில் (Timing) கொஞ்சம் கூட தவறேற்படக் கூடாது. ஆனால், சினிமாவிலோ 'டைமிங்'கைவிட 'முகபாவனை' அதிக முக்கியத்துவம் பெறுகிறது. இந்த வித்தியா சத்தைப் புரிந்துகொள்ளாமல் திரைப்பட வடிவில் வெளிவந்த பல நாடகங்கள் தோல்வியையே தழுவின. 'முழுநீள நகைச்சுவைப் படங்களை மக்கள் விரும்புவதில்லை' என்ற கூற்றைவிட, 'மக்கள் விரும்புமளவுக்குத் தரமுள்ள முழுநீள நகைச்சுவைப் படங்கள் வர வில்லை' என்பதே சரியானது.

சாட்டை இல்லாத பம்பரம், சுபமுகூர்த்தம், டௌரி கல்யா ணம், பொய்க்கால் குதிரை போன்றவை, வந்தவற்றுள் குறிப் பிடத்தக்கவை. 'இஷ்டப்பட்ட இருவரும் சேர்ந்து கஷ்டப்படுவது தான் காதல்' என்ற கருத்தை வலியுறுத்திய சாட்டையில்லாத பம்பரம், காதலர்கள் இணைவதை நகைச்சுவையோடு கூறியது. படத்தின் பிற்பகுதியில் நகைச்சுவையின் அளவைக் குறைத்து விட்டனர், 'முழுநீள நகைச்சுவைப் படமாய்இருந்தால் தோல்வி யடைய நேருமோ' என்ற அச்சத்தால். இந்தப் படத்தில் சிவகுமாரின் அப்பாவி நடிப்பு நகைச்சுவைக்குப் பெரிதும் உதவி யிருந்தது. 'சுபமுகூர்த்தம்' படத்தில் பல வசனங்கள் குறிப் பிட்டுச் சொல்லும்படி இருந்தன. கல்யாண மாப்பிள்ளை: ''ஒண்ணும் கவலைப் படாதீங்க. இருக்கவே இருக்கு ஸ்கூல் டீச்சர் வேலை. அதோட எனக்கு நல்லா சமைக்கவும் தெரியும். அதனாலே தலைமையாசிரியர் பதவிக்கு சீக்கிரம் வந்துடுவேன்'' என்று சொன்னபோது ரசிகர்கள் வாய்விட்டுச் சிரித் தார்கள். 'சத்துணவுத் திட்டம்' அரசாங்கத்தால் அமல் படுத்தப் பட்ட புதிதில் வந்த படமென்பதால், இந்த வசனம் நல்ல வர வேற்பைப் பெற்றது. 'டௌரி கல்யாணம்' வரதட்சணைக் கொடுமையைக் குறை கூறியது. ஒரு சாதாரண அலுவலக ஊழியர் தன் தங்கைக்குத் திருமணம் செய்துவைப்பதற்குப் படும் இன்னல் களை நகைச்சுவையோடு சொல்லியிருந்தார்கள். 'டௌரி கல்யாண வைபோகமே' என்ற பெயரில் இதை நாடகமாய் நடத்திக் கொண் டிருந்த 'விசு'தான் படத்தையும் இயக்கியிருந்தார். எல்லா வீட்டிலும் இருக்கக் கூடிய பிரச்னை என்பதால், இது எளிதாக ரசிகர்களைப் போய்ச் சேர்ந்தது. பொய்க்கால் குதிரை ஒரு நல்ல

நகைச்சுவைப் படமாய் அமைந்தது. தன் பெண்ணின்மேல் வைத்திருக்கும் அதிகமான நம்பிக்கையால், ஒரு தந்தை கதாநாயகனிடம் 'என் பெண்ணைக் காதலிக்க முடியுமா உன்னால்' என்று சவால் விடுகிறார். அவரது சவாலை நிறைவேற்றிக் காட்டுகிறான் கதாநாயகன். நாடகமாய் வந்து பெரும் வெற்றி பெற்ற இப்படம், திரைவடிவில் வெற்றிகாண முடியவில்லை.' இந்தியாவின் மீது முதல் முதலாகப் படையெடுத்த மொகலாயச் சக்கரவர்த்தி யார்' என்ற கேள்விக்கு, முடிதிருத்தும் தொழிலில் ஈடுபடும் கதாநாயகனின் நண்பன் 'பார்பர்' என்று பதில் சொல்லும்போது எழும் சிரிப்பொலி படம் முடியும்வரை தொடர்ந்தது. இந்தப் படம் எதிர்பார்த்த அளவுக்கு வெற்றிபெறாது போனதற்கு படத்தின் கதாநாயகனாய் நடித்திருந்தவரே காரணம் என்று கருதப்பட்டது. கன்னட நடிகர் அந்த வேடத்தில் நடித்திருந்தார். நன்றாக நடித்திருந்தார் என்றாலும், அவரை ரசிகர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. இதைப் பற்றி, படத்தை இயக்கியிருந்த பாலசந்தர் கூறினார்: ''வசனத்தை மனப்பாடம் செய்து ஒப்பித்து விடுகிற, உணர்ச்சிகளை முகத்தில் காட்டமுடியாத நடிகர்களைவிட, மொழியிலே தவறு செய்தாலும் அற்புதமான முகபாவத்தோடு அதை ஈடுசெய்து விடுகிறவர்களை வரவேற்கிறேன்.'' ஆனால், துரதிர்ஷ்டவசமாக அவர் வரவேற்றதை, ரசிகர்கள் வரவேற்கத் தவறியதால், ஒரு நல்ல படம் வெற்றி பெறாது போனது.

**குடும்பக் கதைகள்**

'குடும்பக் கதை கொண்ட படங்கள் குடும்பத்தோடு போய்ப் பார்க்கும் அளவு தரத்தோடு இருந்தனவா' என்ற கேள்விக்குப் பதில்சொல்வது சிரமம். குடும்பக் கதைகொண்ட படங்களுள் குறிப்பிடத்தக்கவை இன்று நீ நாளை நான், உண்மைகள், ஒரு ஓடை நதியாகிறது, தங்கைக்கோர் கீதம், முந்தானை முடிச்சு ஆகியவை. இவற்றில் முந்தானை முடிச்சு 'பாக்ஸ் —ஆஃபீஸ்' என்று சொல்லுமளவுக்குப் பெரும் வெற்றி பெற்றது. வெற்றி பெற்ற இன்னொரு படம் 'உண்மைகள்'. பெரிய வெற்றியை இப்படம் தரவில்லை என்றாலும், எதிர்பார்க்கப் பட்டதைவிட அதிக வெற்றியைக் கண்டது. இது. ''மன்னிப்புங்கறது தவறு செய்யறவங்களுக்குக் கொடுக்கப்படற இன்னொரு சான்ஸ்'' என்று நினைக்கும் கதாநாயகி—பேராசிரியை ஜானகியைச் சுற்றிக் கதை பின்னப்பட்டிருந்தது. தனது கணவனுக்கு, வீட்டு வேலைக்காரியிடம் தொடர்பிருப்பது தெரிந்ததும், அவளைத் திருமணம் செய்துகொள்ளும்படி.

அவனை வற்புறுத்துகிறாள் ஜானகி. வேலைக்காரியின் வயிற்றில் வளரும் தனது கருவைக் கலைத்து விடமுடியும் என்கிறான் கணவன். "ஒகோ, ஏற்கெனவே நிறைய ஆக்கல் அழித்தல் வேலைகள் நடந்திருக்கோ" என்று வெடிக்கிறாள் ஜானகி. வேலைக்காரிக்கும், கணவனுக்கும் திருமணம் செய்துவைத்துவிட்டு, வீட்டைவிட்டு வெளியேறுகிறாள். தனியே போய் வாழ்கிறாள். தனியே வாழுமிடத்தில், 'உழைப்பே உயர்வுதரும்' என்ற எண்ணங் கொண்ட ஓர் இளைஞன்மீது பாசம் காட்டுகிறாள். அது தாய்ப் பாசம் என்பதை உணராத ஜானகியின் கணவன் பொறாமைப் படுகிறான், அவள் நேசிக்கும் அந்த இளைஞனும், அவளது பாசத்தைத் தவறாகப் புரிந்து கொள்கிறான். இதனால் ஏற்படும் பிரச்னையில் ஜானகி உயிர்துறக்கிறாள். ஜானகியைச் சுற்றியே பின்னப்பட்டிருந்ததென்றாலும், கதை தெளிவாக அமைக்கப்பட்டிருந்தது, திரைக்கதை நேர்த்தியாக இருந்தது. தேவையான அளவே பாத்திரங்கள் இடம் பெற்றன. ஜானகி மட்டுமின்றி, சந்தர்ப்ப சூழ்நிலையால் உடலை விற்றுப் பிழைக்க நேரும் எந்த ஒரு பெண்ணும் மறக்கமுடியாத பாத்திரமாகப் படைக்கப் பட்டிருந்தாள். "நீங்க, தலைவர்களை வெளிச் சத்துல மேடையில பாக்கறீங்க, நாங்க அவங்களை இருட்டுல எங்க மடியில பாக்கறோம்" என்று அவளைச் சொல்லவைத்து சமுதாயத் துக்குச் சாட்டையடி தந்திருந்தார் இயக்குநர் ஆர். சி. சக்தி. 'மளிகைக் கடை அண்ணாச்சி' பாத்திரமும், இந்தப் படத்தில் குறிப்பிடத்தக்கதாய் இருந்தது.

'இன்று நீ நாளை நான்' படத்தில் ஒரு தூக்குத் தண்டனை கைதியின் கடந்தகால வாழ்க்கை நேர்த்தியாகச் சொல்லப் பட்டிருந்தது. ஆபாசமோ, தேவையற்ற சண்டைக் காட்சிகளோ இல்லாமல் திரைக்கதை தெளிவாக இருந்தது. அண்ணன் மனைவிக்கும், தம்பிக்கும் இடையே நிலவும் பாசத்தை மிக அழகாகக் காட்டியிருந்தார், இயக்குநர் மேஜர் சுந்தர்ராஜன். நயத்தகு நாகரிகம் தெரிந்த அண்ணனாக ஜெய்சங்கர் மிகச் சிறப்பாய் நடித்திருந்தது குறிப்பிடத்தக்கது. 'ஒரு ஓடை நதியாகிறது' படத்தின் மூலம் ஒரு 'மறு வருகை'யை ஏற் படுத்திக் கொள்ள நினைத்த இயக்குநர் ஸ்ரீதருக்கு ஏமாற்றம்தான் ஏற்பட்டது. திருமணத்துக்கு முன், தான் கற்பழித்த ஒரு பெண் ணுக்குப் பிறந்த குழந்தையை—தனது மகனை, திருமணத்துக்குப் பின் அடையாளம் கண்டுகொள்ளும் கணவனின் மனநிலையை

ஸ்ரீதர் நன்கு சித்தரித்திருந்தார். ஆனால், சுவாரஸ்யமான சம்பவங்கள்திரைக்கதையில் இடம் பெறாதது படத்தைத் தோல்வியடையச் செய்தது. 'உயிருள்ளவரை உஷா' படத்தின் வெற்றியைத் தொடர்ந்து ராஜேந்தர் தயாரித்து, இயக்கிய படம்''தங்கைக்கோர் கீதம்.'' இதிலும் அவர் நடித்திருந்தார், கதாநாயகனாய் நடித்த சிவகுமாரை விட தனது பாத்திரத்துக்கே அதிக முக்கியத்துவம் தந்திருந்தார். இந்தப் படத்தின் மூலம் நகைச்சுவை நடிகர் நாகேஷின் மகன் ஆனந்த்பாபு சிறந்த நடன நடிகராக அறிமுகமானது குறிப்பிடத்தக்கது. படத்தின் விளம்பரத்திலேயே தன் படத்தின் கதையை அவர் சொல்லியிருந்தார்.

''தங்கையை மலராக்கி, தன்கையை நிலமாக்கி
தான் சிந்தும் வேர்வையை நீராக்கி,
தான் வாழும் வாழ்வையே சீராக்கி,
மலர் தன்னின்
மண வாழ்வில் மணம்வீச அண்ணனவன்
மனம் தன்னில் தினம் ஒலித்த
அன்பு கீதமே தங்கைக்கோர் கீதம்''

என்று விளம்பரம் செய்திருந்தார், ராஜேந்தர். எந்தக் காலத்திலும் விற்பனையாகக்கூடிய 'அண்ணன்—தங்கை பாசம்' இப்போதும் விற்பனையாகியது. படம் பெரும் வெற்றி கண்டது. இந்தப் படத்தின் வெற்றிக்கு, இதில் இடம்பெற்ற பாடல்களும் முக்கியமான காரணமாய் அமைந்தன.

மிகப்பெரும் வெற்றி பெற்று 1983இல் அதிக வசூலைத் தந்த படம்' எனப்பெயர் பெற்ற 'முந்தானை முடிச்சு' வெளிவருவதற்கு முன், 'படவெளியீடு' தாமத' மாவது குறித்து பாக்யராஜ் மீது படத்தயாரிப்பாளருக்கு 'மன வருத்தம்' ஏற்பட்டது. ஆனால், படம் ஓடியவிதம் இந்த மனவருத்தங்களை எல்லாம் மறக்கச் செய்திருக்க வேண்டும். இறந்துபோன மனைவியின் நினைவுகளுடன், அவள்தந்த தனது பெண்குழந்தையுடன் துறவிபோல வாழ்ந்துவரும் ஓர் இளைஞனின் மனத்தில் அவனை விரும்பும் ஓர் இளம்பெண் எப்படி இடம் பெறுகிறாள் என்ற 'மிகச்சிறிய' கதையை, தெளிவாக, நகைச்சுவை மிளிர, ரசிக்கும்படிச் சொல்லியிருந்தார் பாக்யராஜ். அவரது முந்தைய படங்களைப் போலவே, திரைக்கதை அமைப்பு அவருக்கு நன்றாகக் கைகொடுத்திருந்தது. படத்தில் ஆபாச நடனங்களோ, ஆபாசமான காட்சிகளோ வலிய திணிக்கப் படவில்லை என்றாலும்

கதையின் போக்கில் ஒரு சில இடங்களில் விரசம் தலைதூக்கி நின்றது. கதாநாயகனை வலுக்கட்டாயமாகத் திருமணம் செய்து கொள்ளும் கதாநாயகி, அவனது உணர்ச்சிகளைத் தூண்டு வதற்காக, ஒரு வைத்தியரின் ஆலோசனைப்படி அவனது உணவில் முருங்கைக்காய் மற்றும் முருங்கைக்கீரையில் செய்யப்பட்ட 'கூட்டு'களை அதிகப்படுத்துகிறாள். அதனால்உணர்ச்சி வசப் படும் கதாநாயகனது நடவடிக்கைகள் விரசமாயிருந்தன என்பதை மறுப்பதற்கில்லை. படம் வந்த பின்பு இந்த 'முருங்கைக் காய்' விவகாரம் பொதுமக்களிடையே பெரும் பரபரப்பை ஏற்படுத்தி யிருந்தது. "இப்போதெல்லாம் தாய்மார்கள் காய்கறிக் கடையில் முருங்கைக் காய் வாங்கவே கூச்சப்படுகிறார்கள்" என்று ஒரு வார இதழ் எழுதியிருந்தது. "முந்தானை முடிச்சுப் படத்தில் வரும் முருங்கைக் காய் விஷயம் பற்றி நிறையப் பேர் சொன்னாங்க, நானும் படம் பார்த்தேன். படத்துல அது 'பாஸ் ஆன்' (Pass on) செஞ்சிட்டுப்போற விஷயமா இருக்கு" என்றார், இன்னொரு இயக்குநர் கோமல் ஸ்வாமிநாதன். 'முந்தானை முடிச்சு' பெற்ற வெற்றிக்கு இதுபோன்ற விரசமான காட்சிகள் அல்லது விவகாரங்கள் மட்டுமே காரணம் என்று சொல்லிவிட முடியாது, சீரான திரைக்கதையமைப்பும், கதையில் காணப்பட்ட யதார்த்த மும், மண்ணின் மணமும் படத்தின் வெற்றியில் பங்கேற்ற ஏனைய சாதகமான அம்சங்கள். கதாநாயகிக்குக் கதாநாயகன்மேல் எழும் காதலின் அடிப்படையே, அவன் இறந்துபோன தனது மனைவி மேல் வைத்திருக்கும் ஆழமான அன்பே. கதாநாயகிக்கு அது ஒரு புதிய விஷயம். அவளது குடும்பத்தில் எல்லா ஆண்களுமே அனேகமாக 'சின்ன வீடு' வைத்திருப்பவர்கள். ஒரு காட்சியில் தன் தந்தையிடமே இதைக் கதாநாயகி சொல்கிறாள்—"சனிக்கெழமை சனிக்செழமை நீ கூடத்தான் பக்கத்தூருக்குப் போயிட்டுவர"— என்று ஒரு குடும்பத்தைப் பட்டவர்த்தனமாகப் படம் பிடித்துக் காட்டியிருந்தது இந்தப் படத்தின் வெற்றிக்குப் பெரிதும் உறு துணையாய் இருந்தது.

பக்திப் படங்கள்

வெளிவந்த பக்திப் படங்கள் ஐந்து. இவற்றில் 'வில்லியனூர் மாதா' ஒன்றுதான் இந்து மதத்தைச் சாராத கடவுளைப் பற்றிய படம். ஏனைய நான்கிலும் இந்து மதத்தோடு தொடர்புடைய கடவுளர்களைப் பற்றிய சம்பவங்களே இடம் பெற்றிருந்தன. 'உருவங்கள் மாறலாம்' படத்தில், வறுமையால் இன்னலுறும் ஓர்

இந்துத் தம்பதிகளுக்கு, இறைவன் வெவ்வேறு வடிவில் வந்து உதவுவதுபோல் காட்டப்பட்டிருந்தது. இறைவனின் ஒவ்வொரு வடிவுக்கும், ஒவ்வொரு பெரிய நடிகரைப் பயன்படுத்தியிருந்தும். இப்படம் பெரும் வெற்றிபெறவில்லை. இதை ஒரு பக்திப் படமாக எடுப்பதா, மசாலா படமாக எடுப்பதா என்ற குழப்பம். இயக்கியிருந்தவருக்கு இருந்ததென்பது படத்தைப் பார்க்கும்போது தெளிவாகத் தெரிந்தது, திரைக்கதையில் அக்கறை காட்டாததும், தொழில்நுணுக்கத்தில் குறைகள் காணப்பட்டதும் படத்தின் தோல்விக்குக் காரணங்கள்.

### சமுதாய விமர்சனப் படங்கள்

கவிதைகளிலும், கதைகளிலும் காணப்பட்ட அளவு, திரைப் படங்களில் சமுதாயத்தின் ஏற்றதாழ்வுகளை விமர்சிக்கும் போக்கு காணப்படவில்லை. 'ஈநாடு' என்ற மலையாளப் படம்,கேரளத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. சமகால அரசியலை அது துணிச்சலாய்த் திறனாய்வு செய்திருந்தது, அந்தப் படம் பற்றிய கலந்துரையாடல் ஒன்றில் நடிகர் கமலஹாசன், ''இந்தப் படத்தைப் பார்த்ததும் எனக்கு ரெண்டு விதத்துல கோபம் வந்தது. 'ஐயோ அவங்க பண்ணிட்டாங்களே, நாம பண்ணியிருக்கலாமே'ங்கறது ஒருகோபம். 'சுலபமாச்சே... வித் இன் ரீச் (within reach) தானே'ங்கறது இன்னொரு கோபம்' என்று கூறியிருந்தார். கடைசியில் 'ஈநாடு' தமிழில் தயாரிக்கப்பட்டது. 'இது எங்க நாடு' என்ற பெயரில் தயாரிக்கப்பட்ட அது, தமிழில் பெரிய வெற்றியைப் பெற முடியவில்லை. அதற்குக் காரணம், தமிழகத்துக்கும், கேரளத்துக்கும் அரசியல் ரீதியாய் இருக்கும் வேற்றுமைகளே, கேரளத்தில் ஆட்சிப் பொறுப்பில் இருப்பது கூட்டணி அரசு. அந்தக் கூட்டணி அரசியலை 'ஈநாடு' நேரடியாகச் சாடியிருந்தது. தமிழ் நாட்டில் அந்தத் தாக்குதல் எடுபடவில்லை. படம் எடுத்தவர்களும், தமிழ் நாட்டின் அரசியல் சூழ்நிலைகளைச் சித்திரிக்கத் தவறிவிட்டனர். இதுவே படத்தின் தோல்விக்குக் காரணமாய் அமைந்தது.

கண் சிவந்தால் மண் சிவக்கும்' என்ற படம், எடுத்துக்கொண்ட நோக்கத்துக்குப் புறம்பாக, ஒரு மசாலா படம்போல் அமைந்திருந்தது குறிப்பிடத்தக்க குறை. இந்தப்படம் இயக்குநர் ஸ்ரீதர் ராஜனின் முதல் படம். 'இன்னும் நீங்கள் பட்டுவேட்டி பற்றிய கனாவில் இருந்தால் கட்டியுள்ள கோவணமும் களவாடப் படும்' என்ற கவிஞர் வைரமுத்துவின் கவிதை வரிகள், இந்தப்படத்

தின் விளம்பர வாசகங்களாகப் பயன்படுத்தப்பட்டன. படத்தின் திரைக்கதை சீரானதாக இல்லை. ''படத்தை முடித்து உடனே வெளியிட வேண்டும் என்ற அவசரத்தால், சில முக்கியக் காட்சி களைக் கடைசி நேரத்தில் படமாக்க முடியாது போயிற்று. எனது முதல்படமே குறைப்பிரசவமாகி விட்டது'' என்று பின்னர் அலுத்துக் கொண்டார் ஸ்ரீதர் ராஜன். இந்தப் படத்துக்கு மத்திய அரசின் விருது கிடைத்தது. படமோ படுதோல்வியடைந்தது. சுதந்திரத்துக்காகப் போராடிய தியாகிகளுக்கு இன்றைய சமூகம் போதிய மரியாதை தராதது, கல்லூரி நிர்வாகங்களில் காணப்படும் ஊழல்கள் இவற்றைத் தனது 'அனல்காற்று' மூலம் படம்பிடித்துக் காட்டியிருந்தார் கோமல் ஸ்வாமிநாதன். அவரது இன்னொரு படமான 'ஒரு இந்தியக் கனவு' அரசியல்வாதிகளின் பொறுப்பற்ற தன்மை மற்றும் சுயநலத்தை இடித்துரைத்தது. இரண்டு படங் களுமே, நாடகங்களாக நடத்தப்பட்ட போது வெற்றியைத் தழுவியவை. திரைவடிவில் இவை தோல்வியைக் கண்டன. ''கதையைக் கொஞ்சம் லேசாகச் சொல்லியிருக்கலாம். எந்த விஷயத்தையும் மக்கள் ரசிக்கும்படிச் சொல்ல முடியும்'' என்று சுயவிமர்சனம் செய்து கொண்டிருந்தார் கோமல். அவரது விமர்சனம் முழுக்க முழுக்க ஏற்றுக்கொள்ளக் கூடியது.

**நடிக - நடிகையர்**

1983இல் அதிகப் படங்களில் நடித்த நடிகர்கள் மோகனும், சிவகுமாருமே. இவர்களில் சிவகுமாரின் திறமை 'உறங்காத நினைவுகள்', 'தண்டிக்கப்பட்ட நியாயங்கள்' இரண்டிலும் நன்கு வெளிப்பட்டிருந்தது. 'தண்டிக்கப்பட்ட நியாயங்களி'ல் நீண்ட காலத்துக்குப்பின் மனைவியைச் சந்திக்கும் காட்சியில் அவரது நடிப்புத்திறன் பிரகாசித்தது. 'சாட்டை இல்லாத பம்பரம்' படத் திலும், அப்பாவி கதாநாயகன் வேடத்தை அவர் சிறப்பாகவே செய்திருந்தார். 'நெஞ்சமெல்லாம் நீயே' படத்தில் மட்டுமே மோகன் 'சுமாராக' நடித்திருந்தார். தனது படங்களைப் பற்றிச் சொன்னபோது மோகனே, ''என்னுடைய அதிர்ஷ்டத்தால், என் படங்கள் பல நன்றாக ஓடிவிட்டன'' என்று கூறியிருந்தார். தேசிய அளவில் சிறந்த நடிகருக்கான பரிசை 1982ஆம் ஆண்டுக்காகப் பெற்ற கமலஹாசனுக்கு, இந்த ஆண்டு வெளிவந்த இரண்டு படங் களிலுமே நடிப்புத் திறமையைக் காட்ட அதிக வாய்ப்பில்லாது போனது. என்றாலும் 'தூங்காதே தம்பி தூங்காதே' படத்தில். நீண்ட இடைவெளிக்குப் பின் தாயைச் சந்திக்கும் காட்சிகளில்

அவர் தனது திறமையைக் காட்டியிருந்தார். மொழிமாற்றப் படங்களில் ஒன்றான 'சலங்கை ஒலி'யில் நடனத்தின் மீது ஆர்வம் கொண்ட இளைஞனாயும். வயதுக் காலத்தில் ஒரு நடன விமர்சகனாயும் அவர் மிகச் சிறப்பாய் நடித்திருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

ரஜனிகாந்துக்கு. இந்த ஆண்டு வந்த எந்தப் படத்திலும் போதிய வாய்ப்புத் தரப்படவில்லை. அவர் நடித்த ஆறு படங்களுமே சண்டைக்காட்சிகள் நிறைந்த மசாலாப் படங்கள். தன்னுடைய வேகமும், சுறுசுறுப்பும் கலந்த வழக்கான பாணியை மட்டுமே அவரால் வெளிப்படுத்த முடிந்தது. 'துடிக்கும் கரங்கள்' படத்தில் தனது அண்ணிமீது அவர் காட்டும் பாசமும் 'தாய்வீடு' படத்தில் தங்கை என்று தெரியாமல் சொந்தத் தங்கையையே 'ப்ளாக் மெய்ல்' (Black-Mail) செய்வதும் குறிப்பிட்டுச் சொல்லத் தகுந்தவை. 'வெள்ளை ரோஜா' படத்தில் முரட்டு இளைஞனாய் நடித்திருந்த பிரபுவின் நடிப்பு மெச்சத் தக்கதாய் இருந்தது. சிவாஜி கணேசன் ஒருவர் மட்டுமே தன்னுடைய நடிப்புத் திறமையைச் சரிவரப் பயன்படுத்த முடிந்தது. 'வெள்ளை ரோஜா' படத்தில் பாதிரியாராகவும், காவல்துறை அதிகாரியாகவும் முற்றிலும் மாறுபட்ட இரண்டு குணச்சித்திர வேடங்களில் அவர் தன் நடிப்பாற்றலை வெளிப்படுத்தியிருந்தார். அன்பும், கனிவும் பொங்கும் பாதிரியாரின் முகபாவத்துக்கும், கடமையில் தேவைப்படும் அளவு கடுமையுடன் இருக்கும் காவல்துறை அதிகாரியின் முகபாவத்துக்கும் அவர் காட்டியிருந்த வேறுபாடு அவரது நடிப்புத் திறமைக்கு உரை கல்லாகியது. மிருதங்கச் சக்கரவர்த்தி'யிலும் அவரது நடிப்புத் திறன் பளிச்சிட்டது. படம் பார்த்தவர்களுக்கு, அவர் 'நடிக்கிறார்' என்பது மறந்துபோய், 'உண்மையிலேயே அவர் ஒரு மிருதங்க வித்வானோ' என்ற ஐயம் எழுமளவுக்கு அவரது நடிப்பில் ஆழம் இருந்தது.

நடிகைகளில் ராதாவும், சுலக்ஷனாவும் அதிக வேடங்களில் நடித்திருந்தனர். 'நெஞ்சமெல்லாம் நீயே' படத்தில் ராதாவும், 'சுபமுகூர்த்தம்' படத்தில் சுலக்ஷனாவும் குறிப்பிட்டுச் சொல்லும் படி நடித்திருந்தனர். 'மலையூர் மம்பட்டியான்' படத்தில் 'கண்ணம்மா'வாக நடித்த சரிதாவின் நடிப்பு சிறப்பாக அமைந்திருந்தது. 'கள்வடியும் பூக்கள்' படத்தில் காதலனுக்கும், கணவனுக்கும் இடையே அலைபாயும் மனத்தைக் கட்டுப்படுத்த

முயலும் இளம்பெண் வேடத்தில் நளினி சிறப்பாக நடித்திருந்தார். 'உண்மைகள்' படத்தில் தன்னைச் சுற்றி ஒரு வட்டம் போட்டுக் கொண்டு, அந்த வட்டத்துக்குள்ளேயே வாழ்ந்து காட்டும் கொள்கையுள்ள பேராசிரியையாக நடித்த லட்சுமி நடிப்புக்கு இலக்கணம் வகுத்திருந்தார். கல்லூரியில் மாணவிகளிடம் காட்டும் கண்டிப்பு—வீட்டில் கணவனிடம் காட்டும் கண்டிப்பு—நொடியில் மறையக் காதல் வயப்படும் பாங்கு—இவற்றை லட்சுமி மிகச் சிறப்பாய்ச் செய்திருந்தார். இறுதிக் காட்சியில் கணவனிடம் அன்பாய்ப் பேசி, அவன் மடியிலேயே உயிர் துறக்கும் காட்சியில் அவர் முழு நிறைவைத் தந்தார். புதுமுக நடிகர்கள், நடிகைகளில் பாண்டியன், ஊர்வசி, ரேவதி ஆகியோர் குறிப்பிடத் தகுந்தவர் கள். இவர்களில் ஊர்வசி 'முந்தானை முடிச்சு'ப் படத்தின் மூலம் அறிமுகமானார். தான் விரும்பும் கதாநாயகனிடம் நேரே போய் ''என்னை கல்யாணம் செஞ்சிக்குங்க'' என்று கேட்கும் பரிமளமாக அவர் பரிமளித்திருந்தார். என்றாலும், ''உனக்கு என்ன வேணும்'' என்று கேட்கும் பாட்டி ஒச்சாயியிடம், ''எனக்கு உன் பிள்ளையைக் கல்யாணம் செஞ்சித் தரியா'' என்று கேட்கும் முத்துப் பேச்சியாய் நடித்த ரேவதி. 'முதல்படம்' என்றே சொல்ல முடியாத அளவுக்கு மிகச் சிறப்பாக, 'கவர்ச்சி', 'ஆபாசம்' என்ற குற்றச்சாட்டுகளுக்கே இடம் வைக்காமல், நேர்த்தியாக நடித்திருந்தார். 'மண்வாசனை' படத்தில் கதாநாயகனாய் அறிமுகமான பாண்டியன், முரட்டு வீரையன் பாத்திரத்தை மிகச்சிறப்பாகச் செய்திருந்தார். முறைப் பெண்ணுக்குப் 'பட்டுகட்ட' கூப்பிடும்போது, அவர் 'பிகு' செய்து கொள்வது போன்ற காட்சிகளில் அவரது நடிப்புத் திறமை வெளிப் பட்டது.

குணச்சித்திர வேடங்களில் நடித்தவர்களில், 'இன்று நீ நாளை நான்' படத்தில் நடித்திருந்த ஜெய்சங்கர் குறிப்பிடத் தக்கவர். அது போன்றே, அடுத்தவர்களின் சுக துக்கங்களில்தானே போய்ப் பங்கேற்கும் 'மளிகைக் கடை அண்ணாச்சி'யாய் 'உண்மைகள்' படத்தில் நடித்த ராக்கெட் ராமநாதனும் குறிப் பிடத்தகுந்தவர். 'உறங்காத நினைவுகள்' படத்தில் கண்டிப்பும். உறுதியும் நிறைந்த பாத்திரத்தில் நடித்திருந்த ராதிகாவும் 'துடிக்கும் கரங்கள்' படத்தில் கணவனையிழந்து, அவனது தம்பி யின்மீது பாசத்தைக் கொட்டும் பாத்திரத்தில் சுஜாதாவும் மிகச் சிறந்த குணச்சித்திர வேடங்களைச் சிறப்பித்திருந்தனர்.

'பொய்க்கால் குதிரை'யில் நடித்த ரவீந்தர் தன் திறமையை மிக அழகாய் வெளிப்படுத்தியிருந்தார். 'ஒரு கை

பார்ப்போம்' படத்தில் விசுவின் நகைச்சுவை நடிப்பும் குறிப் பிட்டுச் சொல்லத் தக்கதாய் இருந்தது. கவர்ச்சி நடனமாடிய நடிகையரில் 'சிலுக்கு ஸ்மிதா' முன்னணியில் இருந்தார். அவரது நடனம் இடம் பெற்றால்தான் படத்தை வாங்கமுடியும் என்று வினியோகஸ்தர்கள் கூறுமளவுக்கு, சிலுக்கின் ஆதிக்கம் நிலவியது. அனேகமாக, எல்லா மசாலா படங்களிலும். அவரது நடனம் இடம் பெற்றிருந்தது. 'மலையூர் மம்பட்டியான்' போன்ற சில நல்ல படங்களில்கூட, சிலுக்கின் நடனம் அனாவசியமாய்த் திணிக்கப் பட்டிருந்தது. 'இந்தப் படத்துக்குச் சிலுக்கின் நடனம் தேவையா' என்று ஒரு வார இதழ் அங்கலாய்த்திருந்தது. 'சிலுக்கின் நடனக்காட்சி என்றாலே, சென்ஸார் அதிகாரிகள் கண்ணில் விளக்கெண்ணெய் விட்டுக் கொண்டு பார்க்கிறார்களாம்' என்று இன்னொரு வார இதழ் செய்தி வெளியிட்டிருந்தது. அந்த அளவுக்குச் சிலுக்கின் நடனங்களில் ஆபாசம் இருந்தது. முன்வரிசை ரசிகர்களின் கனவுக் கன்னியாகத் திகழ்ந்தார் சிலுக்கு ஸ்மிதா. ''இப்போதெல்லாம் தமிழ்ப் படங்கள் எடுக்க இரண்டு விஷயங்கள் அத்யாவசியமானவையாகிவிட்டன. ஒன்று—ஃபிலிம் ரோல் (Film Roll) இன்னொன்று சிலுக்கு'' என்று ஒரு நாளேடு எழுதி யிருந்தது. அந்த அளவுக்கு இந்த ஆண்டு தமிழ்த் திரையுலகைத் தன் ஆதிக்கத்தில் வைத்திருந்தார் சிலுக்கு ஸ்மிதா.

**இயக்குநர்கள்**

1983ஆம் ஆண்டைத், தமிழ்த் திரையுலகில் இயக்குநர்களின் பொற்காலம் என்றே சொல்ல வேண்டும். 'இவர் நடித்த படம்' 'அவர் நடித்த படம்' என்று சொல்லும் நிலைமாறி. 'இவர் இயக்கிய படம்' 'அவர் இயக்கிய படம்' என்று சொல்லும் நிலை ஏற்பட்டது. 'எஸ்.பி. முத்துராமனும், இராம. நாராயணனும் தலா நான்கு பட்ங்களை இயக்கியிருந்தனர். எஸ்.பி, முத்துராமன் ஆங்கிலப் படங்களின் 'கார்பன் காப்பி'களை (Carbon Copy) எடுத்துக் கொண்டிருக்க இராம. நாராயணன் எஸ்.பி. முத்துராமன் இயக்கிய படங்களின் 'கார்பன் காப்பி'களை எடுத்துக் கொண் டிருந்தார். இருவருமே, 'ஜனரஞ்சகம்' என்ற போர்வையில் மக்களின் ரசனையை மேலும் மோசமான நிலைக்குக் கொண்டு வந்தனர். சுந்தர்ராஜன், தான் ஒரு சிறந்த இயக்குநர் என்பதைத் 'தூங்காத கண்ணின்று ஒன்று' மூலம் நிருபித்திருந்தார். 'மலையூர் மம்பட்டியான்' முழுக்க முழுக்க ஒரு இயக்குநரின் படம் (Director's Film) என்பது தெளிவாகத் தெரிந்தது. இந்தப் படத்தின் மூலம் ராஜசேகர் முன்னணி இயக்குநர்களில் ஒருவரானார். பாலசந்தர்

சிறந்த இயக்குநர் என்றாலும், 'பொய்க்கால் குதிரை'யில் அவரது திறமையை வெளிப்படுத்துவதற்கான வாய்ப்புகள் குறைவாய் இருந்தன. ஏ. ஜெகன்னாதன், ஒரே சமயத்தில் 'வெள்ளை ரோஜா' படத்தின் மூலம் சிறந்த இயக்குநர் என்ற பெயரையும், 'தங்கமகன்' படத்தின் மூலம் மோசமான இயக்குநர் என்ற பெயரையும் பெற்றார். ராஜேந்தர் இயக்கிய இரண்டு படங்களும் பெரும் வெற்றி பெற்றன என்றாலும், 'இயக்குநர் பொறுப்பை அவர் சிறப்பித்ததாய்ச் சொல்ல முடியாது. வசனங்களும், பாடல் களுமே அவர் படங்களை ஆக்கிரமித்திருந்தன. தனது முதல் படமான 'நெஞ்சமெல்லாம் நீயே' மூலம் ரங்கராஜ் தனது 'இயக்கும் திறனை' வெளிப்படுத்திக் கொண்டார். ''ஜனங்க ஒத்துக்கற மாதிரி, அவங்க ரசிக்கற மாதிரி படங்களைத் தரணும்'' என்று சொன்ன மணிவண்ணன் இயக்கிய படங்களில் குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய அளவு எந்தப் படமும் இல்லை.

மௌலி, விசு உட்பட, நாடக மேடையிலிருந்து திரைப் படத்துறைக்கு வந்தவர்கள் இயக்கிய படங்களில் பக்கம் பக்கமாய் வசனம் இடம் பெற்றதால், அந்தப் படங்களில் 'நாடக வாடையே' வீசியது. ''என் படங்களில் கதைக்கும், வசனத்துக்கும் மட்டுமே முக்கியத்துவம் தருகிறேன்'' என்று சொன்ன மௌலி, சினிமாவில் மிகவும் முக்கியமான 'காட்சி யமைப்பு' பற்றிக் கவலைப் பட்டதாய்த் தெரியவில்லை. 1983இல் பல புதிய இயக்குநர்கள் வந்துபோனார்கள். திறமையின்மை அவர் களை ஒரு படத்தோடு திரையுலகுக்கு 'முழுக்கு'ப் போட வைத் தது. ''எந்தத் தொழிலைச் செய்ய வேண்டுமென்றாலும் அந்தத் தொழிலில் முன்னனுபவம் அவசியம் தேவையாயிருக்கும். சினிமா வில் மட்டுமே முன்னனுபவம் இல்லாதவர்கள் இயக்குநர்களாய் வருவதைப் பார்க்க முடிகிறது'' என்றார், இயக்குநர் பாலசந்தர். அவர்களில் திறமையற்றவர்கள், திரையுலகில் இடமிழந்ததை 1983இல் பார்க்க முடிந்தது. இயக்குநர்களில் தனக்கிருந்த சிறப் பிடத்தை இந்த ஆண்டிலும் தக்கவைத்துக் கொண்டவர் பாரதி ராஜா. ''பாரதிராஜாவிடம் 'விஷுவல் எபெக்ட்' (Visual Effect) அதிகம்'' என்று கூறப்படுவதை 'மண்வாசனை' மூலம் நிரூபித்திருந் தார் அவர். படத்தில் பெரிய நடிகர்களைப் போடுவது கதை மாந்தர்களின் தன்மையைப் பாதிக்கும் என்பதால், புதுமுகங் களையே பயன்படுத்தியிருந்தார், பாரதிராஜா. அந்தப் புதுமுகங் களையும் 'புதியவர்கள்' என்று தெரியாத அளவுக்கு அற்புதமாக நடிக்க வைத்திருந்தார். ஒரு இயக்குநரின் கடமைகளான 'காட்சி

யமைப்பு நடிகர்களை நடிக்க வைத்தல், கதையின் பின்னணியாய் அமைய இருக்கும் இடங்களைத் தேர்ந்தெடுத்தல், போன்ற வற்றைச் செம்மையாய்ச் செய்திருந்தார் அவர். புதுமுகங்களை நடிக்க வைத்ததோடு நின்று விடாது, 'பழைய' முகமான 'காந்திமதி'க்கு 'ஒச்சாயி' என்ற வித்தியாசமான வேடத்தைக் கொடுத்து, துணிவோடு இயக்கியிருந்தார் பாரதிராஜா. 'பொத்தி வைச்ச மல்லிகை மொட்டு' என்ற பாடலை அவர் படமாக்கியிருந்த விதம், அற்புதமான அவரது திறமைக்குச் சான்றாய் அமைந்தது. எல்லாவற்றுக் கும்மேல், படம் முழுவதும் தென்பாண்டிச் சீமையின் மண் மணத்தை அள்ளித் தெளித்திருந்த அவரது ஆற்றல், 1973ஆம் ஆண்டில் படத்தை இயக்கியவர்களில் அவருக்குத் தனி இடத்தைப் பெற்றுத் தந்தது.

**ஒளிப்பதிவு**

1980களின் துவக்கத்தில் தான் ஒரு படத்தின் வெற்றியில் ஒளிப்பதிவாளருக்கு இருக்கும் பங்கு ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. 1983இல் வெற்றி பெற்ற பல படங்களின் வெற்றிக்குரிய காரணங் களில் ஒளிப்பதிவும் முக்கிய இடத்தைப் பெற்றது. அனேக படங் களில், வெளிப்புறக் காட்சிகளுக்கு அதிக அளவில் இடம் தரப்பட் டிருந்ததற்கு, ஒளிப்பதிவு 'பளிச்'சென்று இருக்க வேண்டுமென்ற எதிர்பார்ப்பே காரணம் 'மண்வாசனை' படத்தின் ஒளிப்பதிவாளர் கண்ணன், கதையின் நிலைக்களனை மிக அழகாகப்படம் பிடித் துக் காட்டியிருந்தார். ''முந்தானை முடிச்சு'ப் படத்தின் வெளிப் புறக் காட்சிகளை, மிகத்தெளிவாக எடுத்துக் கொடுத்திருந்தார் அசோக்குமார். 'பாயும்புலி' படத்தில், அதிக சிரத்தையெடுத்துத் தனது பங்கைச் சிறப்புற ஆற்றியிருந்தார் ஒளிப்பதிவாளர் பாபு. அவர் ஒளிப்பதிவு செய்த இன்னொரு படமான 'தூங்காதே தம்பி தூங்காதே' படத்தின் சண்டைக் காட்சிகள், அவரது விறுவிறுப் பான ஒளிப்பதிவின் மூலம் பாராட்டைப் பெற்றன. 'இளமைக் காலங்கள்' படத்தில் தனது தனிச்சிறப்பைக் காட்டியிருந்தார் ஒளிப்பதிவாளர் சபாபதி. அந்தப் படத்தில் இளங்காதலர்கள் மலைமேலிருந்து விழுந்து தற்கொலை செய்து கொள்ளும் காட்சி ஒளிப்பதிவுக்காகப் பாராட்டப் பெற்றது. ''சேலத்தில் ஒரு தியேட்டர் காரர் 'சபாபதி ஒளிப்பதிவு செய்திருக்கும் இளமைக் காலங்கள்' என்று விளம்பரம் செய்திருப்பதைப் பார்த்து நெகிழ்ந்து போனேன்'' என்று சபாபதி ஒரு பேட்டியில் கூறினார். தனது

படங்களை எழுதி, இயக்கி, இசையமைத்து, தயாரித்து வந்த ராஜேந்தர் 'தங்கைக்கோர் கீதம்' படத்தின் மூலம் ஒளிப் பதிவாளராய் அறிமுகமானார். 'முதல் முயற்சி' என்ற அளவில் அது பாராட்டத் தக்கதாகவே இருந்தது. கதையின் போக்கையும் பாதிக்காமல், அதே நேரத்தில் ஒளிப்பதிவின் சிறப்பம்சங்களையும் விட்டுக் கொடுக்காமல், 'மலையூர் மம்பட்டியான்' பட வெற்றிக் குரிய காரணங்களில் ஒருவரானார், ஒளிப்பதிவாளர் ரங்கா, அவரது ஒளிப்பதிவின் தரம் படம் பார்ப்பவர்களை வியக்க வைத்தது, 'ரங்காவின் காமரா' (Camera) கவிதைஎழுதியிருக்கிறது' என்று ஒரு நாளேடு பாராட்டியிருந்தது. ஒளிப்பதிவுக் கருவியில் இப்போது கிடைக்கும் நவீன 'லென்ஸ்'களைப் பயன்படுத்தி, அதன் மூலம் தங்களது சிரமத்தைக் குறைத்துக் கொள்ள முற்பட்டனர் பல ஒளிப்பதிவாளர்கள், 'ஸூம் லென்ஸ்' (Zoom Lence) போன்ற நவீன வசதிகளை மட்டுமே நம்பி, ஒளிப்பதிவு செய்த அவர்களால் சினிமா உலகில் காலூன்ற முடியவில்லை.

இசையும், பாடலும்

1930களிலும், 1940களிலும் தமிழ்த் திரைப்படங்களில் இசை மற்றும் பாடல்களின் ஆதிக்கம் அதிகமாய் இருந்தது. 'எங்கள் கம்பெனி படத்தில் 68 பாடல்கள்' என்று விளம்பரம் கூடச் செய்யப்பட்டது. படங்களில் இடம் பெறும் பாடல்களில் இடம் பெறும் பாடல்களின் எண்ணிக்கை கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைந்து '70'களில் 'நான்கு அல்லது ஐந்து' என்ற அளவுக்கு வந்து விட்டது. என்றாலும், ஒரு படம் வெற்றி பெறுவதற்கு, அந்தப் படத்தில் இடம் பெறும் பாடல்களும் காரணம் என்ற நிலை இன்னும் நிலவுகிறது. 1983இல் வெளிவந்த 'இளமைக் காலங்கள்' என்ற படம் 'மிகவும் சுமார்' என்று கூறப்பட்டும் அந்தப் படத்தில் இடம் பெற்ற பாடல்கள் பிரபலமானதையடுத்து, படம் வெற்றி பெற்றது. வெளிவந்த படங்களில் அதிகப் படங்களுக்கு இசையமைத்தவர் இளையராஜா, அவரி படங்களில் இடம் பெறும் பாடல்களை அமைப்பதில் எடுத்துக் கொள்ளும் சிரத்தையை, படத்தின் பின்னணி இசையை அமைப்பதிலும் எடுத்துக் கொண்டார். கர்நாடக—சாஸ்திரீய இசை 'சங்கதி'களைச் சினிமாவில் புகுத்தி, புதுமையான இசையை வழங்கினார், இளையராஜா.

இதனாலேயே அவரது இசையமைப்பு வித்தியாசமானதாக அமைந்தது. இது மட்டுமின்றிக் கிராமிய இசையின் சிறப்பம்சங்

களையும் சினிமாத் துறைக்கு அறிமுகப்படுத்தினார், அவர். அவரது இசையமைப்பில் மண்வாசனை இருந்தது. பாடலாசிரியர் களில், வைரமுத்துவுக்கு இளையராஜா சிறப்பிடம் தந்தார். இளையராஜாவின் இசை அமைப்பில் வைரமுத்துவின் பாடல்கள் நல்ல வரவேற்பைப் பெற்றன. சினிமாப் பாடல்களில் வழக்கமாய் இடம்பெறும் வார்த்தைகளைத் தவிர்த்து, புது வரலாறு ஒன்றை வைரமுத்து உருவாக்கினார். இளையராஜாவும், வைரமுத்துவும் சேர்ந்து படைத்த 'ஈரமான ரோஜாவே' பாடல் 1983இன் முதல்தரமான பாடலாய்க் கருதப்பட்டது. மண் வாசனை, முந்தானை முடிச்சு, மலையூர் மம்பட்டியான் போன்ற படங்களின் வெற்றியிலும் இளையராஜாவுக்குப் பங்கிருந்தது. இளையராஜா—வைரமுத்து கூட்டணியில் உருவான இலக்கியத் தரம் மிக்கப் பாடல்களை வரவேற்ற திரையுலகம், 'கட்டடிப்போம் கட்டடிப்போம் காலேஜுக்கு' என்ற ராஜேந்தரின் பாடலையும் வரவேற்றது. ராஜேந்தர் பாடல் அமைப்புக்குத் தந்த முக்கியத் துவத்தைப் பின்னணி இசைச் சேர்ப்புக்குத் தரவில்லை. தனது இசையமைப்பில் தானே பாடல் எழுதி, அவற்றின் பிரபலத்தால் தனது படங்கள் ஓட வழி வகுத்துக் கொண்டார், அவர். 'வைகைக் கரைக் காற்றே நில்லு' என்பது போன்ற ஒரு சில நல்ல பாடல்களையும் ராஜேந்தர் தந்தார். 'தங்கைக்கோர் கீதம்' படத்தில், ராஜேந்தரே இசையமைத்து, அவரே எழுதி, அவரே பாடிய 'தட்டிப் பாத்தேன் கொட்டாங்குச்சி' பாடல் அந்தப் படம் பெற்ற வெற்றிக்கு முக்கியமான காரணமாய் இருந்தது. 'துடிக்கும் கரங்கள்' படத்தின் மூலம் இசையமைப்பாளராய் அறிமுகமான பிரபல பாடகர் எஸ். பி. பாலசுப்பிரமணியம், குறிப்பிட்டுச் சொல்லத்தக்க அளவு சாதனை புரிந்தார் என்று சொல்ல முடிய வில்லை.

### வசனம்

1950களில் தமிழ்த் திரைப்பட உலகம் வசனகர்த்தாக்களின் ஆதிக்கத்திலிருந்தது. ஸ்ரீதரின் வரவுக்குப்பின் 'இயக்குநர்' தான் ஒரு படத்தின் வழிகாட்டி என்பது முடிவாயிற்று. அதன்பின்பே, 'வளவள' வென்று வசனம் பேசும் போக்கு குறைந்தது. என்றாலும், வசனங்களில் 'ஆபாசம்' இடம் பெறுவது அதிகரித்தே வந்தது. 1983ம் இதற்கு விதிவிலக்கல்ல. பல திரைப்பட வசனகர்த்தாக்கள் நடிகர்களை மனத்தில் கொண்டே தாங்கள் வசனம் எழுதுவதாய் 'பெருமையுடன்' சொல்லிக் கொள்கிறார்கள். 1983இல் வெளிவந்த படங்களில் உண்மைகள்,

மலையூர் மம்பட்டியான், மண்வாசனை, முந்தானை முடிச்சு போன்ற படங்களில் வசனம் சிறப்பிடம் பெற்றது. ''ஒரே காட்டுல ரெண்டு சிங்கம் இருக்கக் கூடாதுடா'' என்று மம்பட்டியானைப் பேச வைத்த ராஜசேகர், 'நோட் பண்ணிகிட்டிருக்கேன்'' என்று ஜானகியைப் பேசவைத்த ஆர்.சி. சக்தி போன்றவர்கள் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துத் தனிச் சிறப்பைப் பெறுகிறார்கள். 'வாடா என் மச்சி, வெங்காய பஜ்ஜி' என்று வசனம் எழுதிக் கொண்டிருக்கும் ராஜேந்தரின் வசனங்கள் முன் வரிசை ரசிகர்களுக்கு ரசிக்கத் தக்கதாய் இருந்தது என்பதை மறுப்பதற்கில்லை. மொத்தத்தில். வசனங்களில் கொச்சைத் தன்மையும், ஆங்கில ஆதிக்கமும் கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைந்து கொண்டு வருவதை 1983இன் படங்கள் மெய்ப்பித்தன. பக்கம் பக்கமாக வசனம் பேசிக் கொண்டிருக்கும் பழைய உத்தியைப் பொதுமக்கள் விரும்பவில்லை என்பதற்குப் பழைய 'மனோகரா' படத்தின் வசனங்களை 'உல்ட்டா' செய்து சேர்த்திருந்த 'சூரக் கோட்டை சிங்கக்குட்டி'யின் தோல்வி நல்ல சான்று.

## 1983 உருவாக்கியுள்ள புதிய போக்கு

இந்த ஆண்டில் வெளிவந்த படங்களில், வெற்றி பெற்ற படங்களை ஒப்பிட்டுப் பார்க்கும் போது ஒரு உண்மை தெளிவாகிறது. அந்தப் படங்கள் அனைத்திலும் 'திரைக்கதை சிறப்பாக—சுவாரஸ்யமாகச் சொல்லப்பட்டிருந்தது. வெறும் கதையையும், வசனத்தையும் மட்டுமே நம்புவதைத் தவிர்க்க வேண்டுமென்பதை இம்முடிவு எடுத்துக் காட்டுகிறது. ஒரு மிகச் சாதாரணமான சிறுகதையைக் கூட, சுவையான சம்பவங்கள் நிறைந்த திரைக்கதையாய்ச் சொல்வதன் மூலம் அதை ஒரு நல்ல சினிமாவாகக் கொண்டு வரலாம் என்பது இதிலிருந்து தீர்மானிக்கப்பட்டது. மண்வாசனை, முந்தானை முடிச்சு, உண்மைகள்,மலையூர் மம்பட்டியான் ஆகிய இப்படங்களின் கதை இரண்டே வரிகளில் சொல்லிவிட முடியும். அந்தச் சிறுகதைகளைச் சலிப்பு ஏற்படாத வண்ணம் திரைக்கதை ஆக்கியிருந்தனர். கதைகளில் வீண் சிக்கல்களோ, குழப்பங்களோ ஏற்படாத வண்ணம் திரைக்கதை அமைக்கப்பட்டது. மலையூர் மம்பட்டியான் படம் வெற்றியடைந்ததும், அதன் இயக்குநர் ராஜசேகர் சொன்னார் : ''என் படத்தின் வெற்றிக்கு எந்த தனி நபரும் காரணமல்ல. சீரான, தெளிவான

திரைக்கதையமைப்பே காரணம்.'' ராஜசேகரின் கூற்றை வெற்றிப் படங்கள் ஒவ்வொன்றும் மெய்ப்பித்தன. 'அடுத்து வரும் காட்சி என்ன' என்பதைக்கூடத் தெரிந்து கொள்ளாமல், குழப்பத்துடன் படங்களை உருவாக்கியவர்களே தோல்வியைத் தழுவ நேர்ந்தது. 'ஒரு சிக்கலில்லாத சிறிய கதையை, சுவாரஸ்யமாய்ச் சொல்வது' என்ற போக்கு உருவானது, 1983இல் தான் என்று உறுதியாகச் சொல்லலாம். 'கதையைவிட, கதை சொல்லப்படும் விதம் முக்கியமானது' என்ற நிலையை இப்போக்கு வளர்க்கும். திரைப் படத்திற்கு மிக இன்றியமையாதது 'திரைக்கதை'யே என்ற இப் போக்கு, இன்னும் சில ஆண்டுகள் நீடிக்கலாம்.

முடிவுரை

ரசிகர்களின் ரசனைக்காகவே படமெடுப்பதாய்ச் சொல்லும் பலர், 1983இல் தோல்வியைத் தழுவ நேர்ந்தது. ரசிகர்களுக்கு தான் சொல்ல நினைத்ததைச் சுவாரஸ்யமாய்ச் சொன்னவர்கள் வெற்றி கண்டனர். திரைப் படத்துறையில், திறமைசாலிகள் தோல்வியைத் தழுவுவதில்லை என்பதை 1983 மெய்ப்பித்தது. தமிழ்ப் படங்களின் எண்ணிக்கை '83இல் சற்றுக் குறைந்திருக்க லாம். இனிவரும் ஆண்டுகளிலும் இந்த எண்ணிக்கைக் குறைவு நிகழலாம். ஆனால், தரத்தில் இந்தியப் படங்களில் முதல் இடத்தைப்பெற்று, உலகளாவிய அளவில் தமிழ்ப்படங்கள் 'பேசப்பட வேண்டும்' என்பதே ஒவ்வொருவரது அவாவும்...!

தகவல் குறிப்பிற்கு உதவியவை

1. பிலிம் நியூஸ், ஆண்டமலர், 1983
2. ஆனந்தவிகடன், 1983ஆம் ஆண்டு இதழ்கள்
3. சினிமா எக்ஸ்பிரஸ் ,,
4. மாலை முரசு ,,
5. திரைச் சுவை ,,
6. ஜெமினி சினிமா ,,

# திரையிசைப் பாடல்

## பெ. அனந்தசயனம்

*வெளிவந்த 96 தமிழ்த்திரைப் படங்களுள் 76 படங்களின் பாடல் புத்தகங்கள் கிடைக்கின்றன. 40 கவிஞரின் 362 திரைப்பாடல்கள் இதில் அமைகின்றன. 15 படத்திற்கு முழுமையாகவும், மொத்தம் 48 படத்திலுமாக 200 பாடல்கள் இயற்றிய கவிஞர் வாலி முன்னணியில் நிற்கிறார். 10 புதிய கவிஞர்க்கும் இக்கலைத்துறை இடமளித்துள்ளது. மிகுதியான பாடல் (10) இடம்பெற்ற படம் ஆனந்தக்கும்மி. புதிய இசையும், பழைய மெட்டும் பாடலுக்கு வளம் சேர்த்தல் புலப்படு கின்றது.*

### திரைப்படம்—தோற்றம்

பிரான்ஸ் நாட்டு ''லூமியர்'' சகோதரர்களால் 1885ஆம் ஆண்டில் திரைப்படக் கலையின் அடிக்கல் நாட்டப்பட்டு, அதன் காரணமாக இந்தியாவிற்கு 1896ஆம் ஆண்டில் ''ஏசுவின் வாழ்க்கை'' என்ற ஊமைப்படம் வந்தது. 'டுபான்ட்' என்ற மேனாட்டுப் பெரியார் இந்தத் திரைப்படத்தை இந்தியாவிற்குக் கொண்டு வந்தார். இத் திரைப்படத்தைப் பார்த்த வின்செண்ட் சாமிக் கண்ணு என்பவரின் தணியாத ஆர்வத்தின் காரணமாக இதே திரைப்படம் தமிழ் நாடெங்கிலும் பல ஊர்களில் திரையிடப் பட்டது.[1]

### திரைப்படக்கலையின் நோக்கம்

மாற்றாரின் அறிவியல் கண்டுபிடிப்பைத் தங்கள் நாட்டிலும் கொண்டு வர வேண்டும் என்ற அவாவின் காரணமாகவும், புதுமையைக் கண்டவிடத்துக் கண்டு உணர்ந்து இன்பமுறுவது மனித இயற்கை என்பதாலும், அவ்வாறு தான் பெற்ற இன்பத்தைப் பிற மக்களும் பெற வேண்டும் என்ற காரணத்திற் காகவும் திரைப்படக்கலை தமிழ் நாட்டிற்குள் புகுந்தது.

நல்ல கருத்துக்களைப் பரப்ப வேண்டும் என்ற உயரிய கொள்கையின் உந்துதலினால் வளர்ந்தது திரைப்படக்கலை.

---

1. அறந்தை நாராயணன், தமிழ் சினிமாவின் கதை, ப. 8

கலை கலைக்காகவே என்று கொள்ளாமல் கலை மக்களுக்காக இருக்க வேண்டும் என்பது அறிஞர் முடிபு. (மக்களை மகிழச் செய்வதற்காக, சிந்திக்கத் தூண்டுவதற்காக, தவறான கோட்பாடு களைக் கடைப்பிடித்துக் கொண்டு வரும் தலைமுறையினரைச் சீர்த்திருத்துவதற்காக என்பன போன்ற வாழ்க்கைக் கூறுகளைக் கூறுதல்). பிரபல இயக்குநர் மிருணாள்சென் "திரைப்படக் கலையின் முக்கிய நோக்கம் மக்களுக்கு நல்ல செய்திகளைச் சொல்லுவதாக இருக்க வேண்டும்" என்பார்.[2] மேலும் திரைப் படத்தின் சாராம்சம் என்பதே புரிந்து கொள்ளக் கூடிய அனைத்து வழிகளிலும் அது மனித நலனுக்காக இருப்பதுதான் என்பார். ஆனால் இன்றைய நிலையில் வியாபார நோக்கமே முதன்மை பெறுகிறது.

முதல் திரைப்படங்கள்—கதை அமைப்பு—காரணம்

இந்தியாவிலேயே தயாரிக்கப்பட்ட "அரிச்சந்திரா" என்ற முதல் பேசாப் படத்தை 1913இல் வெளியிட்ட பெருமை தாதா சாகிப் பால்கே என்பவரைச் சாரும்.[3] தமிழர் ஒருவரால் (நடராஜமுதலியார்) 35 நாட்களில் எடுத்து முடிக்கப்பட்ட "கீசகவதம்" என்ற முதல் சலனப்படம் 1916இல் வெளிவந்தது. 1929ஆம் ஆண்டில் கல்கத்தாவில் திரையிடப்பட்ட "மெலடி ஆஃப் லவ்" என்ற ஆங்கிலப் படமே இந்தியாவிற்குள் பேச ஆரம்பித்த முதல் திரைப்படமாகும். இந்தியாவில் 1931ஆம் ஆண்டில் வெளி யான முதல் பேசும் படமான "ஆலம் ஆரா"வைக் கண்ணுற்று அதன் தாக்கத்தால் 1931ஆம் ஆண்டு அக்டோபர் 31ஆம் தேதி "காளிதாஸ்" என்ற முதல் தமிழ்ப் பேசும் படம் வெளி வந்தது.

மக்களுக்குத் தெரிந்த புராண இதிகாசக் கதைகளை வெளி யிட்டால் தான் மக்களிடமிருந்து பேராதரவைப் பெறமுடியும் என்ற அவாவினால் முதன் முதலில் புராண, இதிகாசச் செய்திகள் அடங்கிய திரைப்படங்களை வெளியிட்டிருக்க வேண்டும். "காளிதாஸ்" திரைப்படத்திற்கான விளம்பரத்தில் "உயர்ந்த கீர்த்தனைகள், நல்ல பாடல்கள் கொண்ட பேசும் படம்...... கொரத்தி நடனம் உண்டு" என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது.[4]

2. மிருணாள் சென், சினிமா ஒரு பார்வை, ப. 11
3. அறந்தை நாராயணன், மு.கு.நூ. ப. 11
4. மேற்படி ப. 41

புராண, இதிகாசக் கதைகளை விளக்கிக் கூறும் முகத்தானும், பொழுதுபோக்கு அம்சங்கள் இருந்தால்தான் திரைப்படம் வெற்றி யடையும் என்ற நம்பிக்கையின் காரணமாகவும் புராணக்கதை உயர்ந்த பாடல்கள், குறத்தி நடனம் போன்றவை சேர்க்கப் பட்டிருக்கலாம்.

முதல் திரைப்படத்தில் குறிப்பிடத்தக்க செய்தியாகக் கதைத் தலைவன் தெலுங்கிலும், கதைத் தலைவி தமிழிலும், துணை நடிகர்கள் இந்தியிலும் பேசி நடித்திருக்கிறார்கள்.

**திரைப்படத்தில் பாடலின் பங்கு**

கதை, நடிப்பு, உரையாடல், பாடல், இசை என்பதன் கூட்டுக் கலவையாகத் திரைப்படம் உள்ளது. உரைநடை திரைப் படத்தின் ஓட்டத்திற்குக் காரணமாகவும், கருத்தைக் கூறுவதற் காகவும், பயன்படுத்தப்படுகிறது. உரைநடையின் முந்தைய நிலை கவிதை. இதனாலேயே முந்நாளைய நாடகங்களிலும் உரையாடல்கள் கவிதை நடையிலேயே அமைந்திருந்தன.

(1) உரையாடல் நீண்ட நேரம் தொடர்ந்து நடைபெறு மானால் ஒரு தொய்வு/மந்த நிலை ஏற்படும். இந்த உணர்வு நிலையை மாற்றி மனத்தில் புத்துணர்ச்சி எழப் பாடலும் பாடலுக் கான இசையும் உதவி புரிகின்றன.

(2) கவிதை ஒரு சொற்செட்டு கொண்ட இலக்கியமாகும். உரைநடையில் நீண்ட நேரம் சொல்லி விளக்க வேண்டியதைக் கவிதை வடிவில் ஓரிருசொற்களாலேயே அமைத்துக்காட்டமுடியும்.

(3) இசைப் பாடல்கள் அனைத்தும் கவிதை வடிவிலே அமைந்தவை. பாடல்களைப் புகுத்தினால் மட்டுமே இசையையும் இணைக்க முடியும். உரைநடையிலான உரையாடலுக்கு இசைப் பின்னணி தேவையில்லை.

(4) கதைத் தலைவன், தலைவி இவர்களிடையே மலர்ந்து வரும் காதல் உணர்வை வெளிப்படுத்த உரையாடல் நிலையை விட, கவிதை நிலையே சாலச் சிறந்தது.

(5) கதர் விற்பனை, மது விலக்குப் பிரச்சாரம், சுதந்திர உணர்வை ஊட்டல், கொள்கைகளை விளக்கல் என்பனவற்றிற்கும் பாடல்களே உதவி புரிந்தன, புரிகின்றன.

(6) இசை, நடனம், போன்ற கலை வளர்ச்சி நிலைகளுக் காகவும் பாடல்கள் பயன் பெற்றன.

(7) ஒரு குறிப்பிட்ட நிகழ்வைக் கூறி விளக்க முடியாத நேரத்தில், விளக்கத்தைத் தரவும் தெளிவைக்காட்டவும் பாடல்கள் தேவை.

(8) வீரம், சோகம், தாபம் போன்ற நிலைகளை, மெய்ப்பாடு களுடன் காட்டவும் பாடல்கள் உதவிபுரிகின்றன.

(9) பல நாட்கள் விளக்க வேண்டிய புராண, இதிகாசக் கதை நிகழ்வுகளை, கவிதை நடையில் மூன்று அல்லது நான்கு மணித் துளிகளில் விளக்கிக் காட்டவும் பாடல்களே துணை புரிகின்றன.

இதனாலேயே திரைப்படத்தில் பாடல்கள் இடம்பெற்றன.

1934இல் வெளியான "ஸ்ரீனிவாச கல்யாணம்" என்ற திரைப் படத்தில் 50 பாடல்கள் இடம் பெற்றிருந்ததாகத் தெரிகிறது. பாடல்கள் திரைப்படத்தின் வெற்றிக்கு ஒரு காரணம் என்பதை மெய்ப்பிக்கும் வண்ணம் நல்ல பாடல்கள் கொண்ட ஹரிதாஸ், சிவகவி, நந்தனார், பட்டினத்தார் போன்ற திரைப்படங்கள் நீண்ட நாட்கள் ஓடின என்று கூறப்படுகின்றது.

பாடல்கள் இல்லாமல் அந்தநாள், பசி என்ற இரு திரைப் படங்கள் மட்டுமே வெளியாகி உள்ளன.

**பாடல்களின் கால அளவு**

தொடக்க காலத் திரைப்படங்களில் இடம் பெற்ற பாடல்கள் ஏறத்தாழ ஏழு அல்லது எட்டு மணித் துளி கால அளவைக் கொண்டனவாக இருந்திருக்கின்றன. இன்றைய நிலையில் பெரும் பாலான பாடல்கள் மூன்று மணித்துளி அளவில் சுருங்கி விட்டன. ஓரிரு படப்பாடல்களே ஏழு அல்லது எட்டு மணித்துளி அளவின தாக அமைந்துள்ளன.

ஒரு பாடலை மட்டும் மையப்பொருளாகக் கொண்டு கதை இயக்கும் பொழுது குறிப்பிடப்பட்ட பாடல் அளவு அதிகமாகத் தான் இருக்கும். படத்திற்கு ஒரு சிறப்பையும், முக்கியமான நிகழ்வைக் கூறும் அமைப்பையும் தருவதாக இப்பாடல் அமைந்து விடுகிறது. சான்றாக,

ஜெகம் புகழும் புண்ணிய கதை
இராமனின் கதையே
அதைச் செவி குளிரப் பாடிடுவோம்
கேளுங்கள் இதையே

என்ற பாடல் 'லவகுசா'திரைப்படத்தில் மையக் கருத்தடங்கிய பாடலாக அமைந்து சிறப்புப் பெற்றதைக் கூறலாம்.

**தொடக்க காலத்திரைப்படப் பாடல்களுக்கும் இன்றைய திரைப் படப் பாடல்களுக்கும் உள்ள வேறுபாடுகள்**

ஏறத்தாழ 30 வருடங்களுக்கு முன்பு வரை வெளிவந்த திரைப் படங்களில் உரையாடல்களை விட பாடல்களே அதிகமாக இருந்தன என்ற விபரம் எல்லோரும் அறிந்ததே. பாடல்கள், பாடியவர்களுக்காகவும், கருத்திற்காகவும், பாடலில் இழைந் தோடுகின்ற இசையின் மேன்மைக்காகவும் முன்னாளில் பிரசித்தி பெற்றன. ஆனால் இன்றைய திரைப்படங்களில் சில பாடல்கள் இசைக்காகவும், சில பாடல்கள் பின்னணிக் குரல் இனிமைக்காகவும், பல பாடல்கள் முக்கல் முனகல் சப்தங்கள் கொண்டு இரட்டைப் பொருள் தொனிக்கும் கருத்திற்காகவும் மக்களிடையே பேராதரவைப் பெறுகின்றன.

கீர்த்தனைப் பாடல்களும் புகழ்பெற்ற கவிஞர்களின் பாடல் களும் பெரும்பாலும் இடம்பெற்றிருந்த நிலை மாறி இன்று புதுக் கவிதையின் தாக்கம் இடம் பெற்றுள்ளது.

முன்பு நடித்த நடிகர்களே பாடினர். இன்று பாடலுக்குப் பின்னணிக் குரல் தேவைப்படுகிறது. ஓரிருவரைத் தவிர பல நடிகர், நடிகைகளுக்குப் பேச்சிற்குக் கூட பின்னணி தேவைப் படுகிறது.

கர்னாடக இசை, நாட்டுப்புற இசை போன்றவை பாடல்களில் இடம் பெற்றிருந்தன. இன்று மெல்லிசை, மேற்கத்திய இசை, நாட்டுப்புற இசை என்ற கலவை நிலை காணப்படுகிறது.

முன்பு சிருங்காரச் சுவை கொண்ட பாடல்கள் கூட பண் பாட்டுக் கூறுகளுடன் பாடப்பட்டன. இன்றோ சிருங்கார நிலை வெளிப்படையாகப் பாடப்படுகிறது.

இவ்வகையில் 1983இல் வெளியான திரைப்படப் பாடல்களை ஆய்வது இக்கட்டுரையின் நோக்கம்.

**1983இல் வெளியான திரைப்படங்களும் பாடல்களும்**

1983இல் தமிழ் நாட்டில் 96 திரைப்படங்கள் வெளியாயின. 1982ஆம் ஆண்டு 119 திரைப்படங்கள் வெளியாகியிருக்க திரைப் படத் தயாரிப்பில் தமிழ்நாடு பின்னணிக்குச் சென்றுள்ளது.

இவ்வாண்டில் வெளியான 96 திரைப்படங்களில் எழுபத்தாறு பாடல் புத்தகங்கள் மட்டும் கிடைத்தன. இத்திரைப் படங்களின் வாயிலாக 362 பாடல்கள் இடம் பெற்றிருந்த நிலையை அறிய முடிகிறது.

**பாடலாசிரியர்**

இந்த ஆண்டில் வெளியான திரைப்படப் பாடல்களை ஏறத்தாழ 40 கவிஞர் இயற்றியுள்ளனர். இதில் சுமார் 10 பேர் புதியதாகத் திரைப்படத் துறையில் நுழைந்தவர்கள்.

கவிஞர் வாலி ஏறத்தாழ 200க்கு மேற்பட்ட பாடல்களை எழுதியுள்ளார். 15 திரைப்படங்களுக்கு இவர் மட்டுமே பாடல்கள் முழுவதையும் எழுதியுள்ளார். இவ்வாண்டில் வெளியான திரைப் படங்களில் 48 திரைப்படங்களில் கவிஞர் வாலியின் பாடல்களைக் காணமுடிகிறது.

கவிஞர் வைரமுத்து, கங்கை அமரன், புலமைப் பித்தன், ராஜேந்தர், முத்துலிங்கம், அவனாசி மணி, பூவை செங்குட்டுவன், நா. காமராசன், மேத்தா, குருவிக்கரம்பை சண்முகம், காமகோடியான், பஞ்சு அருணாசலம், எம். ஜி. வல்லபன் போன்ற கவிஞர் பல பாடல்களை இயற்றியுள்ளனர்.

ரகு, இளையபாரதி, ஸ்டாலின், புலவர் மாரி, அறிவானந்தம், இளையராஜா முதலான கவிஞரும் ஓரிரு பாடல்களைத் தந்துள்ளனர்.

மறைந்த கவியரசு கண்ணதாசன் அவர்களின் ஒரு பாடல் முத்து எங்கள் சொத்து என்ற திரைப்படத்தில் இடம் பெற்றுள்ளதையும் காண முடிகிறது. [நான் உந்தன் செல்லக் குட்டி]

**பாடல்களின் வகைப்பாடுகள்**

பாடல்களில் அமைந்துள்ள பொருளை அடிப்படையாகக் கொண்டு, இயற்கை வருணனைப் பாடல்கள், காதல் பாடல்கள், திருமணப் பாடல்கள், கணவன் மனைவி உறவு, குழந்தையின் சிறப்புப் பற்றிய பாடல்கள், தாலாட்டுப் பாடல்கள். மாணவர்களைக் குறைகூறும் நிலைகொண்ட பாடல்கள், அரசியல்வாதிகளைக் (அரசியலில் லஞ்சம் போன்ற செய்திகளை) கிண்டல் செய்யும் அமைப்பில் அமைந்த பாடல்கள், பொதுவுடைமைக் கருத்தடங்கிய பாடல்கள், சடங்குப் பாடல்கள் குறிப்பிட்ட

காலச் சூழலை வெளிக்காட்டும் பாடல்கள் என்று பல்வேறு வகை களாகப் பிரிக்கலாம்.

மேற்கூறிய அனைத்துப் பகுப்புக்களையும் காதல் பாடல்கள், சமுதாயப் பாடல்கள், சமயப் பாடல்கள் என்ற மூன்று பிரிவு களில் அடக்கலாம்.

பாடல்களில் காணப்படும் வெளியீட்டு உத்திகளாக விடுகதை, தூது, உலா, பழமொழி, பல்வேறு மொழிச் சொற்கள் பயன் படுத்துதல் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

### காதல் பாடல்கள்

காதலைப் பற்றிப் பாடாதவன் கவிஞனே இல்லை என்பார் கவியரசர் கண்ணதாசன். காதல் கொண்ட நிலையைக் கூற, காதலின் பல்வேறு நிலைகளை, வளர்ச்சியைக் காட்ட, பாடல்கள் பயன்படுத்தப்படுகின்றன.

காதல் பாடல்களில் இயற்கையை வருணித்துப் பாடும் நிலை அருகியே காணப்படுகிறது. இந்நிலையில்,

இன்று காற்றுக்கும் மலருக்கும் கல்யாணமாம்
இங்கு கானக் கருங்குயில்கள் கச்சேரியாம்
நீல நதிக்கரையில் ஊர் கோலமாம்
முகில் நீந்தி விளையாடும் கார்காலமாம்

(சரணாலயம்—வாலி)

என்ற பாடல் இயற்கை அமைவை நம் கண் முன்னே காட்டுவது போன்ற அமைப்பில் இருப்பதைக் காணமுடிகிறது. உடலைச் சிலிர்க்கவைக்கும் பனி தூவிக்கொண்டிருக்கும் மாலைப் பொழுதில் பாக்கு மரங்களின் நிழலில் பவள மல்லிகைப் பாயின் கண் சிறிய மின்மினிகள் காட்டிய விளக்கின் உதவியால் நடைபெற்ற மன்மத விளையாட்டைக் கவிஞர் கூறிச்செல்லும் பாங்கு மகிழ்வுதரவல்லது.

### இயற்கை, பெண்-ஒப்புமை

இயற்கையை ரசித்து அதில் இன்பம் காணும் தன்மை வர உயர்ந்த மனநிலை அமைந்திருக்க வேண்டும். இவர்களாலேயே இயற்கையின் அழகை உணர்ந்து வெளிப்படுத்திட முடியும்.

இயற்கையின் அழகுகளில் பெண்ணை இணைத்து நோக்கும் உணர்வைப் பல பாடல்களில் காண முடிகின்றது. ஒவ்வொரு இயற்கைப் பொருளும் ஒவ்வொரு உறுப்புக்குத் தொடர்புள்ள

இணையாகக் கூறப்படும் போது கவிஞரின் கவித்துவத்தில் நம்மை மறந்து விடுகிறோம்.

> கால் நடக்கும் ஓவியம்.........
>
> (என் ஆசை உன்னோடுதான்—வைரமுத்து)

என்று பெண் உருவினையும்,

> தேவி கூந்தலோ பிருந்தாவனம்
>
> ..........................

என்று பெண்ணின் கூந்தல் மிகுதியையும் காட்ட முயலுகிறார் கவிஞர்.

ஒரு பெண்ணை, அன்பு கொள்ளாத நிலையில் ஒருவர் வருணிப்பதாகக் கூறுவதைக் காட்டிலும் பெண் மீது அன்பு கொண்டவனின் (காதலன்) குரலில் பெண்ணை வருணிப்பதாகக் கூறும் அமைவு பொருத்தமாக இருக்கும் என்பதால் தான் பல வருணனைப் பாடல்கள் தலைவியின் அழகை வருணித்துத் தலைவன் பாடுவதாக அமைக்கப்பட்டிருக்கின்றன.

காதல் என்னும் அகவுணர்வு எப்பொழுது யார் யாரிடத்தில் எந்த இடத்தில் தோன்றும் என்று அறுதியிட்டுக் கூறமுடியாது' இதனாலேயே 'காதலும் தும்மலும் ஒன்றே' என்ற பழமொழி தோன்றியிருக்க வேண்டும்

எதிர்பாராமல் சந்தித்த தன்மையுடைய ஒத்த ஆண், பெண் இருவரின் கண்கள் சந்திக்கின்றன. உள்ளங்கள் எதையோ நினைக்கின்றன. இதற்கு, 'வாய்ச் சொற்கள் என்ன பயனும் இல' என்பார் திருவள்ளுவர். தன் உள்ளத்தைத் திருடிக் கொண்ட அந்த அழகு உருவத்தைக் காதல் கொண்ட தலைவன்,

> தாமரைக் கொடி தரையில் வந்ததெப்படி
> மல்லிகைக் கொடி உன் மனதில் என்னடி
>
> (ஆனந்தக் கும்மி—வைரமுத்து)

எனத் தன் ஐயப்பாட்டினைக் கூறும் நிலையிலும் தலைவியின் மன நிலையை அறியும் நிலையிலும் கேள்விகளை எழுப்புகிறான்.

> ராத்திரியில் பூத்திருக்கும் தாமரைதான் பெண்ணோ
> ராஜசுகம் தேடி வர தூது விடும் கண்ணோ
>
> (தங்கமகன்—புலமைப்பித்தன்)

என்ற பாடல் இன்னும் ஐயந்தீராது தலைவன் இருக்கும் நிலையைக் காட்டுகிறது.

தலைவியை, தலைவியின் எழிலை, 'அள்ளி வச்ச மல்லிகை' எனவும் 'புள்ளி வச்ச பொன் மயி'லெனவும் பலபடப் பாராட்டி மொழிகிறான். இயற்கைப் பொருள்களிலெல்லாம் அழகு என்னும் பெண்ணைக் காண்பதாகப் பாரதிதாசன் கூறும் நிலையில் இப்பாடல்களை இணைத்து நோக்கலாம்.

மயிலாக, குயிலாக, மானாக, தேனாக வருணிக்கப்படும் தலைவியை மேலும் தெவிட்டாத அமுதமாகவும், வானில் வாழும் தேவதையாகவும் பாராட்டுவது தலைவனின் அன்பின் மிகுதியைக் குறிப்பதாக அமைகின்றது.

வண்ணமயிலானது தன் தோகைகளைத் தானமாகக் கொடுத்தது; அவைகளே தலைவிக்கு இருகைகளாயின என்றுதன் குறிப்பையும் ஏற்றிக் கூறும் நிலை நினைத்து மகிழத்தக்கது. தான் காணும் இயற்கைப் பொருள் அனைத்திலும் தன் மீது அன்பு கொண்டவரைக் கண்டு பாராட்டும் நிலை சங்க காலத்திற்கும் முற்பட்டது என்பதை 'நோக்குவன எல்லாம் அவையே போறல்'

என்ற தொல்காப்பிய நூற்பா மூலம் அறிந்து கொள்ளலாம்,

இந்திரலோகத்துத் தென்றல் அதன் விலாசத்தை
தன் தோற்றத்தில் பெற்று வந்தவள்
மின்னல் அதன் உற்பத்தியை
அந்த வானத்திற்குக் கற்றுத் தந்தவள்
(உயிருள்ள வரை உஷா—டி. ராஜேந்தர்)

தென்றல் எனும்போது அவளின் மென்மைத் தன்மை புலப்படுத்தப் படுகிறது. மின்னலை எவ்வாறு உற்பத்தி செய்யலாம் என்ற கண்டு பிடிப்புக்குக் காரணமாக அமைந்ததே இவளின் கண்கள். இங்குக் கவிஞனின் திறமையை எண்ணி இன்புறுகிறோம்.

தேனில் ஊற வைத்த பலாவின் சுவையினை ஒத்த சிரிப்பினைக் கொண்ட தலைவியின் குரலிலிருந்து எழுந்ததே சிந்துபைரவி அவள் புன்னகை குரல் இவைகளாலேயே தான் மயங்கிவிட்டதாகவும், அவள் கருவிழிகள் உருளுவதால் தான் தன்னால் கவிதைகளைப் படைக்க முடிகிறது என்றும் கூறுவது, கவிஞரின் அக வாழ்வைக் குறிக்கும் நிலையாகக் கொள்ள இடமுண்டு.

பாண்டியப் பேரரசர்களே கண்டு வியந்து வினாவும் நிலையில் அமைந்த முத்துச் சரங்களை ஒத்த பற்களைக் கொண்ட தலைவி

என்னும் போது உணர்வு ஒன்றித்த நிலையிலிருந்து எழுந்த பாடல் இது என மொழியலாம்.

தலையைக் குனியும் காதலியைக் கண்டதும் தாமரையின் நினைவே எழுந்தது தலைவனுக்கு. அப்பெண்ணின் முகத்தினை நோக்கி வந்த வண்டு, அவள் கண்களைக் கண்டு வண்டுகள் என மயங்கி நின்றதாம், நமக்கு முன்பே இரு கருவண்டுகள் தாமரையில் தேனருந்த வந்துவிட்டனவே, நமக்குச் சிறிதளவாவது மிச்சம் வைக்குமா? என்றும் நினைத்து ஏங்கிய நிலையில் சுற்றிச் சுற்றி வந்ததாம். முகத்தைத் தாமரை என நினைத்து வண்டுகள் நெருங்கும் நிலையைப் பரிபாடல் (10ஆம் பாடல்—வையை), கம்பராமாயணம் (நீர் விளையாட்டுப் படலம்- பாடல் எண் 10) போன்ற இலக்கியங்கள் சுட்டுகின்றன. இந்த இலக்கியச் செய்தியைக் கவியரசு கண்ணதாசன்.

பொன் வண்டொன்று மலரென்று முகத்தோடு மோத
நான் வளை கொண்ட கையாலே மெதுவாக மூட
...................... (இருவல்லவர்கள்)

என்று எளிமைப் படுத்திக் காட்டினார்.

இதனை ஒத்து அமைந்த பாடல்களாக,

இளமை இதழின் இனிய மதுவைப்
பருக வரும் வண்டு—அதன்
வளமை கண்டு மயங்கி நின்று மறந்த கதை உண்டு
(உருவங்கள் மாறலாம்—ரகு)

என்பதையும்,

முகத்தைத் தாமரையாய் நினைத்து மொய்த்த வண்டு
ஏமாந்த கதை தான் கண்கள்
(உயிருள்ளவரை உஷா—டி. ராஜேந்தர்)

என்ற மேற்குறிப்பிட்ட கருத்தடங்கிய பாடலையும் குறிப்பிடலாம்.

கட்டித் தங்கம் வெட்டி எடுத்து
காதல் என்னும் சாறு பிழிந்து
தட்டி தட்டிச் சிற்பிகள் செய்த உருவமடா
(தாயைக்காத்த தனயன்)

என்று கண்ணதாசன் கூறும் பெண் படைப்புக் கருத்துடன் டி. ராஜேந்தரின்,

தேவ லோக அமுதத்தை குழம்பாக எடுத்து
தங்க நிற வர்ணத்திலே குழைக்கின்றபோது
பிரம்மனுக்கு ஞானம் வந்து உன்னைப் படைக்க
(உயிருள்ளவரை உஷா)

என்ற பாடல் ஒத்து விளங்குகிறது.

தலைவியை உலகில் காணப்படும் பொருள்களிலும், தன்னால் அறியப்பட்ட, கேள்வியுற்ற பொருள்களிலும் கண்டு மகிழ்ந்து பாராட்டிய நிலையிலிருந்து மாறுபட்டு, நடைமுறை வாழ்க்கையோடு தொடர்புடைய நிலையில்,

புதுசா வடிச்ச பொங்கச் சோறு
இது மெதுவா நடக்கும் தங்கத் தேரு.
(வளர்த்த கடா—பூங்குயிலன்)

என்பது போன்ற வருணனையையும் காண முடிகிறது.

காதல் பாடல்களில், பெண்ணை இயற்கையோடு இணைத்துக் கூறப்படாமல் பொதுவான நிலையில் அமைந்த பல பாடல்கள் கிடைக்கின்றன.

காதலியின் பெயரைத் தினமும் சொல்லிச் சொல்லி தன் பெயரே மறந்து போனதாகக் கூறும் காதலனையும் (கொக்கரக்கோ—வைரமுத்து) காதலன் பெயரே தான் பாடும் பூபாளம் என்று கூறும்காதலியையும் (என் ஆசை உன்னோடு தான்—வைரமுத்து) காண முடிகிறது. தன் உடலை மையல் பொங்கும் பாத்திரம் என மொழியும் பெண் தன் உடல் தன் அன்பனின் தீண்டலுக்காகவே படைக்கப்பட்டது என்கிறாள். (அந்த சில நாட்கள்—வாலி).

மழலை மொழியை உதிர்த்து மயக்கிய தலைவியையும், தன் மேகக் குழலை விரித்து தலைவனுக்கு நிழலைக் கொடுக்கும் தலைவியின் அன்புப் பரிமாற்றலையும் காண்கிறோம். (மாறுபட்ட கோணங்கள்—முத்துலிங்கம்)

பாலிருக்கும் பாத்திரத்தை நூலிருக்கும் ஆடை கொண்டு மறைத்தல் ஆகுமா? என்று கேட்கும் தலைவனையும் (என் ஆசை உன்னோடு தான்— வாலி)

பக்கத்தில் நீயிருந்தால்
பகல் கூட இரவாகுமே

வெட்கத்தை நீ துறந்தால்
விரல் கூட கவி பாடுமே
(முத்து எங்கள் சொத்து—கண்ணதாசன்)

என்று கூறும் தலைவியையும் பாடல்களில் சந்திக்கிறோம்.

### சமுதாயப் பாடல்கள்

தான் வாழுகின்ற சமுதாயத்தோடு ஒட்டி உறவாடி, அதன் இன்ப துன்பங்களில் திளைத்த கவிஞர்களாலேயே நல்ல கருத்தமைந்த பாடல்களைத் தரமுடியும். நல்லதை எதிர்நோக்கும் நிலை கவிஞர்களிடையே இருக்கும் உன்னதமான பண்பாகும். பட்டுக்கோட்டையாரும் கவியரசரும் சமுதாயத்தின் எல்லா நிலைகளிலும் அழுந்தி பின் மேனிலையுற்றவர்கள். அதனாலேயே அவர்களுடைய பாடல்கள் இன்றும் சாகா வரம் பெற்றவைகளாகத் திகழ்கின்றன.

ஒவ்வொரு மனிதனும் தான் இந்தச் சமுதாயத்தின் ஓர் அங்கம் என்பதை நினைவில் கொண்டே வாழவேண்டும். தன்னால் இந்தச் சமுதாயத்திற்கு என்ன நன்மை கிடைக்கும், கிடைக்கிறது என்று நினைத்து அதன் படியே ஒழுகித் தன் கடமைகளைச் செய்து வர வேண்டும்.

திரைப்படங்களும், அதில் இடம் பெறும் பாடல்களும் தனி மனித நலத்தை அடிப்படையாகக் கொண்டே அமைய வேண்டும். தீமைகளை அதிகம் விளக்கிக் கூறும் வகையில் அமையும் திரைப் படங்கள், பாடல்கள் வேண்டாம். இதனைத் தயாரிப்பாளர்களும்' பாடலாசிரியர்களும் இரசிகர்களுமே எண்ணித் துணிய வேண்டும்.

சமுதாயத்தில் ஒரு தவற்றைச் செய்யத் தூண்டுகோலாகத் திரைப்படக்கலை அமைந்து விடக்கூடாது என்ற நினைவு சிலரிடம் இருந்தாலும் அவர்களையும் மீறி வியாபார நோக்கு, வெளிப் படுத்தும் திறமை என்ற அமைவுடன் பல திரைப்படங்கள் வெளி வருகின்றன. 'நான் இந்தத் திரைப்படத்தைப் பார்த்தேன். இதன்படியே நடந்து கொண்டால் தவறு செய்த பின்பும் சட்டத்தின் பிடியிலிருந்து தப்பி விடலாம் என்பதாலேயே இவ்வாறு செய்தேன்' என்று எந்த மனிதனும் கூறாமல் இருக்கவேண்டும்.

சமுதாயத்தில் தீர்க்கப்பட வேண்டிய பிரச்சனைகள் எவ்வளவோ இருக்கின்றன. வரதட்சணை ஒழிப்பு, குடிப்பழக்கத்தைக் கண்டித்தல், சொத்தடிமை ஒழிப்பு, சாதி சமய வேறுபாடு

களைக் கடிதல் போன்ற செயல்களை விளக்கிக் கூறுமுகத்தான் திரைப்படங்கள் பல வந்து அதன் வழியே ஒழுக ஓரிருவரேனும் நினைத்தால் அதுவே திரைப்படக் கலையின் வெற்றியாகும்.

சமுதாயப் பாடல்களை,

1. குடும்பம்
2. சடங்குகளும், நம்பிக்கைகளும்
3. சமுதாயப் பிரச்சனையும்—தீர்வும்
4. அரசியல் நிலையைக் கடிதல்.

என்ற நான்கு தலைப்புகளில் அடக்கலாம்.

## 1. குடும்பம்

திருமணம் என்பது சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்ட சடங்கு இதன் மூலம் இணையும் இரு உள்ளங்களின் ஒன்றுபட்ட உணர்வினாலேயே வீடுகள் வாழ்கின்றன .

நான் கொண்ட கணவன் நடமாடும் தெய்வம் என்று கூறும் மனைவியும்,

எடுத்தாலும் என்ன ஏழேழ் பிறவி
நீ தானே கண்ணே எனக்கேற்ற மனைவி
(சந்திப்பு —வாலி)

என்று கூறும் கணவனும் வாழும் வீடு கண்டிப்பாக "ஆனந்தம் விளையாடும் வீடாகத்தான்" இருக்கும்.

கணவன் தன் மனைவியையும் குழந்தைகளையும் 'அன்றில்' களாகக் கூறி மகிழ்கிறான். தான் கைப் பிடித்த மனைவியின் முகம் மலர்ந்திருப்பதையே விரும்புவான் கணவன், இவ்வடிப் படையிலேயே,

மாங்கல்யம் தவழும் மகராசி வதனம்
மலர்ந்தாலே போதும் வேறேது உலகம் (சந்திப்பு)

என வாலியின் பாடல் எழுந்துள்ளது.

பாசத்தில் வெல்கின்ற உள்ளங்கள் நூறுண்டு
கோபத்தில் எந்நாளும் முடியாது தாயே
(வீட்டிலே ராமன் வெளியிலே கிருஷ்ணன்—பஞ்சு அருணாசலம்)

என்ற அடிகள் கோபத்தினாலன்றி மலர்ச்சியாலேயே கணவனை ஆட்படுத்தலாம் என்று காட்டுகின்றது, இனிமையான சொற் களைக் கனிவாகக் கூறி வாழலாம் என்பதனை,

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய் கவர்ந்தற்று

என்ற குறளை எடுத்துக் கூறுவதன் மூலம் விளக்குவார் கவிஞர்.

உறவில் பிரிவு வந்தால் ஊடல் வந்து முறைக்குமே
ஊடல் மறைந்த பின்பு கூடல் வந்து அணைக்குமே
(வீட்டிலே ராமன் வெளியிலே கிருஷ்ணன்—பஞ்சு அருணாசலம்)

என்ற நிலை கணவன் மனைவியரிடையே வந்து தோன்றி மறையும் ஊடலையும் கூடலையும் குறிக்கிறது.

கணவனிடமிருந்து மங்கலப் பொருளாம் தாலியைப் பெற்றவள் குடும்பத்தில் நிகழும் இன்ப துன்பங்களிலெல்லாம் பங்கு கொள்கிறாள்.

பொண்டாட்டி தானேப்பா எந்நாளும் நிரந்தரம்
புள்ள குட்டி எல்லாமே சொந்தம் வந்தா பறந்திடும்
(மனைவி சொல்லே மந்திரம்—கங்கை அமரன்)

என்பது மனைவியின் உரிமையையும் குழந்தைகளின் நிலையையும் குறிக்கின்றது.

கணவன் மகிழ்ச்சியில் ஆழ்ந்திருக்கும் போது அவ்வானந்தத்தில் தானும் பங்கு கொண்டு, அவன் துக்கத்தில் தோய்ந்திருக்கும் போது துடித்து, அவனுடன் தானும் மூழ்கிவிடாமல் அணைத்து ஆறுதலும் கொடுக்கும் மனைவியைப் பெற்றவனுக்கு, அவள்

உறவில் மனைவி பரிவில் அன்னை

என்பார் கவிஞர் வாலி.

குழந்தைகள்! குழந்தைச் செல்வத்தின் பெருமையைக் கூற வந்த வள்ளுவர் தம் மக்களின் மழலைச் சொல்லைக் கேட்காதவர்களே "குழலினிது யாழினிது" என்பர் என்று குறிப்பிடுவார். மேலும் கவியரசர் குழந்தையின் பெருமையை,

சிங்காரப் புன்னகை கண்ணாரக் கண்டாலே
சங்கீத வீணையும் ஏதுக்கம்மா

என்று குறிப்பிடுவதனையும் இங்குச் சுட்டலாம்.

இத்தகைய பெருமை கொண்ட குழந்தையை, தான் ஏழ்மை நிலையில் கிடந்து உழலும்போது வேண்டாம் என நினைக்கிறாள் தாய். அவளிடம் குழந்தையின் பெருமையைக் கூறும் அமைப்பில்

கேட்டாலும் கிடைக்காதம்மா
கெடச்சதை நீ வேண்டாங்கலாமா
(சாட்டை இல்லாத பம்பரம்—வாலி)

என்றும்,

மகராசன் சிரிச்சாப் போதும்
முள்ளெல்லாம் பூவா மாறும்

என்றும் பாடல்கள் எழுகின்றன.

பெத்தபுள்ள முத்தம் தந்தா பாதிகோபம் தீரும்
மிச்சம் கொஞ்சம் நானும் தந்தா மீதி கோபம் தீரும்
(சாட்சி—வைரமுத்து)

என்ற பாடல் மூலம் குடும்பத்தில் குழந்தை தரும் இன்ப உணர்வு எடுத்துக் காட்டப்படுகிறது. குழந்தையை;

சின்ன வண்ணப்பூ சிரிக்கும் பூவே
சிந்தைக்குள் தித்திக்கும் தேன் பலாவே
(என் ஆசை உன்னோடுதான்—வாலி)

என்று அழைத்து மகிழும் கவிஞரையும்,

தாழம்பூவே கண்ணுறங்கு
தங்கத் தேரே கண்ணுறங்கு
(இன்று நீ நாளை நான்—வைரமுத்து)

என்று தாலாட்டிடும் கவிஞரையும் காண்கிறோம்,

இவ்வளவு சிறப்புடைய குழந்தையாயினும் அளவுக்கு மேல் கூடாது; அது பொருளாதாரத்துக்குக் கேடு என்னும் தற்காலக் கோட்பாட்டைப் பரப்புவதிலும் திரைப் படங்கள் சிறப்பான பங்கு வகிக்கின்றன. குடும்பக் கட்டுப்பாடு என்பது நாட்டில் எல்லா மக்களுக்கும் பொதுவாக இருக்கவேண்டும். இங்கு மதமோ, இனமோ தன் நிலையைக் கூறித் தப்பித்துக் கொள்ள முயலுவது சரியல்ல. அரசாங்கத்துடன் இணைந்து குடும்பக்கட்டுப்பாட்டுப் பிரச்சாரத்தைப் பாடலாசிரியர்களும் கூறி வருகின்றனர். சான்றாக,

..........................ரெண்டு
புள்ளைக்கு மேல் பொறந்தா தடையுண்டு
இதைத்தாம்பா அரசாங்கம்
அடிக்கடிதான் சொல்லுதப்பா
(சீறுஞ்சிங்கங்கள்—பூங்குயிலன்)

என்ற பாடல் அடிகளையும்,

> ரெண்டுக்கு மேலே வேண்டாமுண்ணு
> நாட்டே சொல்லுது நாடாதீங்க
>
> (தங்கைக்கோர் கீதம்—டி. ராஜேந்தர்)

என்ற அடிகளையும் குறிப்பிடலாம்.

**2, சடங்குகள்**

தேவையை முன்னிட்டுச் சமுதாயத்தில் தோன்றிய சடங்குகள் இன்றைய சமுதாயத்தில் மிகவும் இன்றியமையாதனவாக மாறி விட்டன. அந்த வகையில் சில குறிப்பிடத்தக்கன.

(அ) பிறந்தநாள் : தன் குழந்தைகளுக்குப் பிறந்த நாள் விழா கொண்டாடி மகிழும் பெற்றோரைப்போலத் தன் வளர்ப்பு நாய்க்குக் கூட பிறந்த நாள் கொண்டாடப்படுகிறது.

> மனிதனும் மிருகமும் நெருங்கினால்
> பழகினால் சொந்தமே

என்றும்,

> நன்றி உள்ள உயிர்களெல்லாம் பிள்ளை தானடா
> அட நன்றி கெட்ட மகனை விட நாய்கள் மேலடா
>
> (படிக்காத மேதை)

என்றும் கவியரசு கண்ணதாசன் குறிப்பிடுவார். இதனை அடியொற்றி நாயை உடன் பிறவாத தம்பி என்றும் உள்ளத்தில் தங்கக் கம்பி என்றும் பாடல் எழுத்துள்ளது. தன் காதலியிடம், நாயைக் குறிப்பிட்டுப் பாடும் நிலையில்,

> காதலி மானே கணவன் நானே
> கொழுந்தன் இவன்தானே கண்ணே (தாய்வீடு-வாலி)

என்று பாடல் அமைந்துள்ளது.

(ஆ) பூப்புச் சடங்கு : வருமாறு பூப்புச் சடங்குப் பாடல் கவிஞர் வைரமுத்து இயற்றியுள்ள,

> மலர்ந்திருச்சு பூங்கொடி மஞ்சத்தெளிக்க வாங்கடி
> பூத்திருச்சு பூங்கொடி பொடவ கட்ட வாங்கடி
> சமஞ்சிருக்கும் வனக்கிளிக்கு சைசான கொண்டையிட்டு
> வக்கணையா சீர்வரிசை வாசலுக்கு வந்துகொடு
> பூப்போட்ட சேல கேட்டு மாமனுக்குச் சொல்லிவிடு
>
> (ஆனந்தக்கும்மி)

என்று பெண்ணின் முறைமாமனுக்குச் சொல்லிவிடும் நிலையிலும்

பொத்தி வச்ச மல்லிகை மொட்டு
பூத்திருச்சு வெட்கத்தை விட்டு

(மண்வாசனை)

என்றும் அவர் தம் பூப்புச் சடங்குப் பாடல்கள் அமைந்துள்ளன.

(இ) **திருமணம் :** திருமணச் சடங்குப் பாடல்கள் போலி யாகத் திருமணம் நடத்தும் போது பாடும் பாடல்களாகவே அமைந்துள்ளன. பெரும்பாலான பாடல்களில் "மாங்கல்யம் தந்து னானே" என்ற மந்திரமும் "ஓம் சர்வ மங்கள மாங்கல்யே சிவே" என்ற சுலோகமும் பயன்படுத்தப்படுகின்றன. திருமணப் பாடல்களில் சாஸ்திரிகளின் குரலும் அவர் செயலும் நகைப்புக் கிடமான முறையில் சுட்டப்பெறுகின்றன.

(ஈ) **நம்பிக்கைகள் :** தனி மனிதன் நம்பிக்கையின் அடிப்படையிலேயே வாழ்க்கையை ஓட்டிக் கொண்டு போகிறான். கடவுள் நம்பிக்கையே இங்கு முதன்மையானதாக அமைந்துள்ளது. சமுதாயம் அமைதியாக இருக்கக் கடவுள் நம்பிக்கையே காரணம் என்பாரும், இல்லை சமுதாயத்தின் ஏற்றத்தாழ்வுகள், வன்முறைகள் எழக் காரணம் இந்நம்பிக்கையே என்பாரும் உளர். கடவுள் நம்பிக்கையும், ஊழும் மனிதனை இன்பத்தினுள் அதிகம் மூழ்கி விடாமலும் துன்பத்தில் துவண்டு விடாமலும் வழி நடத்திச் செல்கின்றன.

கடவுள் நம்பிக்கை கொண்டோர் ஒவ்வொரு விரதத்தையும், பூசையையும், விழாக்களையும் ஏதாவது ஒரு நம்பிக்கையின் அடிப்படையிலேயே கொண்டாடி வருகின்றனர்.

சஷ்டியில் விரதம்
காப்பவருக் கெல்லாம்
சங்கடம் தீருமம்மா (சஷ்டி விரதம்-வாலி)

இதனையே சஷ்டியில் (விரதம்) இருந்தால் தான் அகப்பையில் வரும் என்று கூறுவார் திருமுருக கிருபானந்த வாரியார். [பழமொழி - சட்டியில் இருந்தால்தான் அகப்பையில் வரும். சஷ்டியே சட்டி என மாற்றம் பெற்றது என்பார்.]

புனித நீரில் நீராடி இறைவனை வணங்கினால் நல்ல வாழ்வு அமையும் என்பது மக்களின் நம்பிக்கை. நல்ல கணவனை அடைய வேண்டுமானால் அதற்குக் கடவுளின் அருளே காரணம் என்ற அடிகள் மக்களின் நம்பிக்கைக்குச் சான்று பகருகின்றன.

[கடவுள் அருளல்லவோ—நல்ல
கணவனை நான் கொண்டது]

3 சமுதாயப் பிரச்சனைகளும்—தீர்வும்

(அ) வரதட்சணை: திருமணத்திற்கு இருமனங்கள் ஒன்று பட்டால் போதாது. பொருளும் சீதனங்களும் ஒன்றுபட வேண்டும் என்ற நிலை வளர்ந்து வருகிறது. திருமகளினை ஒத்த பெண்ணைப் பார்க்காமல் அவள் உடம்பில் எவ்வளவு நகை போடப்பட்டிருக் கிறது என்பதையே பார்க்கிறது இவ்வுலகம். வரதட்சணை என்னும் கொடிய வழக்கத்தினைக் கடிந்து ''டௌரி கல்யாணம்'' என்னும் திரைப்படம் வந்தது என்றாலும் வழக்கம்போல இவ் வழக்கத்திற்குத் தீர்வு என்ன? என்பதைக் கூறாமலேயே சென்று விட்டது.

வரதட்சணை அங்கிங்கு எனாதபடி எங்கும் பரவி உள்ளது. பழந்தமிழன் தழையாடை கொடுத்துப் பெண்ணைக் கொண்டான். இந்நாளைய தமிழனோ பெண் பொன்னால் ஆடை செய்து கொண்டு வந்தாலும் திருப்தியடையாமல் மேலும் மேலும் கேட் கிறான். வரதட்சணை என்னும் நச்சுவேர் சமுதாயமெங்கும் பரவி விட்டது. வரதட்சணை ஒழிப்பு என்ற சீர்திருத்த அமைப்பிலும் தன் மகனுக்கெனில் வரதட்சணை வேண்டும்; மகளுக்கெனில் வரதட்சணை கொடுக்கக் கூடாது என்ற சுயநல எண்ணம் கொண்ட போலி மனிதர்கள் மலிந்து விட்டனர்.

வரதட்சணை வேண்டாம் என்ற கொள்கையைக் கடைப் பிடிக்கும் இளைஞனையும் சந்தேகக் கண்கொண்டு இச்சமுதாயம் பார்க்கிறது. இந்நிலையில் ''சீதனம் தந்தாலன்றிப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள மாட்டேன் என்று கூறும் இளைஞன் தான் கற்ற கல்விக்கும், தன் நாட்டிற்கும் இழிவு தேடித் தருபவனா கிறான்'' என்று அண்ணல் காந்தியடிகள் கூறினாலும் கூட இந் நாளைய பெற்றோரும் இளைஞர்களும் அதனைக் கேட்கத் தயாராகயில்லை. எனவே இதனை எடுத்துக் காட்டும் நிலையில் வரதட்சணை கேட்கும் மாமியாரின் கொடுமையினால் தங்கள் கல்யாண வீடுகளில் நடக்கும் கதையைக் கேட்குமாறு கடவுளிடம் வேண்டுகிறார் கவிஞர்.

அந்த வீட்டிற்குத் தானும் ஒரு காலத்தில் மருமகளாய் வந்தவளே என்றும் அன்று தன் குடும்பம் எவ்வாறு கஷ்டப் பட்டதோ என்றும் எண்ணாமல்,

மருமகளின் பொருள் வரவில்
கவனம் வைக்கிறாள்
ஒரு மகனைச் சுமந்ததாலே
உலகைக் கேட்கிறாள்—இவளே
தன் மகளின் திருமணத்தில்
கண்ணீர் வடிக்கிறாள்

(டௌரிகல்யாணம் - இதயச்சந்திரன்)

என்று மாமியாரின் நிலை சுட்டப்படுகிறது.

பணம் படைத்தவர்கள் தங்கத்தாலும் வைரத்தாலும் தன் பெண்ணை இழைக்க, ஏதுமற்ற ஏழையின் மனம், வரதட்சணை கொடுக்க முடியாத நிலையில்

தங்க நிலவே உன்னை உருக்கித்
தங்கச்சிக்கு தங்க நகை செஞ்சிடவோ
நட்சத்திரமே உன்னை உடைச்சி
வித விதமா வைரநகை போட்டிடவோ

(தங்கைக்கோர் கீதம்—டி. ராஜேந்தர்)

என்று புலம்புகிறது.

பட்டினியாய் நான் கிடந்து
சீதனங்கள் சேர்த்து வைப்பேன்

என்று கூறும் அண்ணன் தன் தங்கைக்கு ஒரு சேலை கூட வாங்கிக் கொடுக்க முடியாத நிலையில் தான் இருப்பதையும் ஆனால் ஜவுளிக்கடை பொம்மை கூட பட்டுச் சேலை கட்டிக்கொண்டு நிற்கின்ற நிலையையும் நினைத்து மனம் வெம்புகிறான்.

(ஆ) சாதி வேறுபாடு

மனிதனால் படைக்கப் பட்டு அவனையே படுகுழிக்குள் தள்ளி விட முயலும் சாதி என்னும் அமைப்பைக் குறை கூறுகின்ற நிலையில் சில பாடல்கள் எழுந்துள்ளன. இதிலும் சாதி பேதம் இங்கு இல்லை என்று கூறும் நிலையிலேயே பாடல்கள் அமைந்துள்ளன. இதனைக் கவிஞரின் எதிர்பார்ப்பு நிலை எனக் கொள்ளலாம்.

எங்க ராஜ்யத்திலே ஜாதியில்லே போங்கடா

(இமைகள் - புலமைப்பித்தன்)

என்ற பாடல் அடியைச் சான்றாகக் கூறலாம்.

(இ) ஏழை—பணக்காரன் வர்க்கவேறுபாடு

எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் ஓரினம்
எல்லோரும் இந்திய மக்கள்

என்று மகாகவி பாடினாலும் இருப்பவன், இல்லாதவன், உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற வேறுபாடு மக்களிடையே தொன்று தொட்டு இருந்து வரத்தான் செய்கிறது. தானும் அவனும் எல்லோரையும் போலவே பிறக்கிறோம். ஆனால் அவனுக்கு மட்டும் பஞ்சணை, தனக்குப் புழுதி மண்டிய சாலை ஓரமா? என்று நினைக்கும் நிலை ஒவ்வொரு மனிதனிடமும் இருந்து வருகிறது, இந்த மனநிலையைப் பூகம்பமாகவும், அதனைப் போர்வையினால்தான் மூடியிருக்கிறார்கள் என்றும் கூறும் கவிஞரின் குரல்,

வேர்வை நதிகளைக் காகித அணைகளால்
தடுத்திட முடியாது (அனல்காற்று-இளைய பாரதி)

என்றும் ஒலிக்கிறது.

வாழ்க்கை வசதிகள் அனைத்தும் ஒரு சிலரிடத்தில் குவிந்திருக்க, நாம் மட்டும் ஏன் அன்றாடங் காய்ச்சியாக இருக்கிறோம் என்ற சிந்தனையை மதமானது, இது விதி, இது ஊழ்வினை என்ற சொற்களை இட்டு அடக்கி விட்டது. ஆனால் எழுச்சியுற்றவர்களின் எண்ணம் வலிமையுறும்போது,

அழுதா தொழுதா உலகம் தராது
அடிச்சா கைமேலே ஓடிவரும் பைமேலே
(உறங்காத நினைவுகள் - மேத்தா)

என்ற நிலை உருவாகிவிடும் என்னும் கவிஞரின் கூற்று அவருடைய எதிர்பார்ப்பாகவும் பாடலில் பளிச்சிடுகிறது. மயிலே மயிலே என்று கெஞ்சினால் இறகைத் தராது, பிடுங்கியே இறகைப் பெற வேண்டும் என்ற பழமொழியின் தாக்கம் இப்பாடலில் இடம் பெற்றுள்ளது.

பொருளாதார உயர்வைக் கொண்டே மனிதனை மதிக்கிறது உலகம்.

ஒரு மேடு பள்ளம் அற்றநாடு
இனி வேண்டும் என்றே சொல்லிப்பாடு
எதிர்காலம் ஒன்று நாளை உண்டு
(இமைகள் - புலமைப்பித்தன்)

என்ற நிலை, சரிநிகர் சமானம் என்னும் நிலை, இவை உண்டாக, சிகரம் ஒருநாளில் சிலிர்த்தாடினால்; ஒரு புரட்சி வெடித்தால் போதும் என்ற கவிஞரின் தீர்வு முறையும் பாடல் மூலம் வெளிப்படுகிறது.

பணத்திற்கு முன்பு ஏழ்மையும், சட்டமும், எதிர்த்து நிற்க முடியாத நிலை பல பாடல்களில் சுட்டப்படுகின்றது,

கடமையாற்றச் செல்பவனுக்கிடையில் பணச்செருக்கும், அதிகார ஆணவமும் நுழைந்து அவனைச் செயலற்றவனாக்கி விடுகின்றன. இதனாலேயே,

மாறிவிடு புது ஆணையிடு தர்மங்கள் ஏங்குது
சட்டங்கள் தூங்குது (சாட்சி - வைரமுத்து)

என்று சட்டத்தின் நிலைமையையும்,

வேதனை வேதனை தியாகத்தின் கண்களில் ரத்தமா
நீதியைக் காப்பவன் அழுவது தானிங்கு மிச்சமா

என்று காவலதிகாரகளின் நிலையையும் பாடல்கள் குறிப்பிடு கின்றன.

வேலியைக் காப்பவன் வேலிக்கு வேலிகள் இல்லையே
புயலெனச் சீறிடு போரிடு

என்ற பாடலைக் கவிஞரின் தீர்வுக்குரலாகவும் எண்ண இடமுண்டு.

(ஈ) உழவனின் கீழ்மை நிலை

எண்பது விழுக்காட்டினர் உழவுத் தொழிலைக் கொண்டு வாழும் இந்தியாவில் உழவனின் நிலை ஒரு கேள்விக்குறியே. நாட்டிற்கு முதுகெலும்பு உழவுத் தொழில் என்று முதுகில் தட்டிக் கொடுத்து விட்டு, அவன் உழைத்துப் பெற்ற விளை பொருட்களைத் தான் வாங்கும் போது மட்டும் அரசும் வியாபாரி களும் தன் நிலையிலிருந்து தாழ்ந்து விடுகின்றனர். இந்த நிலை மாற வேண்டும் என்ற கருத்தை,

உழுத நிலத்தில் அழுது புரண்டும்
விடியலியே காலம் உழைச்சுக் களைச்சு
காய்ச்ச கைகள் நாளை உலகை ஆளும்
(ஒரு இந்தியக்கனவு - வைரமுத்து)

ஊரை எல்லாம் ஏச்சு - சிலர் பொழச்ச காலம் போச்சு
கூலி செஞ்ச மக்களுக்கு காலம் இனிமாறுமடா

என்ற பாடல் வரிகள் காட்டுகின்றன.

(உ) மதத்தின் பெயரால் பொய் சொல்லி ஏமாற்றுதல்

தனி மனிதனை, சமுதாயத்தை நல்வழிப் படுத்த, ஏற்படுத்தப் பட்ட அமைப்பே மதமாகும். பல பெரியோர்கள் நம்மிடையே நல்

உபதேச மொழிகளை அருளியும், அதன்படி வாழ்ந்து காட்டியும் சென்றனர். அன்று அவர்கள் கொண்டிருந்த நல்லெண்ணத்தாலும் நற்செய்கையாலுமே புகழ் பெற்றார்கள். இன்றோ, உழைக்காமல், ஊரை ஏமாற்றிப் பிழைக்க வேண்டும், எதைப் பேசியாவது தனக்கென ஒரு கூட்டத்தைச் சேர்த்துக் கொண்டு புகழ்பெற வேண்டும் என்ற அவா உடையவர்களே நிறைந்து விட்டனர். போலிவேடதாரிகளான இவர்களை நம்பிச் செல்கின்றவர்களுக்கும், நாட்டிற்கும் துன்பமே விளைகிறது.

நான்தான்யா சாமி, கும்பிடுங்க
கால்லே விழுந்து கும்பிடுங்க (தலைமகன்-வாலி)

என்று கூறுவது இன்றைய போலித் துறவிகளின் புகழ் விரும்பும் மனப்பான்மையைத் தோலுரித்துக் காட்டுகிறது. எனினும் சிலர் மட்டும் இவர்களின் சொல்லை நம்பிவிடுவதில்லை. அவர்களில் ஒருவரின் குரலாக,

அட விடுறாண்டா ரீப்பு—இந்த பய
இடுக்கால பூந்து வந்த பய

என்பது ஒலிக்கிறது.

(ஊ) போலி நாகரிகம்

இன்றைய சமுதாயம், இருக்கின்ற அழகைக் குலைத்து அலங்கோலமாக்கிக் கொண்டு திரிவதையும், ஆடைக் குறைப்பையுமே நாகரிகம் என்று கூறி அதன் வழி ஒழுகுகிறது.

ஏழை எளியவர்கள் பற்றாக் குறையின் காரணமாகக் கிழிந்து போன ஆடைகளை அணிய நேரிட்டால் அது மற்றவர்களுக்கு ஆபாசமாகத் தெரிகிறது. இவளுக்கு உடுத்த ஆடை இல்லையெனில் வீட்டினுள் முடங்கிக் கிடக்க வேண்டியது தானே என்று முணு முணுக்கிறது உலகம். அதையே உடம்பு தெரிய உடை அணிந்து பணம் படைத்த பெண்கள் வெளிவந்தால் அவர்களை நாகரிகத்தின் தொட்டில்கள் என்று புகழ்கிறது.

துணிய
எளச்சவ கொறச்சா ஆபாசங்க—பணங்
கொழுத்தவ கொறச்சா நாகரிகங்க
(சட்டத்துக்கு ஒரு சவால்-இருப்பத்தூரான்)

என்ற வரிகள் சமுதாயத்தின் உண்மை நிலையைக் காட்டும் வகையில் அமைந்து உள்ளன.

(எ) ஆண்பெண் உயர்வு வேறுபாடு

மாந்தரினத்தில் ஆண் எனில் உயர்வு என்றும் பெண் என்றால் தாழ்வு என்றும் இருவேறு நிலைகள் புகுந்துவிட்டன. இந்நிலை வர ஆணினமும் பெண்ணினமும் காரணமாக அமைகின்றன. அவரவர் உடல் வலிமை வேறுபாட்டின் காரணத்தால் கூட உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்றநிலை வரவேண்டும் என்பதில்லை. இருவரும் தாயின் கருவில் இருப்பது பத்துமாத காலமே. ஆனால்

ஆடவரே உயர்வு என்று
என்ன சட்டமோ அந்த
ஆடவரைப் பெற்ற இனம்
என்ன மட்டமோ (டௌரிகல்யாணம்-இதயச்சந்திரன்)

என்று கூறுவது சமுதாயத்தில் இருக்கும் குறைபாட்டைக் கண்டு மனம் குமுறும் கவிஞரின் குரலாகவே ஒலிக்கிறது.

அறிவு கொண்ட மனித வுயிர்களை
அடிமையாக்க முயல்பவர் பித்தராம்

என்று வீர முழக்கமிடுவார் பாரதியார். மேலும் நிமிர்ந்த நன்னடையும் நேர்கொண்ட பார்வையும் கொண்ட புதுமைப் பெண்களை எதிர் நோக்குகிறார். எனினும் காலம் கடந்த பிறகும் பெண்ணடிமைத் தனம் இருக்கத்தான் செய்கிறது.

ஒங்களை நாட்டிலே நம்ம வீட்டுல
வைக்கிற இடத்திலே தான் வைக்கணும்
அப்படி வைக்காட்டி தாங்க கெட்டு நிக்கணும்
(அண்ணே அண்ணே - வாலி)

என்ற பாடலைப் பெண்ணடிமையை விரும்பும் ஆணின் குரலாக வும். பெண்ணால் வாழ்வில் பல துயரங்களை அனுபவித்த பின்னர் தன் நிலையை உணர்ந்து எழுச்சி பெற்ற கணவனின் குரலாகவும் கொள்ள இடமுண்டு.

பொதுச்சேவை, சீர்திருத்தம், என்ற போர்வையில் அலைந்து கொண்டிருக்கும் பெண்களைச் சாடும் நிலையிலும் சில பாடல்கள் உள்ளன. பெண்கள் நிலையிலிருந்து இப்பாடலை நோக்க, ஆணாதிக்கத்தினை நிலைநாட்ட விரும்பும் ஒரு ஆணின் குரலாகவே ஒலிக்கக் காணலாம்.

அக்கினி சுத்தி அம்மி மிதிப்பா
அப்புறந்தான் நம்ம மிதிப்பா

என்ற வரிகள் சில பெண்களின் தன்மையையும்

தினம் ஊர் சுத்திவருவா பொதுச்சேவைகள் புரிவா
அந்த ஆத்திரத்திலே அவசரத்திலும்—புருஷனைவிடுவா

என்ற வரிகள் தங்கள் குழந்தைகளைச் சேரியிலிருந்து தன் வீட்டிற்கு வேலைக்கு வரும் ஆயாவிடம் விட்டு விட்டு, சேரியிலிருக்கும் ஆயா வீட்டுக் குழந்தைகளைப் பராமரிக்கச் செல்லும் பெண்களைத் திருத்தும் நிலையிலும் அமைந்துள்ளதாகக் குறிப்பிடலாம்.

சமைக்காமல் ஒரு நாளும் இருக்கவேண்டாம்
சம்சாரம் என்பதையே மறக்க வேண்டாம்
ஹோட்டலை வீடு என்று எண்ண வேண்டாம்
ஹஸ்பெண்டை சஸ்பெண்ட் பண்ண வேண்டாம்
பண்பாட்டைக் குப்பையில் வீச வேண்டாம்
சோசலிசம் இது வென்று பேச வேண்டாம்
(அண்ணே அண்ணே - வாலி)

என்றமையும் பாடலைப் பெண்களின் நிலையைச் சீர்திருத்திட வேண்டும் என்ற நிலையில் எழுந்ததாகக் கொள்ளலாம்.

பெண் பாவம் பொல்லாதது என்பார்கள். பொல்லாத கணவனிடமும் கொடுமைக் குணம் நிறைந்த மாமியாரிடமும், நாத்தனாரிடமும் அகப்பட்டுத் துயருறும் பெண்கள் பலர். இப் பெண்ணின் நிலை துயரத்துடன், நகைச்சுவை கலந்த நிலை யுடனும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

தோசை வச்சா ஆப்பம் கேப்பான்
ஆப்பம் வச்சா தொட்டுப் பாப்பான்
... ... ... ... ... ... ... ...
குனிஞ்சாலும் அடிப்பான் நிமிர்ந்தாலும் அடிப்பான்
(தலைமகன் - வாலி)

அதனாலேயே வீட்டை விட்டு, ஆறு குளத்தை நாடி விழவந்திருப்ப தாகக் கூறும் இப்பாடல் இன்றைய நாட்களில் நடக்கும் பெண் களின் துயரச் சாவுகளுக்குக் காரணங்களைக் கூறும் நிலையில் அமைந்துள்ளது.

(ஏ) மாணவர்கள்

தன் அரசியல் செல்வாக்கிற்காக மாணவர்களைப் பயன் படுத்திக் கொள்ளும் அரசியல் வாதிகளைப் போலத் தன் திரைப்பட வெற்றிக்காக மாணவர்களை வியாபாரப் பொருளாக்கும் தயாரிப்பாளர்களும் நிறைந்து விட்டனர். வீரமும் தேசப்பற்றும், யாருக்கும் அஞ்சாத திண்மையும் கொண்ட

இளைஞர்களே தனக்கு வேண்டும்படி, அவர்களைக் கொண்டு எழுச்சிமிக்க பாரதத்தினை உருவாக்கிக் காட்டுவேன் என்று வீர முழக்கமிட்டார் சுவாமி விவேகானந்தர், ஆனால் இன்றைய இளைஞர்களின் நிலை என்னவாயிற்று? என்பதைக் கவிஞர்கள் பல பாடல்களில் கூறுகின்றனர்.

படிப்பிலே ஜீரோ நடிப்பிலே ஹீரோ
ரோட்டிலே ரோமியோ
(இளமைக்காலங்கள்—கங்கை அமரன்)

என்று மாணவர்களின் தரத்தையும்,

கல்லூரிப் பெண்ணை எண்ணி
கால் வலிக்கத் தவமும் பண்ணி
தினந் தோறும் ஏங்கலாமா

என்று மாணவர்களின் அன்றாட வேலையையும் குறிப்பிட்டு,

எப்போது தான் உங்கள் எண்ணம் நேராகும்?

என்று எதிர்பார்ப்பையும் கூறி,

ஊஹும் இது இங்கு மாற நாளாகும்

என்ற முடிவையும் ஒரு பாடல் தெரிவிக்கின்றது.

கட்டடிப்போம் கட்டடிப்போம் காலேஜுக்கு
திங்கள்கிழமை கருப்பு செவ்வாய்க்கிழமை சிகப்பு
நீங்க போட்டுவரும் தாவணியைச் சொல்லுவோமே
உங்க வீடு வரை பத்திரமா சேர்ப்போமே
(உயிருள்ளவரை உஷா—டி. ராஜேந்தர்)

என்ற பாடலின் கருத்தும் இன்றைய மாணவர்களின் நிலையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். ஆனால் பாடலாசிரியர் குறிப்பிடுவதால் தான் நாங்கள் இப்படி நடக்க ஆரம்பித்தோம் என்று மாணவர்களும், மாணவர்கள் இவ்வாறு ஒழுகுவதால்தான் பாடல்களில் அதனைப் பொருளாகக் கொள்ளுகிறோம் என்று பாடலாசிரியர்களும் சொல்கின்றனர். சில பாடல்கள் தன் வாழ்வில் நடந்த, தன்னால் உண்டுணரப் பெற்ற கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு எழுந்தவை என்று தெரிகிறது. தன்னைப் போலவோ, தான் அறிந்திருப்பவர்களைப் போலவோ, தன் கல்லூரி நண்பர்களைப் போலவோ, எல்லோரும் இருப்பார்கள் என்று நினைப்பது ஒரு மனோதத்துவ நிலையாகும். இதனாலேயே கவிஞர்களின் கருத்துக்கள் மாணவர்களோடு

பின்னிப் பிணைந்து உள்ளதோ என்று எண்ணவேண்டியதுள்ளது. மாணவர்கள், கதைகளில், பாடல்களில் வியாபார நோக்கில் ஆளப்படுகின்றனர் என்பதை மறுக்கவோ மறைக்கவோ முடியாது.

திரைப்படப் பாடல் மூலம் சில சொற்கள் மாணவர்களிடையே புகுந்துவிடுகின்றன. காவலர்களிடமிருந்து தண்டனை பெறும் அளவிற்கு மாணவர்களிடம் புகுந்த சொற்களாக "இது எப்படி இருக்கு?" "கொஞ்சம் ஒதுங்கு நான் தனியா பேசனும்" "பெரிய கண்ணகின்னு நினைப்போ" "தலைவர்" "அட வருது வருது ...... விலகு ... விலகு" என்பவற்றைக் குறிப்பிடலாம். 'மச்சி' என்ற சொல் இதன் பொருளை அறியாத நிலையில் எல்லோரையுமே அழைக்கும் சொல்லாகப் பயன்படுத்தப்படுகிறது.

ஏமச்சி ...... அவ துப்புனா எச்சி

என்ற பாடலிலிருந்து இந்தச் சொல் மாணவர்களிடையே வழங்க ஆரம்பித்தது. 'மச்சி' என்று மாணவர்களிடையே வழக்கத்தில் இருந்த சொல்லையே பாடலில் கையாண்டேன் என்று அமைதி கூறினாலும் ஒரு சிலருக்கு மட்டும் தெரிந்திருந்த இச்சொல்லை அரங்கத்திற்குக் கொண்டு வந்த நிலைக்குக் காரணம் திரைப் படமே, திரைப்படப் பாடலே.

மாணவன், கல்லூரி வாசலில் கால் வலிக்கக் காத்திருப்ப தாகவும், ஆயிரந்தான் பெண்கள் தன்னைத் திட்டினாலும் அப்படியே துடைச்சிடுவதாகவும் கூறும் வரிகள் மாணவர்களின் மனநிலையைத் தெள்ளத் தெளிவாகக் காட்டுகின்றன.

விடுதிச் சுவரேறிக் குதித்து யாரும் அறியாமல் பேசிச் சிரிப்பது, படிக்கப் போகாமல் பெண்கள் கல்லூரி வாசலில் தவம் இருப்பது போன்ற செயல்களைச் செய்துவிட்டு, பின் தனக்கு எதிர்காலம் நன்றாக அமையவில்லையே என்று கூக்குரலிடுவதில் எந்தவிதமான நியாயமும் இருப்பதாகத் தெரியவில்லை. இப்படிப்பட்ட தவறு களைச் செய்யாதே என்று கூறி மாணவச் செல்வங்களைச் சீர்திருத்துவதற்காகவே இவ்வாறான பாடல்களை அமைக்கிறோம் என்ற கருத்து தவறாகவே படுகிறது. தவற்றைச் சுட்டிக் காட்டித் திருத்த முயலவாமே தவிர அதற்கு விளக்கம் கொடுத்து, தெளிய வைத்து அதன்பிறகு இவ்வாறு செய்யாதே என்று கூற முற் பட்டால் நல்லதை விட, கெடுதலே அதிகமாக விளைய வாய்ப்புண்டு.

உயர் கல்விக்காக, பெற்றோர்கள் பாடுபட்டு உழைத்துச் சேர்த்த பணத்தைக் கொடுத்து, இடத்தைப் பிடிக்கிறோம்,

பின்னர் நமக்கு வாழ்வளித்த பெற்றோருக்கு இது கடமை என்று கூறிக்கொண்டு அவர்களின் முதிய வயதில் தட்டிக் கழித்துத் தப்பிக்க முயலுகிறோம். பட்டங்களை வாங்கி அதனைச் சட்டங் களுக்குள் அடைத்துவிட்டு, இதை மட்டுமே தகுதி என்றும், வேலை கிடைக்க அரசு தரும் சான்றிதழ் என்று நினைத்தும் வேலைதேட ஆரம்பிக்கிறோம். இதனையும் இன்றைய கவிஞர்கள் கூறிச் செல்லத் தவறவில்லை.

கவிஞர்களின் நோக்கம் சமுதாயத்தைச் சீர்திருத்தும் அமைவிலேயே இருக்கவேண்டும்.

பாடம் படிச்சிக் கிட்டு பட்டங்கள் வாங்கிக் கிட்டு
நாட்ட திருத்தனும்னு நல்லவழி நடத்தனும்னு
நம்மளத்தான் பெற்றவங்க நம்பிக்கிட்டு இருக்கிறாங்க
நாம இப்போ போற வழி என்ன வழி தெரியலியே

(ஆனந்தக் கும்மி—கங்கை அமரன்)

என்ற பாடலில் கவிஞரின் எதிர்பார்ப்பு நிலையும் அறிவுறுத்தும் நோக்கும் காணப்படுகிறது.

(ஐ) குறிப்பிட்டக் காலச்சூழல் அமைவைப் பாடல்களில் பயன் படுத்துதல்

சமுதாயத்தை நல்வழிப்படுத்த நினைக்கும் நற்சிந்தனை யாளனாகக் கவிஞன் இருக்கிறான். தன் காலத்தில் நிகழ்ந்த செயல்களையும், தான் காண விரும்பும் செயல் முறைகளையும் (பாடல்களிலே) தன்படைப்பிலே குறிப்பாகவும், வெளிப் படையாகவும் காட்டிச் செல்வான். இதனால் அக்குறிப்பிட்ட ஆண்டில் என்னென்ன குறைபாடுகள் இருந்தன என்பதைக் கண்டு கொள்ள முடிகிறது. வாடகை உயர்வு, இட நெருக்கடி, மின் வெட்டினால் ஏற்படும் தொல்லைகள், தண்ணீர்ப் பஞ்சம் போன்றவை மக்களின் துன்பங்களுக்குக் காரணமாக அமைந்திருப் பதைக் காணுங் கவிஞன் அவற்றைத் தன் பாடலில் எடுத்துக் காட்டத் தயங்குவதில்லை.

(i) மின்வெட்டு

மின்வெட்டு, குடிநீர்ப் பஞ்சம் போன்றவை எல்லாக் காலத்திலும் இருந்து வரும் நடைமுறைத் துன்பங்களேயாகும். எனினும் இதனையும் கூறிக் குத்திக் காட்டத் தயங்காத கவிஞர் களும் உள்ளனர்.

பவர் கட்டு வந்திடுச்சி
பாத்துப்போடு வெளக்குத்தான்

(சீறும் சிங்கங்கள்—பூங்குயிலன்)

என்றவரிகள் மின்வெட்டு நிகழ்வைக் குறைகூறும் வகையில் அமைந்துள்ளன.

(ii) விலைவாசி உயர்வு

விலைவாசி உயர்வைக் கூறவரும் கவிஞர் அதனுடன் வரவுக்குத் தகுந்த செலவு செய்து வாழக் கற்றுக்கொள் என்று தன் அறிவுறுத்தலையும் பாடலில் காட்டுகிறார்.

உப்புவிலை கூட ஒசந்து போச்சுங்க
தக்காளி ரெண்டு ரூபா
கடையில் விற்கிறான்—பணம்
பத்தாமே மனுசனிப்போத்
தெருவில் நிற்கிறான்
நெலமையைப் புரிஞ்சிக்க—பொறுப்பா
வாழத் தெரிஞ்சுக்க

(சீறும் சிங்கங்கள்—பூங்குயிலன்)

என்பது அன்றாடத் தேவைப் பொருளான உப்பின் விலைகூட உயர்ந்து விட்டது என்றால் வேறு எந்தப்பொருளின் விலைதான் உயராது என்று கேட்பது போல் பாடல் அமைந்துள்ளது. (உப்பின் விலை கூடினால் மற்ற பொருள்களின் விலை குறையும் என்ற மக்களின் நம்பிக்கைக்கு இந்த வரிகள் மாறாக உள்ளன.)

அரிசி பருப்பு விலை எல்லாம் ஏறிப்போச்சு தெரியுமா
மாங்காய் தேங்காய் விலை எல்லாம்
மரத்து மேலே நிக்குதம்மா

(ஒப்பந்தம்—புலவர் மாரி)

என்று விலைவாசி உயர்வையும்,

பொழுது புலரும் முன்னாலே—நீ
போயீ நிக்கணும் கியூவுல

என்ற மக்கள் அத்தியாவசியமான பொருட்களுக்கு அலையும் நிலையையும்,

அடிச்சு புடிச்சு நின்னாத்தா
எடமும் கிடைக்கும் பஸ்சுல

என்று பேருந்தில் ஏற மக்கள் படும் துயரத்தினையும் கவிஞர் கூறுகிறார்.

(iii) வாடகை உயர்வு

சென்னை மாநகரில் வாடகைக்கு வீடு கிடைக்காமல் அலையும் குடும்பங்களின் நிலையையும், வீடு கிடைத்தால் கூட அடிப்படை வசதிகள் இல்லாத அந்த வீட்டிற்கும்

கொடுக்க வேண்டிய வாடகையின் மிகுதியையும் நகைச்சுவையுடன் பாடலில் அமைத்துக் காட்டியுள்ளார்.

சான்றாக,

கூவம் நதி ஓரமா வீடிருக்கு வேணுமா
கொறஞ்சதுதான் வாடகை
நூறு ரூபாய் தானம்மா
அழுதபுள்ள தூங்காது
மூட்டகடி தாங்காது
கதவு ஜன்னல் பூட்டாது
பூட்டிக்கிட்டா தொறக்காது (ஒப்பந்தம்—புலவர் மாரி)

என்ற பாடலைக் கூறலாம்.

(iv) பொதுவுடைமை

செல்வம் ஒரு சிலரிடம் மட்டும் குவிந்திருக்க, பெரும்பாலான வர்கள் ஏழைகளாய் இருக்கும் நிலையைக் கண்டுமனம் குமுறி இந்த நிலை மாறுமே என்றெண்ணும் கவிஞர்களின் பாடல்களையும் காணமுடிகிறது.

எல்லாம் நானே என்றாய்
கதையில் நானும் நீயன்றோ
செல்வமும் யாவும் சிலரிடம்
நானோ வீதியில் இது நன்றோ
(நீறுபூத்த நெருப்பு—அறிவானந்தம்)

என்ற பாடல் பொதுவுடைமைக் கருத்தின் அடிப்படையில் எழுந்தது. மேலும்

ஒன்றல்ல இரண்டல்ல
கண் கொண்ட இன்பங்கள்
படைத்தவை யாவும் நமக்காக—நாம்
ரசித்திட வேண்டும் அதற்காக (சுமங்கலி—வாலி)

என்ற பாடலையும் சான்றாகக் காட்டலாம்.

4. அரசியல்

நாட்டை நன்முறையில் வழி நடத்திச் செல்ல, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் நல்லெண்ணத்துடனும் நேர்மையுடனும் நடந்தால்தான் இந்த நாடும், மக்களும் உருப்படுவர் அரசியலில் நுழைந்தால் தானும் தன் குடும்பத்தினரும் பிழைக்கலாம் என்ற நச்சு எண்ணத்தைக் கைக் கொண்டு பலர் இன்று புகுந்திருப்பதால்தான் அரசியல் நிலை தறி கெட்டுப் போய்க்கொண்டிருக்கிறது. தமிழகமெங்கும் பட்டி தொட்டிகளி

லெல்லாம் பல நிறம் காட்டும் கட்சிக்கொடிகளும், நடிகர்களின் புகழ்பாடும் மன்றங்களுமே நிறைந்திருக்கின்றன. அரசியல், திரைப்பட மோகம் போன்றவை மக்களை எவ்வாறு அடக்கி வைத்துக் கொண்டிருக்கிறது என்பதை அன்றாட வாழ்வில் கண் கூடாகக் காணலாம்.

அரசியல் நிலையை மறைமுகமாகத்தாக்கும் நிலையில் பல படங்கள் வந்தன. (இது எங்க நாடு, அனல்காற்று, கண் சிவந்தால் மண் சிவக்கும், ஒரு இந்தியக் கனவு...) இப்படங்களில் அரசியல் வாதிகள் கூறும் வெற்றுரைகளை நம்பி அவர்களைத் தொடர்ந்து செல்லும் அவல நிலையைக் கவிஞர்கள் குறை கூறுகின்றனர். பொதுவாக அரசியல் நிலையைச் சாடுதல் என்னும் அமைவு குறைவாகவும் தான் சார்ந்துள்ள இயக்கச் சார்புச் செய்திகளைக் கூறுவது அதிகமாகவும் காணப்படுகிறது.

கேழ்வரகில் நெய் ஒழுகுகிறது என்று யாராவது கூறினால் உடனடியாக ஒத்துக்கொள்ளும் மனிதர்கள் இருக்கும் வரையில்,

மேடையில் மணலை எடுத்து
கயிறு திரித்து கதை பேசுவார்
வார்த்தையில் உறுதிமொழியை
இருக்கும் வரையில் அள்ளி வீசிடும்

(நாலுபேருக்கு நன்றி—வாலி)

அரசியல்வாதிகளும் இருக்கத்தான் செய்வார்கள்.

இவர்கள் கூறும் வாக்குறுதிகள் நடைபெறக் கூடியனவா என்று சிந்திக்காமல், அவர்கள் கூறினால் கண்டிப்பாக நடக்கும் என்று நினைத்து அலைபவர்களைக் குறை கூறும் பாவனையில்,

சொன்னதை நம்பும் முட்டாள்கள்
பத்துக்கு இங்கே எட்டாள்கள்

(நாலுபேருக்கு நன்றி—வாலி)

என்று குறிப்பிடுகிறார் கவிஞர்.

ஒவ்வொரு குடிமகனும் தேர்தலின்போது அள்ளி வீசப்படும் வாக்குறுதிகளை, சொற்சிலம்பங்களைக் கண்டு மயங்கித் தனக்கு நல்வாழ்வு இந்த தேர்தலுக்குப் பிறகு கண்டிப்பாகக் கிடைக்கும் என்று நம்புகிறான். அவன் வயிறுதான் எண்ணெய் இல்லாமலும் எரியும் ஒரே விளக்கு என்பதும், அடுப்பும் விளக்கும் எண்ணெய் இல்லாமையினால் எரியவில்லை என்று கூறுவதும் ஏழையின் நிலையைக் காட்டும் கவிஞரின் குரலாக ஒலிக்கிறது.

அரசியலில் பேரணி, உண்ணாவிரதம், கடையடைப்பு, மறியல், போன்ற செயல்கள் அங்கீகரிக்கப்பட்ட சட்டதிட்டங்களாகி விட்டன. இவை இல்லாத அரசியல் காரம் இல்லாத உணவைப் போலிருக்கிறது.

பேரணி, கடையடைப்பு நாட்களில் மக்கள் என்ன விதமான துயரங்களை அனுபவிக்கிறார்கள் என்பதை அவரவர் கண்டு, அனுபவித்து உணர்ந்தால் மட்டுமே முடியும். அன்றைய தினம் பசியால் ஏற்படும் உயிரிழப்புகள், உரிய நேரத்தில் சிகிச்சைக்குச் செல்ல முடியாததால் ஏற்படும் உயிரிழப்புகள் எத்தனை? எத்தனை? ஒரு சாண் வயிற்றை நிரப்புவதற்காகத் தெருத் தெருவாக அலைந்து கொண்டிருக்கும் பெரும்பாலானவர்களைப் பற்றி, வீட்டில் உட்கார்ந்து கொண்டு ஏப்பம் விட்டுக் கொண்டிருக்கும் தலைவர்கள் நினைப்பதில்லை. தன் இயக்கம் நடத்தும் போராட்டம் எனில் அதனைத் தடுக்க நினைப்பவன் உடன் பிறந்தவன் என்றாலும், தன் பகைவனே என்று நினைத்துத் தங்களுக்குள் வெட்டிச் சாகும் நிலை வர இந்தக் கட்சிகளும் போராட்டங்களுமே காரணமாக உள்ளன.

கடையடைப்பு, பேரணி, மறியல் என்று அமர்க்களப் படுத்திவிட்டு, அடுத்தநாள் அதற்குரிய உண்மையான தீர்வு எடுக்கப்பட்டதா என்பதைப் பற்றி யாருமே சிந்தித்துப் பார்ப்பதில்லை. கடையடைப்புப் பற்றிக் கவிஞர் வைரமுத்துவின் சொற்கள் அரசியலைத் தாக்கும் சாட்டைகளாக விழுகின்றன.

அரிசி விலை கொறைக்கச் சொல்லி கதவு சாத்தினாள்
ரொட்டி இன்னிக்கு பத்து ரூபா வெலை ஏத்தினான்
ஏறிப்போன வெலையைப் பாத்து எவனும் கேக்கலே
பந்த் நடத்தும் கூட்டம் எங்க பசியைப் போக்கலே
(ஒரு புல்லாங்குழல் அடுப்பூதுகிறது—வைரமுத்து)

அரசியல்வாதிகள் தாங்களே மக்களின் பிரதிநிதிகள் என்னும் கருத்தை நினைவிற் கொண்டோ என்னவோ மக்களுக்காகக் கிடைக்கும் பஞ்ச நிவாரணப் பணத்தைக் கூட, தனக்காகவும் எடுத்துக் கொள்கின்றனர். இந்தக் கருத்தினைக் கொண்ட பாடல் சில அரசியல் வாதிகளின் நிலையை வெளிக்காட்டுவதாக அமைந்துள்ளன. மேலும் அவ்வாறு நடக்க முயலும் அரசியல் வாதிகளை இனங்கண்டு கொள்ள வேண்டும் என்று நினைக்கும் மனிதனின் குரலாக,

பிச்சைச் சோத்தைத் திருடிப்புட்டான்
வெளுத்துக் கட்டுங்கடா
வெளியே சோறு வரும் வரைக்கும்
வெளுத்துக் கட்டுங்கடா

(ஒரு புல்லாங்குழல் அடுப்பூதுகிறது—வைரமுத்து)

என்ற பாடல் ஒலிக்கிறது.

மக்கள் பசி, பசி என்று அலைந்து' கொண்டிருக்கும்போது அவர்களுக்காகப் பஞ்ச நிவாரண நிதி கேட்டு வெளிநாட்டுக்குப் பயணம் செல்கிறார் அரசியல்வாதி. அந்த நிலையில் கூட "சென்று வருக வென்று வருக" என்று முழக்கமிடும் துணிகள் கொண்ட அலங்கார வளைவுகள், பெரும் பொருட் செலவில் வழியனுப்பு விழா நடக்கிறது என்பதையும் மேற்கூறிய பாடல் விளக்குகிறது.

இப்பாடலின் மூலம் கடையடைப்பு தினங்களைக் கணக்கில் வைத்துக் கொண்டு மக்களிடம் அநியாய விலைக்குப் பொருட்களை விற்கும் வீணர்களின் கூட்டத்தைக் குறை கூறும் நிலையையும், இந்நாட்களில் சோற்றுக்காக அலையும் பொதுமக்களின் உள்ளத்து உணர்வுகளைக் கூறும் நிலையையும் அறிய முடிகின்றது. பொது வுடைமைச் சமுதாயம் என்றைக்குப் பிறக்குமோ?—என்ற இயக்கச் சார்பு எதிர்பார்ப்பும் கவிஞரின் பாடலில் இழையோடுகிறது.

மக்களிடம் இன்ன வேலைக்கு இவ்வளவு ரூபாய் தர வேண்டும் என்று வாங்கிக் கொண்டு அரசியல் வாழ்வை நடத்தும் வித்தகர் களைக் கண்டு மனம் வெம்பிய நிலையில் கவிஞர் தான் கூறுவது செவிடர்களாகிய இம்மனிதர்கள் காதில் விழப் போவதில்லை என்ற முடிவுக்கும் வந்து விடுகின்றார்.

தேசம்போவது எங்கே? லஞ்சம்
தேசியமயமானது இங்கே,
இதைச் செவிடர் காதில் ஊதியதாலே
செவிடாய்ப் போனது சங்கே

(இது எங்கநாடு—வைரமுத்து)

சுதந்திரத்தின் முழுப் பயனையும் பெற முடியாமல் வாழ்ந்து கொண்டிருக்கும் மனிதனின் குரல்,

இங்கு சுதந்திரம் வந்தது யாருக்கு—அட
யாரோ பத்து பேருக்கு

என்றும்,

விடுதலை வந்தும் விடியவில்லை—அட
இருளின் சுவர்கள் இடியவில்லை

என்றும்,

கிழக்கு வெளுக்கத் துடிக்கிறது—ஆனால்
வெளிச்சம் அழுக்காய் துடிக்கிறது

(இது எங்க நாடு—வைரமுத்து)

என்றும் பலவாறாக ஒலிக்க, மத இன வேறுபாடு, உயர்ந்தவன், தாழ்ந்தவன், இருப்பவன், இல்லாதவன் என்ற வேறுபாடுகளே காரணமாகின்றன.

**சமயப் பாடல்கள்**

பக்தன், தன் வாழ்க்கையை இறைவனிடம் ஒப்படைத்துக் கொண்டு "அவன் விட்ட வழி" என்ற நிலையில் வாழ்வை ஓட்டிக் கொண்டு போகிறான். இதனால் தன்னிடம் இருக்கும் சிறப்புத் தகுதிகள் அனைத்தும் இறைவன் கொடுத்த பரிசுகள் என்பது பக்தர்களின் எண்ணமாக இருக்கின்றது. அதைப்போல, தனக்கு எவ்விதமான அக, புறத் துன்பங்கள் நேர்ந்தாலும் அதனைத் தீர்த்து வைக்க வேண்டியவன் இறைவனே என்ற எண்ணமே பக்தர் களிடையே பரவலாகக் காணப்படுகிறது.

இந்நிலையை,

ஒரு தாரம் இருந்தாலும் மறுதாரம் விழைகின்ற
மணவாளன் வாய்த்தானே எனக்கு இது
நீயன்றி யார் தீர்க்கும் வழக்கு.

(யாமிருக்கப் பயமேன்—வாலி)

என்ற பாடல் குறிப்பிடுகிறது.

தான் கொண்ட மாங்கல்யம் பிறர் கொள்ள எந்நாளும்
தாங்காது பெண்ணுள்ளம் முருகா—தாலி
பங்கிட்டுத் தருகின்ற பொருளா?

அதனால், 'நான் கொண்ட சௌபாக்கியம் என்னை விட்டுப் போகாமல் நீயே காத்துத்தர வேண்டும்' என்று முறையிடும் நிலையிலும் பாடல் எழுந்துள்ளது.

சஷ்டியில் விரதம் இருப்பவர்களுக்குச் சந்ததி பிறக்கும் செல்வமும் கொழிக்கும் என்று நினைக்கும் பக்தரின் மனமும் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**அ) புராண இதிகாசச் செய்தி**

புராண இதிகாசச் செய்திகளை விளக்கிக் கூறுவதற்கும், திரைக் கதையோடு தொடர்புடைய தாக்கிக் கொள்ளவும் இப்

பாடல்கள் உதவி புரிகின்றன. புராண இதிகாச நிகழ்வுகள் ஏதாவது ஒரு நல்ல நீதியைக் குறிப்பிடும் நிலையில் அமைக்கப் பட்டிருப்பதை எல்லோரும் அறிவர்.

சீதையின் நிலை

பொய்மானையே அன்று மெய்மானென
அந்தச்சீதை பேதையானாள்
(ஆயிரம் நிலவே வா—புலமைப்பித்தன்)

என்ற பாடலாலும், அகலிகையின் கிளைக் கதை

கல்லான பெண்கூட உன்னாலே
பெண்ணாகி எழுந்தாளே கண்மேலே
(இளமைக் காலங்கள்—முத்துலிங்கம்)

ராத்திரி நேரத்துல நாயகன் வேஷத்துல
இந்திரன் வந்தான்
ஆசையின் நாடகம் ஆடிய மேடையில்
ஆயிரம் கண்ணானான்
(ஒரு புல்லாங்குழல் அடுப்பூதுகிறது—வாலி)

என்ற பாடல்களாலும் விளக்கப்படுகிறது.

தன் மனைவியும், ஒரே குழந்தையும் விலைபோன பிறகும், தன் மகன் உயிரிழந்து விட்டதை அறிந்த பிறகும் வாய்மையையே கடைப்பிடிப்பேன் என்று உறுதியாக நின்று, அண்ணல் மகாத்மாவின் இதயத்தில் இடம் பிடித்தவன் அரிச்சந்திரன்.

குந்திதேவியே தன் தாய் என்பதை அறிந்த பிறகும் செஞ் சோற்றுக் கடன் தீர்க்க, தீயவன் துரியோதனனிடமே இருந்தவன் கொடையாளி கர்ணன்.

அண்ணனுக்குரிய நாட்டைத் துன்மதியால் வாங்கிக் கொண்டாளே தன் தாய் என்பதனால் அண்ணனைத் தேடிச் சென்று பாதுகைகளைப் பெற்று அதனையே அரசனாகப் பாவித்து வாழ்ந்து காட்டியவன் பரதன். இம்மூன்று செய்திகளையும் நீதிபதி என்ற படத்தின் ஒரே பாடலில் அமைத்துக் காட்டியுள்ளார், பாடலாசிரியர்.

ஒரே கடவுளின் அவதாரங்களில் ஒருவன் "இப்பிறவியில் இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்" என்று வாழ்ந்துகாட்டினான். மற்றொருவனோ 'பல பெண்களை மனைவியாகப் பெற்றவன்'. இந்த நிலை எதைக்காட்டுகிறது என்று மயங்கும் மக்களுக்கு விளக்க மாக அமைந்துள்ளது.

ஒருத்திக்கு ஒருவனென்ற
தத்துவமே ஸ்ரீ ராமன்
காதல் உணர்வுக்குப் பேதமில்லை
என்றவனே பரந்தாமன்

(வீட்டிலே ராமன் வெளியிலே கிருஷ்ணன்—
பஞ்சு அருணாசலம்)

என்ற பாடல்.

மாறு வேஷந்தான் முருகன் போட்டானாம்
வள்ளி மான் கிட்ட வம்பு பண்ணினானாம்

(தூங்காதே தம்பி தூங்காதே—வாலி)

என்ற பாடல் முருகன் வள்ளி காதல் தத்துவத்தை விளக்கும்.

ஊனுக்கு ஊன் சிறந்த மருந்து எனத் தெளிந்து தன் கண்ணைப் பிடுங்கி இறைவனின்மேல் தன் செருப்புக்காலால் தொட்டு அப்ப முற்பட்டான் இறையடியவன் திண்ணன். அவனை "நில்லு கண்ணப்ப" என அழைத்து இறைவன் தடுத்தாண்டு தன் அருகில் அமர்த்திக் கொண்டதாகப் பெரியபுராணம் மொழியும். இச் செய்தியை,

காலால் கடவுளை அளந்தானே—அந்த
கண்ணப்பன் சாத்திரம் அறிந்தானா
அம்பால் விழியைப் பறித்தானே—உண்மை
அன்பால் லிங்கத்தில் பதித்தானே

(யாமிருக்கப் பயமேன்—வாலி)

என்ற பாடலில் அமைத்துக் காட்டியுள்ளார் கவிஞர் வாலி.

கிறித்துவ சமயப் பாடல்கள் "வில்லியனூர் மாதா" என்ற திரைப்படத்திலும், "வெள்ளை ரோஜா" திரைப்படத்திலும் இடம் பெற்றுள்ளன. மேலும்,

கர்த்தரின் அருளால் கலந்தவர்கள்—நல்ல
கணவன் மனைவி ஆனவர்கள்
பயணங்கள் இணைந்தே நடத்தட்டுமே—அதில்
பிரிவுகள் இன்றி இருக்கட்டுமே

(இது எங்க நாடு—வாலி)

என்ற வாழ்த்துப்பாடலும்,

நிக்காஹ் முடிச்சவங்க நீங்காம இணைஞ்சிருக்க
மெக்காவின் திசை நோக்கி
மண்டியிட்டு நான் தொழுவேன்

தர்க்காவின் சன்னதியில் ஊதுவத்தி ஏத்திவச்சு
தம்பிகள் வாழ்ந்திருக்கத் திருமறையை ஓதிநிப்பேன்
(இது எங்கநாடு—வாலி)

என்ற இஸ்லாமிய வாழ்த்துப் பாடலும் இடம் பெற்றுள்ளன.

(ஆ) கடவுள் மறுப்பு: எந்தப் பொருளும் 'உண்டு' என்ற கருத்து தோன்றிய நாளையிலேயே அதே பொருள் 'இல்லை' என்ற கருத்துடையவர்களும் தோன்றியிருப்பார்கள். 'கடவுள்' என்ற நிலையிலும் இவ்விரு நிலைகளும் காணப்படுகின்றன. நாத்திகனை யும் கடைசி ஆத்திகனாகச் சேர்த்து இணைத்துக் கொள்ளுகிற மதமும் உள்ளது, கடவுள் நம்பிக்கை கொண்டவர்களை அதிக மாகக் கொண்ட இந்நாட்டில் புராண இதிகாசச் செய்திகளை வெளியிடுவனவாகவே பண்டைய நாடகங்கள் இருந்திருக்கின்றன. நாடகத்துறையின் வளர்ச்சி அமைவான திரைப்படத்திலும் காளிதாஸ் புராணச் செய்தியே விளக்கப்பட்டு வெளிவந்தது என்பதை முன்னரே கண்டோம். 1983-இல் பக்திப் படங்களாக,

(1) சஷ்டி விரதம்
(2) யாமிருக்கப் பயமேன்
(3) வில்லியனூர் மாதா

என்பனவும் "பக்த துருவ மார்க்கண்டேயா" என்ற புராணத் திரைப்படமும் வந்திருக்கின்றன. கடவுள் மறுப்புக் கருத்தை அடிப் படையாகக் கொண்டு எந்தத் திரைப்படமும் வெளிவந்ததாகத் தெரியவில்லை.

பக்தன் ஒருவன் கடவுள் நமக்கு நன்மை தரவில்லை என்றால் நீ கடவுளே இல்லை "கல்" என்கிறான். இவ்வாறு கூறும் உரிமை பக்தனாகிய தனக்கு உண்டு என்ற பாங்கிலேயே பலபாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன. சமுதாய நிகழ்வைக் கூறும் திரைப்படமான சுமங்கலியில்,

கடவுளை உலகில் கற்பித்தவன்
முட்டாள் மனிதனடா
கடவுள் பெயரைப் பரப்புகின்றவன்
யோக்கியன் இல்லையடா (சுமங்கலி—வாலி)

என்ற கருத்து கவிஞரால் எடுத்துக் கூறப்படுகிறது. ஆனால் இடையிலேயே,

'இது நான் சொன்னதில்லை இந்த நாடறிந்த உண்மை' என்ற சொல்லையும் பயன்படுத்துகிறார்.

இதே பாடலில் மேலும்,

பக்தி என்பது தனிச் சொத்தாகும்
நமக்கது தேவையில்லை
ஒழுக்கம் என்பது பொதுச் சொத்தாகும்
காப்பது நம் வேலை—இது
நான் சொன்னதில்லை—இந்த நாடறிந்த உண்மை.

என்ற கருத்தும் கூறப்பட்டுள்ளது,

இது தன்னுடைய கருத்தல்ல பலர் சொன்னது என்று கூறுவதால் கதைக் கேற்றவாறு பாடியாகவேண்டும் என்ற நோக்கத்தில் ஆசிரியர் பாடியிருக்கலாம்,

**கலைகள்**

(அ) இசை : இசையின் பெருமையை விளக்க, கலைமாமணி சேஷகோபாலன் நடித்த 'தோடிராகம்' என்ற திரைப்படமும் மிருதங்கத்தின் தாள மேன்மையைக் காட்டும் வகையில் மிருதங்கச் சக்கரவர்த்தியும் வெளிவந்துள்ளன.

தாலாட்டுப் பாடலுக்குரிய பண்ணாக நீலாம்பரியைக் குறிப்பிடுவர். இதனை,

நாந்தாண்டி நடுராத்திரி உன்னைத் தாலாட்டும் நீலாம்பரி

என்ற அடி நிரூபிக்கிறது.

காம காம பாத நீஸா கடைசியிலே நீஸா நீஸா
சபாஷு மேலே போடா பொறக்குது ஷட்ஜமந்தான்
போறதெல்லாம் பஞ்சமந்தான்
(இனிமை இதோ இதோ—கங்கை அமரன்)

மண்ணில் தோன்றிடும் யாவுமே
தினம் தினம் புதுப்புது மாற்றமே
மாறாமல் வாழ்ந்திடும்
இசைதானே நிலையாகும் உலகிலே
(தோடிராகம்—பூவை செங்குட்டுவன்)

என்ற பாடல்கள், கவிஞர்களின் இசையறிவு, அதையும் நகைச்சுவையுடன் ஆளுந் தன்மை, இசையின் மேம்பாடு போன்றவற்றைக் குறிப்பிடுவனவாக அமைந்துள்ளன.

ஏழுவகை ஸ்வரங்களும் ஸ்ருதியுடனே சேர்ந்து
லயத்துடன் இணைந்தால் சுகமாகும்
காலையும் மாலையும் இரவிலும் பாடலாம்
(தோடிராகம்—பூவைசெங்குட்டுவன்)

என்ற பாடல் தோடிராகத்தின் பெருமையைக் கூறுமுகத்தான் எழுந்தது.

(ஆ) நடனம் : பல திரைப்படங்களில் நடனத்தோடு இணைந்த பாடல்கள் இடம் பெறுகின்றன. திருவிழாக்களில் நடைபெறும் நடனப் பாடல்கள், இரவு விடுதியில் பயன்படுத்தப் படும் பாடல்கள், பரதநாட்டியம், போட்டி நடனம் போன்ற நிலைகளில் பாடப்படும் பாடல்கள் என நடனப்பாடல்கள் பல வகைப்படும். நடனத் தோற்றத்தை, சரவண பவானந்தா எனுங் கவிஞர்,

மெய்யாகவே தவக் கோலமாய் சிதம்பரம்
தன்னில் புலிக்கால் முனி சலிக்காது எமக்
களித்த நற்கலையே ஐயன் அன்று மதுரையில்
வெள்ளியம்பலத்தில் ஆடினான்
அதுவே அழகிய சதுர்க்கலை
(தோடிராகம்—சரவணபவானந்தா)

என்று விளக்கிக் காட்டினார்.

## பாடல் வெளியீட்டு உத்திகள்

பாடல்கள் கதைத் தொடரிபோடு சேர்ந்ததாகவோ கதை யோடு இணையாததாகவோ அமைக்கப் பட்டிருந்தாலும் முன்னோர் மொழிகள், பேச்சுவழக்கு, கிளைமொழிச் சொற்கள் போன்றன எடுத்தாளப்படுகின்றன. அந்த வகையில் பழமொழி, தூது, உலா. விடுகதை, நாட்டுப்புற மெட்டுடன் கூடியபாடல், வருணனைக்காகப் பழைய திரைப்படங்களின் பெயரை அமைத்தல், பழைய திரைப்படப் பாடல் வரிகளை ஆளுந்தன்மை, முன்னாளைய இலக்கியச் செய்திகளை அப்படியே ஆளுதல், சிறிது மாறுபடுத்தி ஆளுந்தன்மை போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

(அ) பழமொழி : ஒரு நாட்டின் பழக்க வழக்கங்கள், சாதி, சமயம், தொழில், அன்பு, பண்பு, காதல் முதலிய எல்லாவகைப் பாகுபாடுகளையும் கண்டறிதற்கேற்ற கருவி, பழமொழி என்றால் மிகையாகாது. சில குறிப்பிட்ட செயல்களின் பயன்களைக் குறிப் பாகவும் வெளிப்படையாகவும் மக்கட்கு உணர்த்த எழுந்த பழமொழிகளை அப்படியே எடுத்தாள்வதும் சிறிது மாறுபடவும் காட்டும் நிலை பெரும்பாலான கவிஞர்களிடம் உள்ளது.

(1) தென்னை மரத்துல தேளு கொட்ட
பனை மரத்திலே நெறி கட்டியதுபோல
(சாட்சி—வைரமுத்து)

(2) வேலியில ஓடுகிற ஓணானைத் தான்
சேலையில் வேணுமின்னு போட்டுக்கிட்டே
இப்போ குத்து துண்ணு குடையுதுண்ணு கத்துறியே
(சூரக்கோட்டை சிங்கக்குட்டி—வாலி)

(3) மயிலே மயிலேண்ணா எறகைப் போடாது
(சாட்டை இல்லாத பம்பரம்—வாலி)

(4) கேழ்வரகில் நெய் ஒழுகுது என்றால்
கேட்கிறவனுக்கு மூளை இல்லை
(நாலுபேருக்கு நன்றி—வாலி)

(5) காடு நடுங்கும் சாது மிரண்டால்
(சிவப்பு சூரியன்—வாலி)

என்பன போன்ற பல பழமொழிகளும்,

(1) அவலை நினைச்சு உரலை இடித்த கதையைப்போல
(உயிருள்ளவரை உஷா—டி, ராஜேந்தர்)

(2) தும்பை விட்டுவிட்டு வாலைப் பிடித்தால் மாடுகூட
நிக்காது (அண்ணே அண்ணே—வாலி)

(3) வெளுத்ததைப் பாலுன்னு
நெனச்சுட்டேன் தப்பா
(அபூர்வ சகோதரிகள்—வாலி)

என்பன போன்ற உவமைத் தொடர்களும் பாடல்களில் பயன் படுத்தப் பட்டிருக்கின்றன.

(ஆ) விடுகதை : விடுகதையைப் புகுத்தி, மக்களுக்குச் செய்தியை அறிவிக்கும் நிலையிலும் பாடல்கள் எழுதப்பட்டுள்ளன. சொற்சுருக்கமும், இனிமையும் கொண்ட இவ்விடுகதை எல்லாத்தர மக்களிடையும் பரவி உள்ளது.

கேள்வி : புடிச்ச புடி விடாத விலங்கென்ன?
பதில் : உடும்பு

கேள்வி : காதிருக்கும் ஆனாலும் கேட்காது. அது என்ன?
பதில் : ஊசி

கேள்வி : கண்ணிருக்கும் ஆனாலும் பார்க்காது?
பதில் ; தேங்காய்

கேள்வி : நாக்கிருக்கும் ஆனாலும் பேசாது. அது என்ன?
பதில் : கோயில்மணி
(சஷ்டிவிரதம்—வாலி)

இவ்வாறு விடுகதையை அமைத்துக்கூறும் அமைவை விட விடுகதைக்குரிய பதிலையே பாடலில் காட்டும் நிலையும் காணப் படுகிறது.

காணாமல் பூப்பூக்கும் கண்டு காய்காய்க்கும் என்ற விடுகதைக் குரிய பதிலைப் பாடலில் ''பூக்காத அத்தி''என்று அமைத்துள்ளார் கவிஞர்.

(இ) தூது : ஒருவர் தம்முடைய கருத்தை மற்றொருவனுக்கு எதன் மூலமாவது சொல்லிவிடுவது தூது எனப்படும்; பண்டைத் தமிழ்ச் சான்றோர், அன்னம், மயில், கிளி, மேகம், மைனா, தோழி, குயில், நெஞ்சம், தென்றல், வண்டு போன்றவற்றைத் தூதனுப்பியதாகப் பல இலக்கியங்களைப் பாடியுள்ளனர். காலம் செல்லச் செல்ல, தமிழ், தாமரை, நெல், பணம், விறலி, புறா, பொன், புகையிலை போன்ற பொருட்களையும் தூது சொல்லி விடுத்தற்குரிய பொருட்களாக்கிக் கொண்டதையும் இலக்கியங்கள் மூலம் காண்கிறோம்.

திரைப்படப் பாடல்களிலும் தூதனுப்பும் அமைவுடன் பல பாடல்கள் வெளி வந்துள்ளன. காதலர் பொருட்டுச் செல்லும் தூதினை ''வாயில்'' என்னும் பெயரால் தொல்காப்பியம் குறிப் பிடும். காற்றைத் தூதுவிடும் செய்தியை,

உன்னைத் தானே அழைத்தேன்
உறங்காமல் தவித்தேன்
எந்தன் பாட்டைத் தூதாக்குவேன்
பூங்காற்றை நான் அனுப்பி வைப்பேன்
(உயிருள்ளவரை உஷா—டி. ராஜேந்தர்)

என்றும்,

வைகைக் கரை காற்றே நில்லு
வஞ்சி தன்னைப் பார்த்தா சொல்லு
மன்னன் மனம் வாடுதென்று மங்கை தனைத்தேடுதென்று
காற்றே பூங்காற்றே என் கண்மணி அவளைக்
கண்டால் நீயும் காதோரம் போய்ச்சொல்லு
(உயிருள்ளவரை உஷா—டி. ராஜேந்தர்)

என்றும் கவிஞர் டி. ராஜேந்தர் பாடலில் அமைத்துக் காட்டுகிறார்.

தாம்பூலம் வச்சுத்தான் அழைக்கணுமா
இல்லை தூதாக நெஞ்சைத் தான் அனுப்பனுமா?
(உறங்காத நினைவுகள்—வாலி)

என்ற பாடலில் நெஞ்சைத் தூதாக அனுப்ப முயலும் பான்மையைக் காண்கிறோம்.

ஜோதியே உன்னைத் தேடியே ஒரு சேதி வருமே
இரு காதோடு தூதாகுமே இவள் சார்பாக வாதாடுமே
(தூரம் அதிகமில்லை—மு. மேத்தா)

என்ற பாடலில் சேதி, தூதாகும் நிலையைக் காண்கிறோம்.

நெடுநாள் ஆசை ஒன்று—இந்த
நெஞ்சினில் உதித்ததுண்டு—அதை
நேரிடையாகச் சொல்ல
நாணமில்லாதவள் அல்ல—அதனால் கண்ணைத்
தூது விட்டேனடி.
(சரணாலயம்—வாலி)

என்ற பாடலில் தலைவியின் பண்பாட்டுச் சிறப்பையும் தூதிலக்கியத்திற்கு 'கண்' என்றொரு புதிய தூதுப்பொருள் கிடைத்துள்ளதையும் உணரமுடிகின்றது.

(ஈ) உலா : தலைவன் வீதியில் உலாவர அவனைக்கண்டு ஏழு பருவப் பெண்களும் காதல் கொள்வதாய்ப் பாடுவது உலா இலக்கியம்.

துள்ளும் கலைமானின் இதழ்மீதிலே
ஒரு பாடல் உன்னால உலா காணுதே
(தூரம் அதிகமில்லை-குருவிக்கரம்பை சண்முகம்)

என்ற பாடலினால், பாடல் உலா வரக் காரணமாக அமைந்தவள் ஒரு பெண் என்பதை அறிய முடிகிறது. தான் அன்பு கொண்டவளின் முகம் உலா வரும் வீதியாக, தன் மனத்தைக் காட்டுகிறான் தலைவன்.

தினம் தினம் உந்தன் ஒரேமுகம்
மனந்தனில் உலாவரும்.
(என் ஆசை உன்னோடுதான்—வாலி)

என்ற பாடல் அது.

(உ) முன்னோர் மொழி போற்றல் : சங்க இலக்கியங்கள், திருக்குறள் அடிகளை அப்படியே ஆள்வதையும், கருத்துக்களை எடுத்துக்கொண்டு சிறிது மாறுபடுத்திக் கூறுவதையும் பல பாடல்களில் காணமுடிகின்றது.

எங்கெங்கோ பிறந்து கணவன் மனைவியாக இணைந்த நிலையைச் சங்கச் சான்றோர் செம்புலப் பெயனீரார்,

செம்புலப் பெயனீர்போல
அன்புடை நெஞ்சம் தாங்கலந்தனவே (குறுந்தொகை-40)

என்று குறிப்பிடுவார். இந்தக் கருத்தை,

செந்நிலம்மேலே தண்ணீர் சேர்ந்ததுபோலே
ஆனது நெஞ்சம்—நீ என்
வாழ்க்கையின் சொந்தம்
(வெள்ளை ரோஜா—முத்துலிங்கம்)

என்று கவிஞர் முத்துலிங்கம் அமைத்துக் காட்டுகிறார். இதே கருத்து அண்ணன் தங்கையிடையே உள்ள பாசத்தைக் காட்டும் வகையில்

செம்மண்ணிலே தண்ணீரைப்போலே
உண்டான சொந்தம் இது (தர்மயுத்தம்—வாலி)

என்று 'தர்மயுத்தம்' திரைப்படத்தில் இடம் பெற்றிருந்தது.

அழகே உருவான பெண், வீதியில் வந்ததால் இளைஞரின் மனம் புண்பட்டதாம். அவள் வெளியில் வந்தது தவறல்ல. அவளை வீட்டிலிருந்து வெளியே அனுப்பிய தாயின் தவறுமல்ல. அவள் வீட்டை விட்டு வெளியே வருகிறாள் என்று அவளுக்கு முன்னால் சென்று ஒருவன் பறையடிக்கும்படிக் கட்டளையிடாத அரசனே தவறுடையவன் என்ற கலித்தொகை (56) கருத்தை,

கண்படுமே பிறர் கண்படுமே நீ வெளியே வரலாமா

என்று கண்ணதாசன் பாடினார். இதே கருத்தைச் சிறிது மாறுபட கவிஞர் புலமைப்பித்தன்,

அதில் மண்படுமே அதில் புண்படுமே மனம் தாங்காதே
எழில் தென்படுமே பிறர்கண் படுமே வழிபோகாதே
(பிரம்மச்சாரிகள்—புலமைப்பித்தன்)

என்று காட்டுகின்றார்.

குறளை எடுத்தாண்டு, அடுத்து வரும் அடிகளிலேயே அதற்கான விளக்கவுரையையும் அமைத்துக் காட்டும் நிலைக்குச் சான்றாக

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய் கவர்ந்தற்று

கனிந்த பழம் இருக்கையிலே
காய் பறிப்பார் யாருமுண்டோ

(வீட்டிலே ராமன் வெளியிலே கிருஷ்ணன்)

என்ற பஞ்சு அருணாசலம் பாடலைக் குறிப்பிடலாம்.

கூவின பூங்குயில்
கூவின கோழி
குருகுகள் இயம்பின

(மெல்லப் பேசுங்கள் - புலமைப்பித்தன்)

என்ற மாணிக்கவாசகரின் "திருப்பள்ளியெழுச்சி"ப் பாடலைத் தன் பாடலுக்குரிய தொகையறாவாகக் கொண்டுப் பின்னர்தான் இயற்றியுள்ள பாடலை இணைத்துள்ள அமைப்புடன் கவிஞர் புலமைப்பித்தன் ஒரு பாடலை இயற்றியுள்ளார்.

(மெல்லப் பேசுங்கள் — செவ்வந்தி பூக்களில் செய்த வீடு)

ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாங்கு சொல்லவேண்டாம்

என்ற உலகநீதிப் பாடலின் சந்த அமைவும், சொல் அமைவும்,

சமைக்காமல் ஒருநாளும் இருக்கவேண்டாம்
சம்சாரம் என்பதையே மறக்க வேண்டாம்
மருதாணி மஞ்சளையும் ஏசவேண்டாம்
மேக்கப்பு பான் கேக்கு பூசவேண்டாம்,

(அண்ணே அண்ணே—வாலி)

என்ற பாடலில் காணப்படுகின்றன,

பரமார்த்தகுருகதையின் தாக்கத்தினால் கவிஞர் காமகோடியானின் பாடல்.

முட்டாளு சேந்தாக வேட்டைக்குப் போனாக
முன்னூறு நாளாக மூஞ்சூறு புடிச்சாக
கடைசியில கணக்கு பாத்தா
ஆளொண்ணு குறைஞ்சாக
எண்ணிப் பாத்தவன் தன்னைச் சேக்கலே
ஏழெட்டு நாளாக ஆளுகிடைக்கலே
கூட்டாளி கானாமுண்ணு
கூப்பாடு போட்டாக,

(சீறும் சிங்கங்கள் — காமகோடியான்)

என்று அமைகிறது.

மோகத்தைக் கொன்றுவிடு
அல்லாலென்றன் மூச்சை நிறுத்திவிடு

என்ற பாரதியின் கருத்தைப் புத்திசாலிப் பைத்தியங்கள் என்ற திரைப்படத்தில் இணைத்து, பாடல் இயற்றப்பட்டுள்ளது.

காளியினால் ஆட்கொள்ளப்பட்ட காளிதாசன், கண்ணனை விரும்பி அடிமையான கண்ணதாசன் இவர்களின் கவிதையைப் போன்றவளே! என்னும்போது முன்னோர் கவிதைப் பொருளை மட்டுமின்றிக் கவிதையையே உவமை கூறும் நிலையையும் காண்கிறோம்,

காளிதாசன் கண்ணதாசன்
கவிதை நீ நெருங்கி வா
(சூரக்கோட்டை சிங்கக்குட்டி—வாலி)

என்பது பாடல்,

(ஊ) பழைய திரைப்பட பெயர் ஆட்சி :- பெண்ணை வருணிக்கவும் தான் சொல்லவரும் கருத்தை அறிவிக்கவும் பழைய திரைப் படங்களின் பெயர்கள் கவிஞரால் பயன்படுத்தப் படுகின்றன,

பொண்ணா அவ காதல் ஓவியம்
பன்னீர் புஷ்பங்கள் அமரகாவியம்
அலைகள் ஓய்வதில்லை
பயணங்கள் முடிவதில்லை
கண்டேன் ஒரு மஞ்சள்நிலா
கண்ணால் கொஞ்சும்கோயில் புறா
முன்னால் வந்த அன்னக்கிளி.
(சாட்டை இல்லாத பம்பரம்—வாலி)

என்ற பாடலைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

(எ) பழைய திரைப்படப் பாடல் ஆட்சி : வாழ்வே மாயம் எனும் திரைப்படத்தில் வரும் 'தேவி ஸ்ரீதேவி உன் திருவாய்... என்ற பாடல் இடம்பெற்ற அடிகளையே சிறிது மாறுபடுத்தி 'என் ஆசை உன்னோடுதான்' என்ற திரைப்படத்தில்

உனக்காகப் பூஜை செய்த பக்தனம்மா
உறங்காமல் ஆசை வைத்த பித்தனம்மா
மனக்கோவில் தேவியே நீதான் என் கவியே
(என் ஆசை உன்னோடுதான்—வாலி)

என்று கவிஞர் வாலி பயன்படுத்தியுள்ளார்.

சொன்னாலும் வெட்கமடா
சொல்லாவிட்டால் துக்கமடா

என்ற கவியரசரின் பாடல் நாலுபேருக்கு நன்றி திரைப்படத்தில்

சொன்னாலும் வெட்கந்தான்
சொல்லாட்டித் துக்கந்தான்
(நாலுபேருக்கு நன்றி—வாலி)

என்று ஆளப்பட்டுள்ளது.

'மாமன் மகள்' என்ற திரைப்படத்தின் ''கோவா மாம்பழமே மல்கோவா மாம்பழமே...'' என்ற பாடலில் இடம் பெறும் ''சபாலங்கிடி கிரிகிரி சைதாப்பேட்டை வடகறி'' என்ற சொற்றொடர் ''உருவங்கள் மாறலாம்'' என்ற படத்தில் ஆளப் பட்டுள்ளது.

பழைய திரைப்படப் பாடலோடு தன் கருத்தையும் இணைத்து,

தூங்காதே தம்பி தூங்காதே—இப்ப
தூங்கிப்புட்டு பின்னாடி ஏங்காதே
பட்டுக்கோட்டை வார்த்தைகளைப்
போட்டு நம்ம புரட்சியாரு
பாடிவச்ச பாட்டு—கண்ணு
முழிச்சிக்கடா நீயுமிதைக் கேட்டு—உன்
சுறுசுறுப்பைக் காரியத்தில் காட்டு...
(தூங்காதே தம்பி தூங்காதே—வாலி)

என்றவாறு பாடல் இயற்றப்பட்டுள்ளது. இப்பாடலில் பட்டுக் கோட்டையார், எம்.ஜி.ஆர். இவர்களைப்பற்றிய செய்திகளையும் தன் எதிர்பார்ப்பையும் கவிஞர் காட்டியுள்ளார்.

கல்லூரியில் பல ஆண்டுகள் நட்புடன் பழகி இறுதியில் கண்ணீர் மல்கப் பிரிவது நண்பர்களிடையே உண்டு. இந்நிலையை,

''எந்த ஊரில் எந்த நாட்டில் காண்போமோ'' என்று அமைத்துக் காட்டினார் கண்ணதாசன். இதே கருத்து ''ஆனந்த கும்மி'' திரைப்படத்தில்,

ஊரத் தேடிப்போறோம் எப்ப மறுபடி பாக்கப்போறோம்.
(ஆனந்தகும்மி—கங்கை அமரன்)

என்று கூறப்பட்டுள்ளது.

ஓ...வெண்ணிலாவே! வா ஓடி வா
நாளை... இந்த வேளை எமை
நீ காணவா... ஓ பால் போல் வா
(ஆனந்தகும்மி—வைரமுத்து)

என்ற கவிஞர் வைரமுத்துவின் பாடலை,

பால் போலவே வான் மீதிலே
யார் காணவே நீ காய்கிறாய்
நாளை இந்த வேளை பார்த்து ஓடி வா நிலா
இன்று எந்தன் தலைவன் இல்லை சென்று வா நிலா

என்ற பாடலின் (உயர்ந்த மனிதன்—கண்ணதாசன்) தாக்கத்தால் எழுந்த பாடலாகக் கொள்ளலாம்.

ஒண்ணா யிருக்கக் கத்துக்கணும்—இந்த
உண்மையைச் சொன்னா ஒத்துக்கணும்
காக்கா கூட்டத்தைப் பாருங்க—அதுக்கு
கத்துக் கொடுத்தது யாருங்க

என்ற கவிஞர் வாலியின் பாடலின் கருத்தே

''காக்கையைப் போல சேர்ந்து வாழக் கத்துக்கணும்'' என்று ''முத்து எங்கள் சொத்து'' திரைப்படத்தில் மீண்டும் சிறிது மாறுபட ஆளப்பட்டுள்ளது.

(ஏ) அணிநலன்

ஒரு கண் அழுதாலே மறுகண் கலங்காதோ
உனக்கோர் துயரம் என்றால் எனக்கும் பொருந்தாதோ
(சிவப்பு சூரியன்—வாலி)

என்று உவமை நலமும்,

என் கண்கள் உன்னிடம்
காதல் பிச்சை கேட்கும் அமுத சுரபிகள்
அமுதசுரபிகள் பட்டினி கிடக்கலாமா
உன் பார்வையைப் பிச்சையிடு.
(ஒரு இந்தியக் கனவு—வைரமுத்து)

என்று உருவக அணியும்,

பொங்கல் பானை பொங்கி வழிந்தால்
அடுப்பில் தானே வழியும்—கண்ணே
புருஷனுக்குக் கோபம் வந்தா
எங்க காட்ட முடியும்
(சாட்சி—வைரமுத்து)

என்று எடுத்துக் காட்டு உவமை யணியும்,

ராத்திரியில் பூத்திருக்கும் தாமரைதான் பெண்ணோ
(தங்கமகன்—புலமைப்பித்தன்)

விண்ணில் இல்லாச் சொர்க்கம் தன்னை
உன்னில் இங்கு கண்டேனே
(வெள்ளை ரோஜா—முத்துலிங்கம்)

நான் என்றும் தேயாத திங்கள் (சில்க் சில்க் சில்க்—வாலி)

என்று இல்பொருள் உவமையணியும் பாடல்களில் எடுத்தாளப் பட்டுள்ளன.

ஐ) **நாட்டுப்புறமெட்டு :** நாட்டார் நடனம், நாட்டார் இசை போன்ற நாட்டுப்புறக் கலைகளில் செயற்கையின் பூச்சு களோ, புதுமையின் புகுதல்களோ இடம் பெற்றதில்லை. பன்னெடுங் காலமாகத் தமிழக மக்களின் வாழ்க்கையில் இடம் பெற்றிருந்த நாட்டுப்புற இசைக்கு ஒரு தேக்க நிலை ஏற்பட்டது. அந்த நிலையிலிருந்து மாற்றி நாட்டுப்புற இசைக்கு ஒரு மீட்டுரு வாக்கம் கொடுத்த பெருமை இசையமைப்பாளர் இளைய ராஜாவைச் சாரும்.

மச்சான பாத்தீங்களா
மலை வாழத் தோப்புக்குள்ளே ...

(அன்னக்கிளி, பஞ்சு அருணாசலம்)

என்ற பாடலையும், நாட்டுப்புற மெட்டோடு இணைத்து இசை யமைத்த இளையராஜாவையும், பாடிய பின்னணிப் பாடகி ஜானகியையும் தமிழகம்மறந்திருக்காது. இப்போது பெரும்பாலான திரைப்படங்களில் நாட்டுப்புற மெட்டுடன் கூடிய பாடல்கள் இடம் பெறுவது தவிர்க்க முடியாததாகிவிட்டது.

மண்வாசனை. மலையூர்மம்பட்டியான்
முந்தானை முடிச்சு ஒரு இந்தியக் கனவு

என்பன போன்ற திரைப்படங்கள் நாட்டுப்புற வாழ்வை அடிப் படையாகக் கொண்டு எழுந்தவை. நாட்டுப்புற மெட்டை ஓரிரு பாடல்களில் மட்டும் பயன்படுத்திய பல திரைப்படங்கள் இவ்வாண்டில் வந்திருக்கின்றன.

முத்தியாலம்மன் கோயிலிலே உத்திரங்கள் நிறுத்தி
உருக்குமணி அம்மாளைத்தான் சீக்கிரமா அழைச்சாங்க
ஊசிபோல மின்னிமின்னி ஊர் செழிக்க பேயுமழை
சீமையெங்கும்பேயுமே— ஆலம்மா செல்வ மழைபேயுமா
(ஒரு இந்தியக் கனவு—வாலி)

என்ற பாடலில் நாட்டுப்புறத் தெய்வங்களும், நாட்டுப்புறச் சொற்களும் இடம் பெற்றுள்ளன.

காட்டு வழிபோற பொண்ணே கவலப்படாதே
காட்டுப்புலி வழிமறிக்கும் கலங்கி நிக்காதே
மம்பட்டியான்பேரு சொன்னா புலி ஒதுங்கும்பாரு
(மலையூர்மம்பட்டியான்—வைரமுத்து)

சின்னப் பொண்ணுசேல
செண்பகப் பூ போல...
(மலையூர்மம்பட்டியான்—வைரமுத்து)

பொத்திவச்ச மல்லிகை மொட்டு
பூத்திருக்கு வெட்கத்தைவிட்டு
பேசிப்பேசி ராசியானதே
(மண்வாசனை—வைரமுத்து)

வாங்கடி வாங்கடி வஞ்சிகளே
வெளஞ்ச வெள்ளரிப் பிஞ்சுகளே
விளைஞ்சு குனிஞ்சு ஒலக்கை எடுத்து
சுத்த சம்பா குத்துங்கடி
(மண்வாசனை—எம்.ஜி. வல்லபன்)

போன்ற பாடல்களைச் சான்றாகக் கூறலாம்.

ஒ) மொழி அமைவு, கிளைமொழியின் தாக்கம் : திரைப்படக் கலை மட்டுமே மதம், இனம், மொழி என்னும் குறுகிய வட்டத்திற்குள் அகப்படாது வளர்ந்து வருகின்றது. மற்றொரு மாநில மொழியில் எடுக்கப்பட்டு வெற்றி பெற்ற திரைப்படங்களும் மொழி மாற்றம் செய்யப்பட்டு வெளியிடப்படுகின்றன. (சான்று; சலங்கை ஒலி) எல்லா மாநில மக்களும் எங்கும் நடிகர்களாகவோ, நடிகையர்களாகவோ புகழ்பெற வாய்ப்புள்ளது.

திரைப்படப் பாடல்களில் பொதுவாக இலக்கிய மொழி பயன்படுத்தப்படுவதில்லை. பேச்சு மொழியே பயன்படுத்தப் பட்டாலும் இடையிடையே ஆங்கிலம், வடமொழி, ஹிந்தி, தெலுங்கு, உருது போன்ற மொழிச் சொற்களும் "மெட்ராஸ் பாஷை" போன்ற பல மொழிக் கலப்புக்கொண்ட கிளை மொழியும் பயன்படுத்தப்படுகின்றன.

எனிபடி கேன் கிஸ் மீ...
வெய்ட் வெய்ட் வெய்ட் எ மினிட்
வித் அவுட் டச்சிங் மீ...
(தங்கமகன்—முத்துலிங்கம்)

என்றவாறு ஆங்கில மொழியும்,

நேனிஸ்த் தானூரா தீஸ்க்கோரா
இதி நா டிஸ்க்கோரா நூ குஸ்க்கோரா
ஏமய்யா பாஸ்கரா—நூ
நன்ன சூடரா
(தமிழில்) நான் கொடுக்கிறேன் நீ வாங்கிக்கோ
இது என்னுடைய ஒரு டிஸ்கோரா— நீ உட்கார்ந்துக்கோ
ஏனைய்யா பாஸ்கரா—என்னை
நீ பாரய்யா

என்று தெலுங்கு மொழியும் பாடல்களில் பயன்படுத்தப் பட்டுள்ளன.

திரைக்கதையின் அமைவுக்குத் தக பாடலும் பாடலின் மொழி நடையும் வேறுபடும். இதனை அடியொற்றி வெள்ளை ரோஜா திரைப்படத்தில்,

நாகூருப் பக்கத்திலே நம்மளோட பேட்ட
ராவுத்தரு நிக்ஹாவிலே நமக்கு நல்ல வேட்ட
(வெள்ளைரோஜா—கங்கை அமரன்)

என்று உருதுமொழி பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஹிந்தி மொழி பயன்பட்டிருப்பதற்குச் சான்றாக,

ஆவோ தும்ஆவோ அள்ளி அணைக்க
ஆவோ தும்ஆவோ அத்தர் மணக்க
(வெள்ளைரோஜா—கங்கை அமரன்)

என்ற பாடல் வரிகளைச் சுட்டலாம்

மெட்ராஸ் பாஷை என்று குறிக்கப்படும் கிளை மொழி பல திரைப்படங்களில் இடம் பெற்றுள்ளது. கூத்த அமைவின் கண்ணும் சில குறிப்பிட்ட நடிகர்களின் பேச்சு மொழிக்காகவும் இம்மொழி பயன்படுத்தப்படுகிறது. சான்றாக,

ஜக்கம்மா : அட நா பெத்த மவனே ப்ரகலாதா

குழு : ஆமா

ஜக்கம்மா : இன்னாடா நீ ரீல் விடுறே நம்ம கையிலே ராங் பண்றே எங்கேடா கீரான் உன் சாமி அடகீரான்னு சொன்ன நீ காமி
(தலைமகன்—வாலி)

என்றும்,

இந்தா புள்ளே சகுந்தல நான் வாரபோது
என்னைக் கண்டுக்காம இருந்ததால
ஒரு வீட்டு வேலையும் பார்க்காம ரோசணையிலே
குந்திக்கினு... (கொக்கரக்கோ—கங்கை அமரன்)

என்றும் இக்கிளைமொழி எடுத்தாளப்பட்டுள்ளது. இங்கு மொழி வெளிக்காட்டலுக்கும் புராணக் கதை விளக்கத்திற்கும் இம்மொழி காரணமாக அமைந்துள்ளது.

**பேச்சு வழக்கில்**

பேட்டை மாறி பேட்டை வந்து
பம்மாத்து வேலையைக் காட்டுறியா
கைதே, கசமாலம், சோமாறி
...... (நல்லமகன்—வாலி)

என்றும் இக்கிளைமொழி திரைப்படப் பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

ஓ) **புதுக்கவிதை தாக்கம் :** திரைப்படப் பாடல்களில் புதுக் கவிதையின் தாக்கம் இருக்கின்றது. புதுக்கவிதை, தமிழ் மொழியிலே வளர்ந்து வருகின்ற ஒரு புதுமை இலக்கியக் கூறாகும்.

புதுக்கவிதையின் பெருமையைக் கூறுமுகத்தான், ஒரு பெண்ணோடு இணைத்துக் கூறும் நோக்கில்,

எழுதுகிறாள் ஒரு புதுக்கவிதை—வண்ண
இருவிழியால் இந்தப் பூங்கோதை
இதைவிட இலக்கியம் கிடையாது
இலக்கண வரம்புகள் இதற்கேது

என்ற பாடல் அமைந்துள்ளது. (சரணாலயம்—வாலி)

கவிஞர் வைரமுத்துவின் பாடல்களில்,

பருவ காலங்களால் புஷ்பிக்காத என் தோட்டம்
உன் பார்வைகளால் புஷ்பித்ததே
இதய ரோஜாச் செடியில் இந்த
ஒற்றைப் பூ பூத்துவிட்டால்
அத்தனை முட்களும் உதிர்ந்து போகின்றன
(ஒரு இந்தியக் கனவு)

என்றும், வாலியின் பாடலில்

உன்னை எனக்குப் பிடித்திருக்குது
என்னை உனக்குப் பிடித்திருக்கிறதே இல்லையோ
உன்னை எனக்குப் பிடிக்கவே செய்கிறது
(பொய்க்கால் குதிரை)

என்றும் புதுக்கவிதையின் தாக்கம் இடம் பிடித்துள்ளது. காதலியின் விழியின் தன்மையை,

வானத்தின் நிறம் காட்டும் உன் விழிகள்
என்னைப் பார்க்கையில் மட்டும்
ஏன் வறுமையின் நிறம் காட்டுகின்றன

என்ற புதுக்கவிதையிலும், தலைவனின் நிலையை,

அடியே நீ கடிச்சுத் நகங்களைக்கூட
உன் உதட்டு முத்திரை குத்தப்பட்ட
ஸ்டாம்புகளாக
நான் சேகரித்து வைத்திருக்கிறேன்
(பொய்க்கால் குதிரை)

என்ற புதுக்கவிதையிலும் கவிஞர் வாலி விளக்குகிறார். புலமைப் பித்தன், நா. காமராசன் போன்ற பிறரும் பல புதுக்கவிதை அமைவு கொண்ட பாடல்களை இயற்றியுள்ளனர்.

ஔ) சொற்சிலம்பம் : 'ஆடவரெல்லாம் ஆடவரலாம்' என்று சொற்சிலம்பம் ஆடிச் சென்றார் கவியரசர். அதனை ஒத்து ''ஆடவரும் ஆடவரும் பரதக் கலை'' என்ற தொடர் அமைந் துள்ளது.

மாதுளையோ புளிப்பும் இனிப்பும் கலந்து தருவது
மாதுளமோ களிப்பும் வியப்பும் கலந்து வருவது
(யுகதர்மம்—கோபாலகிருஷ்ணன்)

என்றும்,

சம்பந்தம் பெத்தெடுத்த சின்னக்குயிலே—உன்
சம்பந்தம் வேணுமடி வண்ணமயிலே
(பொய்க்கால் குதிரை—வாலி)

என்றும்,

லைட்டை அணைக்கட்டுமா லைட்டா அணைக்கட்டுமா
லைட்டை அணைக்காதீங்க லைட்டா அணைக்காதீங்க
(தங்கைக்கோர் கீதம்—டி. ராஜேந்தர்)

என்றும் சுவை எழச் சொற்கள் அமைக்கப்பட்டுள்ளன.

புதிய செய்தி : இணை பிரிந்த போது உயிர் வாழ விரும்பாத அன்றில் பறவையை இலக்கியங்களில் காண்கிறோம். ஆனால் கவிஞர் சிதம்பரநாதன் சுட்டும் 'வானம்பாடிப்' பறவையின் தன்னடக்க நிலை நமக்கு வியப்பைத் தருகிறது.

வானம்பாடி சாதியிலே நான் பொறந்தேன்
தவிச்ச பொழுதும்— வரம்ப மீறாது

(வளர்த்த கடா)

என்பது பாடல்.

**திறனாய்வு**

ஒவ்வொரு கவிஞரும், ஒவ்வொரு வாழ்க்கைத் தரத்திலிருந்து, ஒவ்வொரு இடத்திலிருந்து திரையுலகிற்கு வந்தவர்கள். இதனடிப் படையிலே அவர்களின் எண்ண ஓட்டங்களும் அமைந்திருக்கும். இந் நிலையில் தனக்குக் கிடைத்திருக்கும் அரும்பெருஞ் செல்வமான கவிதையை வெளிப்படுத்தவேண்டும் என்ற நிலையிலும், கிடைக்கும் பணத்தை எண்ணிய நிலையிலும் வெளியாகும் பாடல்களுக்கு உண்மையான உயிர்ப்பு சக்தி இராது என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும்.

தான் கண்ட, கேட்ட, உணர்ந்த, அனுபவித்த உணர்வுகளின் அடிப்படையில் பிறக்கும் கவிதையே உயிரோட்டம் கொண்டதாக அமைகிறது. ஆனால் திரைப்படப் பாடல்கள் அவ்வப்போது கதைக்கேற்ப எழுதப்படுகின்றன. அதனால் இப்பாடல்கள் முழுமையான, கருத்தின் பிழிவாக இருக்கும் என்று சொல்லிவிட முடியாது. இந்த வகையில் 1983ஆம் ஆண்டின் திரைப்படப் பாடல்களின் மூலம் ஒவ்வொரு கவிஞரின் நிலையையும் ஆயலாம்.

வாலி : கிடைத்த 76 திரைப்படப் பாடல் புத்தகங்களின் படி, கவிஞர் வாலியே அதிகப் பாடல்களை—ஏறத்தாழ 140 பாடல் களை எழுதியுள்ளார். இவ்வாண்டில் வெளியான 96 படங்களில் 48 திரைப்படங்களில் இவரது பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அதிலும் 15 திரைப்படங்களுக்கு அவர் மட்டுமே பாடல்கள் எழுதி யுள்ளார். பட்டுக்கோட்டையார் இருந்தவரை எவ்வாறு கண்ணதாசன் வெளிப்பட முடியவில்லையோ அதைப் போல கண்ணதாசன் இருந்தவரை கவிஞர் வாலியின் புகழ் வெளிப் படாமல் இருந்தது எனலாம். முன்பும் நல்ல கருத்தமைந்த பல பாடல்களை இவர் இயற்றியிருந்தாலும் அதுவே அவர் பெருமைக்கு, புகழுக்குக் காரணமாக அமைந்து விடவில்லை.

இவ்வாண்டில் வெளியான கவிஞர் வாலியின் பாடல்களில் பெரும்பாலானவை காதல் பாடல்களே, காதல் பாடல்களிலும் நளினம் இழையோடுகிறது; பெரும்பாலும் பண்பாடு காக்கப் படுகிறது; ஒரு சில பாடல்களில் விரசம் தட்டுப்படுகிறது.

விடுகதை, உலா, பழமொழி, உவமை, உருவகங்கள் போன்ற இலக்கிய உறுப்புக்களையும், பழைய இலக்கியச் செய்திகளையும் இணைத்தும் புதுக்கவிதைக்கு முட்டுக்கொடுத்தும் செல்லும் இவர் பழமைக்கும் புதுமைக்கும் ஓர் இணைப்புப் பாலமாக இருக்கிறார் என்று கொள்ள இடமுண்டு.

பாடலிலிருந்து ஏதாவது ஒரு நீதிக் கருத்தை, புராணச் செய்தியை, சமுதாயத்தில் நிலவும் குறைபாட்டைக் கூறித் திருத்த வேண்டும் என்ற அவா உடையவர் என்பதை இவரின் பல பாடல் கள் காட்டுகின்றன. சமுதாயக் குறைபாட்டைச் சுட்டிச் செல்லும் இவர் அதன் தீர்வுக்கான வழிமுறைகளைக் கூறாமல் சென்று விடுகின்றார்.

பூமியில் வாழ்வோரிடையே 'மண்ணின் மைந்தர் கொள்கை,' சாதி, மதப் பிரிவினைகள் போன்றன வேண்டாம் என்பதை இவர் பல பாடல்களில் சுட்டிச் செல்கிறார். தாயைப் போற்றும் பண்பினர் என்பதை இவரின் பல பாடல் செய்திகளிலிருந்து அறிய முடிகின்றது.

பொதுச் சேவை, சீர் திருத்தம் என்று போலிப் பெருமைக்காக அலைந்து திரியும் பெண்களைக் குறை கூறும் அமைவில் சில பாடல் கள் இவரால் இயற்றப்பட்டுள்ளன. பெண், கொண்ட கணவனுக்கு அடங்கி வாழவேண்டும் என்ற அவாவினை உடையவர் இவர் என்ற கருத்து இதனால் பெறப்படுகின்றது.

வாலியின் பாடல்கள் திரைப்படங்களில் அதிகம் இடம் பெற்றிருந்தாலும் கவிஞர் வைரமுத்துவே பெரும்பாலான இரசிகர் களால் அறியப்பட்ட கவிஞராக விளங்குகிறார். இந்நிலைக்கு, சில தயாரிப்பாளர்களும், இயக்குநர்களும் இசையமைப்பாளர்களுமே காரணமாக அமைகின்றனர் என்றும் இரசிகர்களிடையே ஒரு கருத்து நிலவுகின்றது.

**கவிஞர் வைரமுத்து :** *நிழல்கள்* திரைப்படத்தின் மூலம் திரையுலகில் இடம் பிடித்த கவிஞர் தன் புதுக்கவிதைத் தாக்கப் பாடல்கள் மூலம் இரசிகர்களிடையே புகழ் பெற்றார்.

ரத்த சாட்டை எடுத்தால் கையை
நெரிக்கும் விலங்கு தெறிக்கும்

என்று தொடங்கிய 'சிவப்பு மல்லித்' த் திரைப்படப் பாடலிலிருந்து, இன்று (1983) கண் சிவந்தால் மண் சிவக்கும் படத்தில்

மனிதா மனிதா இனியுன் விழிகள்
சிவந்தால் உலகம் விடியும்
விழியில் வடியும் உதிரம் முழுதும்
இனியுன் சரிதம் எழுதும்
அசையும் கொடிகள் உயரும் உயரும்
நிலவின் முதுகை உரசும்

(கண் சிவந்தால் மண் சிவக்கும்)

என்ற பாடல் வரை இவரது பாடல்களில் 'சிவப்பு நிறமும்', புதுக் கவிதைச் சொற்களும் இடம் பிடித்து வருகின்றன.

சமுதாயத்தில் நிலவும் சீர்கேடுகளைக் குறிப்பிட்டு வன்மை யாகக் கண்டிப்பவர்களில் இவர் முதன்மையானவராகக் காணப் படுகிறார். பல பாடல்களில் பொதுவுடைமைக் கருத்துக்கள் இடம் பிடித்துள்ளன. பொதுவுடைமை இயக்க வழி அரசியல் அமைப்பே சமுதாயச் சீர்கேட்டை உடைத்து மக்களுக்கு நல்ல பாதையைக் காட்டும் என்னும் கருத்து இவருள்ளத்தில் இருப்ப தாலேயே இவ்வாறான பாடல்கள் வெளிப்படுத்தப்படுகின்றன எனலாம்.

பெற்ற சுதந்திரத்தினால் மக்களுக்குக் கிடைக்க வேண்டிய உரிமைகள் கிடைக்காமல் போனதால் வெளிப்பட்ட உணர்வுகளே,

இரவில் வாங்கினோம் இன்னும்
விடியவில்லை

என்று மீராவின் குரலில் வெளிப்பட்டது. இதனை ஒத்து சுதந்திரத் தின் பயனை நுகர முடியாத எளியவனின், ஒடுக்கப்பட்டவனின் குரலில், பல பாடல்களில் கவிஞர் வைரமுத்து தன்னைக் காட்டி யுள்ளார்.

''கவிஞன் சுதந்திரமானவன். அவன் நினைத்ததை எல்லாம் பாடுவான் அவனை ஒரு குறுகிய வட்டத்திற்குள் அடைத்து விடக்கூடாது; அடைத்து விடவும் முடியாது'' என்று வைரமுத்து கூறியதன் அடிப்படையில் கவிஞர்கள் கருத்துக்கள் அனைத்தையும்

அவர்கள் எழுதிய திரைப்படப் பாடல்களிலிருந்து அறிந்து கொள்ள முடியாது. கதை அமைப்புக்குத்தக பாடல்களை இயற்றவேண்டும் அதற்காகப் பல பொதுவுடைமைக் கருத்தடங்கிய பாடல்களை இவர் இயற்றியுள்ளதால் இக்கருத்துக் கொண்ட திரைப்படப் பாடல் எனில் வைரமுத்துவே தகுதியானவர் என்ற முத்திரையைக் குத்தி விட்டனர்.

அவரின் பழைய பாடல்களில் எடுத்தாண்டிருந்த பல சொற் களை இன்றைய அவரது பாடல்களிலும் காண முடிகின்றது. பெண்ணை வருணிக்கும்போது காதல் முல்லை, வாசமுல்லை, தேவ முல்லை, ''முல்லை இளம் பூ வெடுத்து'' கொடி முந்திரி, போன்ற பல முன்னாளைய பாடற்சொற்களையும் எடுத்தாளுகிறார். இவர் மேற்கூறப்பட்டிருப்பன போன்ற சொற்களை வைத்து ஆளாத பாடல்களே இல்லை எனலாம். இவ்வாண்டில் கவிஞர் வைரமுத்து எழுதி 57 பாடல்கள் வெளிவந்துள்ளன.

**கங்கை அமரன் :** திரைப்பட இசையமைப்பாளராகவும், பாடலாசிரியராகவும் பின்னணிப் பாடகராகவும் விளங்குபவர் கங்கை அமரன். இவர் இவ்வாண்டில் 51 பாடல்களை இயற்றியும் பல பாடல்களுக்குத் தானே குரல் கொடுத்தும் இருக்கிறார்.

பழைய நாடக அமைப்பான கூத்தை, திரைப்படப்பாடலில் இணைத்துப் பெரும்பாலான மக்களுக்குப் பரவச் செய்யவேண்டும் என்ற அவா உடையவர் இவர் என்பது பாடல்களின் மூலம் தெரிய வருகிறது.

'மெட்ராஸ் பாஷையைப் பயன்படுத்துவது இவருக்குக் கை கொடுக்கும் ஒரு உத்தி எனக் கொள்ளலாம். 'ஜோடி நல்ல ஜோடி,' 'ஜாடிக்கேத்த மூடி', 'போடுவது பூவாரந்தான் பாடுவது தேவாரந் தான்' என்பன போன்ற சொற்றொடர்கள், இவர் பாடலில் பல இடங்களில் வருகின்றன.

> படிப்பை மறக்கலாமா வெட்டிப் பேச்சிபேசி
> சுத்தித் திரியலாமா?

என்பது போன்ற அறிவுறுத்தல் கொண்ட கருத்துக் களடங்கிய பல பாடல்களை இவர் தந்துள்ளார்.

> சாமிக்குப் புடிக்கிற சங்கீதம் படிப்பேன்
> ஜனங்களும் ரசிக்கிற பாட்டையும் படிப்பேன்
> என் பாட்டிலே குத்தம் சொல்ல எவனும் இங்கே
> கிடையாது

நான் வாய் தொறந்தா அத வழி மறிக்க
ஒரு பயகளும் பொறக்கல

என்பன போன்ற பாடல்களிலிருந்து கங்கை அமரனின் மன உணர்வை அறிய முடிகிறது. இவருக்குப் பாடல் இயற்றத் தெரியுமா? பாடல் பாடத் தெரியுமா? என்ற கேள்வியை எழுப்புவர்களுக்குத் தரும் பதிலாக இப்பாடல் வரிகள் அமைந்துள்ளன.

இவர் திரைப்படத்தில் நடிக்கின்ற நடிகர் நடிகையர்களையும் நினைவிற் கொண்டே பாடலை இயற்றுபவர் என்பதற்குப் பல சான்றுகள் கிடைக்கின்றன. திரைக்கதையோடு தொடர்புடைய பாடலை இயற்றுவதே மற்ற கவிஞர்களின் வாழ்க்கையாகும். சான்றாக 'அந்த சில நாட்கள்' படத்தில் நடித்த சில்க் சுமிதாவிற்குத் தக தெலுங்கு மொழியிலான பாடலை அமைத்துக் காட்டியிருப்பதைக் கூறலாம்.

சில பாடல்களில் பெண்களை இழிவான சொற்களால் வருணித்துப் பாடும் நிலை காணப்படுகிறது. பல பாடல்கள் கதையோடு ஒட்டாத நிலையில் வலுவில் புகுத்தப்பட்டிருக்கின்ற நிலையை அறிய முடிகிறது. காமத்தினை அடிப்படையாகக் கொண்டு பெண் விரகதாபம் கொண்ட நிலையில் பஞ்சணைக்கு அழைப்பது போல பல பாடல்கள் இவரால் இயற்றப்பட்டுள்ளன. சில படங்களுக்கு இவர் பாடலினால் வெற்றி கிடைத்திருக்கலாம். ஆனால் ஒரு சில படங்களுக்கு இவருடைய பாடல்களே திருஷ்டி பரிகாரமாக அமைந்திருக்கிறது என்பதையும் மறுக்க முடியாது.

''வாடி எம் பொண்டாட்டி நீ தானே'' (வெள்ளை ரோஜா)
''வெள்ளரிக்கா பிஞ்சு ஒண்ணு'' (மலையூர் மம்பட்டியான்)

என்னைப் பத்தி நெனைங்க
வந்து இஷ்டம் போல அணைங்க
(மலையூர் மம்பட்டியான்)

உன் இஷ்டப்படி என்னைக் கட்டிப்புடி
(முந்தானை முடிச்சு)

போன்ற கவிஞரின் பாடல் வரிகள் திரைப்படப் பாடல்களின் தரத்தைக் குறைக்கின்றன என்று கூறலாம்.

நீங்க இந்திரன் தோட்டத்து முந்திரி
நானே மன்மதன் ராஜ்யத்து மந்திரி

என்ற வரிகளை 'அந்த சில நாட்கள்' திரைப்படத்தில் இவர்தன் பாடலுடன் இணைத்துள்ளார். மேற்குறிப்பிட்ட வரிகள் கவிஞர் வைரமுத்துவினால் பயன்படுத்தப்பட்டவை என்பதை அனைவரும் அறிவர்.

**புலமைப்பித்தன் :** இவரும் கவிஞர் வாலியைப்போலவே ஒரே இனம், ஒரே ஜீவன் என்ற அமைப்பில் பாடல்களை அமைத்துக் காட்டுகிறார். சில பாடல்களில் காதல் திருமணம், சாதி சமய பேதமற்ற நாட்டை விரும்பும் நிலை போன்றவை குறிப்பிடப் படுகின்றன.

பழைய இலக்கியச் செய்திகளை எடுத்துத் தன் பாடலில் இணைத்துக் காட்டும் திறமை இவர் பாடல்களில் காணப்படுகிறது

காதலிலே பைத்தியங்கள்
காசு பணப் பைத்தியங்கள்
பதவியிலே பட்டத்திலே பைத்தியங்கள் — இப்படி
பாத்துப்புட்டேன் நூறு வகைப் பைத்தியங்கள்.

ஆடவரும் ஆடவரும் பரதக்கலை
மயிலும் பயிலும் உனது கலை

போன்ற அமைவுடன் பல பாடல்கள் இவரால் இயற்றப் பட்டுள்ளன.

பாடல்களில், ஒரு குறிப்பிட்ட மெய்ப்பாட்டைக் காண்பிக்க, இயற்கைப் பொருள்களைக் கொண்டு கூட்டுதல் எல்லாக் கவிஞர் களிடமும் காணப்பட்டாலும் கவிஞர் புலமைப்பித்தனிடம் இத் திறமை மேலோங்கி நிற்கின்றது எனலாம்.

செவ்வந்திப் பூக்களில் செய்த வீடு
வெண் பஞ்சு மேகம் நீ கோலம் போடு
வானவில்லின் அமைப்பில் தோரணம்
வண்டு வந்து இசைக்கும் நாயனம்
(மெல்லப்பேசுங்கள்)

நீ பார்க்கும் நேரங்கள் நிலம் பார்க்கும் நாணங்கள்
இதமாக மை போட்டு இமையென்னும் கை போட்டு
உன் கண்கள் என்னைக் கொய்தன
(துடிக்கும் கரங்கள்)

என்பன போன்ற பாடல்வரிகள் இதமானவை, சுகமானவை,

டி. ராஜேந்தர்

வாடா என் மச்சி
அவ துப்புனா எச்சி

என்பது போன்ற இயைபுத் தொடை கொண்ட வரிகள் இவருடைய பாடல்களில் மட்டும் அதிகமாகப் பயின்று வரும். பெண்ணை மிக அழகான சொற்களால் வருணிக்கும் பாடல்களையும் காதலில் தோல்வியுற்ற ஆண்மகனின் உள்ளத்து உணர்வுகளைக் கூறும் பாடல்களையும் அமைப்பது இவருக்குக் கைவந்த கலையாகும்.

இவருடைய பாடல்களில் கல்லூரிப் பெண்களைக் கிண்டல் செய்யும் அமைப்புக் கூறுகள் கண்டிப்பாக இடம் பெற்றிருக்கும் குடியினால் ஏற்படும் சீர்கேடு, வரதட்சணைக் கொடுமை போன்றவைகளை மையமாகக் கொண்டு படங்களை எடுத்தாலும் இவர் இந்தக் காரணத்திற்காகப் புகழ்பெறவில்லை; பாடல்கள், கதை, இசை, இயக்கம் போன்ற பல்வேறு துறைகளிலும் ஈடுபட்டு இவர் திரைப்படங்களை அமைத்தாலும் பாடலின், பொருள், இசை போன்றவைகளுக்காகவே மக்கள் இவருடைய பாடல்களை விரும்புகிறார்கள். இவர் இயற்றி வெளிவந்த பாடல்களின் எண்ணிக்கை— பதினாறு.

முத்துலிங்கம் (11 பாடல்கள்), எம். ஜி. வல்லபன் (7), நா. காமராசன் (5), மேத்தா (3) போன்ற கவிஞர்களும் சில நல்ல பாடல்களை இயற்றியுள்ளனர். எனினும் குறிப்பிட்டுக் கூறத் தக்க கூறுகளாக எதுவும் காணப்படவில்லை.

நா. காமராசன். மு. மேத்தா, குருவிக்கரம்பைசண்முகம் போன்ற புதுக்கவிதைக் கவிஞர்களின் பாடல்களில் புதுக்கவிதையின் தாக்கம் சிறிதே காணப்படுகிறது. திரைப்படத்துறைக்கு வந்தவுடன் அதற்குத் தகவமைந்து கொடுத்துள்ள நிலையாக இதனைக் கொள்ளலாம். 'ஓ மானே... மானே' என்ற நா. காமராசனின் பாடல் இசைச் சிறப்பிற்காக இரசிகர்களிடம் சிறப்பிடம் பெற்றது.

குருவிக்கரம்பை சண்முகம், மேத்தா போன்றவர்களின் பாடல்களில் தூது, உலாக்கூறுகள் இடம் பெற்றுள்ளன. தமிழ்ப் பேராசிரியர்களாகவும் திரைப்படப் பாடலாசிரியர்களாகவும் இவர்கள் இருப்பதால் இவ்வாறான இலக்கியச் செய்திகள் பாடலில் இடம் பெற்றுள்ளன என்று கொள்ளலாம்.

பஞ்சு அருணாசலம், பூவை செங்குட்டுவன், நெல்லை அருள் மணி, பூங்குயிலன், கோபால கிருஷ்ணன், அவினாசி மணி, இரகு போன்றோரும் நல்ல கருத்தமைந்த பாடல்களை இயற்றி யுள்ளனர்.

காமகோடியன், ஸ்டாலின், புலவர் மாரி போன்றோர் சமுதாய நிலையைக் குறை கூறும் நிலையில் ஓரிரு பாடல்களை இயற்றி யுள்ளனர்.

## மொத்தப் பாடல்களின் திறன்

புத்தக வடிவில் கிடைத்ததின் வாயிலாக 76 திரைப்படங்களில் —362 பாடல்கள் இடம்பெற்றுள்ள செய்தியை அறியமுடிகின்றது*. மொத்தப் பாடல்களில் ஏறத்தாழ இருநூற்று ஐம்பது பாடல் களுக்கு மேல் காதல், வருணனைப் பாடல்களாக இருக்கின்றன. 50க்கும் குறைவான பாடல்களில் புராண இதிகாச செய்திகள் இடம் பெற்றுள்ளன. சமுதாய நிலையைக் காட்டுவனவாகப் பல பாடல்கள் இருந்தாலும் அவைகளும் காதல் வருணனையுடன் இணைத்தே இயற்றப்பட்டுள்ளதையும் காண முடிகின்றது. பல பாடல்கள் சமுதாயப் பிரச்சினைகளைத் தொட்டுச் செல்வனவாக வும் காதல் நிகழ்வை மீண்டும் மீண்டும் பல்வேறு நிலைகளில் கூறி விளக்குவனவாகவும் அமைக்கப்பட்டுள்ளதற்குச் சமகால வாழ்வுப் பிரச்சனையைச் சொன்னால் மட்டுமே திரைப்படத்திற்கு வெற்றி கிடைக்கும் என்ற எண்ணம் காரணமாக இருக்கலாம். சமுதாயப் பிரச்சனையைக் கூறினால் மட்டுமே விரும்பிப் பார்க்கும் போக்கும், புராண. இதிகாச, மந்திர, தந்திர, ராஜாராணி கதைகளைப் புறக் கணிக்கும் போக்கும் 1952ஆம் ஆண்டிலிருந்தே வளர்ந்து வருவ தால் தான் அதனை ஒட்டிக் காதலை அடிப்படையாகக் கொண்ட பல திரைப்படங்கள் வருகின்றன என்று துணியலாம்.

மக்களிடையே நல்ல கருத்துக்களை வெளியிட வேண்டும் என்ற நம்பிக்கையில் கொண்டு வரப்பட்ட திரைப்படக்கலை இன்று பொழுது போக்குக்கலை என்ற அளவிற்கு மாற்றப்பட்டு விட்டது. அதனாலேயே ஒரே கதை எவ்வாறு பலதிரைப்படமாக மாறி வந்தாலும் எல்லாவற்றையும் பார்க்கும் நிலைக்கு மக்கள் வந்து விட்டனர். அதனை ஒத்தே பாடல்களின் தரம் எவ்விதமாக

---

* இரண்டே பாடல்கள் இடம் பெற்ற படங்கள் மூன்று— ஒப்பந்தம், தண்டிக்கப்பட்ட நியாயங்கள், அனல்காற்று. மிகுதியான பாடல் (10) இடம் பெற்ற படம் ஆனந்தக் கும்மி.

இருந்தாலும் இரசிகர்கள் கேட்டுத்தான் தீருவார்கள் என்பதாலும், பெரும்பாலான இரசிகர்கள் இது போன்ற இரட்டைப் பொருள் தொனிக்கும் பாடல்களையே விரும்புகிறார்கள் என்ற நிலையிலும் காமரசம் ததும்பும் பாடல்கள் புகுத்தப்படுகின்றன. பாடல்களின் தரத்தைப் பொறுத்தவரையில் ஏறத்தாழ அறுபது விழுக்காட்டுப் பாடல்கள் வெறும் சொற்களின் கூட்டமைப்பாகவே இருக்கின்றன. எனினும் இவைகளில் இணைந்துள்ள இசைக்காகவே பல திரைப் படப் பாடல்கள் வெற்றி பெற்றுள்ளன.

தரமான பாடல்களாக வாலியின் பல பாடல்களையும், வைரமுத்து, டி. ராஜேந்தர், கோபாலகிருஷ்ணன், புலமைப் பித்தன், இதயச் சந்திரன், பஞ்சு அருணாசலம், கங்கை அமரன், எம்.ஜி. வல்லபன் போன்ற கவிஞர்களின் சில பாடல்களையும் குறிப்பிடலாம். உணர்ச்சிக் கொந்தளிப்பின் வெளியீடாக வைர முத்து, வரதராஜன் போன்றோரின் பாடல்களைக் குறிப்பிடலாம்.

பூவை செங்குட்டுவன், அருள்மணி, அவினாசி மணி போன் றோரின் தரமான பக்திப் பாடல்களும் இவ்வாண்டில் வெளியாகி உள்ளன.

......................இந்தப்
பூமிக்கு என்ன குறைச்சல்—இதை
வாங்கினா நல்ல விளைச்சல்—நான்
வயலைப் போல மாமா—என்னை
வாடப் போடலாமா (இமைகள்—வாலி)

இது வானம் பார்க்கும் பூமி
வந்து சேர்ந்து விளைச்சல காமி
(முந்தானை முடிச்சு—கங்கை அமரன்)

என்பன போன்ற பாடல்களில் உவமை நயம் இருக்கிறதே என்று சிலர் கூறலாம். இருப்பினும் இது போன்ற கருத்தமைந்த பாடல் கள் திரை உலகிற்குத் தேவையில்லை.

முடிவுரை : நம்முடைய திரைப்படக் கவிஞர்கள் ஆற்றலும் அறிவும் புலமையும் மிக்கவர்கள். இசை அமைப்பாளர்களும் மிகச் சிறிய கருத்தைக் கூடத் தம் இசை வன்மையால் பலருடைய நெஞ்சில் பதிக்கும் ஆற்றல் வாய்ந்தவர்கள். ஆயினும் பாடலைத் தம் குரலால் வெளிப்படுத்துபவர் வாயிலாகவே பாடல் மக்களைச் சென்றடைகிறது. இம்மூவரின் கூட்டு முயற்சிக்கு உலகையே

மாற்றும் வலிமை உண்டு. இங்ஙனமிருக்க கருத்தமைந்த பாடல்களால் சமுதாயத்தைத் திருத்துவதை விடுத்து வியாபார நோக்கிற்காகச் சமுதாயச் சீர்கேடுகளை மேலும் வளர்க்கும் விதத்தில் பாடல் எழுதுவது விரும்பத்தக்கதல்ல. இதனைக் கருத்தில் கொண்டு கவிதை எழுதுவதே கவிஞர் கடன். அவ்வாறு செய்தால் திரைப்படப் பாடலின் தரம் மேலும் உயரும் சமுதாயமும் நலம் பெறும் என்பதில் ஐயமில்லை.

## 1983ஆம் ஆண்டில் இடம்பெற்ற பாடல்களின் படங்கள்

1 அபூர்வ சகோதரிகள்
2 அடுத்த வாரிசு *
3 அனல்காற்று
4 அண்ணே அண்ணே
5 அந்த சில நாட்கள்
6 அலைபாயும் நெஞ்சங்கள் *
7 ஆயிரம் நிலவே வா
8 ஆனந்தக் கும்மி
9 இது எங்க நாடு
10 இளமைக் காலங்கள்
11 இமைகள்
12 இன்று நீ நாளை நான்
13 இனிமை இதோ இதோ
14 இளைய பிறவிகள்*
15 உண்மைகள் *
16 உயிருள்ளவரை உஷா
17 உறங்காத நினைவுகள்
18 உருவங்கள் மாறலாம்
19 என் ஆசை உன்னோடுதான்
20 எங்களாலும் முடியும் *
21 என்னைப்பார் என் அழகைப்பார்
22 ஒப்பந்தம்
23 ஒரு இந்தியக்கனவு
24 ஒரு கை பார்ப்போம்
25 ஒரு ஓடை நதியாகிறது
26 ஒரு புல்லாங்குழல் அடுப்பூதுகிறது
27 ஒண்ணும் தெரியாத பாப்பா *
28 கசப்பும் இனிப்பும் *
29 கண் சிவந்தால் மண் சிவக்கும்
30 கள் வடியும் பூக்கள்
31 காஷ்மீர் காதலி*
32 காமன் பண்டிகை *
33 கிராமத்துக் கிளிகள்
34 கைவரிசை *
35 கொக்கரக்கோ
36 சந்திப்பு
37 சரணாலயம்
38 சஷ்டி விரதம்
39 சட்டம்
40 சட்டத்துக்கு ஒரு சவால்
41 சம்சாரம் என்பது வீணை*
42 சாட்சி
43 சாட்டை இல்லாத பம்பரம்
44 சிகப்பு சூரியன்
45 சில்க் சில்க் சில்க்
46 சீறும் சிங்கங்கள்

47 சுப முகூர்த்தம்*
48 சுமங்கலி
49 சூரக்கோட்டை சிங்கக்குட்டி
50 சூரப்புலி
51 டௌரி கல்யாணம்
52 தங்கமகன்
53 தம்பதிகள்
54 தலைமகன்
55 தங்கைக்கோர் கீதம்
56 தண்டிக்கப்பட்ட நியாயங்கள்
57 தாய்வீடு
58 துடிக்கும் கரங்கள்
59 தூங்காத கண்ணென்று ஒன்று*
60 தூங்காதே தம்பி தூங்காதே
61 தூரம் அதிகமில்லை
62 தோடி ராகம்
63 நான் சூட்டிய மலர்
64 நான் உன்னை நெனச்சேன்*
65 நாலுபேருக்கு நன்றி
66 நீதிபதி
67 நீறு பூத்த நெருப்பு
68 நெஞ்நமெல்லாம் நீயே*
69 நெஞ்சோடு நெஞ்சம்*
70 பக்ததுருவ மார்க்கண்டேயா
71 பகவதிபுரம் ரெயில்வே கேட்
72 பாயும் புலி
73 பிரம்மச்சாரிகள்
74 புத்திசாலிப் பைத்தியங்கள்
75 பொய்க்கால் குதிரை
76 போலீஸ் போலீஸ்
77 பெண்மையின் உண்மை*
78 மண்வாசனை
79 மனைவி சொல்லே மந்திரம்
80 மலையூர் மம்பட்டியான்
81 மாறுபட்ட கோணங்கள்
82 மிருதங்கச் சக்கரவர்த்தி
83 முத்து எங்கள் சொத்து
84 முந்தானை முடிச்சு
85 மெல்லப் பேசுங்கள்
86 யாமிருக்க பயமேன்
87 யுத்தகாண்டம்
88 யுகதர்மம்
89 ராகங்கள் மாறுவதில்லை
90 ரத்தக் காட்டேரியின் மர்மமாளிகை *
91 வளர்த்தகடா
92 வில்லியனூர் மாதா *
93 வீட்டிலே ராமன் வெளியிலே கிருஷ்ணன்
94 வெள்ளை ரோஜா
95 ஜோடிப்புறா
96 ஜோதி

* இக்குறியிட்ட படங்களின் பாடல் புத்தகங்கள் கிடைக்கவில்லை.

# திங்கள் இதழ்

பொ. திருஞான சம்பந்தம்

*பல்துறைச் சார்புடன் தமிழுட்பட்ட பல இந்திய மொழிகளில் மொத்தம் 680 திங்களிதழ்கள் ஆண்டுதோறும் வெளிவருகின்றன. தமிழில் மட்டும் சுமார் 275 திங்கள் இதழ்கள் குறித்து அறிய முடிகின்றது. இலக்கியம், சமயம், அரசியல், சமூகம், மருத்துவம் எனப் பல்துறை, இதழ் வெளியீட்டிற்கு இடமளிக்கின்றன. சிறுவர்க்கெனவும், மாணவர்க்கெனவும், மகளிர்க்கெனவும் தனிஇதழ் ஆக்கங்கள் அமைகின்றன.*

## முன்னுரை

தமிழுக்குத் தொண்டு செய்ய வேண்டும், தமிழ் வளர வேண்டும். தமிழில் புதிய கலைகள் உருவாக வேண்டும், நாடோறும், புதுப் பொலிவு பெற வேண்டும் என்னும் நோக்கத்துடன் பல துறையைச் சார்ந்தவர்களும் பணி செய்ய முற்படுவது வரவேற்கத் தக்கதே. நாளேடு, வார ஏடு, திங்களேடு, திங்களிரு முறை இதழ், திங்கள் மும்முறை இதழ் எனத் தமிழ்நாட்டில் தமிழ் இதழ்கள் பல வெளியாகின்றன. பல் துறையைச் சார்ந்த, தமிழுட்பட பல மொழி இதழ்கள் மொத்தம் திங்கள் தோறும் 680 வெளியாகின்றன. '1983இல் "திங்கள் இதழ்கள்" பற்றி ஆராய்வோம்.

தமிழில் திங்கள் இதழ் முதன் முதலில் 1849இல் கிறித்துவ சமயத்தினரால் தோற்றுவிக்கப்பட்டது. அதன் பிறகு 55 ஆண்டுகளுக்குப் பிறகு 1904இல் இரண்டாவது திங்கள் இதழ் வந்தது. பிறகு படிப்படியாகத் திங்களிதழ்கள் வெளிவர ஆரம்பித்தன. நாகரிக வளர்ச்சியில் செய்திகள் அறிய மக்களிடம் ஆர்வம் ஏற்பட்டது. அதன் காரணமாக இதழ்களின் வருகையில் முன்னேற்றம் காணப்பட்டது. அத்தோடு பொலிவும், நகைச்சுவையும், விருப்பமிகு , ஆர்வமிகு செய்தித் துணுக்குகளும், சிறுகதைகளும் குறுநாவல்களும் இடம் பெற்றன. ஆண்டுக்காண்டு இதழ்கள் வெளியாவதிலும், அவற்றில் இடம்பெறும் செய்திகளிலும் புதுமை

மிளிரக் காண்கிறோம். இதன் காரணமாகப் பொது மக்களிடையே அவை நல்ல செல்வாக்கினைப் பெற்று விட்டன.

தமிழ்நாட்டில் எண்ணிக்கையில் கூடுதலான அளவில் வெளியாகும் இதழ்கள் திங்கள் இதழ்களே. இப்படி வெளியாகும் திங்கள் இதழ்களில் பெரும்பான்மையான இதழ்களில் செய்திகள், படங்கள், சிறுகதைகள் நல்ல தரமுள்ளவையாக உள்ளன. சிறுபான்மை இதழ்களில் மக்களின் ஆர்வ நிலைக்கேற்ப செய்திகளோ, கதைகளோ, படங்களோ இல்லாத காரணத்தால் அவை நாட்களை எண்ணிக் கொண்டிருக்கக் கூடிய நிலையில் உள்ளன.

### வகைகள்

இலக்கியம் தொடர்பான இதழ்கள், மதச்சார்புடைய இதழ்கள், அரசியல் தொடர்பான இதழ்கள். தொழிலாளர்களுக்கான இதழ்கள், மகளிர் இதழ்கள், சிறுவர் இதழ்கள், கல்வி பற்றிய இதழ்கள், விளையாட்டு இதழ்கள், மருத்துவ இதழ்கள், சோதிட இதழ்கள், திரையுலக இதழ்கள், உழவியல் இதழ்கள் என இன்ன பிற இதழ்கள் உள.

### இலக்கியத் தமிழ்

செந்தமிழ்ச் செல்வி, செந்தமிழ், தமிழ்ப்பொழில் போன்ற இலக்கியத் துறையிலான திங்கள் இதழ்கள் தமிழ்மொழி வளர்ச்சியில் மிகுந்த ஆர்வத்தைக் காட்டி வருகின்றன என்பதை அதனை முறையாய்ப் படிப்போர் அறிவர். மக்களிடையே செல்வாக்கில்லை; காரணம் மொழியறிவின்மையே. கல்வி நிறுவனங்களும், பல்கலைக் கழகங்களும், இலக்கிய ஆர்வமுடைய நண்பர்களும் அவ்விதழ்களைப் போற்றிப் பாதுகாத்து வருவதை தமிழறிந்தோர் உணர்வர். தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சையில் உருவான பிறகு இதழ்களை மைக்ரோ பிலிம் செய்து பாதுகாத்து வருகிறது. இருபது ஆண்டுகளுக்கு முன்பே செந்தமிழ்ச் செல்வி இதழை அமெரிக்கப் பல்கலைக் கழக மொன்று மைக்ரோ பிலிம் செய்து வைத்திருப்பதாகச் செந்தமிழ்ச் செல்வி இதழ் வாயிலாக அறியமுடிகிறது.

இலக்கியம் பற்றிய கட்டுரைகளும், இலக்கண விளக்கக் கட்டுரைகளும், தமிழறிஞர்களைப் பற்றிய கட்டுரைகளும் செல்வியில் இடம் பெறுகின்றன. மறைமலையடிகளாரின் திருக்குமாரர்கள் மறை திருநாவுக்கரசு மறைவு, மறை மாணிக்கவாசகனார் மறைவு-வாழ்க்கை வரலாறு பற்றிய செய்திகள் வெளியாகியுள்ளன. மீ.ப. சோமு அவர்களுக்கு ''நமது செல்வம்'' என்ற நூல் எழுதியமைக்

காக இராசா-சர். அண்ணாமலை செட்டியார் நினைவுப் பரிசுத் தொகை உருபா 20,000 அளிக்கப்பட்டதாகச் செல்வியில் செய்தி யறிவித்துப் பாராட்டியது. கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்களின் 85ஆம் ஆண்டு பிறந்தநாள் விழா பற்றிய செய்தியும், வ.சுப்பையா பிள்ளை அவர்கள் பெயரால் அறக்கட்டளை நிறுவு விழா பற்றிய செய்தியும் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

செல்வி ஆசிரியருக்கு இரங்கூனிலிருந்து காந்தி அண்ணாமலை என்ற நண்பர் 19-9-83 இல் ஒரு கடிதம் எழுதியுள்ளார்.

'நாள் தோறும் காலையில் தென்கிழக்காசிய ஒலிபரப்பில் தமிழ் ஒலிபரப்பில் தமிழ்த் தேதி சொல்ல மறுப்பதேன்?' என்று கேட்டு அவர் எழுதியுள்ளார்.

நேயரின் கருத்தைப் பொதுமக்களுக்குத் தெரியும் வண்ணம் எடுத்துரைப்பது இதழ்களின் பணி என்ற அளவில் அமையாது மைய அரசு பாரித்து நடவடிக்கை எடுப்பது நல்லது என்ற குறிப் பினையும் அளித்துள்ளது.

"அம்மாவும் மம்மியும்"—இளமுருகனின் குறிப்பு

"மம்மி என்ற சொல்லை எகிப்தில் 'பிணம்' என வழங்கு கிறார்கள்." அம்மா என்று அழைத்தால் என்ன? மம்மி என்று ஏன் அழைக்க வேண்டும்?

சு. சந்திரசேகர் என்ற இந்தியருக்கு இயற்பியல் துறைக்காக 1983க்கான நோபல் பரிசு கிடைத்துள்ளது. 73 வயதுடைய இவர் கடவுள் நம்பிக்கை சிறிதும் இல்லாதவர்.

பாரதிதாசனின் பிறந்த நாள்—உண்மை விளக்கம் பற்றி ஈரோடு, நூலகர் எம். அண்ணாதுரை எழுதியுள்ளார்.

ஆயிரத் தெண்ணூற்றுத் தொண்ணூற்றோ ராமாண்டில்
ஏயவரும் ஏப்ரலிரு பத்தொன்பான்—தூயநாள்
சுப்புரத்தினச் செம்மல் தோன்றினார் என்றறைவர்
இப்புவியில் வாழ்பெரி யோரே.

(மு. மாணிக்கம்—பாரதிதாசன் சரித்திரவெண்பா-குயில்நிலையம்) சான்று 1. 29-4-1891 சரியானது. 2. பாரதிதாசன் தம் கைப் படத் தஞ்சை மருதவாணனுக்கு எழுதிய கடிதம்.

செந்தமிழ்ச் செல்வி, தமிழ்ப் பொழில், செந்தமிழ் போன்ற திங்கள் இதழ்கள் சங்க இலக்கியங்களினின்றும், தற்கால இலக்கியங்

களினின்றும் மேற்கோள் காட்டிப் புத்திலக்கிய நோக்கில் கட்டுரைகளும், மரபுக்கவிதைகளும் கொண்டு வெளிவருகின்றன. இவ்விதழ்களின் அருமை பெருமை தமிழ் நாட்டில் தெரியவில்லை, கற்றறிந்தார்க்கே தெரியும். வெளிநாட்டில் வாழும் தமிழர்கள் அறியவும், கற்கவும் மேற்குறித்த இதழ்களைத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் விலைக்கு வாங்கி அனுப்பி வருகின்றது.

தமிழக அரசு இவ்விதழ்களைத் தமிழ் நாட்டில் உள்ள அனைத்துக் கல்லூரிகளும், உயர்நிலை, மேனிலைப் பள்ளிகளும், தொடக்கப் பள்ளிகளும் வாங்க ஆணை பிறப்பிப்பதோடு, அதற்கான நிதி வசதியையும் செய்து தர வேண்டும்.

ஹிந்து மித்திரன்

கணபதி என்னும் சொல்லில் 'க' என்னும் எழுத்து ஞானத்தைக் குறிக்கிறது. 'ண' என்பது ஜீவர்களின் மோட்சத்தைக் குறிக்கிறது. 'பதி' என்பது தலைவன் எனப் பொருள் படுகிறது. பரபிரம்ம சொரூபமாயிருப்பவன் கணபதி; ஞானத்துக்கும் மோட்சத்துக்கும் அவனே தலைவன். 'கடவுளின் வடிவங்கள்' என்ற தலைப்பில் இம்மாதிரியான பயனுள்ள செய்திகளைத் தாங்கி வந்திருக்கிறது ஹிந்து மித்திரன், செப்டம்பர் இதழ்.

அத்துடன் அறிவியல் பற்றிய செய்தியும் இடம்பெற்று வருகிறது. இரண்டு சப்பானியக் கம்பெனிகள் ஒரு தொட்டியில் 30 டன் கடல் நீரை நிரப்பி மின் சக்தியின் உதவியால் அந்நீரை நன்கு கடைந்தனர். அதிலிருந்து மஞ்சள் நிறக் கட்டியொன்று கிடைக்கும் வரை முயற்சியைக் கைவிடாமல் தொடர்ந்தனர். 149 மி. கிராம் எடையுள்ள அக்கட்டியில் 80 சதம் யுரேனியம் கிடைத்தது. பாற்கடலில் தேவர்களும் அசுரர்களும் கடைந்து முதன் முதலில் பெற்றது ஆலகால விடமே. இக்கதை நீரைக் கடையும் முயற்சியைச் செய் என்று கூறுகிறது. மேனாட்டில் அவ்வப் போது வெளியாகும் அறிவியல் செய்திகளைத்தாங்கி வருகிறது ஹிந்துமித்திரன்.

'ஊதாரித்தனம்' என்ற தலைப்பில் ஒரு செய்தி. ஒரு குதிரை விலை உருபா பத்து கோடி'. அமெரிக்காவில் ரேஸ் குதிரையொன்று ஏலத்தில் பத்து கோடி ரூபாய்க்குப் போயிருக்கிறது. ஏலம் எடுத்தவர் துபாய் நாட்டு ஷேக் முகம்மது.

வெளிநாடுகளான பிரிட்டனிலும், மெக்சிகோவிலும் நவராத்திரி விழா நிகழ்ந்த செய்திகள் இதில் தரப்படுவது குறிப்

பிடத் தக்கது. பிரிட்டனில் நவராத்திரிப் பெருவிழா அக்டோபர் 7 முதல்15 வரை பர்மிங்ஹாமில் கொண்டாடப்பட்டது. பர்மிங்ஹாம் மாநகராட்சித் தலைவர், இந்தியத் தூதுவர் முதலானோர் கலந்து கொண்டனர். 'பார்வதி தேவி என்பது ஆற்றலும், இலட்சுமி தேவி என்பது செல்வதும், சரசுவதி தேவி என்பது ஞானமும் ஆகும். ஆக ஆற்றல், செல்வம், கல்வி அனைத்தையும், தெய்வ வடிவமாக ஆராதிப்பதே நவராத்திரி விழாவின் உயர்ந்த தத்துவமாகும்' என்ற சுவாமி மதுரானந்தரின் குறிப்பும் காணப்படுகிறது.

**'ஹிந்து மித்திரன்' ஆசிரியரின் தலையங்கம்**

'விவேகானந்தர் கூறியதுபோல் மனிதர்களை உருவாக்கும் கல்வித் திட்டத்தில் தான் நம் நாட்டின் எதிர்காலமே உள்ளது என்பதை உணர்ந்து ஆசிரியர்களும் அறிஞர்களும் பாடுபடுக' என்று மித்திரன் ஆசிரியர் கேட்டுக்கொண்டுள்ளார். விவேகானந்தர் கூறியிருப்பதும் ஆசிரியர் குறிப்பும் நாட்டிற்குத் தேவைதான். விவேகானந்தர் கூறியதிலிருந்து இன்றுவரை கல்வித் திட்டத்தில் மாறுதல் செய்திருக்கின்றோமா என்பது சிந்தனைக்குரிய தொன்றாகும். பாடத்திட்டத்தை அவ்வப்போது மாற்றி வருகிறோம். ஆனால் படித்தவன் மனிதனாக மாறுவதற்கேற்ற சூழ்நிலையில் கல்வி முன்னேற்றம் இல்லை என்றே கூறலாம்.

**கலைமகள்**

கி. வா. ஜவை ஆசிரியராகக் கொண்டு வெளிவரும் கலைமகள் ஒரே தரமாக வெளிவந்து கொண்டிருக்கிறது. ஆபாசமில்லாமல், உணர்ச்சிகளுக்குச் சிறப்பிடம் கொடுத்துச் சிறுகதைகளும் புதினங்களும் கொண்டு உலா வருகிறது.

கலைமகள் ஏப்'83 இதழில் விடையவனின் குறிப்பு—பயனுள்ள கேள்விகள் முதலியனவும் இடம் பெற்றுள்ளன.

''இறையருளைப் பெறுவதொன்றே கவலையை ஒழிக்க மாற்று'' என்று ஒரு சிறு கட்டுரையில் தன் கருத்தை வலியுறுத்துகிறார் சிவத்திரு. சங்கராச்சாரிய அடிகளார்.

தமிழகத் தலைநகரில் கலாசாரக் கலைவிழா என்ற தில்லை நாதனின் கட்டுரை அழகு சேர்க்கிறது.

'போவதற்கு முன் நினைத்துப் பார்' என்ற கி.வா.ஜவின் இலக்கியக் கட்டுரை இன்பந் தருவதாய் அமைந்துள்ளது.

'ஒரு நயம் பேசுவன்
திருவரங் கேசர்தாள்
மருவுமின் நாசமாம்
கருமவன் பாசமே'

இந்த நான்கு சீரிய அடிகள் பிரபந்தத் தலைவனின் பெருமையைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கின்றன, வினைப்பயனும் பாசமும் நீங்க வேண்டுமானால் திருவரங்கனின் தாள் மலரைச் சிந்தையில் இருத்துவது தான் சிறந்த வழி என்று சுட்டிக் காட்டுகிறார் அழகிய மணவாளதாசர். இதனை விளக்குகின்ற வகையிலே 'திருவரங்கக் கலம்பகம்' என்ற தலைப்பில் ஓர் அழகிய இலக்கியக் கட்டுரையைக் கிட்டு எழுதியுள்ளார். படிக்கப் படிக்கப் பண்பும் பயனும் கிட்டும்.

'மண்ணில் தோன்றிய மாமாயன்' என்ற தலைப்பில் கே. இராதாகிருஷ்ணன் இராமாயணக் கட்டுரையொன்றினை வழங்கியுள்ளார். காளிதாசன், கம்பன், வால்மீகி ஆகியவர்களின் கூற்றுக்களைச் சீர் தூக்கி ஆய்ந்து எழுதியுள்ளது அனைவர்க்கும் இன்பந் தருவதாகும்,

சூன் '83 இதழில் டாக்டர் எஸ். வாசுதேவனின் கட்டுரை இடம் பெற்றுள்ளது. மூட்டுவலி ஏற்படுவது இதயத்தில் உள்ள கோளாறினால்; எனவே வலியைச் சாதாரணமாக எண்ணி விடாதே என்று தம் கட்டுரையில் உடல் நலம் பேணுவார்க்கு ஒப்பற்ற கருத்தினைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

அமரர் ராமரத்தினம் இரண்டாம் பரிசுக் குறுநாவல் இடம் பெற்றுள்ளது. ராஜகுரு எழுதிய 'மயக்கங்கள்' என்ற நாவல்தான் அது.

கதை. கட்டுரைகளை விரசமில்லாமல் எழுதியனுப்பும்படி ஆசிரியர் அறிவுறுத்துகிறார். கலைமகள் சூலை '83 இதழில், ''பத்திரிகைகளில் நம்முடைய பண்பாட்டுக்கு ஏற்றவகையில் கதைகளோ—கட்டுரைகளோ வெளிவருவது தான் நியாயம். குழந்தைகளின் உள்ளங்களைக் கெடுக்கும் வகையில் கதைகள் இருக்கின்றன. இந்நிலை மாறவேண்டும். எழுத்தாளன் மனிதரில் உயர்ந்தவன். அவன் தன் எழுத்தினால் உயர வேண்டும். பிறரை உயர்த்த வேண்டும்'' என்று ஆசிரியர் அறிவுரை கூறுகிறார். இது இளம் எழுத்தாளர்க்குப் பயன்படும் குறிப்பாகும்.

இராமாயணத்தில் இராமன் இலங்கையிலிருந்து திரும்பும் போது புஷ்பக விமானத்தில் வந்தான் என்று வருகிறது. அப்படி வரும்பொழுது வழியில் உள்ள இடங்களையெல்லாம் இராமன் சீதைக்குக் காட்டுகிறான். அவ்விடங்கள் யாவை? இப்போது எந்தப் பேர்களால் வழங்கப்படுகின்றன? எவ்விடத்தில் உள்ளன? என்பனவற்றை விவரிக்கும் கட்டுரை 'இலங்கையிலிருந்து அயோத்திவரை' என்பது அதைக் கே. இராதாகிருஷ்ணன் எழுதியுள்ளார். கம்பன் கவியழகைச் சுவைக்க விரும்புவார்க்கும் இராமாயணத்தில் ஈடுபாடு உள்ளவர்க்கும் நல்ல விருந்தாகும் இந்த இலக்கியக் கட்டுரை.

மேலும் சிறுகதைகள், தொடர் கதைகள், மருத்துவக் கட்டுரை முதலியனவும் இடம் பெறுகின்றன. கவிதை படிப்பார் தொகை குறைவாக இருப்பதால்தானோ என்னவோ ஒரே ஒரு கவிதை மட்டும் வெளியாகிறது. அதுவும் கலைமகளில் தொடர்ந்து எழுதி வருகின்றவர்களுக்கே இடம் கொடுக்கிறது. புதுக் கவிஞர்களை, புதுக் கவிதைகளை ஏற்பதில்லை. இதை ஒரு மரபாக வைத்துக் கொண்டிருக்கின்றார்களோ? என்னவோ? அப்படி இருந்தால் மாற்றிக்கொள்வது நலம் பயக்கும்.

**இஸ்கஸ்**

இது சோவியத் கலாசாரக் கழக மாத இதழாகும். இதன் நவம்பர் இதழில் மாஸ்கோவில் அக்டோபர் புரட்சியின் 66ஆம் ஆண்டுவிழா, 'கிரெனடாவை விட்டு வெளியேறு!' அமெரிக்க ஆக்கிரமிப்புக்கு உலகளாவிய கண்டனம், பத்மா சுப்பிரமணியம் அவர்களுக்கு ''சோவியத் நாடு நேரு விருது'' அளித்த செய்தி முதலியன இடம் பெற்றுள்ளன. உலக விவகாரங்களில் இந்தியாவின் செல்வாக்குமிக்க பாத்திரம் என்ற தலைப்பில் 'பிராவ்தா' பத்திரிகையின் தலையங்கம் குறிப்பிடத்தக்கதாகும்.

**தமிழ்ப் பணி**

இதன் மார்கழி இதழில் பன்னாட்டுத் தமிழறிஞர்கட்குத் திருச்சியில் பாராட்டு, உலகைக் கவர்ந்த ஒரு கோடிக் கையெழுத்து, இலங்கைக் கலவரம் பற்றிய செய்தி முதலியன இடம் பெற்றுள்ளன.

**தீபம்**

இதன் நவம்பர் இதழில், மணிக்கொடி மரபுகளும் சில பத்திரிகைகளும்பற்றித் தி.க. சிவசங்கரன் கட்டுரை எழுதியுள்ளார்.

புதுக் கவிதைகள் நிறைய அளவில் இடம் பெற்றுள்ளன. கால வெள்ளத்தில் அவை நிற்கின்றனவோ இல்லையோ அதைப் பற்றிக் கவலைப்படாமல் புதுக்கவிதைகளுக்கு நல்ல வரவேற்பளித்து வருகின்றனர். இலக்கிய ஆர்வமுள்ளவர்கள் மட்டுமே படிக்கக் கூடியதாக இருப்பதால் அதன் விற்பனை அதிகரிக்க வாய்ப் பில்லாமல் உள்ளது. மேலும் சமுதாயத்தின் எல்லா நிலையில் உள்ளவர்களும் படிக்கக் கூடிய அளவில் இதழ் வெளிவருதல் நலம்.

ஞானபூமி

இந்து சமய மாத இதழாக இது வெளிவருகிறது. இந்து சமய உண்மைகளும், வினா விடைப் பகுதியும், சிறு துணுக்குகளும் கொண்டு இதன் நவம்பர் இதழ் வெளிவந்துள்ளது.

சுபயோகம்

இவ் இதழில் இடப்பக்கம் படுப்பதே சரியான முறை என்று ஒரு குறிப்பு உள்ளது. வெந்நீர்க் குளியலை விலக்குக—நரம்புத் தளர்ச்சி ஏற்படும். சூதகம் எனப்படும் மாத விலக்குக் காலங் களிலும், ஞாயிற்றுக்கிழமை, அமாவாசை, சங்கராந்தி போன்ற நாட்களிலும் வெந்நீர்க் குளியல் கூடாது. உடல் நலம் பேணும் குறிப்புக்கள் அதிக அளவில் இடம் பெற்றுள்ளன.

சுபயோகம் அக்டோபர் இதழில் ஓர் குறிப்பு : இராமாயணத் தில் 'துமி' என்ற சொல் வைத்துக் கம்பர் பாடினார். அப்படி ஒரு சொல் இல்லை என ஒட்டக்கூத்தர் கூறினார். கம்பன் வாக்கு உண்மையாக வேண்டுமே? அரசரும் புலவரும் மாறுவேடம் பூண்டு நகர்வலம் வரும்போது சரசுவதியே பங்கு கொண்டு ஒரு நாடகம் நடத்தினாள். மோர் கடையும் பெண்ணாய் உருக்கொண்டுப் பானையை ஒட்டி இருந்த சிறுவர்களிடம், ''தள்ளிப் போங்கள், மேலே மோர்த்'துமி' தெறிக்கும்'' எனக்கூற கம்பனின் வாக்குக்கு உயிர் உண்டாகிவிட்டது.

பொய்யா மொழி

இதன் அக்டோபர் இதழில் மதமாற்றத்தைத் தடுக்கும் வழிகள் முதற்பரிசுக் கட்டுரை (500/- உருபா)யை என். சுப்பிர மணியன் எழுதியுள்ளார்.

நவம்பர் இதழில் கோகர்ணன் பாகவதத்தைப் படித்ததின் மூலம் தன்னுடைய பாவங்கள் நீங்கி விமோசனம் பெற்றான்

என்று வைத்தியநாத சர்மா ஒரு குறிப்பு எழுதியுள்ளார். பயனுடைய குறிப்புக்களையும், கட்டுரையையும் தாங்கி வெளி வருகிறது.

மங்கையர் மலர்

சூன் மாத இதழில் அரவிந்தன் எழுதிய 'பொய்க்கால் குதிரை' என்ற குறுநாவல், அழகாக இருக்கப் பத்து வழிகள், நடிகைக்குத் திருமணமே கூடாது என்ற மஞ்சுளா ரமேஷின் கட்டுரை, நல்ல பெண்மணி பற்றி எழுதுங்களேன் என்ற பகுதி, வெள்ளிப்பாத்திரங் களை அள்ளித் தரும் போட்டி போன்ற பகுதிகளும், சிறுகுறிப்புக் களும் இடம்பெறுகின்றன.

ஏப்ரல் இதழில் பெண்ணினத்திற்கு வழங்கிய தீர்ப்பு என்பது இடம் பெறுகிறது. டிக்கட் கொடுப்பதில் ஏற்பட்ட தகராறு: பல்லவன் அலுவலர் நடத்துனரை வேலை நீக்கம் செய்தது; நீதிமன்றத்தில் பெண்ணுக்குச் சாதகமான தீர்ப்பு.

மங்கையர் மலர் என்ற திங்களிதழ் பெண்களாலேயே நடத்தப் பட்டுவரும் இதழாகும். பெண்களுக்கேற்ற முறையில் ஆர்வமுடன் படிக்கக்கூடிய நிலையில், பயனுள்ள குறிப்புக்களைத் தாங்கி வெளி வருகிறது. குறைவான பக்கங்களைக் கொண்டு அதிக விலையில் வருகிறது. ஒரு ரூபாய் ஐம்பது பைசா அளவில் விலை குறைப்புச் செய்தால் விற்பனை மேலும் பெருக வாய்ப்பேற்படும்.

மஞ்சரி

காந்த சக்தி மிக்க சங்கிலி அணிந்தால் இரத்த ஓட்டம் சீராகிறது. குளிக்கும் போது கழற்றிவிட வேண்டும். இந்த நோய் தீர்க்கும் சங்கிலியைக் கண்டுபிடித்தவர் பஞ்சாபைச் சேர்ந்தவர் என்பது இதில் அமையும் செய்தி. இதன் டிசம்பர் இதழில் பூதலூர் முத்துவின் 'காவிரி ஓடிக் கொண்டிருக்கிறது' என்ற நெடுங்கதை, குமரி மலர் ஏ.கே. செட்டியார் மறைவு, இலக்கியத்திற்காக நோபல் பரிசு பெற்றவர் பிரிட்டிஷ் வில்லியம் கோல்டிங், சமாதானத் திற்காகப் பரிசு பெற்ற போலந்து நாட்டைச் சேர்ந்த வாலேசா, இந்தியில் ஞானபீட விருது பெற்ற திருமதி மகாதேவி வர்மா ('யம' என்ற நூல் எழுதியமைக்கு), நரம்பியல் அறுவை நிபுணர் டாக்டர் பி. இராமமூர்த்திக்குத் தன்வந்திரி விருது கிடைத்தது போன்ற பயனுள்ள செய்திகள் தவறாமல் இடம் பெற்றுள்ளமை பாராட்டற்குரியது.

**கலைக்கதிர்**

முதன் முதலாக 1840இல்தான் அஞ்சல் தலையை இங்கிலாந்து பயன்படுத்தியது என்ற செய்தியும் பிறவும் டிசம்பர் இதழில் அமை இன்றன. பேசும் கணிப்பியைச் சப்பான் பொதுத்துறை நிறுவனம் கண்டுபிடித்துள்ளது. இது புத்தகங்களையும், செய்திகளையும் படிக்கும் ஆற்றலுடையது. மனித உடலிலுள்ள நோயைக் கண்டு பிடிக்க உதவுகிறது. பதினைந்து நிமிட உரையாடலில் நோய் இன்னது என்பதையும் சிகிச்சை முறையையும் கூறுகிறது.

சோவியத் நாட்டில் ஒரு நிமிடத்தில் 45 புத்தகங்களை 'க்னிகா 270' என்ற தானியங்கி அச்சியந்திரம் அச்சடித்துத் தள்ளி விடுகிறது, உலகிலேயே மிகப் பெரிய செய்தித்தாள் சப்பானில் வெளியாகிறது. யோமியூரி ஷிம்பன் என்பது அவ்விதழின் பெயர். காலை மாலைப் பதிப்புகள் மொத்தம் 136 இலட்சம் பிரதிகள். ஆசிரியர் குழுவில் 3059 பேர் உள்ளனர்.

கருப்பம் ஆகுமா? ஆகாதா? என்று அறிய ஒரு கருவியை 'OVU Test 77' என்ற ஒரு மினி கணிப்பியை ஜெர்மன் மருத்துவர் கண்டுபிடித்துள்ளார். ஒரு பாக்கெட் வடிவப் பெட்டி, அதனுடன் தொடர்புள்ள 6" அளவுள்ள ஒரு பேனா. பெண் தன் உடலுறுப் பினுள் செலுத்திக் கொண்டு முடிவைப் பெட்டியில் காணலாம். பெட்டி பச்சை நிறம் காண்பித்து உடலுறவு கொண்டால் கருப் பம் ஏற்படாது. மஞ்சள்நிறம் காண்பித்தால் கருப்பம் ஏற்படும்.

மேலும், புற்றுநோய் பற்றிய கட்டுரை, வெள்ளிக்கோள் கட்டுரை, ஓர் ஆந்தை ஒரு இரவில் 6 எலிகளை விழுங்கி விடுகிறது —போன்ற அறிவியல் செய்திகளும், கட்டுரைகளும். கலைக்கதிர் பிப்ரவரி இதழில் இடம்பெறுகின்றன.

**சப்தகிரி**

திருப்பதி தேவஸ்தானத்திலிருந்து பதினான்கு ஆண்டுகளாக வந்து கொண்டிருக்கும் சமய மாத இதழ். டிசம்பர் இதழில் 'உங்களுடன்' என்ற தலைப்பில் ஆசிரியர் வலியுறுத்தும் கருத்து சிந்திக்கத்தக்கதாகும்.

பீஷ்மரின் பிரம்மச்சரியம், கோயில் வளர்ந்த கதை, சுப்ரபாதமும் திருப்பாவையும், கீதை காட்டும் நல்வழி, கஜேந்திர மோட்சம், அணு, சாஸ்தாவின் சந்தேகம், திருவெம்பாவை—திருப்பாவை, திருமால் உவக்கும் திருத்துழாய், தியானத்தின் பெருமை, திருவேங்கடமலை வரலாற்று மாலை, இரட்சாபந்தனம், ஸ்ரீ

அன்னமாசாரியா சங்கீர்த்தனம் முதலான கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. சமய வேறுபாடு கருதாது நல்ல பல கட்டுரை களைத் தாங்கி வெளிவருகிறது. வைணவ வினா—விடை, சிறுவர் சோலை போன்ற பகுதிகளும் இடம் பெறுவது குறிப்பிடத்தக்கது.

ஓம் சக்தி

சூலை இதழில் ந. மகாலிங்கம், தருமகர்த்தா என்ற ஒரு கட்டுரை எழுதியுள்ளார். 'பொதுச் சொத்தை சொந்தச் சொத்தாக நினைக்கும் நம் அரசியல்வாதிகளுக்கு இந்த கட்டுரையைப் படித்த பிறகாவது...வருமா?' என்று இதழ் ஆசிரியர் குறிப்புரை தந்துள்ளார். இதைக் காட்டிலும் மதிப்பீடு செய்ய என்ன இருக் கிறது?

நம் முன்னோர் எந்தச் செயலையும் ஆழ்ந்த பொருள் பதிந்த தாக அமைப்பது வழக்கம். வள்ளலாரும் இதற்கு விதி விலக்கல்ல. இந்தக் கருத்தை விளக்கும் வகையிலே திருவடிப் புகழ்ச்சி என்ற தலைப்பில் பகீரதன் ஒரு கட்டுரை எழுதியுள்ளார்.

உடையாரா, ஒடெயருவா? என்ற சேஷநாராயணா கட்டுரை யில் ஒடெயரு என்பதே சரியானதென நிறுவுகிறார். உடையார் என்பது ஓர் இனத்தாரைக் குறிக்கும். கன்னடத்தில் ஒடெயரு என்றால் பிரபுக்கள் என்று பொருள். இந்த ஒடெயரு என்பதை ஆங்கிலத்தில் எழுதும்போது 'ஒடெயர்' (Wodiyar) என்று மாற்றினார்கள். ஜெயசாமராஜரும் கன்னடத்தில் கையெழுத்திடும் போது 'ஜயசாமராஜ ஒடெயரு' என்று தெளிவாக எழுதுவாராம்.

'பல்' என்ற தலைப்பில் ராஜ் நாராயண் ஒரு கட்டுரை எழுதி யுள்ளார். 'கும்பாசில் உறங்கும் மைசூர் புலி' என்ற திப்புசுல்தான் பற்றிய கட்டுரை படிக்க விறுவிறுப்பாகவும் புதுப்புது செய்திகளைத் தருவதாகவும் உள்ளது. திப்புவிடம் யந்திர மரப்புலி இருந்தது. முடுக்கிவிட்டால் புலி உறுமிக் கொண்டு கீழுள்ள ஆளை அறை யுமாம். இந்தப் பொம்மை இப்போது பிரிட்டிஷ் ஆல்பர்ட் அருங் காட்சியகத்தில் உள்ளது. திப்புதான் முதன் முதலில் மதுவிலக்கை நடைமுறைப்படுத்தினான்; விபசாரத்தை ஒழித்தான்; அரசாங்க வர்த்தகத்திற்கு வித்திட்டான் போன்ற அரிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. 'சோழர் காலத்து மருத்துவமனை', 'அண்ணனை வென்ற பாகுபலி'. 'அனுமான் சென்ற வழி', 'கருவிலே கல்வி தரும் கொரியர்கள்' போன்ற பயனுள்ள கட்டுரைகளும் சிறுகதைகளும், தொடர்கதையும், ஒரு குறுநாவலும், கேள்வி நேரம், சர்க்கரை வள்ளிக்கிழங்கு பற்றிய குறிப்பும் இடம் பெற்றுள்ளன.

சிறுவர் முதல் பெரியவர் வரை அனைத்துப் பிரிவு மக்களும் ஆபாசமில்லாத ஒரு இதழைப் படித்தோம் என்ற நிலையில் சக்தி இதழ் வெளிவந்து கொண்டு இருக்கிறது.

குழந்தைகளுக்கு நாம் கொடுக்கும் இனிப்புப் பண்டங்களே அவர்களுடைய பல்லுக்கு முதல் எதிரி என்ற கருத்தை விளக்குவதாகவும், இன்னும் சில ஆண்டுகளில் ஆஸ்திரேலிய பல் மருத்துவர்கள் அந்நாட்டில் பல் நோயே இல்லாமல் செய்து விடலாம் என்ற கருத்தை விளக்குவதாகவும் அமைந்துள்ளது.

புரட்சி விளைவித்த புத்தகக் கம்பெனி, வணங்காத கை, சலுகை போன்ற குறிப்புக்களும் நமக்கு ஆர்வத்தையும் எழுச்சியையும் ஊட்டுவதாக அமைந்துள்ளன.

'சாப்பிடத் தெரியுமா?' படிக்கவேண்டிய குறிப்பு. ஓய்வு பெற்றுவிட்டோம் என்றதுமே சோர்வு வந்து விடுகிறது. இந்தச் சோர்வே நோயைக் கொண்டு வந்து தள்ளிவிடுகிறது என்ற கருத்துள்ள கட்டுரையும் உள்ளது.

கொலைகளும் கொடுமைகளும் நிறைந்த வரலாற்று நிகழ்ச்சிகள் காற்றோடு போய்விடுவதில்லை. ஆவி உருவில் வந்து தொல்லையும் தருகின்றன என்ற கருத்தை விளக்கும் வகையில் அமைந்ததுதான் 'ஆவிகள் உலாவும் ராஜமாளிகைகள்' என்ற வரலாற்றுக் கட்டுரை.

**கோகுலம்**

அவசரப்பட்டு எதையும் செய்யாதே—அருள்மிகு சரசுவதி சுவாமிகளின் அறிவுரை; நாடோடிப் பாடல் தொகுப்பு; நாங்கள் செய்த நல்ல செயல்கள், உலகப் புகழ்பெற்ற சிறுவர் கதை, வெற்றிவேல், வீரவேல் படக்கதை; ஈரான் தேசத்துக் குட்டிக் கதைகள், மீன் வயிற்றில் மோதிரம், ஓவியக் காட்சி; கேள்வி நேரம், பிருந்தாவனம் (பங்கேற்போர், சிறுவர் சங்க உறுப்பினர்கள் கோகுலம்), பாட்டுப் போட்டி (நாடகம்), பிடித்த புத்தகங்கள் (விமரிசனப் பகுதி), பாட்டிலே பாராட்டு (கவிதைகள்) புகைப்பட ஆல்பம், விடுகதை—கட்டாயப் பாடம்—ஒன்று சேருங்கள்—மூன்று நிகழ்ச்சிகள், புதிர் மன்றம், இளமையில் இவர்கள், அன்னை தெரசாவின் ஆசை, சர்க்கரைப் புலவர்,—சவ்வாதுப் புலவர் (குறிப்புரை), குண்டுமணி எழுதிய 'ஒரு மினி விளையாட்டு' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை, இவர்கள் புகழ் பெற்றது எந்த வயதில்?, 'ஜெயமணி காத்த மரகதச் சிலை'

எஸ். ஆர். ஜி. சுந்தரம் எழுதிய நெடுங்கதை, தென்றல் காற்று தெற்கிலிருந்து வீசுவதால் தென்றல் என்று பெயர் வந்தது. வடக்கிருந்து வீசும் காற்றுக்கு வாடை என்று பெயர் வந்தது. கிழக்கிருந்து வீசும் காற்றுக்கு கொண்டல் என்று பெயர் வந்தது. மேற்கிருந்து வீசும் காற்றுக்குக் கோடை என்றும் பெயர் வந்தது என்பன போன்ற குறிப்பு—முதலியன ஏப்ரல் இதழில் இடம் பெற்றுள்ளன. மொத்தத்தில் இளைஞர் சமுதாயம் மட்டுமல்லாது, ஏனைய பிரிவினரும் விரும்பிப்படிக்கும் இதழாகக் கோகுலம் வெளி வருவதை அனைவரும் வரவேற்பர் என்பதில் ஐயமில்லை. குப்புசாமி—அப்புசாமி என்ற தலைப்பில் அழகான கவிதையொன்றினை அழ. வள்ளியப்பா வழங்கியுள்ளார். கற்கண்டுக் கட்டிதான் இந்த ஏப்ரல் கோகுலம் இதழ்.

பொம்மை

ஒப்பனை இல்லாமலேயே இயற்கை யழகுடன் இருந்தவர் பத்மினி. மேக்கப் போட்டாலும் போடா விட்டாலும் மின்னுபவர் கே ஆர். விஜயா என்று இதன் செப்டம்பர் இதழ் கூறுகிறது. கே.வி. மகாதேவன் - எஸ். பி. பாலசுப்பிரமணியம் சந்திப்பு என்ற பகுதி இதில் உண்டு. 'நான் ஓட்டலில் சர்வராகவும் இருந்திருக்கிறேன்' என்கிறார் உரையாடலில் கே. வி. மகாதேவன்.

'என் மகன் கல்யாண், சரண் குழந்தைகள் படத்தில் நடித்திருக்கிறார்கள். ஏழாயிரம் பாடல்களுக்குமேல் பாடிவிட்டேன். தமிழ், தெலுங்கு, மலையாளம், துளு, ஒரியா, இந்தி போன்ற மொழிகளில் இதுவரை பாடியுள்ளேன்' என்கிறார் எஸ். பி. பாலசுப்பிரமணியம். திரைப்படத் துறையிலிருப்பவர்களுக்கும், அத்துறைபற்றி அறியத் துடிப்போர்க்கும் நல்விருந்தாக அமைந்துள்ளது 'சந்திப்பு' நிகழ்ச்சி.

பேசும் படம்

விலைவாசிக்கேற்ற ஊதியமில்லை— வெ. ஆ. மூர்த்தியின் கட்டுரை; சினிமா எனது முதல் மனைவி—கே. பாலாஜியின் கட்டுரை; கதையை மட்டுமே நம்புகிறேன்—மேஜர் எழுதிய கட்டுரை, 'மிருதங்க சக்கரவர்த்தி' திரைக்கதை வசனம்—சிறப்புப் பகுதி. கவர்ச்சியான படங்கள் முதலியன தாங்கி வெளிவந்துள்ளது பேசும் படத்தின் அக்டோபர் மாத இதழ். பழமை, பெருமை பெற்றது பேசும் படம். இதில் 1983இல் தமிழ்த் திரையுலகம்—ஒரு கண்ணோட்டம் என்ற பகுதி கீழ்க்காணும் செய்திகளைத் தருகிறது. வெளியான தமிழ்ப்படங்கள் : 116. இதில் நேரடி

யாகத் தயாரிக்கப்பட்டவை: 96. மொழி மாற்றம் செய்யப் பட்டவை : 20. 83இல் தமிழ்ப்படங்களில் 'ஏ' சான்றிதழ் பெற்றவை : 56. புதிதாக யு. ஏ. சான்றிதழ் பெற்று வெளிவந்த படங்கள் : 3 இவைகளில் வண்ணப் படங்கள் 113. கறுப்பு-வெள்ளைப் படங்கள் 3 மட்டுமே. புதிய கதைகள் 85. தழுவல் 31 சமூகக் கதைப் படங்கள் 111. புராணப் படங்கள் 4. கிராமியக் கதைப்படம் 1,

புதிய தயாரிப்பாளர் வருகை —38 பேர். புதிய இயக்குநர்கள்—22பேர். புதுமுகங்கள்—23பேர். புதிய இசையமைப்பாளர்கள்—6பேர். '83இல் அதிக நீளமுள்ள தமிழ்ப்படம் : தங்கைக்கோர் கீதம். நீளம் : 4878 மீட்டர். நீளம் குறைவான படம் : ஒன்றுந் தெரியாத பாப்பா. நீளம் : 2505 மீட்டர். 1931 முதல் 1983 வரை 2731 தமிழ்ப் படங்கள் வெளிவந்துள்ளன. 1983இல் கதாநாயகனாகப் பிரபு அதிக படங்களில் நடித்துள்ளார். (10 படங்கள்); சிவகுமார், சுரேஷ், மோகன் ஆகியோர் 8 படங்கள் வீதம் நடித்துள்ளனர். நகைச்சுவை வேடத்தில் மனோரமா 25 படங்களில் நடித்துள்ளார். மகேந்திரனும் 25 படங்களில் நடித்துள்ளார். ராதாவும், சுலக்ஷனாவும் 11 படங்கள் வீதம் அதிகமாக நடித்துள்ளனர்.

அதிக படங்களை ஏ. வி. எம்., தேவர் பிலிம்ஸ், பாலாஜி கம்பெனிகள் தயாரித்துள்ளன. கவிஞர் வாலிதான் அதிக பாடல் களை, அதிகப் படங்களுக்கு—48 பாடல்கள்—எழுதியுள்ளார். இளையராஜா 42 படங்களுக்கு இசையமைத்துள்ளார். சினிமாஸ் கோப்பில் 3 படங்கள் வெளிவந்தன. பக்த துருவ மார்க்கண்டேயா. எங்களாலும் முடியும். சர்க்கஸ் உலகம் ஆகிய மூன்றுபடங்களும் அரசு வரிவிலக்குப் பெற்ற படங்களாகும்.

'பக்த துருவ மார்க்கண்டேயா' என்ற படத்தை பி. பானுமதி கதை எழுதி, இசையமைத்து இயக்கியிருக்கிறார்.

தமிழின ஓசை

தமிழ்த் திரையுலகம் பற்றிய கண்ணோட்டத்தை, மிகவும் சிரமப்பட்டுப் பம்பாயிலிருந்து வெளிவரும் 'தமிழின ஓசை' என்ற திங்களிதழ் (ப. 22) வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

பம்பாயிலிருந்து இதழ் வெளிவந்தாலும் தமிழ் நாட்டிலிருந்து வெளியாகும் இதழ்களில் காணக்கிடைக்காத அரிய செய்திகளைத் தாங்கி தமிழின ஓசை வெளிவருவது தமிழர்களனைவரும் வரவேற்கத்தக்க ஒன்றாகும்.

**இதழ்களின் தரம்**

தற்போது வெளிவரும் திங்கள் இதழ்களில் ஒரு சில தவிர, ஏனையவை தரத்தில் கவனம் செலுத்துவதில்லை. அட்டைப் படத்திலும், கதைகளுக்கான படத்திலும் கவர்ச்சியான முறையில் பெண்களின் படங்களைப் போட்டு இளம் பிஞ்சு உள்ளங்களை வெம்பச் செய்து விடுகின்றன. மேடையிலும் நூல்களிலும் முழங்குகிற மாதிரி விரசமில்லாமல் தம் படைப்புக்களை எழுத் தாளர்கள் எழுதவேண்டும். இதழ்களின் ஆசிரியர்களும் இதில் மிகுந்த கவனம் செலுத்தவேண்டும். வணிக நோக்கத்திற்காக இதழ்களை நடத்தினாலும், அறிவு வளர்ச்சியிலும், நாட்டில் நல்லொழுக்கத்தை ஏற்படுத்துவதிலும் கவனம் செலுத்தவேண்டும்.

முடிப்புரை : இதழ்கள் என்றால் பொழுதுபோக்குவதற்கு மட்டுமல்லாது எக்காலத்தும் பயன்படுமாறு வெளிவருதல் வேண்டும். படித்துப் பாதுகாக்கவேண்டும் என்ற எண்ணம் உள்ளத்தில் எழும் வண்ணம் அமைக்கப்படுதல் வேண்டும்.

**தமிழில் வெளிவரும் திங்கள் இதழ்கள்**

அணுவிகிதம்
அப்போஸ்தல எதிரொலி
அப்போஸ்தல தூதன்
அம்புலிமாமா
அமர பாரதி
அமுதசுரபி
அரசு ஊழியர்
அருங்கொடை
அருணோதயம்
அரும்பு
அறிவுக் கூர்வாள்
அறிவியக்கம்
அறிவு வழி
அறைகூவல்
அன்பொளி
அன்னைபூமி
அன்னையின் அருட்சுடர்
அனுபவ தையற்கலை
ஆத்ம தர்மம்
ஆரம்பக் கல்வி
ஆரோக்கியம்
ஆன்மீக இன்பம்
இந்தியன் காபி
இந்து சமயச் செய்தி
இந்து மதம் அழைக்கிறது
இதய இணைப்பு
இதயம்
இனிமை
இளங்கோ
இருமலர்
இஸ்கஸ்
இஸ்மி
உலக இதயஒலி
உழவுச் செல்வம்
உழைப்பவர் உலகம்
ஊற்று

ஊரும் உலகும்
எழுச்சி
எழுத்தாளன்
ஒலிக்கதிர்
ஓம் சக்தி
கடவுள்
கடவுளின் பிரதிநிதி
கண்டுபிடி
கதைக்கதிர்
கழகக் கதிர்
கருணீகர் நல்வாழ்வு
கருணீக மித்திரன்
கல்வி மறுபக்கம்
கலப்படம்
கலாச்சாரம்
கலாவல்லி
கலைக்கதிர்
கலைமகள்
கவிக் கொண்டல்
கவிதா மண்டலம்
கவிதை
கவியமுது
கவிப்புனல்
கற்பகம்
காஞ்சி கூட்டுறவு
காதல்
காயிதே மில்லத்
காவலர் முரசு
கிராம இயக்கம்
கீதாசார்யன்
குடும்பநலச் செய்திக் கதிர்
குண்டூசி
குமரிமலர்
குமுறும் நெஞ்சம்
குர்ஆனின் குரல்
குரலொலி
குலமகள்
குறளியம்
கூட்டுறவு
கூட்டுறவு செய்திமலர்
கேள்விகள்
கைத்தறி
கைவிளக்கு
கோகுலம்
கோழிநண்பன்
ஞான தூதன்
ஞானபூமி

சக்தி—செய்திமலர்
சங்கல்பம்
சத்திய சுடர்
சத்தியம்
சத்தியவர்த்தமானி
சத்துணவு
சப்தகிரி
சமயஜோதி
சமாதான வழி
சமூக நிழல்
சர்வோதயம்
சரித
சலேசியச் செய்தி
சன்மார்க்க விவேக விருத்தி
சனாதன சாந்தி
சாரணர்
சாஸ்வதம்
சாலியர் குரல்
சி.ஐ.டி யூ.சி.
சித்த மருத்துவம்
சித்தர் கருவூலம்
சித்தர் செயல்
சித்தாந்தம்
சிறகசைப்பு
சிவசக்தி
சினிமா மெயில்
சுகவழி
சுட்டி
சுபயோகம்
சுயம்வரம்
செந்தமிழ்
செந்தமிழ்ச் சித்தன்
செந்தமிழ்ச் செல்வி
செய்தி மடல்
சேனையர் முரசு
டாப்ஸ்டார்
தங்க நட்சத்திரம்
தமிழ்ச் சிட்டு
தமிழ் சினிமா வழிகாட்டி
தமிழர் விளையாட்டு மடல்
தமிழ்நாட்டுக் காவலர்
தமிழ்ப்பணி
தமிழ்ப் பல்கலைக்கழகச்
செய்தி மலர்
தமிழ்ப் பொழில்
தமிழ் முனிவர்
தர்மசக்கரம்

தமிழாசிரியர்
தாம்பிராஸ்
தாமரை
திருநீலகண்டர்
திரு இருதயத்தூதன்
திருக் கயில்
திருக்கோயில்
திருக்கோயில் வரலாறு
திரைக் கதிர்
திரை கலைஞர்
தீச்சோலை
தீபம்
தீர்க்கதரிசன விளக்கம்
தென் ஒலி
தென்மொழி
தேசோபகாரி
தேம்பாவணி தீபம்
தேவ எக்காளம்
தேவர் குரல்
தேவர் முரசு
தேன் மழை
தேனமுதம்
தையல் கலைஞர்
தொழிற்சங்கச் செய்தி
தோழன்
நக்கீரன்
நட்சத்திரசோதிடம்
நந்தி வாக்கு
நந்தி சோதிடம்
நம்பிராசன்
நபிநேசன்
நமது யாதவம்
நவரத்தினம்
நல்வழி
நர்கீஸ்
நற்சிந்தனை
நாமும் நம் ராசியும்
நாணயம்
நாராயணகுரு
நித்திலக் குவியல்
நிலவளம்
நிறைமதி
நூதன விடியல்
பத்மஜோதி
பல்லவநாதம்
பண்ணைத் தொழில்
பண்பாட்டு ஆய்வு
பாலமித்ரா
பாஷாபிமானி
பிலிம்ரோல்
புறநிலை ஊழியன் குரல்
புதிய நம்பிக்கை
புதுவைச் செய்திகள்
புதுக்கோட்டைமாவட்ட
அரசிதழ்
புதுப்புனல்
புதுமலர்
பூஜாதீபம்
பூஜாமணி
பெரியார் நாடு
பேசும் சினிமா
பேசும் படம்
பொம்மை
பொம்மை வீடு
பொதுமறை
பொதுமை
பொதுப்பணி குரல்
பொய்யா விளக்கு
பொய்யா மொழி
பொன்னகரம்
போக்குவரத்துத் தொழிலாளி
போரணி
மக்கள் பாதை மலர்கிறது
மங்கை
மங்கையர் மலர்
மஞ்சரி
மதி ஒலி
மதிநா
மணிவிளக்கு
மணியன்
மருத்துவ மஞ்சரி
மருத மலர்
மன்னாதி மன்னன்
மாத சோதிடம்
மாலை மலர்
மார்க்சிய ஒளி
மாலைமதி
மாவட்ட அரசிதழ்
மின் காசாளர்
முக்குடை
முகம்
முத்திராஜா சங்கநாதம்
முத்திரிபதம்
முருகு சோதிடக்கலை

முல்லைச்சரம்
முஸ்லீம் குரல்
முஸ்லீம் முரசு
மூலிகை மணி
மெய்கண்டார்
மெட்ராஸ் காங்கிரஸ்
மெட்டி
மேனிலைக் கல்வி
மேம்பாலம்
மோட்டார்
மோனா
யுனெஸ்கோ கூரியர்
யூத்ஸ் வியூஸ்
யோகாசன விஜயம்
ரத்னபாலா
ரஹ்மத்
ரஜனீஷ்
ராணிமுத்து
லாரி
வள்ளலார் அருளுரை
வளளலார் குருகுலம்
வள்ளுவர் வழி
வல்லமை
வளரும் மீனவம்
வளரும் வேளாண்மை
வரிச் செய்தி
வரிவிகடன்
வணிக ஒற்றுமை
வர்த்தகர் இமை
வாய்ஸ் ஆப் இந்தியா
விஞ்ஞானச் சுடர்
விஞ்ஞான விவசாயம்
வியாபார மித்திரன்
விளையாட்டுக் களஞ்சியம்
வெளுப்பு
வேளாளர் கூட்டமைப்பு
வேளாளர் துணை
ஜகத்குரு
ஜோதிட நண்பன்
ஜோதிட கலைமணி
ஸ்தானாதிபதி
ஹார்பர் தொழிலாளி
ஹிந்துமித்திரன்
ஹோமியோபதி
ஹோமியோ பட்டினம்
ஹோமியோபதி மித்திரன்
ஸ்ரீகாமகோடி ப்ரதீபம்
ஸ்ரீசங்கரக் கிருபா
ஸ்ரீகுமரகுருபரர்
ஸ்ரீதேவி கருமாரி விஜயம்
ஸ்ரீநரசிம்மஹப் பிரியா
ஸ்ரீபாம்பன் ஜோதிடமாலை

# மாத நாவல்

கி. இராசா

இடைநிலைக் குடும்ப வாசகருக்காகப் படைக்கப்பெற்ற கதைப் பொருட்கள் மாத நாவலாக அமைகின்றன. முந்தைய ஆண்டுகளின் தொடர்ச்சியாக ஒன்பது வெளியீடுகள் அமைய, குங்குமச் சிமிழ், இதயம், பாமா ஆகியன இவ்வாண்டின் புதிய மலர்ச்சியாகின்றன. மணியன், மோனா ஆகியன பல இளம் எழுத்தாளரை அறிமுகப் படுத்தின, ஒருபிரிவு மாத நாவல்களில் கதைப் பொருளும் பாத்திரப் படைப்பும் சிறந்திருக்க, மறுபிரிவில் கதைக் கட்டமைப்பு சிறக்கின்றது. லக்ஷ்மியின் 'சாரதா' என்ற துப்பறியும் பாத்திரம் புதிய சேர்க்கை யாகும்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்துமூன்றாம் ஆண்டில் வெளியான மாத நாவல்கள் பற்றிய ஆய்வு இங்கு மேற்கொள்ளப் படுகிறது. இவ்வாய்வு இருபெரும் பகுதிகளாக அமைகிறது. முதற்பகுதியில் மாத நாவல்களின் தன்மைகள் பற்றிய பொது ஆய்வும், இரண்டாம் பகுதியில் மாத நாவல்களில் இடம்பெற்ற கதைகள் பற்றிய சிறப்பு ஆய்வும் இடம் பெறுகின்றன. பொது ஆய்வில் மாத நாவல்களின் தோற்றம் வளர்ச்சிக்கான காரணங் களும், மாத நாவல்களின் விவரமும், அவற்றின் அமைப்பும் பற்றிய செய்திகளும், மாதநாவல்களில் வெளியாகும் பல்வேறு கதைப்பொருட்கள் பற்றிய குறிப்புகளும் தொகுத்தும் பகுத்தும் விளக்கப்படுகின்றன. சிறப்பு ஆய்வில் மாத நாவல்களில் இடம் பெறும் கதைப் பொருட்கள் பற்றிய ஆய்வு உள்ளடக்கம், உருவம், சூழல் எனும் மூன்று சிறப்புப் பகுதிகளாக வைத்துப் பகுத்தாயப் படுகின்றது †

## I. பொது ஆய்வு

### தோற்றமும் வளர்ச்சியும்—காரணங்கள்

மாத நாவல்களில் இடம்பெறும் கதைப் பொருட்களைப் பட்டியலிட்டுப் பார்க்கையில், சமுதாயத்தின் குறிப்பிட்ட ஒரு

† காண்க; ஆய்வு அமைப்பு வரைபடம்.

சாராருக்கே இன்பமும் பயனும் அளிக்கும் வண்ணம் அவை எழுதப் படுகின்றன என்பதை எளிதில் கண்டு கொள்ள இயலும், இடை நிலைக் குடும்பத்தினரே அக்குறிப்பிட்ட சமுதாயத்தினராவர்.

மகளின் வருமானத்தை எதிர்பார்த்திருக்கும் பெற்றோர், அதனால் அந்தப் பெண் கனவுலகத் திருமணத்தில் ஆழ்ந்திருக்கும் சூழல், கணவன்—மனைவியுமாக உழைத்துப் பிறர் மதிக்க வாழப் பாடுபடும் குடும்பங்கள், அதனால் இருவரிக்கிடையே எழும் ஐயங்கள்—பூசல்கள்—தலைமைப் போராட்டங்கள்; வேலையின்றி மதர்த்துத் திரியும் பணக்கார இளைஞர்களின் கண்வலையில் சிக்கி மோசம் போகும் நங்கையர், அடக்குத் தனத்தையும், அதிகார வெறியையும் தமதுரிமையாக ஆக்கி, பெண்டிரை ஆட்டிப் படைக்கும் ஆடவரை எதிர்த்தெழும் பெண்குரல்கள், நகரத்து மாந்தரை நாளும் அச்சங்கொள்ளச்செய்யும் கொலை, கொள்ளை, கடத்தல், கற்பழிப்பு நிகழ்ச்சிகள்—இவையே பெரும்பகுதியான நாவல்களின் கருப்பொருள்களாகின்றன.

அன்றாட வாழ்வின் பாதிப்புக்களைப் பிரதிபலிக்கும் சிறுகதை களுக்கேயுரிய இக்கருப்பொருட்கள், படிப்போரைக் கவர்ந்திழுக் கின்றன. காலையில் அலுவலகம் போக மின்சார ரெயிலில் ஏறியதும் பாதியும், பின் அலுவலகம் முடிந்து மின்சார ரெயிலில் வீடு திரும்பும்போது மீதியும் முடிக்கத்தகும் வண்ணம் இம்மாத நாவல்கள் 'சொற் சுருக்கமும், பொருட்சுருக்கமும்' கொண்டிலங்கு கின்றன. மாத நாவல்களின் இப்பண்பே இவற்றின் பெருக்கத் திற்கும் பரவலுக்கும் காரணங்களாகின்றன.

### வெளியீட்டு விவரங்கள்

மாதநாவல்களை ராணிமுத்து, மணியன், மாலைமதி, மெட்டி, மேகலா, மோனா, நவரத்தினம், திரைக்கதிர். கதைக்கதிர் ஆகிய இதழ்கள் தொடர்ந்து வெளியிடுகின்றன. இவ்வாண்டு மே மாதம் முதல் குங்குமச் சிமிழ் இதழும், மார்ச்சு முதல் இதயம் இதழும், ஜூலை முதல் பாமா இதழும் வெளிவரலாயின. கதைக்கதிர் இதழ் ஆகஸ்டு மாதத்துடன் முடிவுற்றது. விரைந்து வளரும் பத்திரிகை உலகில் 'மக்களின் மனம்போல்' மாதநாவல்கள் விரும்பியேற்கப் படுகின்றன என்பதற்கு 83இல் புதிதாகத் தோன்றிய மூன்று வெளியீடுகள் சான்றாகும்.

புதிய எழுத்தாளர்களை அறிமுகப்படுத்துவதில் மணியன், மோனா ஆகிய மாத வெளியீடுகள் முனைந்து நின்றன எனலாம்,

மணியன் இதழ் இருமாதங்களுக்கொரு புதிய எழுத்தாளரை அறிமுகப்படுத்தும் ஊக்கத்திட்டமொன்றை இவ்வாண்டு அறிவித்தது. இவ்வரிசையில் கிராக்கி (கி. இராதாருஷ்ணன்) பிரேமா தியானேஸ்வரன், கோவி. ஜெயராமன், மலர் மன்னன் ஆகிய எழுத்தாளர் அறிமுகம் செய்யப்பட்டனர்.

மோனா இதழும் அதிக அறிமுகமற்ற எழுத்தாளர்களின் படைப்புக்களை வெளியிடும் பணியை இவ்வாண்டு செய்தது எனலாம். இவர்களுள் சுபா, அமுதவன், ரமணீயன் என்போர் குறிப்பிடத்தக்கவர் ஆவர். கதைக்கதிர் வாயிலாக ஏ.எஸ். ராகவன், சாரதா விஸ்வநாதன். சா. கந்தசாமி, வையவன் முதலிய எழுத்தாளர்களை வாசகர் அறிந்து கொண்டனர்.

பிற மாத இதழ்கள் அனைத்துமே, பிரபல எழுத்தாளர்களின் நாவல்களை வெளியிட்டு, தங்கள் பணியில் நிறைவு கண்டன.

## அமைப்பு முறை

வாசகர்களுக்கு நாவல்களை மட்டும் தருவது இவ்விதழ்களின் நோக்கமன்று; நாவலோடு பிற செய்திகளையும் இவை தருகின்றன.

ராணிமுத்து இதழில் அரசியல், இலக்கியம் குறித்த தலையங்கங்களும், செய்திக் குறிப்புக்களும், உருசிய இலக்கியம் பற்றிய செய்திகளும், அடுத்த முத்து குறித்த அறிமுகமும், சென்ற முத்து பற்றிய வாசகர் கருத்தும், நாவல் அறிமுகமும் இடம் பெறுகின்றன. பொது அறிவுப் போட்டியை இவ்விதழே முதலில் அறிமுகம் செய்து, அதில் வெல்பவர்க்கு ரூ 1000/- பரிசு என அறிவித்தது.

மணியன் மாத இதழில் படைப்பாளர் பற்றியும், அவர் தம் படைப்பு பற்றியுமான அறிமுகத்தை ஆசிரியர் குரல் என்ற பகுதியில் காணலாம். 'எண்ணங்களை எழுதுகிறோம்' எனும் பகுதி வாசகர் கருத்தையும், 'ஹெல்த்' எனும் பகுதி மருத்துவக் குறிப்புக்களையும், 'டிட்பிட்ஸ்' பகுதி துணுக்குகளையும் எதிரொலிக்கின்றன. இவற்றோடு, பிற இதழ்களில் காணலாகாத, 'சாதனையாளர் வரிசை' என்ற பகுதியையும் மணியன் மாத இதழ் தருகின்றது.

மாலைமதி இதழ், நாவலோடு சிறுகதை ஒன்றையும் வழங்குகின்றது. இது தவிர, சினிமா செய்திகள், சமையல் குறிப்பு

கள், நகைச்சுவைத் துணுக்குகள், கடிதங்கள் என்பனவும் மாலைமதியில் இடம் பெறுகின்றன.

மெட்டியில். 'ஆசிரியர் குரல்' என்ற பகுதியில் படைப்பாளர் குறித்தும். அப்படைப்பு குறித்தும், மெட்டி இதழின் ஆசிரியர் கருத்துக்கள் வெளிவந்தன. கவிதை இழையோடும் அக்கருத்துக்களுக்குச் சான்றாக ஒன்றை இங்குக் குறிப்பிடலாம். 'திருமதி. சிவசங்கரியின் எழுத்து, பின்னல் அல்ல. மேகமாய் பூமிப் பரப்பில் இறங்கி, நெல்நாற்றை நெட்டிலிங்க மரத்தைப் போல அசுரத்தனமாக வளர்த்துவிடுகிற மாயசக்தி படைத்த மந்திர எழுத்து'. இவ்விதழின் இடையிடையே சினிமாச்செய்திகளும், வாசகர் குரலும் இடம்பெறுகின்றன. மற்ற எவ்விதழிலும் இல்லாத ராசிபலன் பகுதி மெட்டி இதழில் வெளியாகிறது.

மேகலா மாத இதழில், எதிர்வரும் மேகலா இதழ்கள் பற்றிய விளம்பரங்களும், வணிக விளம்பரங்களும் நாவலின் இடையிடையே இடம்பெற்றுள்ளன. அறிவுப் போட்டி என்ற பெயரில் குறுக்கெழுத்துப் போட்டியை நடத்தி அதற்கென ரூ 150/- பரிசினை இவ்விதழ் வழங்குகின்றது.

மோனா இதழில் படைப்பாளர் அறிமுகமும். வாசகர் கருத்துக்களும், துணுக்குச் செய்திகளும் இடம் பெறுகின்றன.

நவரத்தினம் மாத இதழில் 'உங்கள் கடிதம்' என்ற பகுதியில் வாசகர் கருத்துக்களும், பிற சிறப்புக்கட்டுரைகளும் நாவலோடு சேர்ந்து வெளிவருகின்றன. இலங்கைப் பிரச்சனை, வெந்நீர் குளியல், பூலான் தேவி போன்றவை வெளிவந்த சிறப்புக் கட்டுரைகளில் சிலவாகும்.

'83 ஆகஸ்டு மாதம் வரை வெளிவந்த கதைக்கதிர் இதழில் அரசியல் செய்திகள். 'செய்திக் கோவை' என்ற தலைப்பில் இடம் பெற்றன. வாசகரின் கேள்விகளுக்கு ஆசிரியரின் பதில்கள் 'மணிவண்ணன் பதில்கள்' என்ற பெயரில் வெளிவந்துள்ளன. ஒவ்வொரு கதைக்கதிர் இதழிலும், சென்ற கதைக்கதிர் நாவல் பற்றிய விமர்சனப் போட்டியொன்றை வெளியிட்டு, அதிற்சிறந்த விமர்சனங்களுக்குப் பரிசுகளை இவ்விதழ் நல்கியது. குடும்பக் குறிப்புகளும் இவ்விதழில் இடம் பெற்றன.

திரைப்படத் துறையைச் சார்ந்தவரால் வெளியிடப்படும் திரைக்கதிர் இதழில் அத்துறையைப் பற்றிய செய்திகள் அதிகம்

இடம்பெறுகின்றன. நட்சத்திரக் கடிதம், ஜீனியஸ் பதில்கள், சந்திரகாந்த் பதில்கள், 'கண்டுபிடியுங்கள்' என்ற திரைப்புதிர்—போன்றவை இவ்விதழில் காணப்படுகின்றன. பெரும்பாலான இதழ்களில், நாவலோடு திரைப்படக் கதைவசனமும் வெளி வந்துள்ளது.

இதயம் மாத இதழிலும் நாவலின் இடையிடையே நகைச் சுவைத் துணுக்குகளும் சினிமாச் செய்திகளும் இடம் பெறுகின்றன. சினிமாக் கேள்வி-பதிலும், சிறப்புச் சிறுகதையும் ஒவ்வொரு இதழிலும் வெளியாகின்றன. பொது அறிவுப் போட்டி என்ற குறுக்கெழுத்துப் போட்டி இவ்விதழிலும் உண்டு; தக்க பரிசுகளும் உண்டு.

குங்குமச் சிமிழில் நாவலோடு படக்கதையும், சிறப்புச் சிறு கதையாகப் பிறமொழிச் சிறுகதைகளும், பயண அனுபவம், அபூர்வக் காட்சி போன்ற கட்டுரைகளும், சினிமாச் செய்திகளும், துணுக்குகளும், வாசகர் கடிதமும் இடம் பெறுகின்றன.

பாமா இதழில் இலக்கியப் பகுதி, மருத்துவப் பகுதி, ராசி பலன் பகுதி. புதுக்கவிதை முதலியவை வெளியாகின்றன.

### கதைப் பொருட் பண்புகள்

மாத இதழ்களில் வெளியாகும் நாவல்களின் கதைப் பொருட்கள் ஒரே மாதிரியான அமைப்பைக் கொண்டுள்ளன. இவை இதழுக்கு இதழ் வேறுபடுவதில்லை. குடும்பப் பாங்கான கதைப்பொருட்கள் விரும்பப்படுவது போன்றே துப்பறியும் கதை களும், கொலை, கொள்ளைக் கதைகளும் விரும்பப்படுகின்றன என்பது இதன்வழி புலனாகின்றது. ஒருசில நாவல்களில் மட்டும் மாற்றத்திற்கு எழுதப்பட்டவை போல-புதுமையான கதைப் பொருட்கள் இடம் பெறுகின்றன. சில நாவல்கள் அவற்றின் கதை யமைப்பு முறையினால் சிறந்து நிற்கின்றன. இப்பண்புகளை இனிவரும் பகுதியில் ஆராயலாம்.

ராணிமுத்து இதழ்களில், அப்பாவிப் பெண் தனியாக இந்தச் சமூகத்தில் படும்பாடு[1], கணவனே தெய்வம் என நினைக்கும் மனைவியின் 'மன்னித்து ஆட்கொள்ளும் திறம்'[2], ஒரு எழுத் தாளனின் இருதலைக் கொள்ளிக் காதல்,[3] புழு பூச்சியாக வாழும்

1. அதிசய ராகம்—லக்ஷ்மி
2. நடிகை—கோவி. மணிசேகரன்
3. கங்கா யமுனா—நாதன்

பெண்களின் பரிதாப நிலை,[4] கூட்டுக் குடும்பத்தில் மாமனார்-மருமகள் உறவு,[5] வளர்ப்பு சரியில்லாமல் பெண்கள் கெட்டுப் போகும் சூழல்[6] எனும் கதைப் பொருட்கள் தவிர, கொலையும் கொள்ளையுமாக மூன்று கதைகளும்,[7] சரித்திரம் பேசுவனவாக இரு கதைகளும்[8] அமைந்துள்ளன.

மணியன் இதழ்களில், ஆண்களை நம்பி மோசம் போகும் பெண்கள்,[9] குடியின் கொடுமை,[10] பழமையின் பெருமை,[11] பிரிந்திருக்கும் கணவன்-மனைவி,[12] இளைஞர்கள் வாழ்வில் கசப்பும்-ஏமாற்றமும்,[13] நாகரிக மோகத்தால் கெட்டழிந்து போகும் இளைஞர்கள்,[14] குழந்தைக் கொடுமைகள் (Child abuse)[15] போன்ற கதைப் பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

மாலைமதி மாத இதழ்களில். காதலித்துக் கைவிட்ட காதலனைப் பழிவாங்கும் படலமும்,[16] தனக்குப் பிறந்த குழந்தையையே காதலிக்குத் தூக்கித் தரும் கணவனின் (காதலனின்) கள்ளத்தனமும்,[17] வீட்டை எதிர்த்துக் காதலனைக் கைப்பிடிக்கும் பணக்காரப் பெண்ணின் துணிச்சலும்,[18] கொள்ளையடித்த பணத்தால் தன்னை உயர்த்திய அப்பாவை வெறுக்கும் மகனின் மனமும்,[19] பண்பான தாசியின் அன்பான மகளுக்குத் தன் உள்ளத்தைத் தாரை வார்த்துவிட்ட ஒரு

---

4. பாசம்—சிவசங்கரி
5. மருமகள்—லக்ஷ்மி
6. கண்கெட்ட பிறகு—சிவசங்கரி
7. மகளிர் மட்டும்—ராஜேந்திரகுமார், கிழக்குத் தொடர்ச்சிக் கொலைகள்—பட்டுக்கோட்டை பிரபாகர் தீபா—குரும்பூர் குப்புசாமி.
8. மாதவியின் மனம்—சாண்டில்யன்; புரட்சிப் பெண்—சாண்டில்யன்
9. கலையாத மயக்கங்கள்—இந்துமதி
10. போதையில் கரைந்தவர்கள்—நீல. பத்மநாபன்
11. பரதேசிக் கோலம் படிதாண்டிவிட்டது—மகரிஷி
12. கரையைத்தேடும் மாலுமிகள்—வாஸந்தி
13. நிறம் மாறும் மனிதர்கள்—கிராக்கி
14. ————
15. அந்தக் குழந்தை—உஷா சுப்பிரமணியன்
16. வாரத்துக்கு எட்டுநாட்கள்—அழகாபுரி அழகப்பன்
17. பொய்ப்பூக்கள்—அனுராதா ரமணன்
18. அனிதாவுக்கு ரொம்பத் துணிச்சல்—லக்ஷ்மி
19. பூ வேறு மணம் வேறு—பி.வி.ஆர்

கணவனின் காதல் வாழ்வும்[20] கதைப் பொருட்களாக அமைகின்றன. இவை தவிர, கொலை, கொள்ளை, கடத்தல், கற்பழிப்பு தொடர்பான துப்பறியும் போக்கில் ஐந்து நாவல்கள்[21] அமைந்துள்ளன.

நினைத்தவளை அடையமுடியாவிட்டாலும் அவள் மகளையாவது கெடுத்து இன்புறும் ஆணினத்துக் கொடூரங்களும்,[22] அளவுக்கு மீறிய உடலுறவினால் கணவனையே வெறுத்தொதுக்கும் மனைவியின் மனநிலையும்.[23] அப்பாவிக் கணவனும் அடிமை வேலைக்காரியும் புதுவாழ்வு அமைக்க இணையும் சூழலும்,[24] கணவன் கயவனானாலும் அவனை எத்தகைய இடரிலிருந்தும் மனைவி காப்பாற்றுவாள் என்ற உண்மையும்,[25] அலுவலக அக்கிரமங்களைத் தட்டிக் கேட்பவனுக்கு எழும் சோதனைகளும், மனைவியின் கண்முன்னாலேயே கொழுந்தியாளைப் பெண்டாளும் ஆண்களின் திமிர்த்தனமும்[26] மெட்டி மாத இதழ்களின் கதைப் பொருட்களாக விளங்குகின்றன. இவற்றினின்றும் விலகிய நிலையில், மகன்-மருமகள் கொடுமை தாங்காது தனிக்குடித்தனம் போகும் விதவைத் தாயும் (மாமியார்),[27] மாறுதலுக்கும் மரபுக்கும் நடுவே சிக்கித் தவிக்கும் விடுதி இளைஞர்களின் பரிதாபமும்[28] மெட்டி இதழ்களில் சித்திரிக்கப்பட்டுள்ளன.

மேகலா இதழ்களில், நாகரிக மோகத்தில் ஆழ்ந்து அழிந்து போகும் இக்காலக் கல்லூரி மாணவ மாணவியரின் சோக வரலாறும்,[29] வைப்போடு அலையும் தன் காதலியின் கணவனைத் திருத்த முயன்று தோற்றுப்போய் அவன் சம்மதத்தோடு

---

20. அந்தரத்தில் ஓர் ஊஞ்சல்—அனுராதா ரமணன்
21. ஜனவரி, பிப்ரவரி, மார்ச்சுவரி—பட்டுக்கோட்டை பிரபாகர்
சசி எப்படி இறந்தான்?—பிரதிபா ராஜகோபாலன்
கொலைகாரக் கம்ப்யூட்டர்—ராஜேஷ்குமார்.
தாய்ப்பூ தாமரைப்பூ—புஷ்பா தங்கதுரை
சொர்க்கத்துக்குச் சுருக்குவழி 2—புஷ்பா தங்கதுரை
22. அழத்தெரியாத அம்பிகைகள்—அனுராதா ரமணன்
23. அளவுக்கு மிஞ்சினால்—ஹேமா ஆனந்ததீர்த்தன்
24. சிட்டுக்குருவிக்கென்ன கட்டுப்பாடு?—ஜோதிர்லதா கிரிஜா
25. நெஞ்சத்தை அள்ளிக்கொஞ்சம் தா—லட்சுமி ராஜரத்தினம்
26. அடிமாடுகள்—சிவசங்கரி
27. நர்மதா எங்கே போகிறாள்?—லக்ஷ்மி
28. சேவல் பண்ணை—பாலகுமாரன்
29. குருட்டு நிழல்கள்—வாஸந்தி

காதலியைக் கைப்பிடிக்கும் காதலனின் அசுர முயற்சியும்,[30] சிறு வயதில் தங்கைக்குக் கண்தர முடியாத சமூகத்தின்மேல் வெறுப்புடன் வளர்ந்து உயர்ந்த பிரபல பின்னணிப் பாடகர்கள் பலர் கண்களைப் பிடுங்கிச் செய்யும் படுகொலைகளும்,[31] மனம் கண்டு தாவாமல் பணம் கண்டு தாவித் தாவிச் சென்ற பெண்ணொருத்தியின் சோக முடிவும்,[32] பட்டினப்பாக்கத்து முரட்டுக் காதலனை மனிதனாக்க, இராணுவத்திற்கனுப்பி, தான் சீரழிந்துபோய் பிள்ளைக்குத் தாயாக, காதலன் நொண்டியாகத் திரும்பி வந்து அவளை ஏற்றுக் கொள்ளும் காதல் விதியும்[33] என்றவாறு பல்வேறுபட்ட கதைப் பொருட்கள் இடம்பெற்றுள்ளன.

அரசியல்வாதிகளின் அட்டகாசங்களும்,[34] காதல் மனையாள் இறந்துவிட மகனை இரண்டாந் திருமணத்திற்கு வற்புறுத்தும் சூழலும்,[35] சூழல் காரணமாய் மதுவுக்கு அடிமையாகி அன்புக்கு ஏங்கும் பெண் திருந்தினாலும்கூட சமுதாயம் அவளை ஏற்க மறுக்கும் நிலையும்,[36] ஹிப்பிகளின் அட்டகாசமும் போலிச் சாமியார்களின் கள்ளத்தனமும்[37] இளம் விதவையின் காதல் போராட்டமும்,[38] மோனா இதழின் கதைப் பொருட்களாக விளங்குகின்றன. இவற்றினின்றும் சற்றே வேறுபட்ட போக்கில், தன் உடலில் புகுந்து தன் காதலியை அடைய நம்பிக்கைத் துரோகம் செய்ய நினைத்த நண்பனைப் பழிவாங்கும் கூடுவிட்டுக் கூடுபாயும் சித்துக் கதையும்,[39] பட்டிக்காடு என்பதால் தன்னை மணக்க மறுத்த பட்டணத்து மாப்பிள்ளையையே மண முடிக்கும் -- முக்காலமும் அறிந்த, தெய்வாம்சம் நிரம்பிய— பெண் பற்றிய கதையும்,[40] இருபாலர் மீதும் சிறுவயதிலேயே

30. வா—பட்டுக்கோட்டை பிரபாகர்
31. நாலுபேர் நகரம்—இந்துமதி
32. பாசமெல்லாம் உங்கமேலே பரிதவிச்சேன் உங்களாலே—ராஜேந்திரகுமார்
33. சந்திக்க ஒரு நிமிஷம்—மகேந்திரன்
34. இன்று நீ நாளை நான்—சுபா
35. மோகத் திரை—லக்ஷ்மி
36. வழிகாட்டி வழிதவறுகிறது—அனுராதா ரமணன்
37. அவர்களுக்காக—உஷா சுப்பிரமணியன்
38. நிலாக்காலங்கள்—விமலா ரமணி
39. இன்னும் சில விபரீதங்கள்—ரமணீயன்
40. உன்னை விடுவேனா!—அமுதவன்

வெறுப்பு வர, சூழல் காரணமாய் அலிப்பாலாகி, இருபாலரையும் பழிவாங்கும் கதையும்[41] புதுமைச் சிறப்புடைய கதைப் பொருட்களாக அமைந்துள்ளன.

நவரத்தினம் இதழ்களில், கதை எழுத வந்து மலைப் பிரதேசத்தில் தங்கியிருக்கும் தன்னிடம், பழைய காதல் ஏக்கத்தில் 'வற்புறுத்தல் சாராயத்தோடு" தவறாக நடந்துகொண்ட இளம் எழுத்தாளனைக் கைப்பிடித்துக் கொழுகொம்பாகும் பெண்ணின் 'பண்பட்டுடையார்' நெஞ்சமும்,[42] தன் அண்ணன் கெடுத்த பெண்ணையே தான் காதலிப்பதாகக் கூறி, அண்ணனுக்கும் பெற்றோருக்கும் அதிர்ச்சி வைத்தியம் தந்து, அண்ணனுக்கே அவளை மணமுடிக்கும் தம்பியின் திறமும்,[43] 'இன்னொருத்தியை நாடியது தப்புதான்' என்று கணவன் மன்னிப்புக் கேட்டும், அம்மா சொற்படி அவனை விவாகரத்து செய்து நரகவேதனை அனுபவித்து, கடைசியில் கணவனோடு இணையும் பிரிந்தவர் கூடிய கதையும்,[44] காதலும் கல்யாணமும் நினைப்பதற்கு எளிதானாலும், நினைத்த படி நடப்பது மிகவும் சொற்பம் என்ற கலிகால உண்மையும்,[45] உயிராய்க் காதலித்த மனைவி, திருடனால் கெடுக்கப்பட்டாள் என நினைத்து, அவளை ஒதுக்கி வைக்கும் புதிய ராமனின் புனிதச் செயலும்[46] கதைப் பொருள்களாகின்றன.

பணக்காரனுக்கு வைப்பாக ஆகிவிட்ட நிலையில் தன் மகளையே சொந்தம் கொள்ளமுடியாத ஊமை நிலையும்[47] மிதமிஞ்சிய நாகரிகத்தைப் போதனை செய்ததால் மனைவி ஓடவும், அளவுக்கு மீறிய கட்டுப்பாட்டால் மகள் தவறு செய்யவும் காரணமான இருவேறு துருவங்களை நாடியவனின் சோகக் கதையும்,[48] நடிகனான கணவனின் கொடுமைகள் தாங்க மாட்டாது அவனைக் கொலை செய்துவிட்டுத் தூக்கில் தொங்கிய பத்தினியின் பரிதாப வாழ்வும்,[49] காதல் வயது வந்தும் பால்மனம்

---

41. ஒருநாள் நிலா—அமுதவன்
42. நிறங்கள்—இந்துமதி
43. பனிச்சுவர்—மகரிஷி
44. அந்திக்கால மோகம்—லக்ஷ்மி
45. நிழல் சுடுவதில்லை—இந்துமதி
46. அவனும் ராமன்தான்—லக்ஷ்மி
47. உண்மை ஊமையல்ல—லக்ஷ்மி
48. ஓவர்டோஸ்—சிவசங்கரி
49. நட்சத்திர இரவில்—அனுராதா ரமணன்

மாறாதவனும் காதலிக்கத் தெரிந்தும் துணிவில்லாதவனும் நெஞ்சத்தைப் பேசவிடாமலேயே முடிவைத் தேடிக்கொண்ட துயரமும்[50] திரைக்கதிர் இதழின் கதைப்பொருட்களில் குறிப்பிடத்தக்க ஒருசிலவாகும்.

கதைக்கதிர் இதழ்களில் கொல்லிமலைக் காதலரின் காவியக் காதலும்,[51] நாற்பது வயது சரக்குமாஸ்டரின் இரண்டாந் திருமணத்தின் பின் வீசிய புயலும்,[52] மாமியார் சொத்தைச் சுருட்டத் திட்டமிட்ட கூட்டத்தைப் பிடித்துத் தந்த மருமகளின் சாதனையும்,[53] நாடக நடிக-நடிகையரின் வாழ்க்கைப் போக்கும்[54] கதைப் பொருட்களாக இடம் பெற்றுள்ளன.

குங்குமச்சிமிழ் இதழ்களில் பின்வரும் கதைப் பொருட்கள் குறிக்கத் தக்கனவாகும்—அவலட்சணமானவருக்கு அமைதியான வாழ்வு கிடைக்காத அவதி,[55] இளம் மனைவியின் கள்ளக் காதல் சந்தேகத்தால் அவளைக் கொலை செய்யத் தூண்டும் சூழல்,[56] காரியம் ஆகும் வரை காலைப்பிடித்தும், காரியம் முடிந்ததும் கழற்றிக்கொள்ளும் பொல்லாத உலகம்,[57] விதவை என்பதால் காதலித்தவரை மணக்க மறுத்தவனுக்கு, தவறி விழுந்தவளே மனைவியாகும் விதியின் விளையாட்டு[58] என்பன.

கணவனும் பிள்ளைகளும் இயந்திரமாக இயங்க, அன்புக்கு ஏங்கும் தாயின் உள்ளமும்,[59] மனைவி உயிரைத் தந்தாலும் அவளை மறந்து மணமான காதலியை நாடி அவளிடமே சூடுபட்டுத் திரும்பும் ஆண் பூனைகளின் போலி வாழ்வும்,[60] வழுக்கி விழுந்தவர்கள் விடுதியில் பேட்டி காணச் சென்று, அவர்களில் ஒருவரையே மணந்து கொண்டு பிரச்சனைகளை அலசி ஆராயும் தம்பதியர் வாழ்வும்[61] இதயம் இதழ்களின் கதைப் பொருட்களில் ஒருசிலவாகும்.

---

50. நெஞ்சத்தைப் பேசவிடு—மகேந்திரன்
51. காதல், காதல்...—ஏ.எஸ். ராகவன்
52. உள்ளத்தில் நல்ல உள்ளம்—அமுதவன்
53. ஆற்றங்கரையோர பங்களா—சாரதா விஸ்வநாதன்
54. வழிநடப்பு—சா. கந்தசாமி
55. மாலைமயக்கம்—இந்துமதி
56. நனைந்த இரவு—சவீதா
57. மரச்சீப்பு—மகரிஷி
58. கைமாறியபோது—லக்ஷ்மி
59. மேகம் தேடும் வானம்—அனுராதா ரமணன்
60. இரவு நேர பூபாளம்—இந்துமதி
61. இதயராணிகளும் இஸ்பேட்டு ராஜாக்களும்—ஜெயகாந்தன்

## II சிறப்பு ஆய்வு

மாத இதழ்களில் இடம்பெறும் நாவல்களை இருபிரிவுகளாகக் காணலாம். ஒருபிரிவு நாவல்களில் கதைப்பொருளும் பாத்திரப் படைப்பும் சிறந்திருக்கும்; மறுபிரிவு நாவல்களில் கதைக் கட்டமைப்புச் சிறந்திருக்கும். கதைப் பொருளுக்கும் பாத்திரப் படைப்புக்கும் அதிக கவனம் கொடுக்கப்பட்ட நாவல்களின் உள்ளடக்கத்தைப் பெண்ணினத்துப் பிரதிநிதிகள், புதிய நோக்கு, புதுமைப் போக்கு எனும் மூன்று தலைப்புகளின் கீழ் முதற்கண் நோக்கலாம்.

### பெண்ணினத்துப் பிரதிநிதிகள்

கதைப் பொருளுக்கும் பாத்திரப்படைப்புக்கும் வலு ஏற்றப் பெரும்பாலும் பெண் எழுத்தாளர்களே பாடுபடுகின்றனர் என்ற உண்மையை மாத நாவல்கள் காட்டுகின்றன. கதைகளைப் பெண்கள் விரும்பிப் படிப்பது பொதுவான இயற்கை. இதன் அடிப்படையில் தம்முடைய கருத்துக்கள் இம்மாத நாவல்கள் வாயிலாகப் பெண்களை எளிதாகச் சென்றடையும் என இவ் எழுத்தாளர் கருதினர் எனலாம். இவ்வாறு கருதும் எழுத்தாளர் பெண்களையே தலைமை மாந்தர்களாகப் படைக்கின்றனர். சமூகத்தில் பெண்கள் இரண்டாந்தர இனமாகக் கருதப்படும் அநீதி இவர்கள் எழுத்துக்களில் இழையோடிக் காணப்படுகிறது. தறியில் குறுக்கும் நெடுக்குமாக ஓடும் இழைகள்போல, பெண்ணினத்தின் மனக் குமுறல்கள் இவர்தம் படைப்புக்களில் வெளிப்படுகின்றன.

பெண்ணினத்தின் சிக்கல்களைச் சுட்டிக்காட்டும் பெண் எழுத்தாளர்களில் லக்ஷ்மி தலையாய இடம் பெறுகிறார். அதிசய ராகம் என்ற இவர்தம் நாவலின் தலைவி நீலா, 'ஒருவனை நம்பி ஓடியவள்' என்ற காரணத்தால், திரும்பி வந்த பின்னும்கூட அவளை ஏற்க அவள் அண்ணன் மறுக்கிறான், இவளைச் சுற்றி வளைய வளைய வந்த ஒருவன் அதே காரணத்திற்காக அவளை ஒதுக்குகிறான். இதை அறிந்து திக்கற்ற அவளுக்கு அடைக்கலம் தந்த பழைய தலைமுறையின் பிரதிநிதி ஒருவர், 'இந்தக் காலத்து இளைஞர்களின் முற்போக்கு இவ்வளவுதானா? ஐம்பது ஆண்டு களுக்கு முன்னர் இளைஞர்கள் சமூகச் சீர்த்திருத்தங்களில் உண்மை யாக இறங்கினார்கள். தாங்கள் பேசிய சீர்திருத்தங்களைத் தங்கள் வாழ்வில் புகுத்திக் காட்டினார்கள். இப்போது உள்ள இளைஞர்கள் நிறையப் பேசுகிறார்கள். செயல் என்று வரும்போது கோழைகளாக ஓடிவிடுகின்றனர்' என்று குமுறுகிறார்.

ஒருத்தியை உயிராய்க் காதலித்த ஒருவன், அவள் ஓர் இளம் விதவை என்று தெரிந்து கொண்டதும் துடித்துப் போகின்றான். ஆண்களின் இந்த நயவஞ்சகப் போக்கினால் பெண்கள் கவலையடையலாகாது என்று லக்ஷ்மி படைத்த சம்யுக்தா சிந்தனை செய்கிறாள்.[62] உலகில் பிறந்த எல்லாப் பெண்களும் ஒரு ஆண் மகனைத் திருமணம் செய்துகொண்டு பிள்ளைகள் பெறும் இயந்திரமாக வாழவேண்டும் என்ற நியதி ஏதும் இல்லையே... ஒருசில பெண்கள்.. தாங்கள் செய்யும் தொழிலுக்குத் தங்களை அர்ப்பணம் செய்துகொண்டு... தங்களது உழைப்பால் பலரை வாழவைக்கலாமே! அப்படிப்பட்ட பெண்கள் தங்கள் தொழிலையே திருமணம் செய்து கொண்டவர்கள்' எனும்கூற்று, பெண்கள் தனியாக வாழவும் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற கருத்தினை எதிரொலிக்கிறது.

லக்ஷ்மி எழுதிய 'அவனும் ராமன்தான்' என்ற கதையின் தலைவன், தன் மனைவியது கற்பில் சந்தேகப்படும்போது புராண காலத்து நாயகர்களைத் துணைக்கு அழைக்கிறான்.

பெண்ணினத்துக்கு இழைக்கப்படும் கொடுமைகளை எதிர்த்துத் தலைமைக் குரல் எழுப்பும் லக்ஷ்மி, கொடுமை புரிந்து தப்பியோடும் கயவர்களைக் கண்டுபிடிக்க, துப்பறியும் பெண் பாத்திரங்களை உருவாக்க முயல்கிறார். இம் முயற்சியால் உருவானவள், 'சாரதா' என்ற நாற்பத்தைந்து வயதுப் பெண்ணாவாள். இவள் காவலர்களின் துணைகொண்டு, அவர்கட்குப் பல செய்திகளைப் புலப்படுத்திச் சமூக விரோதியைப் பிடிக்க உதவுகிறாள்.[63]

இவருடைய எழுத்தைப் பற்றித் தன் கதைக்கருத் தேடலில் விமரிசனம் செய்துள்ள ராஜேந்திரகுமாரின் குறிப்பு சுவை பயப்பதாயுள்ளது[64]

பெண்களுக்காகக் குரலெழுப்பும் எழுத்தாளர்களில் அனுராதா ரமணன் அடுத்ததாகக் குறிப்பிடத்தக்கவர் ஆவார். 'தேனீக்கள் மாம்பூக்களிலிருந்து மலர்த்துகளை எடுத்துச் செல்வது...தம்மால் கவர்ந்து கொள்ளப்பட்ட மகளிரை முரடர்கள் நகத்தால் கீறித் துன்புறுத்தித் தலைமேல் தூக்கிக்கொண்டு போவது போலிருக்

62. கைமாறியபோது—குங்குமச்சிமிழ்
63. இருளில் தொலைந்த உண்மை—கதைக்கதிர்
64. மகளிர் மட்டும்—ராணிமுத்து

கிறது[65] என்ற இவரது சிந்தனை, கவித்துவம் நிறைந்தது மட்டுமல்லாமல், இயற்கையும்கூட பெண்ணினத்துக்கு எதிராகச் செயல்படுகிறது என்கிற உணர்வைத் தோற்றுவிக்கிறது.

பெண்ணினத்தைப் புழுபூச்சியாகவும், அடிமாடாகவும் இந்தச் சமூகம் கருதுகிறது என்பதைச் சிவசங்கரி வெளிப்படுத்துகிறார். தங்களுடைய அடங்கிய வாழ்வும், பிறர் தங்களை அடக்கும் வாழ்வும் பிடிக்காமல் தாயைவிட்டுத் தனயன் ஓடிப்போய் விடுகிறான். ஓரிடத்தில் அவன் வேலை பார்ப்பதாக அறிந்த 'பெற்ற மனம்' வேதனை மீதூர அவனைப் போய்ப் பார்க்கிறது. அவன் புன்னகையோடு தத்துவம் தருகிறான். 'புழுபூச்சியாட்டம் வாழறதைவிட உழைச்சி வாழற இந்த வாழ்க்கை சத்தியமா உசத்தியாதாம்மா இருக்கு. நீங்களும் யாருக்கும் பயப்படாம நிமிர்ந்து வாழ்ந்து பாருங்க, அப்பத்தான் நான் சொல்றது புரியும்'.[66]

இந்துமதியின் வரிகளில் பெண் விடுதலையுணர்வு வெளிப் பட்டாலும், அவை அழுத்தம் பெறாது, பாலுணர்வின் அடிப் படையில் ஆணினம் மீதான வெறுப்பையும் அருவருப்பையும் தூண்டி விடுகின்றது என்று கூறலாம். சான்றாக ஒரு கதையில் இடம்பெறும் இரு இடங்களை இங்குச் சுட்டலாம்.[67]

''இப்போதெல்லாம் அம்மாவை நினைத்தால் எனக்குள் ஒரு வருத்தம் ஏற்படுகிறது. இந்த ஐம்பத்தாறு வருடங்களில் என்ன சாதித்திருக்கிறாள்? எதை அனுபவித்திருக்கிறாள்? அவள் அனுபவித்திருப்பதாகச் சொல்லக்கூடிய ஒன்று அப்பாவிடமிருந்து பெற்ற சரீர சுகம் மட்டும்தான். அதுகூட வெறும் சரீரத்திற்கு அந்த நேரத் தேவைக்குக் கிடைத்த சுகமாக மட்டும் இருந் திருக்குமே தவிர, ஆத்ம சுகமோ, மனசு பூர்த்தியான திருப்தியோ இருக்காது... அதுமட்டுமில்லை, அந்த நேரத் தேவை என்பது அப்பா சம்பந்தப்பட்டதாகத்தான் இருந்திருக்கும்''

''அதனாலே ஒருபோதும் நம்ம பழக்கம் உங்க அக்காவுக்குத் தெரியக்கூடாது. உன்னைக் கல்யாணம் பண்ணி, கூட வச்சுக்கிறது அதனாலே நடக்காத காரியம்''

---

65. அழத்தெரியாத அம்பிகைகள்—மெட்டி
66. பாசம்—ராணிமுத்து
67. மாலை மயக்கம்—குங்குமச்சிமிழ்

''வெல்டன் மிஸ்டர் கணேசன், சுற்றி வளைச்சு சொன்னாலும் நீ பொண்டாட்டியா இருக்க லாயக்கில்லேடி, வேணும்னா வைப்பாட்டியாக இருங்கிறதை இதைவிட அழகா வேறு யாராலும் சொல்ல முடியாது... மனுஷன் புத்திசாலி... செஸ் விளையாட்டில் ராணியை மேட் பண்ணவும் அடுத்து உடனே விடுதலை செய்யவும் தெரிஞ்சு வச்சுண்டிருக்கிற புத்திசாலி''.

இவற்றினும் மேலாக, 'இரவு நேர பூபாளம்' எனும் நாவலில் உடலுறவு அனுபவித்த ஒரு பெண், அதன் 'மகத்துவத்தை' ஆணிடம் கூறுகிறாள். இதுபோன்ற கதைகள் பாலுணர்வைத் தூண்டிப் பண்பாட்டைக் குலைக்கின்றன என்று இந்த எண்பத்து மூன்றாம் ஆண்டில் அரசியல் மாத இதழ் ஒன்று கடுமையான திறனாய்வில் குறை கூறியது.

இவருடைய எழுத்துக்களால் 'கவரப்பெற்ற' ஹேமா ஆனந்த தீர்த்தன் இவ்வெழுத்துக்களைத் தமது வழிகாட்டியாகக் கொண்டதுமல்லாமல், 'அளவுக்கு மிஞ்சினால்' என்ற தமது நாவலில் பாராட்டவும் செய்கிறார். ''சில மடிசஞ்சிப் பெண் எழுத்தாளர்கள் போல'' 'ஒரு பெண்ணின் புடவைத் தலைப்பு காற்றில் பறந்தது என்று எழுதினாலே, அந்தப் பெண்ணின் கற்பே காற்றில் பறந்துவிட்டதாக நினைக்காமல், துணிச்சலாக, பெண் மனத்தின் விகாரங்களையும்கூட ரியலிஸ்டிக்காக இந்த எழுத்தாளர் எழுதுவது அவனுக்குப் பிடித்திருந்ததால் அவர் எழுத்துக்களை விரும்பிப் படிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தான்'' —என்று பாலுணர்ச்சி மேலோங்கித் துடிக்கும் தம் கதைத் தலைவனுடைய பண்பைப் புலப்படுத்துகிறார்.

ஆணினத்தின் அதிகாரப் போக்குகளைச் சுட்டிக் காட்டுவதைத் தம் கதைகளின் தலையாய தன்மையாகக் கொண்ட எழுத்தாளர் ஜோதிர்லதாகிரிஜா ஆவார். 'சிட்டுக்குருவிக் கென்ன கட்டுப்பாடு' என்ற நாவலில் இவர் புதியதொரு சிந்தனையை நாடத் தலைப்பட்டுள்ளார். வாயில்லாப் பூச்சியாக வாழும் ஒரு கணவனை, மனைவி இழித்துப் பேசி வசைமாரி பொழிகிறாள், அந்த வீட்டு வேலைக்காரி அவன்மீது இரக்கம் கொள்கிறாள். கணவனிடம் உதைவாங்கியே செத்துக் கொண்டிருந்த அந்த வேலைக்காரியும், மனைவியின் அடக்குமுறையில் அடங்கிவிடுகின்ற கணவனும் கதை முடிவில் இணைகின்றனர்; இணையாகின்றனர். இருபாலரிலும் அடக்கலும் அடங்கலும் உண்டு என்பதை இவர் தம் படைப்புச் சுட்டுகிறது எனலாம்.

'ஆண்களும் ராமன்களே' என்று லக்ஷ்மி குறிப்பிட, 'இவர்கள் ராமன்கள் அல்லர்; ராவணர்கள்' என்று விமலா ரமணி எழுதுகிறார். காதல் கொண்டு மணந்த மனைவியின் கற்பில் காலப் போக்கில் ஐயுமுற்ற கணவனைச் சாடுகிறாள் இவர் படைத்த கதைத் தலைவி.[68] "...எனக்கு வாழ்வே சிறை...எனக்கு வாழ்வே ஒரு அசோகவனம்... இந்த கோசல்ராம், ராமன் இல்லை. ராவணன்! சொந்த மனைவியையே சிறை வைத்திருக்கும் ராவணன். இந்த ராவணன் ஆட்சியில் ஒரு லங்கா தகனம் நடக்கப் போவதும் இல்லை. இந்த சீதைக்கு ஒரு மீட்சி கிடைக்கப் போவதும் இல்லை... வாழ்வில் மனங்கள் பொருந்தவில்லையென்றால் திருமணங்கள் மரணங்கள்தான்" என்று அவள் சிந்தனை தொடர்கிறது.

**புதிய நோக்கு**

ஆண் எழுத்தாளர்களுள் குறிப்பிடத்தக்கதொரு சமுதாயச் சிந்தனையை நிகழ்காலப் பின்னணியோடு எதிர்காலத்தை நினைத்துப் பார்க்கும் வண்ணம் தொட்டுக்காட்டியிருப்பவர் பாலகுமாரன் ஆவார். ஆண்கள் விடுதியைச் 'சேவல் பண்ணை'யென்று இவர் குறிப்பிடுகிறார். இந்நாவல் ஆண்கள் விடுதியில் தங்கியிருப்போரின் மனப்போரட்டங்களை எடுத்துக் காட்டும் வண்ணம் அமைந்துள்ளது.

'ஒருத்தனுக்குப் பெண்டாட்டி
ஒருத்தனுக்குக் காதலி
இன்னொருத்தனுக்கு விபசாரி'

இவர்களுக்கு நடுவில் கட்டுப்பாடான வாழ்க்கையைச் சற்றேனும் தளர்த்த விரும்பாது இவர்களுடன் போராடும் ஒருவன். இவர்களது விடுதி வாழ்க்கையின் அவலங்களை இந்நாவலில் விளக்கிவிட்டு இறுதியில் ஆசிரியர் பின்வருமாறு முடிக்கிறார் :

"முதிர் கன்னிகள் மட்டுமா இங்குப் பிரச்சனை.
முப்பது வயசு இளைஞனின் மனசும் இங்குப் பிரச்சனைதான்
சௌதாமினி, சேவல்கள் கம்பீரமாகத் திரிவதாக நினைத்துக்
கொண்டிருக்கிறாய்.
இல்லை சௌதாமினி, இங்கு அதிக சேவல்கள் நோயுற்றுக்
கிடக்கின்றன.

---

68. லங்கா தகனம் - திரைக்கதிர்.

இந்த நோய்ப்பட்ட சேவல்களில் உண்டான முட்டைகளை நீங்கள் அடைகாத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

வீரியமான குஞ்சுகள் வருமென்று காத்துக் கொண்டிருக் கிறீர்கள். எனக்குச் சந்தேகமாக இருக்கிறது, நாம் அனைவருமே இதுபற்றி யோசிக்கவேண்டும்.''

'நமது எல்லா வாழ்க்கை அனுஷ்டானங்களும் வரையறுக்கப் பட்ட சாஸ்திர எல்லைக்குள் அடங்கியவை. அதை அதிலிருந்து எடுத்துவிட்டால்அங்கே வெறுமைதான் மிஞ்சும்' என்ற தத்துவத் தைத் தம் நாவலில் மெய்ப்பிக்க முயல்கிறார் மகரிஷி. 'பரதேசிக் கோலம் படிதாண்டி விட்டது' என்ற அந்நாவலின் தலைவி தன்னுடைய புரட்சியைத் 'தாலிகூட வேண்டாம்' என்று பிரகடனப்படுத்துகிறாள். காதலித்து அவளை மணந்த கணவன், ''நான் இந்த மண்ணை நேசிப்பவன் மட்டுமல்ல—இந்த மண்ணின் அடிப்படைத் தத்துவங்களையும் நேசிப்பவன்... எத்தனையோ ஆண்டுகளாக நமது மூதாதையர்கள் அங்கீகரித்துக் கொண்ட சாஸ்திரரீதியானவைகள். அவை போன்றவொரு மனித ஒழுக்க நெறிச் சட்டங்களை நம்மால் இனி படைக்க முடியாது'' என்று கொள்கையளவில் மட்டுமே அவளது புரட்சியை ஏற்கிறான். நாளும் குறுக்கிடும் பல பிரச்சனைகளில் அவள் சிரமத்தை உணர் கிறாள். சமுதாயத்தில் தான் தனித்துவிடப்பட்டதாக உணர் கிறாள். இறுதியில் அவளும் ''மனைவியா வர்ரவ யக்ஞம், தேவ பூஜை போன்ற லௌகிக, பரமார்த்திக காரியங்களில் கணவனுடன் இருந்து உதவணும். நற்காரியங்களுக்குப் புருஷனோட இவ இருக்கணுங்கிறதுனாலே தான் இவளுக்குப் பத்தினின்னு பேரு...'' என்ற விளக்கத்தின் உண்மையை உணர்ந்தவள் போல் புதுமை எண்ணத்தை நழுவவிட்டுப் பழமையைத் தழுவுகிறாள்.

வாழ்க்கையில் தவறிய பெண்களுக்கு அடைக்கலம் தரும் விடுதியொன்றில் பெண்ணொருத்தியைப் பேட்டி காணச் செல் கிறான் ஒருவன். அவளுடைய வாழ்க்கையை முழுவதுமாக அறிந்து கொள்ளாமலேயே அவன் அவளை விரும்பி மணக்கின்றான். பின் இருவரும் தம் மனத்தைத் திறந்து கருத்துக்களைப் பரிமாறிக் கொள்கின்றனர். அதன் மூலம் இருவர் மனமும் பக்குவமா கின்றன. இப்போக்குடைய நாவலொன்றை ஜெயகாந்தன் படைத் துள்ளார்.[69]

69. இதய ராணிகளும் இஸ்பேட்டு ராஜாக்களும்—இதயம்

## புதுமைப்போக்கு

தற்போதைய வார இதழ்களில் ஒருபக்க 'குறுங்கதைகள்' இடம்பெற்று வருகின்றன ஒருபக்கச் செய்திகளைவிட துணுக்கு களே வரவேற்கப்படுகின்றன. துணுக்குகளுக்காகவே பல இதழ்கள் வெளிவரத் தொடங்கியுள்ள காலக்கட்டம் இதுவாகும். காலத்திற் கேற்ப நாவலின் உணர்த்துமுறை குறுகிவிடுவதை மாத நாவல் களின் ஆய்வு புலப்படுத்துகின்றது. இதற்கேற்ப, சிறிய, கவர்ச்சி யூட்டும், புதுமையான, விறுவிறுப்பான கதைப்பொருள்களே மாத நாவல்களில் இடம்பெறுவதைக் காண்கிறோம். மாத நாவல்களின் இத்தகுதி தனித்தன்மையைத் தம் நாவல்களில் முழுக்கப் பயன் படுத்தியோரென அமுதவன், ரமணீயன் ஆகியோரைக் குறிப்பிட லாம்.

ரமணீயனின் 'இன்னும் சில விபரீதங்கள்' என்ற நாவல், தமக்குக் கைவரப் பெற்ற கூடுவிட்டுக் கூடுபாயும் வித்தையைச் சோதிக்க முயன்ற இரு நண்பர்களின் கதையைக் கூறுகிறது.

அமுதவன் எழுதிய 'உன்னை விடுவேனா?' என்ற நாவல், இறையருள் கைவரப் பெற்ற—முக்காலமும் உணர்ந்த பெண் ணொருத்தியைக் காட்டுகிறது. 'பட்டிக்காட்டுப்பெண் வேண்டாம், என்று பட்டணத்து வாலிபன் அவளிடமே சொல்ல, அவள் 'உங்களையே மணப்பேன்' என்று உள்மன ஆணைப்படி உறுதிகூறி, இறுதியில் அவனையே மணக்கிறாள். இவர் எழுதிய 'ஒருநாள் நிலா' என்ற நாவல் இருபாலர் மீதும் வெறுப்பு கொண்ட—'இரு பாலுமற்ற'—அலிப்பாலொன்று இருபாலரையும் கொலை செய் வதற்கான சூழல்களையும் காரணங்களையும் சுவைபடச் சொல்கிறது.

## அமைப்பு முறை

மாத நாவல் எழுத்தாளர்களில் மற்றொரு பிரிவினர் கதையின் அமைப்பில் (உருவம்) கவனம் செலுத்துகின்றனர். உணர்த்தும் திறனில் புதிய உத்திகளைக் கையாண்டுள்ளனர். இவர்கள் கதை மாந்தருக்கும், கருப்பொருளுக்கும் இரண்டாம் இடம் தருகின்ற னர். இவ்வகை எழுத்தாளர்களில் குறிப்பிடத் தகுந்தோர் ராஜேந்திரகுமார், ராஜேஷ் குமார், பட்டுக்கோட்டை பிரபாகர் என்போராவர்.

ராஜேந்திர குமாரின் 'மகளிர் மட்டும்' என்ற நாவல் ஆசிரியரின் டைரிக்குறிப்புடன் தொடங்குகிறது. கதைக்கான கரு பற்றிய

யோசனையில் ஆசிரியர் ஆழ்ந்திருக்கும் நிலையை அவர் டைரி காட்டுகிறது. திரைப்படங்களில் நகைமாந்தர்களாகக் காட்டப் படும் காவல்துறையினர்க்கு முக்கியத்துவம் தந்து கதை எழுத வேண்டும் என்ற ஆசிரியரின் விருப்பம் இதில் புலப்படுகிறது. தோழமை எழுத்தாளர்களான லக்ஷ்மி, கோவி, மணிசேகரன், ஜோதிர்லதா கிரிஜா முதலிய எழுத்தாளர்களைப் பற்றிய அங்கதக் குறிப்புக்களையும் மறைமுகமாக இந்நாவலில் குறிப்பிடுகிறார்.

'உன்னோடு என் உறவு' என்ற நாவலில் 'ஒரு இடைச்செருகல்' என்று பதினைந்து வருடங்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சியொன்றை விளக்கிவிட்டு இறுதியில் "மன்னிக்கவும்; இந்தச் சம்பவம் 1966இல் நடந்த பழைய கதை" என்று இவர் குறிப்பிடுகிறார். இதேபோன்று 'கதையில் மீண்டும் ஒரு இடைச் செருகல்' என்று கதையின் தலைவி 1966இல் கொலை செய்யப்பட்ட சம்பவத்தைக் காட்டுகிறார்.

இவர் போன்று ராஜேஷ்குமாரும் கதை உணர்த்துமுறைக்கு முதலிடம் தருகிறார். 'இனிமைக்கு இன்னொரு பெயர் அனிதா' என்ற தம்முடைய நாவலின் தொடக்கத்தில் இரு பாத்திரங்களை அறிமுகம் செய்துவிட்டு, "இந்த நாவலுக்கு இவர்கள் இரண்டு பேரும்தான் பிரதான பாத்திரங்கள் என்று நீங்கள் நினைத்தால் அந்த நினைப்பு தப்பு, கதையின் ஒருவழியில் இவர்கள் இரண்டு பேருமே கழன்று கொள்வார்கள்" என்று இவர் குறிப்பிடுகிறார். ஐந்தாம் அத்தியாயம்வரை அவர்களோடு தொடர்புடைய நிகழ்ச்சி களை விளக்கிவிட்டு," ...நம்ம வேலை முடிஞ்சாச்சு. ராஜேஷ் குமாருக்கு டாட்டா காட்டிட்டு போயிட்டே இருப்போம்" என்று தம்பங்கை அவர்கள் முடித்துக் கொள்கின்றனர். இவர்கள் கதையில் குறுக்கிடும் இடங்கள் தனி அச்சில் வார்க்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

பட்டுக்கோட்டை பிரபாகர் எழுதிய 'வா' என்ற நாவலில், திருமணமான தன் பழைய காதலியைக் கதைத்தலைவன் சந்திக் கின்றான். அவளோடு பழகிய நினைவுகள். அவன் எழுதி வைத்த பழைய டைரியிலிருந்து திரும்ப வந்து இவனைத் தாக்குகின்றன. பழகிய பழைய நிகழ்ச்சிகளும் டைரிக்குறிப்புகளும் தனித்தனி அச்சில் வார்க்கப்பட்டுள்ளன. சான்றாக ஓரிடத்தை மட்டும் இங்குச் சுட்டலாம்;

> "பார்வைங்கிறது எத்தனை பெரிய வரப்பிரசாதம் தெரியுமா பிருந்தா? மணிக்கணக்கா பேசறதைவிட சில வினாடிகள் உன்னைப் பார்ப்பதைத்தான் விரும்புகிறேன்"

பார்த்துக் கொண்டே யிருந்தோம். ரொம்ப நேரம், ரொம்ப நேரம். இரவு வந்து எங்கள் பார்வையைத் தடுத்தது. 'பார்வை ஒன்றே போதுமே... பல்லாயிரம் சொல் வேண்டுமோ' என்பது வெறும் சினிமா பாடல் இல்லை. அனுபவத்தில் விளைந்து வந்த வாக்கியங்கள். I love to see her. I love to be seen by her.

1971 மார்ச் 19 மோகன் டயரியிலிருந்து

மரபுகளிலிருந்து விடுதலை பெற்றுப் புதுக்கவிதைகள் தோன்றியதுபோல, தொடக்கம், சிக்கல், ஆர்வநிலை, சிக்கல் அவிழ்தல், ஆர்வம் தணிதல் என்ற வழக்கமான கதையமைப்புக்கு மாறாக, இக்கதைகள் புதுமையான கதையமைப்பினைக் கொண்டுள்ளன. புதுக் கவிதைகளின் 'தோற்றத் தாக்கம்' மாத நாவல்களின் அமைப்பு முறையில் புலப்படுவது மட்டுமன்றி அந்நாவல் ஆசிரியர்களுடைய உணர்த்தும் முறையிலும் வெளிப்படுகிறது. மாத நாவல்கள், பிற நாவல்களிலிருந்து இத்தகு தன்மையாலும் வேறுபடுகின்றன.

**சூழல் உணர்த்தும் நாவல்கள் (குற்ற உணர்வும் சமகாலக் கருத்து வேறுபாடும்)**

அறிவியலும் ஆலய வழிபாடும் நிரம்பி வழியும் இக்காலத்தில் அதற்கேற்ப நிரம்பித் ததும்பும் கொலை, கொள்ளை, கடத்தல், கற்பழிப்பு போன்ற நிகழ்வுகள் எழுத்தாளர்களை மிகவும் கவர்ந்துள்ளன எனக் கருத இடமுண்டு. எதிலுமே விரைவைக் காட்டுகின்ற இந்த இயந்திரக் காலத்தில் எழுதுவதும் படிப்பதும் கூட விரைவாக ஆகிவிட்ட மாற்றத்தையே இந்நாவல்கள் காட்டுகின்றன எனலாம். இத்தகு நாவல்களைப் படைப்பதில் புஷ்பா தங்கதுரை, ராஜேஷ் குமார், ராஜேந்திரகுமார், பட்டுக்கோட்டை பிரபாகர், சவீதா, இந்துமதி ஆகியோர் ஆர்வங்காட்டுகின்றனர்.

குடும்பப்பாங்கான நாவல்களைப் படைத்துவரும் நாவலாசிரியை லஷ்மியும் 'சாரதா' என்ற நாற்பத்தைந்து வயது விதவையைப் பெண்ணினத்துப் பிரதிநிதியாகவும், ரங்கநாதன் என்ற காவல்துறை அதிகாரியை அவளுக்குத் துணை புரிபவராகவும் படைத்துக் காட்டத் தொடங்கியுள்ளார். சாரதாவும் ரங்கநாதனும் சேர்ந்து பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளுக்குத் தீர்வு காண்கின்றனர். இவர்கள் தோன்றும் இரு நாவல்

களை எண்பத்துமூன்றாம் ஆண்டில் மாத நாவல்களாக லக்ஷ்மி எழுதியுள்ளார்.[70]

விந்தன்—சாம்பு, தமிழ்வாணன்—சங்கர்லால், சுஜாதா—கணேஷ், புஷ்பா தங்கதுரை—சிங் என்ற இவ்வரிசையில், லக்ஷ்மி—சாரதா புதிய சேர்க்கையாகும்.

குற்ற உணர்வுகளின் அடிப்படையில் (Based on Crime subjects) நாவல்கள் விரைந்தும் மலிந்தும் எழக் காரணமாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்: நகர வாழ்வில் அடிக்கடி நிகழும் வங்கிக்கொள்ளை, முகமூடிக் கொள்ளை, கொலை செய்து கொள்ளை, வரதட்சணைக் கொடுமையால் மண்ணெண்ணெய் ஊற்றப்பட்டுப் பலியாகும் மருமகள்கள் முதலிய செய்திகள். மக்களுக்கு இச்செய்திகள் அச்சவுணர்வை ஊட்டினாலும் இச் செய்திகள் தரும் விறுவிறுப்பு அவர்களுக்கு ஆர்வமூட்டுகிறது. இவர்கள் உணர்வுக்கேற்ப நாளிதழ்களும் இத்தகு செய்திகளைப் பரபரப்புடன் வெளியிடுகின்றன. குற்றவாளிகளைத் தூண்டிய உணர்வும், அவர்கள் திட்டமிட்டுச் செய்த குற்றங்களின் 'அடி முதல் முடிவரை' விவரமும் நாளிதழ்களில் வெட்டவெளிச்சமாகின்றன. 'திரைப் படத்தைப் பார்த்துக் கொலை செய்தேன்' என்ற வாக்குமூலத்தையும் இக்காலக் குற்றவாளிகள் தருகின்றனர். எனவே குற்றங்களைத் திறமையாக மறைப்பதன் மூலம் ஆர்வ நிலையை எளிதாக எழுப்ப இயலும் எனக் கருதி, ஒருபிரிவு எழுத்தாளர்கள் 'விறுவிறுப்பான' மாதநாவல்கள் வரிசையில் 'பரபரப்பான' துப்பறியும் நாவல்களைப் படைக்கத் தொடங்கினர் எனலாம்.

**சமகாலக் கருத்து வேறுபாடுகள்**

எழுத்தாளர்ப் பிரிவுகளிடையே இருக்கும் கருத்து வேற்றுமைகளையும், கருத்தொற்றுமைகளையும் மாத நாவல்கள் புலப்படுத்துகின்றன. பட்டுக்கோட்டை பிரபாகர், 'ஒரு எழுத்தாளன் காசு வருதுங்கிறதுக்காகப் பக்கம் பக்கமாகக் காம சூத்திரமே எழுதறான்' என்று கருதுகிறார்.[71] ஹேமா ஆனந்ததீர்த்தன் கருத்து வேறு விதமாக உள்ளது; 'நம்ம எழுத்தாளர்கள்ல சிலரைத் தவிர மத்தவங்கள்ளாம் கோழைகளோன்னு சந்தேகமா இருக்கு. நல்ல சிச்சுவேஷன் வர்றப்ப அதை வர்ணிச்சு எழுதறதுக்கு

---

70. இருளில் தொலைந்த உண்மை—கதைக்கதிர்
அவனும் ராமன்தான்—நவரத்தினம்

துணிச்சல் இல்லாம அஞ்சாறுபுள்ளி வெச்சுடறான்'. தம்கருத்துக்கு இந்துமதியும் இயைந்து பேரவதாக, அவர் எழுதிய கதைப் பகுதியையும் ஆசிரியர் துணைக்கிழுக்கிறார்.[72]

மாத நாவல்களின் வாயிலாக இலக்கியத் தரம் பற்றிய சிக்கல் களையும் அறிந்து கொள்ள முடிகிறது. தமிழ் நாவல்களில் ஆபாசம் மலிந்துவிட்டது என்ற கருத்தில் அரசியல் மாத இதழ் ஒன்று குறிப்பிட்ட சில எழுத்தாளர்களைக் குறைகூறி இவ்வாண்டில் சில கருத்துக்களை வெளியிட்டது. அதற்குப் பதிலளிக்கும் வகையில் 'அளவுக்கு மிஞ்சினால்' என்ற நாவலில் 'தற்காலத் தமிழ்ச் சிறு கதைகளிலும் நாவல்களிலும் ஆபாசம் மலிந்துவிட்டதா?' என்பது பற்றிய பட்டிமன்ற விவாதம் இடம்பெற்றுள்ளது. குறைகூறிய அரசியல் இதழுக்கு ஆசிரியரின் பதில் போல இப்பகுதி அமைந் துள்ளமை குறிப்பிடத்தக்கது.

## சில முடிவுகள்

நாவல்களை மேடை நாடகங்கள் எனலாம், மாத நாவல்களை ஓரங்க நாடகங்கள் எனலாம். சிறுகதைகளுக்குரிய கதைப்பொருட் கள் சற்றே வளர்ச்சி பெற்று மாதநாவல்களில் இடம் பெறுகின்றன. மாத நாவல்கள் நுவலும் இக்கதைப் பொருட்கள் அழகான எதிர் காலத்தையும் ஆழமான பாதிப்பையும் இச்சமூகத்திற்குத் தர மாட்டா. எனினும், அன்றாட வாழ்க்கையில் தவறு நேரும் போதெல்லாம் எச்சரிக்கை செய்யும் சிவப்பு விளக்குகளாக இவை தெரிகின்றன. இவையெல்லாம் சிந்தனை நெடுஞ்சாலைக்கு நம்மை இட்டுச் செல்ல மாட்டா. எனினும் இக்கால வாழ்க்கை யனுபவத்தின் ஒளி நுழையாத குறுகிய சந்துகளுக்கும் நம்மை இட்டுச்சென்று சமகால வாழ்வைச் சுட்டிக் காட்டுகின்றன. இந்த வகையில் மாத நாவல்கள், காலத்தின் தேவையை உணர்ந்து எழுந்த புதியதொரு நாவல் வகைமை எனலாம்.

---

71. ஜனவரி, பிப்ரவரி, மார்ச்சுவரி—மாலைமதி
72. அளவுக்கு மிஞ்சினால்—மெட்டி

# பின்னிணைப்பு

## ஆய்வு அமைப்பு



# குறுநாவல்

இராம. குருநாதன்

*தமிழ் இதழ்கள் குறுநாவலுக்கும் இடம் தந்துள்ளன. இவ்வாண்டின் ஆறு இதழ்களில் இத்தகு இருபத்தாறு கதைகள் அமைகின்றன. காதல், குடும்பம் ஆகியவற்றால் பின்னப்பட்ட நிகழ்ச்சிகளையே இவற்றில் பெரிதும் காணமுடிகின்றது. பொதுவாக, சமுதாய அவலங்களை எல்லாக் குறுநாவல்களும் காட்டியுள்ளன. கணையாழி ஏற்படுத்திய குறுநாவல் போட்டி காரணமாக இவ் இலக்கிய வகையின் எண்ணிக்கை கூடியதுடன் வளர்ச்சியும் காணப்படுகின்றது.*

## 1

'எழுத்து ஒரு தவம்' என்பது இலக்கிய மரபில் நிலைத்து விட்டது. இதனைப் புரிந்துகொண்டு எழுதுவோர் ஒரு சிலரே. எதையாவது எழுதிக் கதையாக்கி விடுவது கலையாகிவிடாது. பலர் அதைத்தான் கலை என்று புரிந்து வைத்திருக்கிறார்கள். கதை, படைப்பாளன் பார்வையில் சிறுகதையாகச் சுருங்குவதும், நாவலாக விரிவதும் படைப்பின் நுட்பத்தைப் பொறுத்ததாகும். எதைச் சொன்னாலும் எப்படிச் சொல்லியிருக்கிறார்கள் என்பதில் தான் இலக்கியத் தேடல் சிறக்கிறது. எடுத்துக் கூறும் திறத்தால் படைப்பின் மெருகும் கூடுகிறது. எண்பத்துமூன்றாமாண்டுத் தமிழ் இதழ்களில் வெளிவந்த குறுநாவல்களில் மேலே கூறிய கருத்திற்கு ஒத்துப் போகும் கதைகள் மிகச் சிலவே!

இதழ்கள் தத்தம் வசதிக்கு ஏற்பவே குறுநாவல்களை வெளியிடுகின்றன. ஆயின் இந்திந்தக் கதைகள், இவ்விவ்வாறு, இன்னின்ன இதழ்களில் வெளிவரும் என்பதை எளிதாய்க் கூறிவிடும் போக்கைச் சுட்டிச் சொல்லி விடலாம். கலைமகளில் வெளிவரும் கதைகள் இன்ன ரகமானவை என்று கூறிவிடுவதைப் போல அமுதசுரபியிலும், மங்கையர் மலரிலும் இடம் பெறும் கதைகளையும் எளிதாகச் சொல்லிவிடலாம்.

தினமணிக் கதிரில், இந்த ஆண்டு சுஜாதா தொடர்ச்சியாக நாலைந்து வாரங்களில் கதை எழுதிச் சென்றமை அவ்விதழைப் பொறுத்தவரை நல்ல முயற்சி.

83இல் வெளிவந்த குறுநாவல்களில் காதல், குடும்பம் ஆகியவற்றால் பின்னப்பட்ட நிகழ்ச்சிகளையே பெரிதும் காணமுடிகிறது.

83இல் வெளியிடப் பெற்ற எல்லாக் குறுநாவல்களையும் இக் கட்டுரையில் குறித்து எழுதுவது இயலாது. எனினும், ஒவ்வோர் இதழிலும் வெளிவந்த பெரும்பான்மையான குறுநாவல் களை ஓரளவு எடுத்துக்காட்டிக் கண்ணோட்டம் செலுத்தலாம்.

## 2

மங்கையர் மலரில் வெளிவந்த கதைகளில் ஒன்பது கதைகளையும், அமுதசுரபியில் வெளிவந்த கதைகளில் நான்கினையும், கலைமகளில் இரண்டினையும், தினமணிக் கதிர், தாய் ஆகிய இதழ்களில் ஒவ்வொன்றையும், கணையாழிக் கதைகளில் ஆறினையும் பற்றிய செய்திகளைக் காணலாம்.

வையவன் எழுதிய வேண்டுமடி எப்போதும் விடுதலை என்னும் கதையில், பணக்காரனான சந்திர மௌலி தன் மனைவி கீர்த்தியைக் கொடுமைப்படுத்துகிறான், கீர்த்தி வீட்டை விட்டு வெளியேறி மைசூர் சென்று 'ரீஜனல்' கல்லூரியில் சேர்ந்து படிக்கிறாள். அங்கு, கிரிஷ் என்பவனோடு நட்புக் கொள்கிறாள். கீர்த்தியின் தம்பியான முரளி, 'கீர்த்தி—கிரிஷ்' நட்பைக் கண்டு ஐயங்கொள்கிறான். கிரிஷைச் சந்தித்து உண்மை அறிகிறான். கிரிஷ் கீர்த்தியை அவளது கணவன் சந்திரமௌலியோடு இணைத்து வைக்கக் காரணமாகிறான்.

அவனும் அவளும் என்ற கீதா பென்னட்டின் கதை அமெரிக்காவில் வளர்ந்த இந்தியப் பெண் பற்றியது. அமெரிக்கப் பழக்க வழக்கங்கள் உடையவள் சுஜாதா. தியாகு என்பவன் அமெரிக்காவிற்குப் பணிபுரிய வந்தவன். சுஜாதாவைக் காதலித்து மணந்து கொண்டவன், அமெரிக்க நாகரிகத்திலேயே சுஜாதா காலங்கழிப்பதால், தியாகுவின் இந்தியப் பண்பாட்டிற்கு ஒத்துப் போக அவளால்முடியவில்லை. தன்னை அமெரிக்கக் குடிமகளாகவே காட்டிக் கொள்கிறாள். இருநாட்டுப் பண்பாடுகளும் ஒத்துப் போக இயலாததால் ஒருவரை யொருவர் பிரிந்து மணவிலக்கு ஏற்பட வாய்ப்பாகிறது.

லா. ச. ராமாமிருதத்தின் பாலா என்னும் கதையில் வரும் அம்பி என்று அழைக்கப்பெறும் சிவராமன், வங்கி மேலாளரால் பணிவாய்ப்புப் பெறுகிறான். அவர் மகள் பாலா சிறுவயதில் விபத்தொன்றால் பேச்சு இழந்தவள். அம்பியிடம் அளவு கடந்த அன்பு வைத்திருப்பவள். சிவராமனுக்குப் பணி உயர்வும் மாற்றமும் கிடைக்கிறது. தன்மேல் அன்பு வைத்திருப்பவர்களை விட்டுப் பிரிய மனமின்றிப் பிரிகிறான். திடீரென்று மேலாளரும் அவளது மகள் பாலாவும் இறந்துவிட்ட செய்தி வர, உடனே விரைகிறான். மேலாளர் எழுதி வைத்திருந்த மடலில், 'எங்களுக்கு வேறு வழி என்ன இருக்கிறது?' என்று எழுதியிருந்தது கண்டு நெகிழ்கிறான்.

அரவிந்தன் எழுதிய பொய்க்கால் குதிரை என்னும் கதையில், தன்னை வரதட்சணை இல்லாமல் மணமுடிக்க வந்த தியாகுவை ஏற்க எண்ணுகிறாள் இந்து. ஒரு சமயம் தன்னையும், தன் தோழி சசியையும் கேலி செய்த இளைஞர்களில் ஒருவனான ஹரி, தியாகுவின் தம்பி என்ற காரணத்தால், தியாகுவை ஏற்க மனம் தயங்குகிறது. ஹரி தன் தவற்றை ஒத்துக் கொண்டு மன்னிப்புக் கேட்டுத் திருந்துவதாகக் கூறிய பின்னர் தியாகுவை ஏற்கிறாள்.

பெண்ணுள்ளத்தின் அவலங்களைப் படம் பிடித்துக் காட்டும் கதையான இலட்சுமி ராஜரத்தினத்தின், குறுகலான சாலையில் பரபரப்பான விபத்துக்கள் என்பதில், தங்கவேலு வாத்தியாரின் இளைய பெண் ஜெயா மதுவைக் காதலிக்கிறாள். பணக்காரனான மது திருமணத்திற்கு முன்னரே அவளை அடைய விரும்புகிறான். ஜெயா மறுக்கவே அவன் அவளைப் புறக்கணிக்கிறான்.

ஜெயாவின் சகோதரியான பிரேமாவோ வேலை இல்லாத இளைஞனான ஆனந்தைக் காதலிக்கிறாள். ஆனால் தந்தையோ இரண்டாந்தாரமாக ஒருவனை உறுதி செய்து அவனுக்குப் பிரேமாவைக் கொடுக்க முன்வருகிறார். அவள் மறுக்கிறாள். இதற்கிடையே 'பிரேமா—ஆனந்த்' காதல் தங்கவேலுவுக்குத் தெரிகிறது. தங்கவேலு ஆனந்த் வீடு சென்று சண்டை போடுகிறார். தன் தந்தைக்குப் பயந்த ஆனந்த் பிரேமாவைத் தங்கையாய் நினைப்பதாகப் பிரேமாவிடம் கூறுகிறான். பிரேமா எவ்வளவு எடுத்துச் சொல்லியும் அவன் மாறவில்லை. தந்தை காட்டிய வரனுக்குப் பிரேமா சம்மதிக்கிறாள்.

மதுவின் விருப்பத்திற்கிணங்கிய ஜெயா 'கர்ப்ப'மாகிறாள். மது வேறொரு ஊருக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு சென்றதை அறியாத ஜெயா ஏமாற்றப்படுகிறாள்.

மனதிற்கு எத்தனை முகங்கள் என்ற கதையில், விஜி, தியாகு ஆகிய இருவரும் காதலர்கள். விஜி விடுதியில் தங்கிக்கொண்டு ஆசிரியையாக இருப்பவள். விஜியைத் திருமணத்திற்கு முன்னரே அடைய விரும்புகிறான் தியாகு; விஜி அதற்குச் சிறிதும் இடங் கொடாமல் போகவே, தியாகு கோபமடைந்து அவளைக் காண வருவதைத் தவிர்க்கிறான். இதற்கிடையில் நிர்மல்குமார் என்ற மாணவன் விஜிக்கு மடல் எழுதுகிறான். விஜி அவனுக்கு அறிவுரை கூறித் திருத்துகிறாள். ஆனால் காதலனான தியாகுவிடம் என்ன பேசியும் பயனில்லை. இறுதியில், 'காதல் என்பது காத்திருத்தல், உடம்பின் தேவைகளுக்காகச் செத்துவிடக்கூடாது,' என்று மடலில் உணர்த்துகிறாள்.

அண்ணி, அன்னை ஆனாள் என்ற கதையில் மதுரா என்பவள் ஜவஹர் பார்வையில் அண்ணி நிலையிலிருந்து அன்னையாகி விடுவதை ஆசிரியர் ரத்னா விளக்கியுள்ளார். தீவிபத்தில் மதுரா ஊமையாகிறாள்: அவளது தந்தை பெரிய தொழிலதிபர். தொழிலதிபர் கணேசனின் தொழிலகத்தில் பணிபுரியும் தினகரன் மதுராவை மணக்க முன்வருகிறான். ஆனால் மதுராவைவிடப் பணமே பெரிது என எண்ணி அவன் தன் வசதிகளைப் பெருக்கிக் கொண்டான். மதுராவிற்குத் தினகரன் தம்பி ஜவகர் தான் ஒரே ஆறுதல். தன் கணவன் வீட்டாரோடு மிகுந்த பாசங்கொண்டவள் மதுரா. ஒருநாள் தினகரனின் அம்மா தீ விபத்தில் சிக்க அவளைக் காப்பாற்றி மதுரா மயக்க மடைகிறாள். பேசும் சக்தி திடீரென்று பெறுகிறாள். மயக்கம் தெளிந்தவள் ஜவஹரிடம், தினகரன் தன்னைப் பணத்திற்காகவே மணம் புரிந்து கொண்டதைக் கூறி வேதனையுறுகிறாள். ஜவஹரே பிள்ளையாக தனக்குக் கொள்ளி வைக்க வேண்டும் என்று கூறி இறக்கிறாள்.

மாத்ரு ரூபனே என்னும் கதையில் இராமச்சந்திரன் என்பவனின் பெரியம்மாவைப் பற்றி விமலா ரமணி விளக்கு கிறார். இராமச்சந்திரன் தன் பெரியம்மாவிடம் அதிக அன்பு கொண்டவன். பெரியம்மாவின் பிள்ளை ராமுவோ அம்மாவின் நகை, பணம் ஆகியவற்றைப் பறித்துக்கொண்டு வெளியே துரத்திய பின்னர், இராமச்சந்திரன் பெரியம்மாவை அழைத்து வந்து நன்றாக நடத்த விரும்பினான். ஆனால், இராமச்சந்திரன் மனைவி லலிதாவோ காசு, நகை இல்லாமல் வந்த பெரியம்மாவைச் சரியாக நடத்தவில்லை. இராமச்சந்திரனோ மனைவிக்கு அடங்கிப் போகிறவன். பொட்டு வைக்க நீலக் குங்குமம் தீர்ந்துவிட்டதால்

அது வேண்டுமென்று பெரியம்மா கேட்கப் போய், லலிதா பெரிதாகச் சத்தம் போட்டாள். அன்று மாலை இராமச்சந்திரன் வீடு திரும்பியபோது பெரியம்மா இறந்து கிடந்தாள். ஒரு நாள் பெரியம்மாவின் மகன் ராமு, இராமச்சந்திரனுக்குத் தொலைபேசியில், தான் அறுவை சிகிச்சை செய்து கொள்ள வெளிநாடு செல்லவிருப்பதாயும், தன் அம்மா இறந்தமைக்கு வருத்தம் தெரிவித்தும், இராமச்சந்திரன் பெயரில் வங்கியில் பத்தாயிரம் ரூபாய் போட்டிருப்பதாகவும். அதிலிருந்து கிடைக்கும் வட்டியில் அம்மாவிற்குத் திவசம் செய்யும்படியும் கூறினான்.

லலிதா ஒருநாள் இராமச்சந்திரனுக்குப் புதையல் கிடைப்பதாயும், இறந்து விட்ட பெரியம்மா ஆறு மாத முன்பே வேறொரு பிறப்பெடுத்ததாயும் 'மீடியம்' வழி அறிகிறாள். புதையல் இருக்கும் இடத்தைத் தேடிப்போக ஆறுமாதக் கன்றுக்குட்டி ஒன்று நெற்றியில் நீலக்குங்குமத்தோடு இருப்பதைக் கண்டாள். பெரியம்மாவே கன்றுக்குட்டியாகப் பிறந்திருப்பதாக எண்ணி அதனை வீட்டுக்கு அழைத்து வருகிறாள் லலிதா.

கரை சேர்க்கும் தோணிகள் கதையில் பத்ரியின் தியாக மனப்பான்மையைக் கூறிச்செல்கிறார் ஆசிரியர் சுபா. பத்ரி கிராமத்திற்கு ஆசிரியர் பணி புரிய வருகிறான். தன் மாமா வெங்கடேசன் வீட்டில் தங்குகிறான். வெங்கடேசன் மகன் இரகுபதியுடன் நெருங்கிப் பழகுகிறான். சம்பளம் வராதபோது, அவனுக்கு இடமும் உணவும் கொடுத்து ஆதரவளிக்கிறார் வெங்கடேசன். வெங்கடேசனின் மூத்த மகள் கல்யாணிக்குத் திருமணம் செய்து வைக்கவும் குடும்பத்தில் நிலைமை மோசமாகிறது. பத்ரி வெங்கடேசனின் குடும்பத்திற்கு உதவ எண்ணிச் சென்னை சென்று பணிபுரிந்து வெங்கடேசனுக்குப் பணம் அனுப்பி வந்தான். வெங்கடேசனின் இரண்டாம் பெண்ணுக்குத் திருமணம் நடக்கிறது. அதன்பின் வெங்கடேசன் இறந்து விடுகிறார். தன் குடும்ப நிலையை விளக்கித் தன் கடைசி தங்கையைப் பத்ரி மணக்க வேண்டும் என்று இரகுபதி பத்ரிக்கு மடல் எழுதுகிறான், பத்ரி கிராமத்துக்கு வந்து எல்லோரையும் பார்த்தான். மூத்த மகள் கல்யாணியை அவளது பிள்ளையோடும் பிறந்தகத்துக்கு அனுப்பப்பட்ட கொடுமையை அப்போது பார்க்க நேர்ந்தது. நிலைமையறிந்த பத்ரி கல்யாணியைத் தானே ஏற்றுக் கொண்டு, இளைய மகள் உமாவிற்கு வரன் பார்த்துத் திருமணம்செய்து வைப்பதாகக் கூறிச் செல்கிறான்.

கலைமகளில் ஜெயரதன் எழுதிய பாவம் போக்கும் கங்கை என்னும் கதை சண்முகசுந்தரத்தின் மனைவி, நடிகை ரஞ்சிதா வாக மாறித் திரையுலகால் சீரழிவதைக் காட்டுகிறது. சண்முக சுந்தரத்தின் அக்கா மகள் வடிவு. அவளைச் சண்முகசுந்தரம் மணக்கிறார். ரஞ்சிதா என்ற பெயரில் சிறந்த நடிகையானதும் வடிவு கணவனைப் புறக்கணித்து விடுகிறாள். திரைப்பட உலகால் ஒழுக்கம் குறைறுகிறது, சொந்தத்தில் படமெடுத்துத் தோல்வி கண்டவள் வறுமை அடைகிறாள். யாரும் காப்பாற்ற முன் வராத நிலையில் அவளைக் கங்கைக்கரையில் அமைந்துள்ள தவீ ஆஸ்ரமத் தில் ஆயாவாகப் பணிபுரியச் செய்கிறார் சண்முகசுந்தரம்.

சண்முகசுந்தரம் வடிவைக் காப்பாற்றி ஆசிரமத்திற்கு வரச் சொல்லும் போது, 'கங்கையிலே குளிச்சாப் பாவம் போகும்னு பெரியவங்க சொல்வாங்க,' என்று அவர் அவளிடம் கூறுகிறார். அதற்கு வடிவு, 'மத்தவங்களுக்கு அது சரியா இருக்கலாம். என் கங்கை எங்கேயும் ஓடல்லே. இதோ எதிரேயே நிக்குது. இதைப் பார்த்துப் பார்த்து வழிபட்டு வழிபட்டு என் பாவத்தைப் போக்கிக்கப் போறேன். என் பாவத்தைப் போக்குகிற கங்கை நீங்கதான்' என்று கூறுவது கதையின் தலைப்பை நியாயப்படுத்தி விடுகிறது.

அமுதசுரபியில் சுபா எழுதிய கதை வெட்டுக்கிளி என்பதாகும். பொதுவுடைமைச் சித்தாந்தப் போக்குடைய உதயா, மேனன் நடத்தும் பத்திரிகைக்குச் செய்தியும் பிறவும் எழுதி வருபவள். ஸ்ரீராமால் கவரப்பட்டுக் காதலில் திளைத்து அவனை மணக் கிறாள். குழந்தைப் பேறு அற்ற நிலையில் அவளை விவாகரத்து செய்து விடுகிறான். மேனன் நடத்தும் பத்திரிகையில் மறுபடி சேர்ந்து, சீர்திருத்தம், தொழிலாளர் முன்னேற்றம், போராட்டம் ஆகியவற்றில் தன்னை இணைத்துக் கொண்டும் தீவிர மனமுடைய வளர்கிறாள். தொழிலாளர் தலைவர்கள் கைதாகவே அவர்களை மீட்கும் முயற்சியில் ஈடுபடுகிறாள். இதற்காக ஹைதராபாத் செல்லும் விமானத்தைக் கடத்திச் செல்லும் முத்தையாவிற்குத் துணை செய்கிறாள். விமானத்தினுள் உதயாவின் கைத்துப்பாக்கி யைத் தரச் சொல்லி வாஞ்சையுடன் அவளையே வளைய வருகிறாள் குழந்தை ப்ரியா. ஆனால் உதயா அந்தக் கைத் துப்பாக்கியால் குழந்தையைச் சுட்டுவிடுகிறாள்.

லக்ஷ்மி ரமணியின் உறவுகள் மென்மையானவை என்ற கதை நாகரிக மோகத்திற்கு அடிமையாகிவிட்ட பெற்றோரின் அன்பினை

வேண்டி ஏங்கித் தவிக்கும் இளைய சிறுவனைப் பற்றியது. முரளி யின் தாயும் தந்தையும் (வீணா—அசோகன்) சுகபோக வாழ்க்கையில் வாழ்நாளைக் கழிப்பவர்கள். வீணா, கணவன் ஊரில் இல்லாதபோது கூடத் தன் கணவனின் நண்பர்களோடு ஊர் சுற்றக் கிளம்புபவள். முரளியின் தாயும் தந்தையுமே புகை மண்டலத்தில் உலவி மதுவில் நீந்தி வீட்டிற்கு நெடுநேரம் கழித்து வரும் பண்புடையவர்கள். குழந்தைகளை, 'வீட்டில் உள்ள குளிர்ப் பதனப் பெட்டியைப் போல, சோபாவைப் போல, நாய்க்குட்டி யைப் போல ஒரு சாதனமாக' நினைக்கின்றனர். முரளியையும், முரளியின் தங்கையான மின்னியையும் ஆயா வளர்க்கிறாள். முரளி அம்மாவின் அன்பிற்கு ஏங்கித் தவிக்கிறான். அம்மாவோ, முரளியை விடுதியில் தங்கிப் படிக்கட்டும் என்று டேராடூனிற்கு அனுப்பி விடுகிறாள். அவனுக்கு அங்கு அர்ஜுன் என்ற நண்பனால் சிகரெட், கஞ்சா, சரஸ், அபின், ஊசி மருந்து போதை ஆகியவை பழக்கமாகிவிடுகின்றன. அம்மாவின் அன்பு கிடைக்காத சூழ்நிலை யில் இப்பழக்கத்திற்கு அடிமையாகிவிடுகின்றான். மருத்துவமனை யில் சேர்க்கப்பட்ட நிலையிலும் கூடத் தாயன்பிற்கு ஏங்கினான். தாயோ, 'முரளியைப் பற்றி நினைத்தாலே தனக்கு அவமானமாக இருக்கிறது,' என்று கூறக் கேட்ட முரளி பெற்றோரை விட்டு விலகுகிறான்.

வரதட்சணையை மையமாகக் கொண்டு எழுதப்பட்ட கதை கிருஷ்ணமணியின் ஜானு, ஜானுவின் கணவன் சீனு, அம்மாவின் தூண்டுதலால் ஜானுவுக்கு அவள் தந்தை வைரத்தோடும் தங்க மோதிரமும் போடுவதாகக் கூறியதின் பேரில் ஜானுவைத் துன்புறுத்துகிறான். அவள் தந்தையிடம் நிலைமையை விளக்க, தந்தை சதாசிவம் மகள் ஜானுவை அழைத்து வந்து மாப்பிள்ளை யிடம் 'கெடு' கேட்கிறார். சீனுவோ இருவரையும் கழுத்தைப் பிடிக்காத குறையாக வீட்டைவிட்டு வெளியேற்றி விடுகிறான். ஜானு தந்தையோடு செல்ல மனமின்றி அவ்வூரிலேயே விடுதி ஒன்றில் தங்கி ஆசிரியர் தொழிலைத் தொடர்கிறாள், தன் நண்பன் வழி இதனை அறிந்த சீனு அவளைப் போய்ப் பார்க்கிறான். 'சுத்தமான சிந்தனை உள்ளவரா, பெண்டாட்டியை ஒரு மனிதப் பிறவியா மதிச்சு நடத்தற கம்பீரமான புருஷனா இருக்கணும்னு தான் நான் எதிர்பார்க்கிறேன்,' என்று தன் திட்டவட்டமான கருத்தை எடுத்துச் சொல்ல, சீனுவோ அவளை அழைத்துக் கொண்டு வரதட்சணை என்ற எண்ணத்தைக் கைவிட்டு 'ஆண்மை'யுள்ளவனாக நடந்து கொள்கிறான்.

அவினாசி முருகேசன் எழுதிய எந்தக் கதைக்கும் ஒரு முடிவுண்டு என்ற கதை இரு காதல் உள்ளத்தின் நெகிழ்வைக் கூறுகிறது. இக்கதையில் குறிப்பிட்டுச் சொல்லும்படி எதுவுமில்லை. காதல் எத்துணை யுகங்களில் என்னென்ன வடிவங்களில் தமிழ்க் கதையுலகை ஆட்படுத்துமோ அந்தப் பாதிப்புகளை இக் கதையில் காண்கிறோம்.

ராஜகுருவின் மயக்கங்கள் என்னும் கதை, உணவு விடுதி ஒன்றில் பணிபுரியும் கோபாலன் வாழ்வில் அமுதா, கவிதா என்ற பெண்கள் அவன் மேல் கொண்டிருந்த மயக்கத்திற்கு இடந்தராமல் அவன் இராணுவ முகாமிற்குச் சென்று விடுவதை உணர்த்துகிறது.

தினமணிக்கதிரில் வெளிவந்த ஆகாயம் என்னும் கதை, தொடர்ச்சியாக ஆறு வாரங்களில் இடம் பெற்றது. ஆனந்த், காஞ்சனா, யந்திரம்—இந்த மூன்று பெயரின் எழுத்துக்களின் கூட்டுப்பெயரைக் கொண்ட 'ஆகாயம்' என்ற விண்வெளிக் கலத்தில் நடைபெறுகின்ற நிகழ்ச்சியை விவரிக்கிறது கதை. ஆனந்த், யந்திர மனிதன் ஆகிய இருவருக்கும் இடையே நிகழும் சதிச்செயலைக் கண்டு இருவரில் யாரை நம்புவது எனத் தவிக்கிறாள் காஞ்சனா. ஆனந்துக்கும், காஞ்சனாவுக்கும் அந்தக் கலத்தைச் செலுத்துவதில் சம பொறுப்புகள் வழங்கப்பட்டாலும், 'யம்' என்ற யந்திரந்தான் விண்வெளிக் கலத்தின் செயல்பாடுகளை அதிகம் தெரிந்துவைத்திருக்கிறது. ஆஸ்ட்ராய்டு 99இல் குடியேறும் சூழ்நிலையை உருவாக்க உலக அரசால் விண்கலம் ஏவப்படுகிறது. இந்த மூவரும் அதில் பயணம் செய்து செயல்பாடுகளை அறிந்து பூமிக்குத் திரும்பவேண்டும் என்பது கட்டளை. கலத்தில் பழுது ஏற்பட்டால் எப்படித் தப்புவிப்பதுஎன்பதில் ஆனந்த் யந்திரமனிதனை நம்பக் கூடாது என்றெண்ணிக் காஞ்சனாவோடு சம உரிமைத் திட்டத்திற்கு வழிவகுத்தான். தன்னைப் புறக்கணித்துவிட்ட 'ஆனந்த் காஞ்சனா' திட்டங்களை அறிகிறது யந்திரம். காஞ்சனா யந்திரத்திடமே ஆனந்த் திட்டங்களையும், யந்திரத்தின் போக்கையும் கேட்டறிகிறாள். ஆனந்த் யந்திரத்தின் சதித்திட்டத்தைக் கூறியது போலவே, யந்திரமும் ஆனந்தின் திட்டத்தைக் காஞ்சனாவிடம் கூறுகிறது, சம உரிமைத் திட்டத்தின்படி ஆனந்தும், காஞ்சனாவும் ஒரு குறிப்பிட்ட எண்ணை யந்திரத்தின் வழிப்பாதையில் அமைத்தால், அந்தக் கலத்தின் அத்துணைச் செயல்பாடுகளையும் கவனிக்கிற கணினி (கம்ப்யூட்டர்) செயல் இழந்து செத்துப் போய் அத்துணைப் பொறுப்புக்களும் அவ்விருவரின் கைகளுக்கும்

வந்துவிடும் என்ற ஆனந்தின் கருத்தை யந்திரம் காஞ்சனாவிடம் கூறுகிறது, அந்த எண்ணம் நிறைவேற முடியாது என்பதையும் எடுத்துச் சொல்கிறது. அதோடு கூட ஆனந்த் கற்பனைப் பயத் தாலும், கற்பனைப் பிம்பங்களாலும் அச்சுறுத்தப்பட்டிருக்கிறான். எனவே அவன் மனச் சிதைவுற்று இருக்கிறான் என்பதையும் யந்திரம் கூறிக் காஞ்சனாவை ஒரு முடிவுக்கும் வரமுடியாமல் செய்து விடுகிறது. ஆனந்தைச் செயலிழக்கச் செய்ய தன்னிடம் ஒரு சாவி இருப்பதை செய்தித் தொடர்பு மூலம் காஞ்சனா அறிகிறாள், 'யம்'முக்கும் இது தெரியும். தன் கட்டளைக்கு அடி பணியாத 'யம்'மைத் தாக்குகிறான் ஆனந்த். 'யம்' கழுத்து திருகப்படுகிறது. ஆனந்தால் திருகப்பட்ட கழுத்து மறுபடியும் இணைந்து ஒட்டிக் கொள்கிறது. ஆனந்தைச் செயலிழந்து போகச் செய்ய பூமியிலிருந்து ஆணை வந்ததை 'யம்' சொல்கிறது. மருந்தின் சாவி காஞ்சனாவிடத்து இருப்பதையறிந்து அவளைத் தாக்குகிறான், ஆனந்த். ஆனால் 'யம்' ஆனந்தைத் தாக்குகிறது.

பாதையிலிருந்து மாற்றிச் செல்ல நான்கு நிமிடம் இருக்கும் போது ஆனந்தை வெளியே அனுப்பிய காஞ்சனா, 'யம்'மைக் கூப்பிட்டுத் தன் கைவிரல்களில் ஒன்றைத் தொடச் சொல்வதோடு கதை முடிகிறது.

மனைவியிடம் ஐயங்கொள்வதால் மன உளைச்சல் அடைந்து, குடும்ப வாழ்வில் அமைதியுறாமல் தவிக்கும் நிலையை உணர்த்து கிறது தாய் தீபாவளி மலரில் இடம் பெற்ற ஒரு நதி குளிக்கப் போகிறது என்னும் கதை.

ருக்குமணியின் கணவனின் அக்கா பையன் சுந்தரம் அவள் வீட்டிற்கு வந்து தங்குகிறான். இயல்பான கூச்சமும் மனச்சலனமும் கொண்ட ருக்குமணி புறனுலகு அறியாதவள். சுந்தரம் அவள் வீட்டிற்கு வந்ததும் அவளது குணம் மாறுகிறது. ஒரு சமயம் சாப்பாடு பரிமாறியபோது, போதும் என்று சொல்லி ருக்குமணியின் கையைப் பிடித்துவிட, அந்நிகழ்ச்சியைக் கண்ட நடேசனின் அமைதியான மனமும் குடும்பப் பாசமும் சலனப்படுகின்றன. தன் மகள் மீனா சுந்தரத்தோடு கலகலப்பாகப் பேசுவதைக்கூட விரும்பாத நடேசன் தன் மனைவியின் பண்பு முற்றிலும் மாறிப் போனதற்கும், சுந்தரம் தன் வீட்டில் வந்து தங்கிய பின்னர் தன் மனம் மாறிவிட்டதற்கும் உள்ள நிலைகளால் மனம் உடைகிறார். மனைவி மன்னிப்புக் கேட்டு மன்றாடுகிறாள். சுந்தரமோ அவர் களிடம் விடைபெற்றுக் கொண்டு வெளியேறுகிறான்.

கணையாழியில் சா. கந்தசாமி எழுதிய வேலையற்றவன் என்ற கதை, சங்கரன் வேலை தேடி அலைவதைச் சுட்டுகிறது. சங்கரன் 'இண்டர்வியூ'வுக்குச் செல்வது, தந்தை வழி அனுப்புவது, பஸ் முதலாளி வேணுகோபால்—ரத்னாதேவி உறவு, சுவாமிநாதன் பண்டாரமாகியது, சங்கரன் வேலை தேடிக் கூட்டத்தோடு குரல் எழுப்பியபோது போலீசிடம் உதை வாங்கியது, ரத்னாதேவியின் பழைய வரலாறு. அமைச்சரிடம் சங்கரனுக்கு வேலை வாங்கித் தருவதாகக் கதிரவன் கூறியதில் தந்தைக்கும் சங்கரனுக்கும் ஏற்பட்ட நம்பிக்கை, ஏமாற்றம், அமைச்சர் விழாவில் சங்கரன் தாய் உணவுப் பொட்டலத்திற்குக் கைநீட்டல் முதலான நிகழ்ச்சியினூடே கதை நகர்ந்து செல்கிறது.

பனசை கண்ணபிரானின் தூக்கம் வராத இரவுகள் என்னும் கதை, வாழ்வில் சலிப்பும் உடல் நலிவும் ஒழுக்கமுமற்ற நடுத்தர வாலிபன் ஒருவனைப் படம் பிடிக்கிறது. வேண்டா வெறுப்பாக அமைந்த மனைவி, இடையிடையே உணர்வுப்பசிக்கு ஆளாதல், வியாதியோடு போராடல் இவற்றை விளக்குகிறது. நம்பிக்கை நலிவைக் காட்டுவதாக உள்ளது இக்கதை.

உடம்பு என்னும் கதையில் பணக்கார விதவையான ஒருத்தியின் மனவிகாரம் எடுத்துச் சொல்லப்படுகிறது. பேருந்துக்காகக் காத்திருந்த அவளின் புறஅழகை யாரோ இளைஞன் ஒருவன் திறனாய்வு செய்ய, அவள் மனம் வெறியில் 'விசுவரூபம்' எடுக்கிறது. 'ரசனை என்பது நிர்வாணத்தில் இல்லை' என்பதைச் சொல்லிச் சென்றவனின் வார்த்தைகளில் மனம் பதிகிறது. வேலைக்காரனிடமும், இறந்துபோன கணவனின் தம்பியிடமும், 'உடம்பின் பசி' தேடி அலைய முற்படுகிறாள். அவர்கள் இருவரும் இவளது இலக்கிற்கு இரையாகவில்லை. இறுதியில் தன் புறஅழகைத் திறனாய்ந்த இளைஞனைக் காணச் செல்கிறாள். நிர்வாணமாய் ஒருத்தி நீரில் உயிர் துறந்து கிடப்பதை வழியில் கண்டுவிட இவள் உடம்பு பற்றிய கருத்தில் மாறுபாடு அடைந்து ஞானோதயம் பெறுகிறாள்.

இப்படி என்ற கதையில் சமூகத்தின் அடித்தளத்தில் வாழும் மக்களின் மனப்போக்கைக் காணலாம். கதிர்வேலு, குடிபோதையில் கலாட்டா செய்வது, நோயாளியான தன் மனைவிடம் சிறிதும் இரக்கமில்லாமல், வேறொருத்தியைக் கொண்டுவந்து வீட்டில் வைத்திருப்பது, தன் மகளைப் பற்றிச் சிறிதும் கவலைப் படாத நிலை ஆகியவை நிகழ்ச்சிகளின் கோர்வையாகக் கதையில் உலா வருகின்றன. கதிர்வேலு முதலில் முத்தம்மா என்பவளை

வீட்டிற்குக் கூட்டிவருவதோடு நில்லாமல் புதியதாக ஒருத்தியை அழைத்துவர, கதிர்வேலு குடும்பத்தோடேயே ஒன்றி வாழத் தலைப்படுகிறாள் முத்தம்மா.

தோப்பில் ஒரு தனிமரம் என்னும் கதை பெண்கள் மூவரோடு பழகிய ஆணைப் பற்றியது. மல்லிகா, நந்தினி, சரோஜா ஆகிய இவர்களை வாழ்வில் சந்தித்த சுந்தரத்தின் கதையை விவரிக்கிறது. கலகலவென்று பேசிக் கூச்சமின்றிப் பழகும் மல்லிகா, உதவிகள் செய்து அந்தரங்க வாழ்க்கையின் சுகதுக்கங்களைக் கேட்டறிந்த நிலையில் நந்தினி, சுந்தரத்தை மணப்பது என்று எண்ணி மனத் தளவில் அதனைக் காட்ட முடியாதவாளாகி உயிர் துறக்கும் சரோஜா ஆகிய இவர்கள் சுந்தரத்தின் வாழ்வைப் பெரிதும் பாதித்து விடுகின்றனர். இவர்களின் வாழ்க்கைப் பதிவுகளை ஆசிரியர் சார்வ பௌமன் விளக்குகிறார்.

வேலையில்லாத இளைஞர்கள் வேறு விஷயங்களை அலசவும், கஞ்சா, குடி முதலியவற்றைப் பழகவும் இடந்தருகிறது ஒரு தேனீர் கடை. அது அவர்களின் சிந்தனைக் கூடம்— உலகம். இதனை மா.வே. சிவகுமாரின் கடைச்சங்கம் எடுத்துக் காட்டுகிறது.

ஞான மார்க்கம் தேடும் ராமசாமி, வாதம் புரியும் சிவில், பணக்கார வேலையில்லாப் பட்டதாரியான சிருஷ்டி, எடுபிடி பாலன், எமனுக்கு 'ஏஜெண்டாகச் சொல்லப்படும் தட்சிணா மற்றும் அருண், ஜானி ஆகிய இவர்கள் காணும் உலகம் தனி. குடியிலும், கஞ்சாவிலும் தங்களை இழக்கும் மனநிலை ஆகிய இவற்றைக் கோர்வையாக்கியுள்ளார் எழுத்தாளர் சிவகுமார். காசு இல்லாமல் தேனீருக்கும் சிகரெட்டுக்கும் தவிக்கும்நிலை, தங்களைப் படைத்த உலகை அழிக்கத் துடிக்கும் மனோபாவத்தால் ராமசாமி நண்பர்களோடு நடத்தும் யாகம். அரசியலிலும் சமயத்திலும் நுழைந்து பேச்சுத்திறமையால் நண்பர்களைக் கவரும் அருண், உணவில் விஷம் கலந்ததாகச் சந்தேகத்தின் பேரில் மூட்டப்பட்ட தட்சிணாவின் உணவு விடுதி ஆகிய சுவையான நிகழ்ச்சிகளைக் கதையின் ஊடே தந்து கதையை விரித்துச் செல்கிறார் ஆசிரியர். இறுதியில் இளைஞர்களைச் சீரழிக்கிற தேசமாக நாட்டை எண்ணுகிறான் தேனீர்க்கடை வைத்திருக்கும் காப்டன்.

3

பெண்ணை அடிமையாக்கிப் போகப் பொருளாய்த் துய்க்க எண்ணும் போக்கு இன்னும் சமுதாயத்தைவிட்டு விலகவில்லை என்பதை, வேண்டுமடி எப்போதும் விடுதலை, குறுகலான சாலையில் பரபரப்பான விபத்துக்கள் ஆகிய கதைகளிலிருந்து அறியலாம்.

புதுமை நாகரிகச் சீரழிவால் பெண்கள் கணவனை மதிக்காமல் புறக்கணிப்பதையும், அதனால் குடும்பமே நலிவடைவதையும் உறவுகள் மென்மையானவை, அவனும் அவளும், பாவம் போக்கும் கங்கை முதலான கதைகள் எடுத்துக் காட்டுகின்றன.

வரதட்சணை என்ற பெயரில் கொடுமை இழைக்கும் ஆண்களுக்குத் தக்க பாடம் புகட்டும் பெண்கள் ஜானு, மனதுக்கு எத்தனை முகங்கள் முதலான கதைகளில் உலா வருகின்றனர்.

துணிவுக்குத் துணைபோகும் பெண்களும் உண்டு என்பதை வெட்டுக்கிளிகள் என்னும் கதையால் உதயா உணர்த்துகிறாள்.

'போன பிறவியில் எவ்வளவு உண்மையாக உழைத்தாலும் குறைகூற மருமகள் இருந்துவிட்டாள் என இப்பிறவியில் பசுவாகப் பிறந்து பால் கொடுப்பதுடன் இலட்சுமி கடாட்சமும் அளிக்கலாம்' என்று பெரியம்மா மறுபிறவி எடுப்பதை மாத்ரு ரூபணே என்னும் கதை காட்டுகிறது.

தாலி கட்டிக் கொண்டு மனைவியாக வராவிட்டாலும், தன் பழைய வாழ்க்கையை விட்டுப் புதிதாக ஒருவனுடன் வாழவந்துவிட்ட போது, புது உறவில் அக்குடும்பத்தோடு ஒன்றிப் போகும் முத்தம்மாவை இப்படி என்ற கதையில் காணலாம்.

இவ்வாறு பெண்களின் பல்வேறு வாழ்க்கைச் சிக்கலும், அவலமும் இந்த ஆண்டுக் குறுநாவல்களில் அதிகம் காணப்படுகின்றன. இக்கதைகளிலெல்லாம் பொதுவாகப் பெண்களை மையப்படுத்தும் போக்கே தலைதூக்குகிறது. ஒரு சில கதைகள் மட்டும் விதிவிலக்கு.

ஆண்களின் வார்ப்பில் குடும்பத்திற்குத் தியாகம் செய்தல், மன உளைச்சலால் மனைவியை ஐயமுறுதல், பணத்திற்காக மணம் புரிந்து மனைவியைப் புறக்கணித்தல், பெண்களிடம் பழகி அவர்களின் அன்பிற்கும் இகழ்ச்சிக்கும் ஆளாதல், போன்றவற்றை முறையே கரைசேர்க்கும் தோணிகள், ஒரு நதி குளிக்கப்போகிறது'

அண்ணி அன்னை ஆனாள், தோப்பில் ஒரு தனிமரம் ஆகிய கதைகள் தெரிவிக்கின்றன.

வேலையில்லாத் திண்டாட்டத்தையும், அரசியலில் ஈடுபட்டோரை நம்பி ஏமாறுவதையும் கதையின் ஊடே சொல்லி வறுமையான குடும்பத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறது **வேலையற்றவன்** என்னும் கதை, படித்த இளைஞரிடையே வேலையில்லாத் திண்டாட்டம் இருப்பதோடு மட்டுமின்றி, வீணாகப் பொழுது போக்கி நாட்களைக் கழிப்பதில் இன்பம் காணும் போக்கு **கடைச் சங்கம்** என்னும் கதையில் சற்று தூக்கலாகச் சொல்லப்படுகிறது. **பொய்க்கால் குதிரை** என்ற கதையிலும் இளைஞர்களின் வேலையில்லாத தவிப்போடு கூடப் பெண்களைக் கிண்டல் செய்யும் போக்கும் மேம்போக்காகக் காட்டப்படுகிறது. உடல் அழகு தற்காலிகமானதுதான் என்பதை அழுத்தமாகக் காட்டிவிடுகிறது **உடம்பு** என்ற கதை.

பொதுவாகச் சமுதாய அவலங்களை எல்லாக் குறுநாவல்களும் காட்டியுள்ளன. எனினும் கதையைக் கூறும் போக்கிலும், உத்தி முறையிலும் மரபுவழிப்பட்ட பார்வையே அதிகமாயுள்ளன. பெரும்பாலும் மேலோட்டமாகக் கதையை விரிக்கும் நிலையைப் பல கதைகளில் காண்கிறோம்.

சில கதைகளில், உத்தி முறையில் நிகழ்ச்சிகளைப் பரப்பில் பெரிதாய் ஆக்கிச் செல்லும் போக்கை உணரமுடிகிறது. இயல்பான கதை சொல்லும் திறனிலிருந்து விலகிச் செயற்கையாக முடிகின்ற கதைகளும் உள்ளன. புதுமைப் போக்கில் அமைந்தவை மிகமிகக் குறைவு.

மங்கையர் மலர், கலைமகள், அமுதசுரபி ஆகிய இதழ்களில் மரபுவழிப்பட்ட போக்கில் கதைகள் அமைந்துள்ளன.

லா.ச. ராவின் **பாலா** எனும் கதையில் அவருடைய உத்தி முறையோ, கவிதை ரீதியில் கதை சொல்லும் போக்கோ இடம்பெறவில்லை. ஆனால் தெளிவுடன் கதை சொல்வதைப் பாராட்ட வேண்டும்.

விமலா ரமணியின் **மாத்ரு ரூபணே** என்ற கதையில் கூறப்பட்டுள்ள கற்பனை ஏற்றுக் கொள்ளும் வண்ணம் அமைந்திருந்தாலும் கதை கூறும் போக்கில் புதுமை இல்லை. கதைக் கருவில் மெருகு உண்டு என்பதை மறுத்தற்கில்லை.

சுபா எழுதிய கரை சேர்க்கும் தோணிகள் என்ற கதை, எந் நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்......என்ற குறளுக்கு விளக்கம் அளிப்பதாகவும், படித்த ஒவ்வொரு வாசகரையும் கண்ணீர்க் கடலில் ஆழ்த்துவதாகவும் புரட்சிகரமான கருத்தை வலியுறுத்துவதாகவும்'' அமைந்திருப்பதாக வாசகர் ஒருவர் திறனாய்வு செய்கிறார். எனினும் அக்கூற்று அவ்வளவாகப் பொருந்துவதாகத் தெரியவில்லை. கல்யாணியை அவளது கணவனோடு சேர்த்துவைப்பதில் பத்ரியின் முயற்சி தீவிரமாக்கப் பட்டிருக்கவேண்டும். கல்யாணியை ஏற்றுக் கொள்வதில் அவனது அடிமனம் நாட்டங்கொள்கிறது என்றே கருத வேண்டியுள்ளது.

சுபா அமுதசுரபியில் எழுதிய மற்றொரு கதை வெட்டுக் கிளிகள். புதுமையாக அமையவேண்டிய கதை. கதைப்பின்னல் சிக்கலாகப் படைக்கப்பட்டுள்ளது. உதயா மீண்டும் மேனன் குழு வில் சேர்ந்த பிறகு கதை சீரான ஓட்டத்தில் செல்கிறது. விமானக் கடத்தலில் ஆர்வ முனைப்பு நிலை நாட்டப்படுகிறது. கதை, சில விடத்துப் பின்னோக்கு உத்தியில் நிகழ்கிறது,

லக்ஷ்மி ரமணனின் கதையான உறவுகள் மென்மையானவை, இன்னும் தெளிவோடு சொல்லப்பட்டிருக்கவேண்டும். சிறுவனின் மன உணர்வையும், உணவுவிடுதியில் நட்புக்கிடைத்த பின் போதை மருந்துக்கு அடிமையாகும் சூழ்நிலையையும் விளக்கமாகச் சொல் வதற்கு இடமிருந்தும் கதை சப்பென்று முடிந்துவிடுகிறது.

கிருஷ்ணமணியின் ஜானுவில் பெண்களின் உரிமையும், முன்னேற்றமும் பற்றி ஆங்காங்கே பிரச்சாரம் செய்யப் பட்டாலும் மின்னல் இழையாகத் தலை காட்டி மறைந்து, கதை யோட்டத்தில் கலந்து கரைந்துவிடுகிறது.

ஜெயரதனின் பாவம் போக்கும் கங்கை. ஒரு குறுநாவலுக்குரிய வகையில் விரிந்துள்ளது. கலைமகளுக்கென்றே எழுதப்பட்ட கதை யாதலின் அதற்கேற்றவாறு முடிவும் அமைந்துள்ளது, கதை கூறும் பாணியும் இயல்பான மரபில் செல்கிறது.

இன்றைய சினிமாவுலகத்தையும், அதனூடே கணவன் - மனைவி உறவு பாதிக்கப்படும் நிலையையும் கூறும் இக்கதை கோர்வையாக அமைந்துள்ளது. ஒரு தேசத்தின் வரலாற்றைவிட ஒரு நடிகையின் வாழ்க்கை முக்கியமாக்கப்படும் பத்திரிகைகளின் போக்கை இடையிடையே சுட்டுகிறார். 'பொதுவா மக்களின் எண்ணம் எதையும் லேசா எடுத்துக்கூடியமட்டும் சோகம்மா இருக்

குணுங்கிறதுதான். இதை நமக்குச் சாதகமா எடுத்துக்கிட்டு அவுங்கமனசை மேலே மேலே கெடுத்துக் கிட்டே போறோம்' என்பது சண்முகசுந்தரம் கண்ட சினிமாவின் சீரழிவு.

பொன், ஜெயந்தனின், ஒரு நதி குளிக்கப்போகிறது என்ற கதை, தலைப்பை நியாயப்படுத்தும் வகையில் எழுதப்பட்டுள்ளது. கதையில் நடேசனின் மனவோட்டமே நிகழ்ச்சிகளை விரித்துச் செல்கிறது. தன் தெளிவான நடையால் நெகிழ்வு ஏற்படுத்த முயன்றுள்ளார் ஆசிரியர்.

சுஜாதாவின் ஆகாயம் என்னும் விஞ்ஞானக் கற்பனைக் கதையில் நடை தெளிவான முறையில் இயங்குகிறது. விஞ்ஞானக் கதைகளில் குறிப்பாக விண்வெளிக் கலம், அயல் கிரகங்கள் பற்றிய கதைகளின் போக்கு ஒரே தன்மையதாக உள்ளன. மனித வல்லமைக்கு ஒரு போட்டியாக இயந்திர மனிதன் இயங்குவதை இதுபோன்ற கதைகளில் காணமுடிகிறது. கதையின் சிலவிடங்கள் 'ஏலியன்' (Alien) என்ற நாவலின் (திரைப்படமாகவும் வெளிவந்தது) பாதிப்புக் கொண்டது. குறிப்பாகக் கடைசிக்கட்டம் இந் நாவலையே நினைவூட்டுகிறது.

கதையில் விறுவிறுப்பு குறைவே! கதையில் ஒரே நிகழ்ச்சி விரிவதால் கதைப் போக்கு விண்வெளி போலவே நீண்டு செல்கிறது. இதுபோன்ற விஞ்ஞானக் கதைகளில் ஆங்கிலச் சொற்கள் அதிகம் இடம்பெற வாய்ப்புண்டு. ஆனால் இக்கதையில் கூடியவரை ஆங்கிலச் சொற்களைக் குறைத்துக் கொண்டுள்ளார் சுஜாதா.

கணையாழியில் அண்மைக் காலமாகப் போட்டிக் குறுநாவல்கள் இடம் பெற்றுள்ளன. போட்டிக்கு வரும் குறுநாவலின் எண்ணிக்கையும் கூடியுள்ளது. குறுநாவலின் வளர்ச்சி கணையாழியால் பெருகிவருவது பாராட்டுதற்குரியது.

ஒரு குறுநாவல் இன்ன விதத்தில் இருக்கவேண்டும் என்று இலக்கணப் படுத்த முடியாதுதான். முடியாவிட்டாலும், கணையாழி இதழில் வெளிவரும் குறுநாவல்களை நன்கு இனங்கண்டு குறுநாவல் என்ற பொருளுக்குக் கணையாழிக் கதைகளை முத்திரை குத்திவிடலாம். குறுநாவலுக்கென்று கூறுகள் ஏதாவது இருக்குமானால் (!) அவை கணையாழிக் கதைகளில் இருக்கிறது என்ற பிரமையை உண்டுபண்ணுகிறது. பல்வேறு கூறுகளை உள்ளடக்கிய கதைப் போக்கினைக் கையாண்டு, கருவை மாறுபட்ட கோணங்களில் படைத்துக் காட்டுதற்கு முயற்சி

வேண்டும் அல்லது அவ்விதம் படைக்கும் நேர்த்தி தெரிந்திருக்க வேண்டும் என்ற போக்கினைக் கணையாழிக்கதைகள் காட்டி விடுகின்றன.

கணையாழிக்கு என இவ்வாறுதான் எழுதவேண்டும் என்று தாள்களை அடுக்கும் ஒரு கூட்டம் இருக்கத்தான் செய்கிறது. அதனை மறுத்தற்கில்லை. அதே சமயம் திரும்பத் திரும்ப எழுது வோரே மீண்டும் இடம் பெறுகிறார்கள் என்ற குற்றச்சாட்டிற்கும் ஆளாகிறது கணையாழி. ஏனைய 'வெகுஜன' இதழ்களைக் காட்டிலும் கணையாழியில் வரும் குறுநாவல்களில் கதைப்பொருள் உரத்த சிந்தனையில் அமைந்துள்ளது. கூறும் முறையிலும் உத்தி யிலும் கூடப் புதுமை சிலசமயம சிலிர்த்து எழுகிறது.

சா. கந்தசாமியின் வேலையற்றவன் என்ற கதையில் நிகழ்ச்சி கள் எண்ணவோட்டங்களாக விரைகின்றன. கதையில் சங்கரன் வேலை தேடி அலையும் முயற்சியும், ஒரு காலக்கட்டத்தில் அவன் தந்தை மாட்டுவண்டி வைத்திருந்தபோது நிகழ்ந்த நிகழ்ச்சியும் இயல்பான கதையோட்டத்தில் நடக்கின்றன. ஒருபார்வையின் துல்லியமான நிகழ்ச்சிகளை நிதரிசனமாகக் கூறுவதில் வேலை யற்றவன் தனித்து விளங்கும் குறுநாவல் எனலாம்.

தூக்கம் வராத இரவுகள் என்னும் பனசை கண்ணபிரானின் கதை, வாழ்வில் நம்பிக்கை நலிவைத் தேடிக்கொண்டவனின் கதை யாக இருந்தாலும் அதைச் சொல்லுகின்ற பாணி ஓரளவு ஆசிரிய ருக்கே நிறைவு தரும் வகையில் அமைந்துள்ளது. கதையின் இடையே சில சமயம் தொய்வு விழுந்தது போன்ற உணர்வை ஏற்படுத்துகிறது.

கரியப்பாவின் உடம்பு என்னும் கதையின் கரு மிகப்பழமை யானது. வேதாந்திகளும், தத்துவ ஞானிகளும் கூறியதைத்தான் இவரும் கூறுகிறார். ஆனால் அதனைச் சொல்வதற்கான களம் அமைத்துக் கொண்டு இறங்கிய பாணி அவரைப் பொறுத்தவரை யில் வெற்றியே! பழைய கருவிற்கு உளவியலால் முலாம் பூசியிருக் கிறார் ஆசிரியர்.

காகுத்தன் எழுதிய இப்படி என்ற கதை, கதை என்பதைக் காட்டிலும் நிகழ்ச்சிகளின் ஊர்வலம் என்று சொல்லலாம். நம்மைச் சுற்றியுள்ள கீழ்மட்டத்து வர்க்கத்தினரை யதார்த்தமாகக் காட்டியுள்ளார். அதற்கேற்றவாறு நடையும் இயல்பான பாதை யில் உண்மைகளை உரசிச் செல்கிறது. கருவைக் காட்டிலும்

| இதழ்கள் | கதை | ஆசிரியர் | வெளிவந்த மாதம் |
|---|---|---|---|
| மங்கையர் மலர் | வேண்டுமடி எப்போதும் விடுதலை | வையவன் | ஜனவரி |
| | * வந்தனா | ஸ்ரீவேணுகோபாலன் | பிப் |
| | அவனும் அவளும் | கீதா பென்னட் | ஏப் |
| | பாலா | லா. சா. ரா | மே |
| | பொய்க்கால் குதிரைகள் | அரவிந்தன் | ஜுன் |
| | குறுகலான சாலையில் பரபரப்பான விபத்துகள் | லட்சுமி ராஜரத்தினம் | ஜுலை |
| | மனத்திற்கு எத்துணை முகங்கள் | அரவிந்தன் | ஆகஸ்டு |
| | அண்ணி அன்னை ஆனாள் | ரத்னா | செப் |
| | மாத்ரு ரூபணே | விமலா ரமணி | அக் |
| | கரை சேர்க்கும் தோணிகள் | சுபா | நவம் |
| | * அக்னி பூக்கள் | — | டிசம் |
| அமுதசுரபி | வெட்டுக்கிளிகள் | சுபா | ஏப் |
| | உறவுகள் மென்மை யானவை | லட்சுமி ராஜரத்தினம் | பிப் |
| | ஜானு | கிருஷ்ணமணி | ஜுன் |
| | எந்தக்கதைக்கும் முடிவுண்டு | அவினாசி முருகேசன் | ஜுலை |
| கலைமகள் | பாவம் போக்கும் கங்கை | ஜெயரதன் | மே |
| | மயக்கங்கள் | ராஜகுரு | ஜுன் |
| தினமணிக் கதிர் | ஆகாயம் | சுஜாதா | ஆகஸ்டு /செப் |
| தாய் | ஒரு நதி குளிக்கப் போகிறது | பொன். ஜெயந்தன் | அக் |
| கணையாழி | வேலையற்றவன் | சா. கந்தசாமி | ஜன |
| | தூக்கம் வராத இரவுகள் | பனசை கண்ணபிரான் | ஏப் |
| | உடம்பு | இரா. கரியப்பா | ஜுன் |
| | இப்படி | காகுத்தன் | ஆகஸ்டு |
| | தோப்பில் ஒரு தனிமரம் | சார்வ பௌமன் | ஜுலை |

| கதைப்பொருள் | கதை கூறும் முறை பழமை | புதுமை | உத்தி முறை | மிகச் சாதாரண கதை | சுமாரான கதை | நல்ல கதை | மிகச் சிறந்த கதை |
|---|---|---|---|---|---|---|---|
| கணவனால் கொடுமை | + | | | | + | | |
| — | — | — | — | — | — | — | |
| மேனாட்டு நாகரிகம்/ மணவிலக்கு | + | | | | + | | |
| பாசத்தின் ஆழம் | + | | | | + | | |
| இளைஞர்களின் போக்கு / மனமாற்றம் | + | | | + | | | |
| பெண் சமுதாயம் / அவல வாழ்வு | + | | | | + | | |
| காதல் | + | | | + | | | |
| பணத்திற்காக மணம் புரிதல் | + | | | | | | |
| மாமியார் கொடுமை | + | | | | + | | |
| ஆணின் தியாக உள்ளம் | + | | | | | | |
| — | — | — | — | — | — | — | |
| பெண்ணின் முற்போக்கு எண்ணம் | + | + | | | + | | |
| தாயன்பிற்காக ஏங்குதல் | + | | | — | | | |
| வரதட்சணைக் கொடுமை | + | | | + | | | |
| காதல் | + | | | | | | |
| திரைப்படத்தால் சீரழிவு | + | | | | + | | |
| காதல் | + | | | | | | |
| விஞ்ஞானக் கற்பனை | | + | | | | | |
| மனைவி மீது | + | | + | | | | |
| சந்தேகம் | | | | + | + | | |
| வேலை இல்லாத் | | + | | | | | |
| திண்டாட்டம் | | | + | | | | |
| ஆணின் மன நிலைப் | + | | | + | + | | |
| போக்கு | | | | | | + | |
| பெண்ணின் மிகை | + | + | | | | + | |
| மன உணர்ச்சி | | | + | | | | |
| கீழ்மட்ட மக்களின் | | + | | | + | | |
| நடைமுறை வாழ்வு | | | | | | + | |
| பெண்களோடு பழகிய வாழ்க்கை | + | | | + | + | | |

* இக் குறியிட்டவை கட்டுரையில் இடம்பெறவில்லை.

யதார்த்தமான நிகழ்ச்சிகளாலும், நடையாலுமே கதை நிற்கிறது. சேரி வாழ்க்கை ஆசிரியரின் நடையில் சற்று அதிகமாகவே வெளிப்படுகிறது. நோயுற்ற மனைவி வீட்டிலிருந்தாலும், கதிர்வேலு, முத்தம்மா என்பவளை வீட்டுக்கு அழைத்து வந்த பின் அவள் கதிர்வேலு குடும்பத்தோடு ஒன்றிப்போகிறாள். கதிர்வேலு வேறொருத்தியையும் புதிதாய் அழைத்துவந்த பின்னரும் முத்தம்மா கதிர்வேலுவுக்கும், புதிதாய் வந்தவளுக்கும் சமைத்துப் போடுவது கதைக்கு அழகான முடிவைத் தருகிறது. சேரி வாழ்க்கையிலும் இப்படி ஒரு கண்ணோட்டம் இருக்கவே செய் கிறது.

சார்வ பௌமனின் தோப்பில் ஒரு தனிமரம், ம. வே. சிவகுமாரின் கடைச்சங்கம் ஆகியவை குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய கதைகளாகும். தோப்பில் ஒரு தனிமரம் சொல்லுகின்ற பாணியில் மட்டுமே ஓரளவு வரவேற்கத்தக்கதாய் உள்ளது. கரு என்னவோ பழமையானதுதான். கடைச்சங்கம் நல்ல பார்வை யுடையதாக விளங்குகின்றது. எடுத்துக் கொண்ட பொருளைத் தெளிவோடும் ஆழமான தொனியோடும் கூற முயற்சி செய்து ஓரளவு வெற்றியும் பெற்றுள்ளார் ஆசிரியர். இன்றைய இளைஞர் களின் மனத்தைப் பதியும்படிச் சொல்லியுள்ளார். கதைப் பொருளின் அழுத்தம் இறுதியில் நன்கு வெளிப்படுகிறது.

83ஆம் ஆண்டின் குறுநாவல்களில் சமூகக் கண்ணோட்டத் தைக் காட்டும் கதைகள் யாவும் பாராட்டுக்குரியனவே! உத்தி முறையிலும் கூறுகின்ற பாணியிலும், எடுத்துக் கொள்ளும் கதைப் பொருளிலும் புத்தலைகள் நம்மை நோக்கி விரையுமாக!

# சிறுகதை

## சு. வேங்கடராமன்

சிறுகதைத் தொகுப்பு நூல்கள் 25 எண்பத்துமூன்றில் முதற் பதிப்புப் பெற்றுள்ளன. முன் ஆண்டுகளை நோக்க, எண்ணிக்கையில் மட்டுமன்றித் தரத்திலும் நல்ல சிறுகதைகள் இங்கு வெளிவந்துள்ளன. உருவம், உத்தி, உள்ளடக்கம் ஆகிய முத்திறன்களிலும் தமிழ்ச்சிறுகதை ஆழமான வீச்சுடன் வளர்வதை இந்த ஆண்டில் உணர முடிகின்றது. இலக்கியச் சிந்தனை, இலக்கிய வீதி ஆகியன தொடர்ந்து இத்துறைக்கு வளன் நல்குகின்றன. முதன் முறையாக, தனுஷ்கோடி ராமசாமி, அழ. கிருஷ்ணமூர்த்தி, விமலாதித்த மாமல்லன் ஆகியோர் சிறுகதைகள் தொகுப்பாக வெளிவந்துள்ளன.

### அறிமுகம்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்துமூன்றாம் ஆண்டில் முதற்பதிப்பாக வெளிவந்த சிறுகதைத் தொகுப்புக்களின் திறனாய்வாக இக்கட்டுரை அமைகிறது. இதழ்களிலும் மலர்களிலும் வெளியாகி, நூல் வடிவம் பெறாத சிறுகதைகளை இந்த ஆய்வில் சேர்த்துக் கொள்ளவில்லை. தமிழர் வாழும் பிறநாடுகளில் (இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடுகளில்) எண்பத்து மூன்றில் வெளியான சிறுகதை நூல்களை இந்த ஆய்வில் சேர்த்துக் கொள்ளவில்லை[1] பிற நாட்டுத் தமிழர் எழுதி, தமிழகத்தில் வெளியான சிறுகதைகளையும் இந்த ஆய்வில் சேர்த்துக் கொள்ளவில்லை. எனவே, தமிழக எழுத்தாளர்களின் சிறுகதைத் தொகுப்புக்களாக முதற்பதிப்பாகத் தமிழகத்தில் எண்பத்து மூன்றில் வெளியான சிறுகதைத் தொகுப்புக்கள் மட்டுமே இந்த ஆய்விற்கு முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.[2]

---

1. கடல் கடந்த நாடுகளான இலங்கை, சிங்கப்பூர், மலேசியா போன்ற நாடுகளின் தமிழ் வளர்ச்சி பற்றிக் கூறுவதால் அவை இந்த ஆய்வில் சேர்த்துக் கொள்ளப்படவில்லை.
2. இவ்வரையறைக்கு எண்பத்துமூன்றில் தமிழ் என்னும் இத் தொகுப்பு நூலில் கூறியது கூறல் வருதல் கூடாது என்ற விழிப்புணர்வு காரணம்.

**ஆய்வின் அணுகுமுறை**

இந்த ஆய்வின் முதற்பகுதியில் எண்பத்துமூன்றில் வெளியான சிறுகதைத் தொகுப்புக்களின் (இருபத்திஐந்து தொகுப்புக்கள்)[3] பட்டியல் உள்ளது. அதனையடுத்து அவை பற்றிய திறனாய்வு உள்ளது. ஆய்வு, பொது நிலையிலும் ஒவ்வொன்றின் தனித் தன்மையை மதிப்பிட்டுக் காட்டும் நிலையிலும் உள்ளது. சிறு கதைத் தொகுப்புக்களைப் படிக்கும் மக்கள் கூட்ட (வாசகர்) நிலை, படைப்பாசிரியர் நிலை, வெளியீட்டாளர் (பதிப்பகம்—பதிப்பாளர்) நிலை என்ற மூன்று பரிமாண நிலைகளில் இக்கால அடிப்படைப் போக்குகள் சில விளக்கப்படுகின்றன, இந்த அடிப் படைகளின் தன்மையில் சிறுகதைப் போக்கு மதிப்பிடப்படுகிறது. சிறுகதைகளின் உள்ளடக்கம், உருவம், உத்தி ஆகிய அடிப்படை களில் இக்காலச் சிறுகதைகளின் பொதுப்போக்குகளும் தனித் தன்மைகளும் விவாதிக்கப்படுகின்றன. சிறுகதைகளின் உள்ளடக்க ஆய்வில் சமுதாய, குடும்ப, தனிமனித நிலைகளில் மதிப்புக்கள் (values) ஆராயப்படுகின்றன. சிலபோக்குகளுக்குக் காரணமான நிலைகளும் சுட்டப்படுகின்றன. ஒவ்வொரு சிறுகதைத் தொகுப்பை யும் தனித்தனியே ஆராய்ந்து மதிப்பிடும்போக்கு பின்பற்றப்பட வில்லை. எண்பத்துமூன்றாம் ஆண்டில் வெளிவந்த சிறுகதைத் தொகுப்புக்களின் போக்குகளை இனம்பிரித்துக் காட்டும் ஆய்வு நோக்கத்திற்கு ஏற்ப இம்முறை பின்பற்றப்படுகிறது.

எண்பத்துமூன்றில் வெளியான சிறுகதைத் தொகுப்புக்கள் :

1. சமவெளி. வண்ணதாசன், விஜயா பதிப்பகம், கோயம்புத்தூர்.
2. எரிமலைக் குளிர், சக்திப்புயல், தென்றல் பதிப்பகம், புதுச்சேரி.
3. சொந்தமென நீ இருந்தால், அனுராதா ரமணன், அருணோதயம், சென்னை.
4. கேட்கக் கூடாத காரணங்கள், வாஸந்தி, கலைஞன் பதிப்பகம், சென்னை.
5. மலடி பெற்ற பிள்ளை, எஸ். எஸ். தென்னரசு, வானதி பதிப்பகம். சென்னை.
6. அன்பு வேணுமா அன்பு? ரா. கணபதி, வானதி பதிப்பகம், சென்னை.

---

3. ஆய்வாளரின் முயற்சியால் தொகுக்கப் பெற்றவை இத் தொகுப்புக்கள். ஒரு சில விடுபட்டிருக்கக்கூடும்.

இவற்றைத் தொகுப்பதற்கு உறுதுணையாகவிருந்த திரு. இனியவன் (அமைப்பாளர், இலக்கியவீதி, விநாயகநல்லூர்,

7. இரவில் வந்த புதுக்கவிதை, பிரதிபா ராஜகோபாலன், அருணோதயம், சென்னை.

8. சமுத்திரம் கதைகள், சு. சமுத்திரம், மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

9. கனவு மனிதர்கள், இந்துமதி, சங்கீதவாணி பதிப்பகம், சென்னை.

10. நிஜங்கள், இவரா, இண்டர்நேஷனல் பதிப்பகம், மதுரை.

11. ஓடாத ரயில்கள், பூதலூர்முத்து, எழுத்தாளர் பதிப்பகம், சென்னை.

12. அருளும் பொருளும், பூதை சொ. அண்ணாமலை, பூதப்பாண்டி (கன்னியாகுமரி மாவட்டம்)

13. நினைப்பதெல்லாம் நடந்துவிட்டால் .. ரமணி சந்திரன், அருணோதயம், சென்னை.

14. சிவன் சொத்து, வசுமதி ராமசுவாமி, திருமகள் நிலையம், சென்னை.

15. சிந்துவெளி நாகரிகம், இரவிச்சந்திரன், கலைஞன் பதிப்பகம், சென்னை.

16. வறுமைச் சக்கரம், அழ. கிருஷ்ணமூர்த்தி, அகரம், சிவகங்கை.

17. நாரணம்மா, தனுஷ்கோடி ராமசாமி, அகரம், சிவகங்கை.

18. அன்றிரவே, கரிச்சான்குஞ்சு, நர்மதா பதிப்பகம், சென்னை.

19. தர்மம், வண்ணநிலவன், நர்மதா பதிப்பகம், சென்னை.

20. அறியாத முகங்கள், விமலாதித்த மாமல்லன், சத்ரபதி வெளியீடு, சென்னை.

21. தந்தைக்காக, அசோகமித்திரன், நர்மதா பதிப்பகம், சென்னை.

22. வாழ்விலே ஒருமுறை, அசோகமித்திரன், நர்மதா பதிப்பகம், சென்னை.

23. பரிசுக் கதைகள் (அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1979—1982). சீதாலஷ்மி பதிப்பகம், சென்னை.

24. தயவு செய்து (1983ஆம் ஆண்டின் சிறந்த சிறுகதைகள்), இலக்கியச் சிந்தனை, வானதி பதிப்பகம், சென்னை.

25. தீவுகளாகும் உறவுகள், இனியவன் (பதிப்பாசிரியர்), இலக்கிய வீதி, வாசுகி நூலகம், விநாயகநல்லூர் (செங்கை மாவட்டம்).

1983ஆம் ஆண்டில் முதற்பதிப்பாக வெளிவந்த சிறுகதைத் தொகுப்புக்கள் இவையே. இத்தொகுப்புக்கள் 1980, 1981, 1982, ஆகிய ஆண்டுகளைக் காட்டிலும் எண்ணிக்கையில் மிகுதியானவை[4]. எண்ணிக்கையில் மட்டுமின்றித் தரத்திலும் நல்ல சிறுகதைகள் எண்பத்துமூன்றில் வெளிவந்து உள்ளன. புதியதாக எழுதவந்த இளைஞர்களின் கைகளில் சிறுகதை நல்ல வடிவச் செம்மையையும் கனமான உள்ளடக்கத்தையும் கொண்டு வெளிப்பட்டுள்ள திறனை எண்பத்துமூன்றில் வெளிவந்த கதைகள் காட்டுகின்றன.

### வெளியீட்டு நிலை — இதழ்களின் நிலை

தமிழ் நாட்டில் வெளியாம் சனரஞ்சக இதழ்களில் வெளிவரும் புகழ் பெற்ற எழுத்தாளர்களின் சிறுகதைகள் ஆண்டுதோறும் தொகுப்புக்களாக வெளிவருகின்றன. (அனுராதா ரமணன், வாஸந்தி போன்றோர் கதைகள் இதற்குச் சான்று) இத்தொகுப்புக்களில் உள்ள கதைகள் சனரஞ்சக இதழ்களுக்குரிய பொழுதுபோக்கு அம்சங்களை உள்ளடக்கி விற்பனைப் பெருக்கத்திற்கு ஏற்ற—வாய்பாட்டுக் கதைகளாக உள்ளன. இக்கதைகளில் ஆழமான சமுதாய நோக்கினையோ வாழ்க்கை மதிப்புக்களையோ காணமுடியாது. தமிழ்ச் சிறுகதை வளர்ச்சிக்கு இவை உதவா. புதியதாக எழுதும் எழுத்தாளர் சிலரும் (பூதலூர் முத்து, பூதை சொ. அண்ணாமலை, ரமணி சந்திரன், இரவிச்சந்திரன், இவரா, கல்கி நினைவுப் பரிசுப் போட்டியில் பரிசுபெற்ற பல எழுத்தாளர்கள், ரேவதி பாலு, கார்த்திகா, ராஜ்குமார், எஸ் குமார், இலக்கிய வீதி தொகுப்பில் இடம்பெற்றுள்ள சில எழுத்தாளர்கள்) இவ்வணியில் சேர்ந்து இத்தகைய கதைகளைப் படைக்கின்றனர். சனரஞ்சக எழுத்தின் மிகு வளர்ச்சியின் பாதிப்பை இவர்களிடம் காணமுடிகிறது. மக்களைச் சிந்திக்கவிடாமல் பொழுதுபோக்கு என்ற பெயரில் கலாச்சாரச் சீரழிவைச் சனரஞ்சக இதழ்களில் காண்கிறோம். அதனை இவர்தம் சிறுகதைகளிலும் காணலாம்.

---

லேடந்தாங்கல் அஞ்சல், (செங்கற்பட்டு மாவட்டம்), திரு. அ. பசுபதி (தமிழ்ப் பேராசிரியர், தாகூர் கலைக்கல்லூரி, புதுச்சேரி), திரு ப. லட்சுமணன் (அமைப்பாளர், இலக்கியச் சிந்தனை, சென்னை) ஆகிய நண்பர்களுக்கு நன்றி.

4. காண்க எண்பதில் தமிழ் (ப. 36), எண்பத்தொன்றில் தமிழ் (ப. 76), எண்பத்திரண்டில் தமிழ்

வணிக நோக்கை மட்டும் முதன்மையாகக் கொண்டு வெகுசன இதழ்கள் சிறுகதைகளுக்குக் குறைந்த இடமே அளிப்பது சிறுகதையின் வடிவைப் பெரிதும் பாதிக்கிறது. இதன் விளைவாகச் சிறுகதை சின்னஞ்சிறு கதையாக —'மினிக் கதை'யாக — வருகிறது. (காண்க, பூதலூர் முத்துவின் ஓடாத ரயில்கள், பூதை. சொ. அண்ணாமலையின் அருளும் பொருளும், தீவுகளாகும் உறவுகள் தொகுப்பில் உள்ள வ. தேனப்பனின் செயற்கைப் பஞ்சம் ஆகியன.) சிறுகதைகளைக் கூட இரண்டு மூன்று பக்கங்களில், இரு வாரங்கள் வெளியிட்டு ஆனந்தவிகடன் விற்பனையை மையமிட்ட வணிகநோக்கை நிலைநாட்டிக் கொண்டது இதற்கு நல்ல சான்று. வெள்ளை நிறத்தொரு பூனை என்ற சிறுகதை ஆனந்தவிகடனில் இரு வாரங்களில் வெளியிடப்பட்டது.[5] இக்கதை வெளியீட்டில் காணப்படும் திரைப்பட உத்திகள் (காவல் படை வருவது, தீக்குளிக்கப்போகும் காட்சி, மழை பெய்வது, சாத்தையனைத் துரத்திச் செல்வது, கொலை செய்யப்படுவது போன்ற நிகழ்ச்சிகளின் அடுக்குப் பின்னல்) வெகுசன இதழ்களின் வெளியீட்டு நிலையை நன்கு காட்டுவதுடன் சிறுகதைக்கலையில் நாம் எவ்வளவு பின்தங்கி உள்ளோம் என்றும் காட்டுகின்றது.

குறைந்த அளவில் விற்பனையாகும் இதழ்களில் நல்ல தரமான கதைகள் வெளிவருகின்றன. (தீபம், தாமரை, கணையாழி, கவனம், பிருந்தாவனம், நிகழ், மகாநதி, ஞானரதம், கண்ணதாசன் போன்றவை), வாசகர்கள் கூட்டம் சனரஞ்சக இதழ்களைப் படிக்கும் அளவிற்கு இச்சிறு இதழ்களைத் (little magazines) தேடிப் பிடித்துப் படிப்பதில்லை. படிக்கும் வாசகர்களின் சிந்தனையைத் தூண்டுபவற்றைப் படிப்பதைவிடப் பொழுது போக்கிற்காகப் படிப்பவர்களே மிகுதி. கடந்த சில ஆண்டுகளாக ஆனந்தவிகடன், கல்கி, குங்குமம், தாய், சாவி போன்ற பெருவாரியாக விற்பனையாகும் சனரஞ்சக இதழ்களும், சில வேளைகளில், தரமான கதைகளைத் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றன. இது ஒரு நல்ல வளர்ச்சி என்று கூறவேண்டும்.

இவற்றிற்கு மாறாக, இதழ்களையே நம்பாமல், எழுத்தாளர்களிடம் இருந்து நேரடியாகச் சிறுகதைகளைப் பெற்றுச் சிறந்தவற்றை மாதந்தோறும் தேர்ந்தெடுத்து ஆண்டுதோறும் சிறுகதைத் தொகுப்பாக வெளியிட்டுவரும் இலக்கியவீதியின் பணி பாராட்டிற்

5. மல்லிக் ரங்கநாதன், வெள்ளைநிறத்தொரு பூனை, ஆனந்த விகடன் 4. 9. '83. 11.9. '83.

குரியது. இத்தொகுப்பின் வழியே புதிய படைப்பாளர் பலர் அறிமுகமாவதுடன் தமிழ்ச் சிறுகதை ஆழ வளர்ச்சி பெறுவதையும் உணர முடிகின்றது. இத்துடன் சென்னையிலுள்ள இலக்கியச் சிந்தனையின் தேர்வும் சிறுகதைத் தொகுப்பும் காரணமாக ஆண்டு தோறும் நல்ல சிறுகதைத் தொகுப்பு வெளிவருகிறது. இத்தொகுப்பும் தமிழ்ச் சிறுகதை ஆழ வளர்ச்சி பெறுவதைக் காட்டுகிறது.

### பதிப்பக நிலை

வெகுசன படைப்பாளர் படைப்புக்களை மட்டும் வெளியிடும் பதிப்பகங்கள் ஒருபுறம்உள்ளன. மாறாக, இலக்கியச் சிந்தனையின் சிறுகதைத் தொகுப்பை ஆண்டுதோறும் வானதி பதிப்பகம் வெளியிட்டு வருகிறது. சில பெரிய பதிப்பகங்கள் தொடர்ந்து பெரிய எழுத்தாளர்களின் மறுபதிப்பு நூல்களை மட்டுமே வெளியிட்டு வருகின்றன.[6] இவர்களுக்கு நடுவே சில எழுத்தாளர்கள் தாங்களே தங்கள் சிறுகதைகளை வெளியிட்டுக் கொள்கின்றனர்.[7] சிறுகதைகள், நாவல் அளவிற்கு விற்பனையாவதில்லை என்ற காரணத்தால் பெரிய பதிப்பகங்கள் தொடர்ந்து சிறுகதைத் தொகுப்புக்களை வெளியிடுவதில்லை.

### வாசகர் நிலை

வாசகர்களின் படிப்பார்வமும் சிறுகதை வளர்ச்சிக்குப் பெரிதும் துணை நிற்கிறது. பெரும்பாலான வாசகர்கள் பொழுது போக்கிற்காகவே படிக்கின்றனர். எனவே, துணுக்குகளைப் போன்றே சின்னஞ்சிறு கதைகளை மிகுதியும் நாட, இதழ்களும் மினிக்கதைகளை வெளியிட, சிறுகதை வடிவம் சிதைகிறது. இவ்வாண்டு வெளியான சிறுகதைகள் சிலவற்றில் இத்தகைய வடிவச் சிதைவைக் காண்கிறோம்.[8] அதேபோன்று, சிறுகதைகளின் உள்ளடக்கத்திலும் பொழுதுபோக்கு அம்சங்களைப் பல கதைகளிலும் காண்கிறோம்.

### எழுத்தாளர் நிலை

சிறுகதை படைப்பது என்பது மிகவும் கடினமான செயல், இதழ்களின் விருப்பு, வெறுப்பு, வாசகர்களின் சுவையுணர்வு ஆகிய

6. சென்னையிலுள்ள தமிழ்ப் புத்தகாலயமும் மதுரையிலுள்ள மீனாட்சி புத்தக நிலையமும் இவ்வாறு கடந்த சில ஆண்டுகளாகச் செயற்படுகின்றன.
7. சக்திப்புயலின் எரிமலைக்குளிர், பூதை. சொ. அண்ணாமலையின் அருளும்பொருளும் இவ்வாறு வெளியிடப்பட்டவை.
8. வ. தேனப்பனின் செயற்கைப் பஞ்சம் என்ற சிறுகதை இதற்கு நல்ல சான்று. தீவுகளாகும் உறவுகள், பக். 56-59.

வற்றிற்கு ஏற்ப எழுத்தாளர் எழுத முற்படும்போது, சிறுகதை தன் கலைத் தன்மையை இழந்து வணிகப் பொருளாகின்றது. கண்ணதாசன், வண்ணநிலவன், அசோகமித்திரன், சு. சமுத்திரம், கரிச்சான் குஞ்சு, பிரதிபா ராஜகோபாலன், தனுஷ்கோடி ராமசாமி, விமலாதித்த மாமல்லன், அழ. கிருஷ்ணமூர்த்தி, ஜானகி மகன், களந்தை பீர்முகம்மது போன்றவர்களின் சிறுகதைகள் நம்பிக்கை ஊட்டுவனவாக உள்ளன. நாடகப் பண்புகளை உள்ளடக்கி மிகக் குறைந்த எடுத்துரைத்தலுடன் அமையும் சிறு கதை அழுத்தம் பெறுகிறது. ஒரு நொடிப் பொழுதில் மாந்தரின் அசைவு, செயல், உணர்வுச் சுழிப்பு இவற்றில் ஏதேனும் ஒன்றின் ஒரு துளியை அழுத்தமிக்க பின்னணியில் நுணுக்கமாக வருணிப் பதையே சிறுகதைக்கு இலக்கணமாக இவர்கள் எண்ணுகின்றனர். இதற்கு மாறாக, நிகழ்ச்சிகளின் அடுக்கில் உருவாகும் கதைப் பின்னலில் கதையைப் படைப்பதைச் சனரஞ்சக எழுத்தாளர் கதை களில் பார்க்கலாம்.

### சிறுகதையின் உள்ளடக்கம்

சிறுகதைக்குக் கருப்பொருளாக எதுவும் இருக்கலாம். காதலிப்பதும் பெண்மையைச் சூறையாடுவதும் ஊர்ப் பஞ்சாயத்து கூடும்போது ஆண் ஆதிக்கச் சமுதாயம் பெண்ணிற்குக் கொடுமை செய்வதான தீர்ப்பு வழங்குவதும் ஆன கதை பழைய கதையே என்றாலும் இஸ்லாமிய சமூகப் பின்னணியில் இது புதிய அழுத்தம் பெறுகிறது. ஆதிக்க வர்க்கத்தை எதிர்த்துப் போராடி, கொடுமைப் படுத்தப்பட்ட தன் சகோதரிக்கு நியாயம்பெறப்பாடுபட வேண்டும் என்ற லட்சியம் முன்நிற்பினும் இப்போதைய உடனடித்தேவை அவளுக்கு ஒரு சேலை வாங்கித்தந்து அவளுக்கு உதவ வேண்டும் என்று தம்பி உணர்வதைக் களந்தை பீர்முகம்மது தயவுசெய்து கதையில் நுட்பமாகக் காட்டுகிறார்...... ''அவர்களைத் தட்டிக் கேட்காமல் தன்னால் அயரமுடியாது என்பதை அவன் உணர்ந் தான். அதற்குமுன் தன் அக்காவின் கண்ணீரைத் துடைக்க வேண்டும். தன்னால் பட்டினி கிடந்து கூட, தன் அக்காவுக்கு ஒரு நல்ல சேலையை வாங்கிக் கொடுத்துவிட முடியும் என்றெண்ணிய ஜமால்...''[9] என்ற வரிகள் இக்கருத்தை வெளிப்படுத்தும்.

ஏழ்மையில், கிராமத்தில் பிறந்து வளர்ந்த இளைஞன் படித்துப் பட்டம் பெற்று, வேலைபெற்று வசதியான இடத்தில் மணமுடித்து

---

9. தயவு செய்து, களந்தை பீர்முகம்மது. ''தயவுசெய்து'', பக். 70-71.

நகர வாழ்க்கைக்கு மாறுகிறான். தன்னுடைய மனைவிக்கு—அவளுடைய நாகரிக மோகம், ஆடம்பரம், வசதிமிக்க வாழ்க்கை, பொறுப்பின்மை இவற்றிற்கு—அவன் அடிமையான போதும், தன் வேலையும் வருமானமும் தன் குடும்பத்திற்கு—ஏழ்மை மிக்க பெற்றோர் உடன் பிறப்பு ஆகியவர்களுக்கு— உதவ முடியாது போவது கண்டு வாடுகிறான். சுயநலம், நாகரிகம் இவற்றிற்கும் பாசத்திற்கும் இடையில் சிக்கித் தவிக்கும் இளைஞனின் மனநிலையும் உணர்வுகளும் இன்றைய வாழ்க்கைச் சூழலில் தீவுகளாகும் உறவுகள் கதையில் நன்கு காட்டப்படுகின்றன. இன்றைய சமுதாய அமைப்பில் நகர வாழ்க்கையின் நாகரிகமும் போலிப் பகட்டும் உடைய,சகிப்புத் தன்மையும் குடும்பப் பொறுப்புமற்ற பெண்ணின் பண்புகள் நன்கு காட்டப்படுவதுடன் வாழ்க்கை மதிப்புகள் எவ்வாறு மாறி உள்ளன என்ற கரு நுட்பமாக—உறவுகளே தீவுகளாகும் அவலம் ஆழமாகக் காட்டப்படுகின்றது. ''தன் வேலையாலும் படிப்பாலும் வெகுதூரம் தள்ளிப் போனதாலும் இவர்களுக்கு அந்நியமாகப்படுகிறோம் என்று எண்ணி மனவேதனைப் பட்டான். அன்றாடக் கஷ்டங்களிலிருந்து இவன் மட்டும் விலகிக் கொள்வது என்ன நியாயம்? இவனை விலக்கியது இந்தச் சமூக அமைப்பில்லையா? இது என்ன வாழ்க்கை? கூட்டு வாழ்க்கை இப்படிச் சிதறிச் சீரழிந்து போகிறதே![10] என்ற வரிகளில் இக் கருத்து வெளியிடப்படுவதை உணரலாம்.

மனிதன் வறுமையால் வாடும்போது அவனுக்கு உதவ மறுக்கும் சொந்தமும் வேலை தரக்கூட முன்வராத சமூக அமைப்பும், வறுமையில் வாடி மடிந்ததும் சாதி, சடங்கு, சம்பிரதாயம் என்ற வேலிகளை இட்டுத் தந்தை (இறந்து போனவன்)யிடமிருந்து மகனைப் (இறந்தவனுக்கு ஈமக்கடன் செய்வதிலிருந்து தடுத்துப்) பிரிக்க முயல்கிறது. இந்தப் பழமைத்தனத்தை எதிர்த்துப் போராட முன்வரும் மகனை (இளைஞனை) ஆத்மசாந்தி என்ற கதையில் காண்கிறோம். வாழ்ந்த காலத்தில் உதவாத சடங்குகளும் சம்பிரதாயங்களும் இறந்தபின் எதற்கு என்ற வினாவைத் தோற்றுவித்து, உதவாத பழமையை எதிர்த்து இளைய சமூகம் போராடுகிற நாள் வரும் என்பதைப் படிமமாகக் காட்டுகிறது இக் கதை. முன்குறிப்பிட்டதுபோல குறிப்பிட்ட ஒரு மனிதன், குடும்பம், இனம் என்று காட்டப்படினும் விரிந்த காட்சி அளவில் மனித குலம் முழுவதையும் பிரதிநிதிப்படுத்துகிறதாக- படிமமாக-

10 இனியவன் (ப.ஆ-), தீவுகளாகும் உறவுகள், ப. 28

இக்கதையின் பொருளைக் கொள்ளலாம்... "அவர் அலையா அலைஞ்சு பட்டினியோட போராடறப்போ, அவர் வந்தாலே அடுத்த திசைக்கு ஓடின நீங்க இன்னிக்கு அனாவசியமா ஆன்ம சாந்தின்னு கத்தறிங்களே..."[11] என்ற வரிகளில் பழமைவாதிகளை எதிர்க்கும் இலட்சிய இளைஞனின் வீறு கொண்ட வடிவைப் பார்க்கின்றோம். சமூக மாற்றம் இத்தகு இளைஞர்களால்தான் நிகழும் என்பதை இச்சிறுகதை வழியே ஆசிரியர் கோடிட்டுக் காட்டுகின்றார்.

இன்றைய சமூக அமைப்பில் அதிகார வர்க்கம் தன்னுடைய அதிகாரத்தைத் தவறான வழிகளில் பயன்படுத்தி லஞ்சம் கொடுக்க இயலாதவர்களை — அப்பாவி ஏழைகளை — கொடுமைப்படுத்தி, இறுதியில் ஏழை எளிய மக்களின் துயரமுடிவிற்குக் காரணமாகின்ற அவலத்தை, தனுஷ்கோடி ராமசாமியின் நாரணம்மா கதையில் காண்கிறோம். ஆஸ்பத்திரிச் சூழலும் அங்குள்ள மருத்துவர், தாதியர், பணியாட்கள், இறந்த பிணத்தை அடக்கஞ் செய்பவர்கள் என்று அத்தனை பேரும் மனிதாபிமானமின்றிப் பணம்—இலஞ்சம் பெறும் கொடுமை கதையில் காட்டப்படுகிறது. "ஆத்தாடி...இந்த நர்சுகாரிக.. ஈவு எரக்கமில்லாததுக...அவளை எரிச்சல் எரிச்சலாச் சத்தம் போட்டதுக...அவ மட்டும் ஒரு அஞ்சு ரூபா...இந்தப் பிசாசுகள் கையிலே குடுத்திருந்தா...'அல்லா குல்லா'ன்னு எல்லாக் கழுதைகளும் அவளைக் கொஞ்சியிருக்குங்க..."[12] என்ற வரிகள் இதனைக் காட்டும். "ஆஸ்பத்திரியிலேன்னா ஒரு கவலையுமில்லாம நாம இருக்கலாம்..."[13] என்ற நம்பிக்கையுடன் கிராமத்திலிருந்து மகப்பேற்றிற்காக நகர ஆஸ்பத்திரிக்கு வந்த ஏழை நாரணம்மா, அதிகார வர்க்கத்தின் லஞ்ச ஆசைக்கு ஈடுகொடுக்க இயலாமல் வயிற்றுப்பிள்ளையுடன் கிணற்றில் விழுந்து இறக்கிறாள். "ஒங்க அதிகாரத்திலே வெள்ளிடி விழுக...லஞ்சத்துக்காகவா எம் பொண்டாட்டி செத்தா...ஏதாயே எஞ்சீதேவி ..அடுத்தவங்க கால்ல முள் குத்தினாக் கூடச் சகிக்க மாட்டேயே...ஆத்தா...நீ பரிதவிக்க..."[14] என்று அவளை—அன்பும் இரக்கமும் வடிவான தன் மனைவியை—இழந்த கணவன் புலம்புகின்றான். கிராம ஏழைகளின் அன்பும் பாசமும் நுட்பமான

11. மேலது, ப, 55.
12. தனுஷ்கோடி ராமசாமி, நாரணம்மா, ப. 20.
13. மேலது, ப, 13.
14. மேலது. ப. 20.

மனப்பிணைப்பும் நகர அதிகாரவர்க்கத்தின் லஞ்சவேட்கையால் சுக்கு நூறாக்கப்பட்ட அவலம் இக்கதையில் ஆழமாகக் காட்டப் பட்டுள்ளது.

கஸ்ப்பா என்ற அவருடைய மற்றொரு கதை குறிப்பிடத் தக்கது. சமுதாயத்தில் அதிகாரம் படைத்த வர்க்கத்தின் கேவல மான—கீழான—சுயநல வேட்கை எவ்வாறு வறுமையால் வாடும் ஏழை அந்தணக் குடும்பத்தின்மீது பாய்ந்து வலுவில் சண்டைக்கு இழுத்துத் துன்புறுத்துகிறது என்று இக்கதை காட்டுகிறது. அதிகாரவர்க்கத்தின் பிரதிநிதியாகக் கஸ்ப்பா மட்டுமின்றி அவர் மனைவி, மகன் ஆகியோர் முறையே ஏழை அந்தணர், அவர் மனைவி, மகன் ஆகியோரை அடித்துத் துன்புறுத்துகின்றனர் என்று காட்டுகின்றார். அதிகாரவர்க்கம் எவ்வாறெல்லாம் வக்கரித்துப்போய், தன் செயல்களைச் செய்து ஒதுங்கி வாழும் ஏழைக் குடும்பத்தின்மீது தன் அடாவடித்தனத்தைக் காட்டுகிறது என்பதை இச்சிறுகதை ஆழமாகக் காட்டுகிறது.

தடங்கள் என்ற சிறுகதையில் ஏழைச்சிறுவன் வீரகருப்பசாமி யின் கள்ளங்கபடமற்ற அன்பும் அனைவரிடம் ஒருசேரப் பழகும் பாச உணர்வும் காட்டப்படுவதுடன், உழைத்து உண்மையாகப் படிக்கும் தன் திறமைக்கு உயர்வு கிடைக்காமல் பணமும் அதிகார பலமும் உடைய அதிகாரி வீட்டுப் பெண்ணிற்குத் தேர்வில் முதலிடம் கிடைப்பதை எதிர்க்கும் பண்பும் காட்டப்படுகின்றன. அதிகாரத்திற்கும் பணத்திற்கும் அடிபணியும் கல்விக்கூடங்களை— கல்வி கற்பிக்கும் ஆசிரியர்களை—எதிர்த்து வன்முறையில் இறங்கிச் சிறுவர் சிறைச்சாலைக்குப் போவேன் என்று கூறுமளவிற்கு அந்த ஏழைச் சிறுவனின் பிஞ்சுமனத்தை இச் சமூக அமைப்பு கெடுத்து விடுகிறது. வர்க்கவேறுபாடு எவ்வாறெல்லாம் பிஞ்சு உள்ளங் களைப் பாதிக்கின்றது என்பதை இக்கதை அழுத்தமாகவும் கலைத் தன்மையுடனும் காட்டுகின்றது. "எவ்வளவு நல்லா பரிட்சை எழுதினாலும் எனக்கு பஸ்ட்ரேங்க் போடறதே இல்லை. பரிட்சையிலே சொல்லிக் கொடுத்தும் காப்பியடிக்க வச்சும் அள்ளி அள்ளி மார்க் போட்டும் முனிசிப்பு பொண்ணுக்குத்தான் பஸ்ட் ரேங்க் போடுறாங்க... எல்லோரையும் போலத்தான் நம்மளும் பீஸ் குடுக்கிறோம்... கொறச்சு ஒண்ணும் குடுக்கலே... ஆனா... எல்லா ரையும் நல்லா நடத்தி என்ன மட்டும் கேவலமா நடத்றாங்க...இத எச்.எம். மிட்ட போயி சொன்னப்போ அந்த முண்டை 'ஏழைக் குசும்பா பண்றே'ண்ணு பிரம்பாலே என்னை அடிச்சாங்க... இனி அங்கே என்னைக் கட்டாயப்படுத்தி அனுப்பி வச்சிங்கன்னா திரும்ப

வரமாட்டேன். போனவுடனே அந்த அநியாயமான எச். எம். மிஸ்களை எல்லாம் கல்லாலே அடிச்சு மண்டைய ஓடச்சிட்டு மைனர் ஜெயிலுக்குத்தான் போவேன்''[15] என்ற வரிகளில் அதிகார மேலாதிக்கத்தின் கொடுமையால் பாதிக்கப்பட்ட ஏழைச் சிறுவனின் உள்ளத்தைக் காண்கிறோம்.

வண்ணதாசனின் சமவெளி தொகுப்பில், 'மனிதன் தனக் குள்ளே முரண்பட்டுப் போன அவலம். வாழ்வில் பெறும் அனுபவம் மனிதனை உருவாக்குவது. வாழ்க்கை மதிப்பு சமூக மதிப்பு மாறி வரும் சூழல், அன்பு செலுத்தத் தெரிந்தவர் வாழ்வில் பிரச்சினை களை எதிர்கொள்வது'[16] என்று பல்வேறு நோக்குகளைக் காட்டு கிறார். மனிதாபிமானம், அன்பு, உறவின் அழுத்தம் என்பவற்றை வண்ணதாசன் பல்வேறு கோணங்களில் காட்டுகிறார். 'ஒருவகை யில் வாழ்க்கை ஆழமான பொருளுடையதாக—தத்துவ முழுமை சார்ந்ததாக—காட்டும் அவர், மறுநிலையில் மனிதனே—அவனு டைய குறை, நிறைகளுடன்— உயர்ந்தவன் என்றும் காட்டு கிறார்.[17]

இளம்பருவம் முதல், வாழ்க்கையில் சிக்கல் எதையும் எதிர் கொள்ளாமல்—வாழ்வில் அடிபடாமல்—வளர்ந்த ஒருவனுக்கு (சுந்தரத்திற்கு) அவன் மனைவி கூறும் சிறு சொல் (''எங்கே போக? அடுப்புக்குள்ளேதான் போகணும்''— இப்போது முகமே தெரி யாமல் வார்த்தை மாத்திரம் சுள்ளென்று அவன்மேல் விழுந்தது இவ்வளவுநேரமும் தான் வரட்டும் என்று முகத்தில் அறைவதக்குச் சொற்களை எல்லாம் மிகக் குறைத்து ஒரு வாக்கியம் தயார் பண்ணி வைத்திருந்தது போலச் சுந்தரத்துக்குத் தோன்றியது''[18] கூடத் தாங்க முடியாததாகி அதனைப் பிரச்சினையாக்கித் தானும் துன்புற்று, ' தன்னைச் சார்ந்தாருக்கும் துன்பத்தை விளைவிக் கிறான். வாழ்வில் துன்பம் வரும் போகும் என்பதை அனுபவத் தால் உணர்கிறான் என்பதை வரும் போகும் என்ற சிறுகதை அழுத்தமாகக் காட்டுகிறது. மனிதனுக்கு இயற்கை தந்துள்ள

15. மேலது, பக். 129-130.
16. சு. வேங்கடராமன், ''வண்ணதாசனின் சமவெளி ஓர் ஆய்வு'', பதினாறாவது கருத்தரங்க ஆய்வுக்கோவை. தொகுதி 1. ப. 497, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலை நகர்.
17. மேலது, ப. 500.
18. வண்ணதாசன், சமவெளி. (வரும்போகும்). ப. 70.

காலவளர்ச்சி என்பதில், புலன்கள் பயன்படாமல் செயலற்றுப் போகும் நாட்களில் மொழி பயனற்றுப்போகிறது. மொழி கடந்த நிலையில் ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு செயற்பட்டு மனம் ஒன்றிய—உணர்வுகளை மதிக்கும்— இயல்பே செய்திப் பரிமாற்றத்தை நிகழ்த்துகிறது என்பதைக் கூறல் என்ற சிறுகதையில் காட்டுகிறார். மனித உறவின் ஆழம் என்பது, புரிந்துகொண்டு ஒன்றுவதிலே உள்ளது என்பதை வண்ணதாசன் அழுத்தமாகக் கூறுகிறார்.

வறுமையில் வாடும் அடிமட்டத்து ஏழை மூக்கம்மாவின் ஒரு நாள் பொழுது கழியும் அவலத்தை வறுமைச் சக்கரம் கதை அழுத்தமாகக் காட்டுகிறது. இருள்பிரியுமுன் தன் மகள் லட்சுமியை அழஅழவிட்டுப் புறப்பட்டு மலைக்காட்டில் விறகெடுக்கப்போய், உச்சி வெய்யிலில் திரும்பி அதை விற்றுக் (மூன்று மைல் தூரம் சென்று விற்றுக் காசாக்கி மீண்டும் அதே தொலைவு நடந்து தன் வீடு வரவேண்டும்.) காசாக்கி, இருட்டியபின் வீடு வந்து கஞ்சி காய்ச்சிக் குடிப்பாள். அவள் சந்திக்கும் அத்தனை துயரமும் கதை நெடுகக் காட்டப்படுகின்றன. நடுச்சாமத்தில் விடிந்து, நடுச்சாமத்தில் அடையும் ஒருநாள் அவலம் மட்டுமல்ல, சமூகம் அவளை எப்படியெல்லாம் துயரப்படுத்துகிறது என்பதைக் காட்டுகிறார் ஆசிரியர். அவள் விறகுக் கட்டுடன் உச்சி வெயிலில் நடந்து வருகையில் காலிலுள்ள செருப்பின் வார் அறுந்து, செருப்பின்றி நடப்பது, பூக்குழி இறங்குவதாக அவளுக்குத் துன்பந் தருகிறது. "இது மூக்கம்மாவுக்கு மட்டும் நேர்ந்ததன்று. அத்தனை விறகுக்காரிகளின் வாழ்க்கையிலும் நேரக்கூடிய பொதுவிஷயம். மூக்கம்மா அழுகிறாள். இதேபோல்தான் அவள் அம்மாவும் அழுதாள். அம்மாவின் அம்மாவும் அழுதாள். ஆனால், அந்தச் செருப்புக்கோ புழுதிக்கோ அந்தச் சூரியனுக்கோ எப்போதுமே கருணையிருந்ததாகத் தெரியவில்லை"[19] என்ற வரிகளின் வழி மூக்கம்மா படும் வறுமைத் துயரம் தலைமுறைகளாகத் தொடரும் சமுதாயநிலையும் கருணையற்ற தன்மையும் காட்டப்படுகின்றன. செருப்பும் புழுதியும் சூரியனும் குறியீடுகளாக நின்று, மனிதத் தன்மையும் இரக்கமுமற்ற சமுதாய அமைப்பைக் கூறுபோட்டுக் காட்டுகின்றன.

விமலாதித்த மாமல்லனின் அறியாத முகங்கள் தொகுப்பில் ஆழமான உள்ளடக்கம் கொண்ட பல வகைகள் (அறியாத

19. அழ. கிருஷ்ணமூர்த்தி, வறுமைச் சக்கரம், ப, 14.

முகங்கள், வலி, போர்வை. இழப்பு, வயிறு போன்றவை) உள்ளன. வாழ்வில் துன்புறும் மனிதர்களைப் பற்றியே இக்கதைகள் பேசுகின்றன. வறுமை, அன்பின்மை, புறக்கணிப்பு, மனிதாபிமானமும் கருணையுமற்ற சிறுமை இவைகளால் அலைக்கழிக்கப்பட்டவர்களின் பிரச்சினைகளை இக்கதைகளில் காண்கிறோம். வலி என்ற சிறுகதையில் வரும் அப்புட்டாவும், இழப்பு கதையில் வரும் பப்புவும் பெரியவர்களின் (தங்கள் தகப்பனின்) சூதாட்டக் கொடுமையால் வாழ்வின் மகிழ்ச்சியைத் துறந்திட வேண்டிய நிர்ப்பந்தத்திற்குள்ளாகின்றனர். காலில் செருப்பின்றி வலியுடன் நடிக்கும் அந்தப் பிஞ்சுக் கால்களின் துயரம் ஆழமாகக் காட்டப்படுகிறது. அதே நேரத்தில் வலியைப் பொறுத்துக் கொள்ளும் வாழ்வின் மூர்க்கத்திற்கு ஆளாகின்றனர். "வெற்றுக் காலுடன் இந்த வெயிலில் நடப்பது கஷ்டமாக இருந்தது. கொஞ்சநேரத்திலேயே அப்புட்டாவுக்குக் கால் வலிக்கத் தொடங்கிவிட்டது. ஆனால் தூக்கிக் கொள்ளச் சொல்லி அப்பாவைக் கேட்கவில்லை"[20] என்ற வரிகள் (வலி சிறுகதை) மிக அழகாகப் பெரியவர்களின் அலட்சியப் போக்கும் அன்பின்மையும் குழந்தையைப் பாதித்து, சின்னஞ்சிறு வயதிலே வாழ்வின் மூர்க்க குணங்களை ஏற்று நடக்கும் பக்குவம் பெறுவதைக் காட்டுகிறது. சூதாடிக்கு வாழ்க்கைப்பட்டு வாழ்வின் இனிமைகளை இழந்து ஆயினும் வாழ்க்கையின் கசப்பை மகிழ்வுடன் ஏற்கும் பெண் உள்ளத்தை இழப்பு கதை ஜமுனாவிடமும் அறியாத முகங்கள் கதையில் வரும் பெண்ணிடமும் காண்கிறோம். இதனை, "புருஷன் குணம் தெரிந்து தன்னை மாற்றிக்கொண்டு விட்டாள். எல்லாவற்றையும் மறந்துவிட்டவள் போல நடந்து கொள்ளத் தொடங்கிவிட்டாள்."[21] என்ற வரிகளில் (இழப்பு கதை) காண்கிறோம். போர்வை என்ற கதை குறியீடாக—படிமமாக—நின்று நாம் எவ்வாறு போர்வை போர்த்திக் கொண்டு வேடமிட்டுக் கொண்டு வாழ்கிறோம் என்பதைக் காட்டுகிறது. நகர வாழ்க்கையில் வாழ்க்கை மதிப்புகள் மாறி வருவதற்கு ஏற்பப் பழக்கவழக்கங்களை மாற்றிக் கொள்ளாதபோது மனிதன்—குடும்பம்—இவ்வாறு போர்வையிட்டுத் தான் வாழும் என்பதை இக்கதை காட்டுகிறது. தாசில்தார் நாற்காலி அழகாக இன்றைய அலுவலகச் சூழலைப் படம் பிடித்துக் காட்டுவதுடன் நகைச்சுவையையும் மென்மையான உணர்வையும் காட்டுகின்றது. நாற்காலி—அங்கம் குறைவுபட்டு—பயனற்றுப் போனது காரணமாகப் பணி

20. விமலாதித்த மாமல்லன், அறியாதமுகங்கள், ('வலி), ப. 147,
21. மேலது, ப, 35.

யிலிருந்து ஒதுக்கப்பட்டதும் சிறுமைப்படுத்தப்படுகிறது. இக்கதை படிமமாக நின்று அலுவலக வாழ்வையும் அலுவலர்களின் அதிகாரப் போக்கையும் சுட்டிக் காட்டுகின்றது.

தந்தைக்காக என்ற தொகுப்பில் அசோகமித்திரன் ஆழமான உள்ளடக்கத்துடன் கூடிய பல கதைகளைப் படைத்துள்ளார். தந்தைக்காக எனும் கதையில் ஏழ்மையில் வாடும் ஒருவன் தன் தந்தையிடம் வைத்துள்ள ஆழமான பாசம் காட்டப்படுகிறது. இந்திராவுக்கு வீணை கற்றுக்கொள்ள முடியவில்லை என்ற கதையில் இளம்வயதில் கைகூடாதுபோன ஆசை அடிமனத்தி லிருந்து எவ்வாறு பெண்மனத்தை அலைக்கழிக்கின்றது என்று காட்டுகின்றார்.

எரிமலைக்குளிர் தொகுப்பில் சமூகக் கண்ணோட்டத்துடன் கூடிய கதைகள் பல உள்ளன. சுதந்திரப் போராட்டக் காலத்தில் சிறைசென்று அனுபவம் பெற்ற தியாகி சீரங்கன், இன்றைய சுதந்திர இந்தியாவில், உள்ளூராட்சி தேர்தலில் கூட, பணமும் பொய்யும் புனைசுருட்டும் தாண்டவமாடும் அவலத்தைக் கண்டு கொதிக்கும் எரிமலைத்தனம் காட்டப்படுகிறது. விலைமகன்கள் பெண்ணைத் தொடாத மன்மதன் ஆகிய இரு கதைகளும் வரதட்சணைக் கொடுமையை மையமிட்டுச் செல்கின்றன. ஆயின், விலைமகன்கள் என்ற கதையில் பெண் பழையபாணியில் குறிக் கோள் தன்மையுடன் படைக்கப்பட்டுள்ளாள்,

கல்கி நினைவுச் சிறுகதைப்போட்டியில் (1979 முதல் 1982 முடிய), பரிசு பெற்ற பதினோரு கதைகள் பரிசுக்கதைகள் என்ற தலைப்பில் தொகுப்பாக இந்த ஆண்டில் (1983) வெளியிடப் பட்டுள்ளன. பெரும்பாலான கதைகள் சம்பவக்கோர்வையான கதைப்பின்னலமைப்புடன் படிக்கும் வாசகர்களின்—குறிப்பாகப் பெண்களின்—அனுதாபத்தை வரவழைக்க முயலும் உள்ளடக்கங் களை உடையவை. இதற்கு நல்ல சான்று ஓர் உயிர் விலை போகிறது என்ற சிறுகதை.

பிரதிபா ராஜகோபாலனின் பொறம்போக்கு நல்ல ஆழமான உள்ளடக்கமுடைய சிறுகதை. அதிகாரவர்க்கத்தின் கெடுபிடிகள் சட்ட அமைப்பு விதிகள்—இவற்றை மீறி, அரசியல்வாதிகள் செய்யும் அப்பட்டமான ஏமாற்றும் பொய்யும் புனைசுருட்டும் சேர்ந்து ஏழைகளைப் பாதிக்கின்றன. அரசியல்வாதியை நம்பி கைப்பணத்தை இழந்து புறம்போக்கு நிலத்தில் கடைபோட்டு,

பின் உண்மையான அரசு அதிகாரிகள் வரும்போது துன்பப்படும் ஏழை நாட்ராயனை இக்கதையில் காட்டுவது ஒரு படிமக்காட்சி... இதன்வழி நம்முடைய சமகாலச் சமுதாய வாழ்க்கை காட்டப் படுகிறது. "எந்த பொறம்போக்கு நாயோ மொத்தப் பணம் புடுங்கிட்டு, கெவர்னரு மாதிரி ரோடு மேலக் கடையைப் போட்டுட்டு போடான்னு பர்மிசன் குடுத்துட்டான். அவனை நம்பி நாமளும் நகை நட்ட வித்துப் போட்டுட்டோம். இப்ப கெவுர்மெண்டுக் காரங்களே வந்து எடுங்கடான்னு வாசல்ல நிக்கப் போறான். பொறம்போக்கு யாருன்னு தெரியுதுங்களா? தலைவரு தலைவருன்னு ஆகாசத்துக்கும் பூமிக்கும் குதிச்சிங்களே"[22] என்று அவன் (நாட்ராயன்) மனைவி கூறுவது இதனை நன்கு காட்டும்.

### கலைத் திறன்கள்

இவ்வாண்டு வெளிவந்த சிறுகதைகள் பலவற்றில் நுட்பமான கலைத்திறன்கள் ஆளப்பட்டுள்ளன. கதைக்கருவிற்கு ஏற்ற வடிவச் செம்மையும் கலைத்திறன் ஆட்சியும் உள்ள தன்மைகளை இக் கதைகளில் காணலாம். கதையின் மையத்திற்கு ஏற்ப அழுத்த முறப் படைக்கப்பட்ட மாந்தர் படைப்பு, கருவை முதன்மைப் படுத்திக் காட்டும் கதைப்பின்னல், நுணுக்கமான வருணனை, கிளைமொழி— வழக்குச் சொற்களை ஆளும் மொழித்திறன், உயிரோட்டமான உரையாடல், அசமனப்பேச்சு, நனவோடைத் திறன், குறியீடு—படிமம், சுருங்கிய சொல்லாட்சி போன்ற திறன் களைப் பலரின் கதைகளில் காணலாம்.

> "சந்துரு தாத்தாவைப் பற்றி நிச்சயமாகக் கேட்பான். அவனுக்கு என்ன பதில் சொல்வது என்று நினைக்க நினைக்க அழுகையாக வந்தது. வெற்றுக் காலுடன் இந்த வெயிலில் நடப்பது கஷ்டமாக இருந்தது. கொஞ்சநேரத்திலேயே அப்புட்டாவுக்குக் கால் வலிக்கத் தொடங்கிவிட்டது. ஆனால் தூக்கிக்கொள்ளச் சொல்லி அப்பாவைக் கேட்கவில்லை"[23]

என்று வலி சிறுகதையில் விமலாதித்த மாமல்லன் எழுதுமிடத்தில் சொற்செறிவையும் நுட்பமான பொருள் ஆழத்தையும் காண முடிகிறது. கதைக்கருவிற்கேற்ப இங்கு வலி என்பது விரிந்த பொருளுடையதாகிறது. சமூகத்தின் குரூரம் அப்பிஞ்சு நெஞ்சைத் தாக்கி வலிக்கச் செய்யும் அவலத்தை நுட்பமாகக் காட்டுகிறார்.

22. .......... பரிசுக்கதைகள், பிரதிபா ராஜகோபாலன், "பொறம் போக்கு" ப. 122.
23. விமலாதித்த மாமல்லன், அறியாத முகங்கள் (வலி), ப. 147.

'இவனைவிடப் பெரிய பையனாக இருக்கும்போது ஆடிமாதக் கடைசி வெள்ளிக்கு இருக்கன்குடி மாரியம்மன் திருவிழாவிற்குப் போய் வாங்கிய பித்தளைக் கடுக்கன்களைத் தான் நீண்ட நாட்கள் சழற்றாமல் போட்டிருந்தது ராஜபாண்டியன் நினைவுக்கு வந்தது.'[24] என்று தடங்கள் சிறுகதையில் தனுஷ்கோடி ராமசாமி நுட்பமாக அகமனப்பேச்சையும் நனவோடைத் திறனையும் கலந்து எழுதுகிறார். இதே போல வண்ணதாசனின் வரும்போகும் கதையிலும் மனத்தின் அகவயநோக்கு, அகமனப்பேச்சு, நனவோடைத்திறன் ஆகியன நுட்பமாக ஆளப்பட்டுள்ளன. ''என்ற உஷ்ணத்தக் கௌறாதே... அவன் மெட்ராசிலிருந்து ஊருக்கு வரட்டும்...கொரலுவளையக் கடிச்சுத் துப்புல நான் ஒரு அப்பன் அம்மாவுக்குப் பொறக்கலேன்னு அர்த்தம்...''[25] என்ற வரிகளில், பிரதிபா ராஜகோபாலனின் பெறம்போக்கு சிறுகதையில் கோவைத்தமிழ் ஒலிக்கக் காணலாம். எண்பத்துமூன்றில் வெளியான இவர்களின் சிறுகதைகளில் கலைத்திறன்கள் எதுவும் துருத்திக்கொண்டிராமல் இயல்பாகக் கதையுடன் ஒத்திசைந்து— ''கலை வடிவில் மேற்கொள்ளப்படும் ஒவ்வொரு கலைத்திறனும் கதையின் அடிநாதமாக ஒலிக்கும் கருப்பொருளை விளக்கி எதிரொலி செய்யும் வண்ணம்''[26] அமைந்துள்ளன.

## முடிவுரை

எண்பத்து மூன்றில் வெளியான சிறுகதைத் தொகுப்புக்கள் பலவற்றில் சனரஞ்சக இதழ்களின் வணிக, பொழுதுபோக்கு நோக்கங்களை மையமிட்ட போக்கு உள்ளது. இக்கதைகளில் ஆழமான கலைத்திறன்களைக் காணமுடியவில்லை. திரைப்படப் பாதிப்பைப் பல கதைகளில் காணமுடிந்தது. சில படைப்பாளர்களின் சிறுகதைகளில் நல்ல வடிவச்செம்மை இருந்தபோதிலும் கதையின் கருப்பொருளைச் சரிவர எடுத்து ஆளாததன்மை, ஆழமான சமூகநோக்கு இன்மை ஆகியவை காரணமாக அச்சிறு கதைகள் சரியாக உருப்பெறாமல் போய்விட்டன. இதற்குச் சான்றாக இவராவின் நிஜங்கள் தொகுப்பிலும் பூதை சொ. அண்ணாமலையின் அருளும் பொருளும் தொகுப்பிலும் உள்ள பல கதைகளைக் கூறலாம், சிறுகதைத் தொகுப்பில் குறுநாவலும்

---

24. தனுஷ்கோடி ராமசாமி, நாரணம்மா (தடங்கள்), ப, 120.
25. ........., பரிசுக்கதைகள். பிரதிபா ராஜகோபாலன், 'பொறம் போக்கு'', ப. 123.
26. சு. வேங்கடராமன், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப. 123. சென்னை, தமிழ்ப் புத்தகாலயம். 1977.

சேர்ந்து பதிப்பிக்கப் பெற்றுள்ள நிலையை இவ்வாண்டிலும் விமலாதித்தமாமல்லனின் அறியாதமுகங்கள் தொகுப்பில் காணலாம். இப்போக்கு கடந்த சில ஆண்டுகளாகத் தொடர்ந்து காணப் படுகிறது.

பாலுறவை மிகவும் கொச்சையாக வருணிப்பதையும் ஆபாசப் படுத்தி எழுதும் போக்கையும் இன்றைய இதழ்ச் சிறுகதைகள் பலவற்றில் காணலாம். சக்திப்புயலின் தாகம்,[27] பெண்ணைத் தொடாத மன்மதன்[28] ஆகிய கதைகள் இதற்கு நல்ல சான்று. சிறு இதழ்களிலும் நேரடியாகத் தொகுப்பாகவும் வரும் சிறுகதைகள் நல்ல கலைநுட்பமான படைப்பாக உள்ளன. சிறுகதை வாழ்வின் வெளிப்பாடு. கண்ணுக்கு முன்பாக நாம் காணும் நடப்புச் சமுதாயத்தின் குரலாக அமையும், சிறுகதைகளைப் படைக்கும் அசோகமித்திரன், சு. சமுத்திரம், வண்ணதாசன், வண்ணநிலவன், கரிச்சான்குஞ்சு, விமலாதித்த மாமல்லன், தனுஷ்கோடி ராமசாமி, பிரதிபா ராஜகோபாலன், ஜானகிமகன், களந்தை பீர்முகம்மது ஆகியோர் எண்பத்துமூன்றில் தரமான சிறுகதைகளைப் படைத்துள்ளனர். தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் எண்பத்துமூன்றில் வெளியான இவர்களின் சிறுகதைகள் ஆழ வளர்ச்சியை ஊட்டிப் பெருமைசேர்க்கும் பணியைச் செய்கின்றன.

---

27. சக்திப்புயல், எரிமலைக்குளிர் (தாகம்), ப. 76, 77, 78, 89. 81.
28. மேலது, ப. 85, 87, 88, 89, 90.

# இதழ்ச் சிறுகதை

## இரா. பாலசுப்பிரமணியன்

*நடுத்தர மக்களைச் சார்ந்த பொழுதுபோக்குக் கருவியாகவும், தொடர்புச் சாதனமாகவும் அமைவன இதழ்கள். பலவகையான இதழ்கள் அமைகின்ற போதும் குறிப்பிடத்தக்க சில, சிறுகதைகட்கு மிகுந்த இடம் தந்து வாசகர்க்கு நிறைவளிக்கின்றன. குமுதம் 210 கதைகள் தந்து முன் நிற்கிறது. சிறுகதைகள் சமுதாயத்தில் ஏற்படும் பரிசோதனைகளை அல்லது அனுபவங்களை வெளிக்கொணர்வதுடன், அவற்றை அழகுக் கலையாக்கி அவற்றின் மூலம் இன்பத்தையும், இன்பத்திற்குட்படுத்திய நிலையில் தீர்வு களையும் வழங்குவதைக் காணலாம். கலைமகள் இலக்கியத் தரம்வாய்ந்த கதைகளுக்கு இடம் நல்குகின்றது.*

சமுதாயத்தை ஈர்ப்பது, வயப்படுத்துவது, அடிமையாக்குவது போன்றவை மக்கட்தொடர்பு சாதனங்களின் செயலாகும். இதழ், வானொலி, தொலைக்காட்சி போன்றவை மக்கட்தொடர்பு சாதனங்கட்கு எடுத்துக்காட்டுக்களாகும். பெற்றோர் வழிக்கல்வி, பள்ளி வழிக் கல்வி போன்றவற்றில் நேரடித் தொடர்பு உண்டு. உரை நிகழ்த்திக் கொடுத்து—எடுத்து வாங்கலாம். ஆனால் மக்கட் தொடர்பு சாதனங்கள் அளிக்கும் கல்வி, ஒருவழிப்போக்கு உடையவை. இதழ்கள் தரும் கதைகளைப் படிக்கலாம். வானொலி யில், செய்திகளைக் கேட்கலாம். தொலைக் காட்சியில் முன்னிரண் டையும் இணைத்துக் காட்சியுடன் பார்க்கலாம். ஆனால், நாம் நம் எண்ணங்களை, கருத்துக்களை எடுத்துரைக்க முடியாதநிலை.[1] அவர்கள் தருவதை ஏற்று சகித்து வாழவேண்டும்.

இவ்வாறு ஆட்டிப்படைக்கின்ற மக்கட்தொடர்பு சாதனங் களில் இதழ்களுக்குப் பெரும்பங்கு உண்டு. தொலைக்காட்சி, வானொலி—பொருளாதார வசதியுள்ளவர்களைத் தன் பக்கம் இழுத்துவிடும். நடுத்தர வர்க்கத்தினரைத் தன்னிடத்தே வயமாக் குவது இதழ்களின் நிலை. நம்நாட்டுப் பெரும்பாலான மக்கள்

---

1. வி. மி. ஞானப்பிரகாசம் சே. ச., அகங்கள், முன்னுரை.

நடுத்தரக் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும்.

அத்தகு தன்மையுள்ள இதழ்கள் பண்பாட்டிற்கும், ஒழுக்கம் சார்ந்த சமுதாயக் கட்டுப் போக்கிற்கும் உதவ வேண்டும். இந்நிலை இருக்கிறதா? இல்லையா? என்பதை தேடிப்பார்த்து உரைக்க வேண்டியது திறனாய்வாய்வின் கடமையாகும்.

இதழ்களில் பலவகை உண்டு. நாளிதழ், வாரஇதழ், மாத இதழ், பருவஇதழ், ஆண்டுமலர்—இவ்வாறு விரியும். இருப்பினும் வார இதழ்களுக்கு மற்றவைகளைவிடத் தனிமதிப்பு உண்டு. அவை களில் வெளிவரும் சிறுகதை, தொடர்கதை, கட்டுரைகள், அரசியல்' திரைப்படம், துணுக்குச் செய்திகள் என்று பலதரப்பட்டவை களைத் தந்து பலதரப்பட்ட வாசகர்களைத் திருப்தி செய்கின்றன. இக்கட்டுரையில் இதழ்களில் வெளியாகும் சிறுகதைகள் மட்டுமே பரிசோதனைக்குட்படுத்தப் படுகின்றன.

சிறுகதைகள் சமுதாயத்தில் ஏற்படும் பரிசோதனைகளை அல்லது அனுபவங்களை வெளிக்கொணர்வதுடன் அவைகளை அழகுக் கலையாக்கி அவற்றின் மூலம் இன்பத்தையும் இன்பத்திற் குள் உளப்படுத்திய நிலையில் தீர்வுகள் அல்லது நிலைமையை உணரவைத்தல் என்ற நிலையையும் காணலாம். இந்நிலையுரு வாக்கம் உயர்ந்த பொருளின் அடிப்படையில் பிறந்தால் உயிர்த் துடிப்பைப் பெறுகிறது. அத்தகு உயிர்த்துடிப்பைப் பெறவேண்டிய இதழ்ச் சிறுகதைகளின் நோக்கும் போக்கும் எங்குச் செல்கின்றன? என்பதைச் சுட்டிக்காட்ட வேண்டியுள்ளது.

இதழ்களில் வெளிவரும் சிறுகதைகள் தொடர்பான ஆய்விற்கு ஒரு முதன்மைக் கருத்தைத் தெளிவாக்கிக் கொள்ள வேண்டியிருக் கிறது. எழுத்தாளன் தான் படைக்கும் சிறுகதையென்ற இலக்கிய வகைமையுடன் சமுதாயத்துடன் தொடர்பு கொள்கிறான். ஆனால், அத்தொடர்பு நேரடியாக அமையவில்லை. எழுத்தாளர்க் கும் சமுதாயத்திற்கும் அல்லது வாசகர்களுக்கும் இடையில் இதழ் வெளியீட்டாளர்கள் இருக்கின்றனர். எனவே, வாசகர்களைக் கவர்வதைவிட வெளியீட்டாளர்களைக் கவர்வது தான் எழுத்தாளர்களின் கடமையாகிறது. இம் மூவகையினரையும் இணைத்த நிலையில் ஆய்வுப்பார்வை அமைதல் வேண்டும்.

ஆய்வின் போக்கிற்கான கருதுகோள் கீழ்க்கண்டவாறு அமைகிறது.

சிறுகதைகள் உணர்த்தும் கருப்பொருளின் (Thematic classification) அடிப்படையில் தரவுகளைச் சேகரித்து வகைப்படுத்துவது.

வகைப்படுத்தப்பட்ட தரவுகளின்வழி முடிவினைக் கூறுதல் அல்லது மதிப்பீடு செய்தல்.

சிறுகதைக்கான கருவினை வெளிப்படுத்தும் கலைத்தன்மை (Literary technique), சிறுகதைகளின் அமைப்பு (form), மொழி நடை (Style) இவைகளையும் உள்ளடக்கி மதிப்பீடு செய்தல்.

முற்சுட்டிய இரண்டின் மதிப்பீட்டைக் கொண்டு எதிர்காலத்தில் எவ்வகைச் சிறுகதைகள் சமுதாயத்திற்குப் பயனளிக்கும் என்பது சுட்டிக்காட்டப்படுகின்றது.

இதழ்கள் பலதிறத்தன. எனினும் மிகுதியான சிறுகதைகளைத் தாங்கிவரும் குமுதம் (210), ஆனந்தவிகடன் (158), குங்குமம் (162). இதயம் பேசுகிறது (170), கல்கி (164), கலைமகள் (60) ஆகிய இதழ்கள் மட்டுமே ஆய்விற்காக வரையறை செய்யப்படுகின்றன.

கருதுகோளில் குறிப்பிட்டபடி ஒவ்வொரு இதழ்ச் சிறுகதைகளையும் தனித்தனியாக மதிப்பீடு செய்து இறுதியில் பொது மதிப்பீடு அமைகிறது.

குமுதம்

தமிழ் வாரஇதழ்களில் மிகுந்த எண்ணிக்கையில் விற்பனையாகும் இதழ் குமுதமாகும். குமுதத்திற்கு இணையாக உள்ள பிறவார இதழ்களின் விலையைவிடக் குமுதத்தின் விலை குறைவு. பக்கமும் மற்ற இதழ்களைவிட மிகுதி. இதைத்தவிர அவ்வப்போது இலவச இணைப்புக்கள். இது குமுதத்தின் தற்போதைய நிலை.

"வாரந்தோறும் பலசிறுகதைகளை இயந்திரங்கள் எழுதித் தள்ளுவதைப் போல ஆசிரியர்களை வைத்துப் பல சிறுகதைகளைக் குமுதம் கொணர்கிறது. இலக்கியத் தரத்தைவிட வியாபாரக் கொள்கையினையும் மாறி வரும் புது சமூகக் கொள்கையினையும் மனத்தில் கொண்டு அவைகளுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட தன்மையைத்தான் குமுதத்தில் காணமுடிகிறது."[2]

---

2. இரா. பாலசுப்பிரமணியன், "குமுதம் சிறுகதைகள் ஒரு பார்வை", அகங்கள், ப. 129.

1983இல் வெளிவந்துள்ள சிறுகதைகளின் எண்ணிக்கை ஏறத்தாழ 210. அவற்றில்,

| | |
|---|---|
| காதல்... | 30 |
| குடும்பம்... | 60 |
| சமுதாயம்... | 66 |
| இறை நம்பிக்கையும் அறக்கருத்தும்... | 26 |
| பிற | 28 |

மேற்சுட்டிய வகைப்பாடு பெரும்பிரிவுகளை உள்ளடக்கியது. ஆனால், எளிமை கருதிப் பெரும்பிரிவுகள் சுட்டிக்காட்டப்பட்டு அதன் உட்பிரிவுகள் கட்டுரையின் போக்கில் சுட்டப்படுகின்றன. காட்டாக, காதல் என்ற பெரும் பிரிவில் நிறைவேறும் காதல், நிறைவேறாக் காதல் என வகைப்படுத்தலாம். குடும்பம் தொடர் பான கதைகளைக் கணவன்—மனைவி உறவுநிலை(Nuclear family) பிறஉறவு நிலை எனப் பார்க்கலாம். சமுதாயத்தில் பெண் விடுதலை, வரதட்சணை, வர்க்கப் போராட்டம். வேலையில்லாத் திண்டாட்டம், தீண்டாமை போன்ற பிரச்சினைகளைப் பார்க்க லாம். இறை நம்பிக்கையையும் அறக்கருத்தையும் சமுதாயத்திற்குள் அடக்கிப் பார்த்தாலும், அதன் தன்மையைக் கொண்டு ஓர் இதழின் தனித்தன்மையையும் அளந்துவிட முடியும் என்ற கருத்தில் தனிப் பிரிவாக்கப்பட்டுள்ளது. 'பிற' என்ற பிரிவில் அறிவியல், உளவியல், துப்பறிதல், சரித்திரம், மருத்துவம் போன்ற வகைகளைச் சார்ந்த சிறுகதைகளை அடக்கலாம். இவ்விடத்தில் குறிப்பிடப்பட்ட இச் செய்திகளின் அடிப்படையில் மற்ற இதழ்களின் ஆய்வுக் கருத்துக் களும் கூறப்படுகின்றன.[3]

பெரும்பிரிவுகளைக் கருத்தில் கொண்டு ஒப்பிட்டு நோக்கினால் சமுதாயச் சிந்தனைத் தொடர்பானவை மிகுந்தும் அடுத்துக் குடும்பம் பற்றியவை மிகுந்தும் இறுதியாகக் காதல் சிறுகதைகளை யடுத்து இறை நம்பிக்கை, அறக்கருத்து சார்ந்த கதைகள் அமை கின்றன. பிறவகையில் அடங்கும் கதைகளில் வகைக்கு ஒரு சில எடுத்துக்காட்டுக்களே அமைகின்றன.

**காதல்**

நிறைவேறும் காதல், நிறைவேறாக்காதல் என்று வகைமைப் படுத்தினால் நிறைவேறும் காதலே மிகுதி. இளந்தலைமுறை

---

3. கட்டுரையின் அடுத்து அமையும் ஆனந்தவிகடன், குங்குமம், இதயம் பேசுகிறது, கல்கி, கலைமகள்- பற்றிய செய்திகள் கூறுமிடத்தில் இவ்வாய்வுப் போக்கு மேற்கொள்ளப்படுகிறது.

யினரின் காதலுக்கு மூத்த தலைமுறையினர் எதிர்ப்புக்காட்டுவது வன்மையாக இல்லை. முதலில் எதிர்ப்பு இருந்தாலும் ஒத்துப் போகும் இயல்பினைக் காணமுடிகிறது. சந்துருவும் யமுனாவும் காதலர்கள். தாயின் ஆதரவு கிடைக்கிறது. தந்தையிடம் எதிர்ப்புக் கிடைக்கிறது. சந்தர்ப்பவசமாக யமுனாவைப் பார்த்த தந்தை அவளின் நல்ல குணங்களைப் பார்த்து மனம் மாறுகிறார் (3-11-83)[4].

காதலனின் தந்தை அமைச்சராக இருந்தாலும் தன் மகனின் காதலுக்காகப் பதவியை ராஜினாமா செய்யுமிடத்தில் வித்தியாச மான தந்தையைப் பார்க்க முடிகிறது. (27:1).

காதலர்களை ஒன்று சேர்ப்பதில் பழந்தலைமுறையினருக்கு விருப்பம் இல்லை. எனினும் அவர்களின் கட்டுப்பாட்டிலிருந்து விலகும் துணிவினை இளந்தலைமுறையினரிடம் காணமுடிகிறது. இதில் விடுவிப்பு நிலை இருப்பதை உணரமுடிகிறது (3:11). சமயங் களில் சாதக நம்பிக்கையையும் விலக்குகின்றனர் (1:12).

வில்லியும் மனோவும் காதலர்கள். காதலிக்காகத் தன் பணக்காரத் தந்தையை எதிர்த்து வந்து விடுகிறான். ஆனால், பணமில்லாத அவனை அவள் விலக்கி வைத்துவிடுவது காதலின் உண்மைப் பொருளா? யதார்த்தமா? இங்கு நிறைவேறும் காதலுக் குத் தடையாயிருப்பது எது? என்பது புரியவில்லை.

எம்.பி.ஏ. படித்த தன்மகன் எதிர்வீட்டுக் குருட்டுப் பெண்ணைத் திருமணம் செய்ய தடைபோடுகிறார் தந்தை. பொருளாதார ஏற்றத் தாழ்வு பிரிக்கிறது. வேறுவழியின்றி வேறு ஒருவரை மணக்கிறாள். அவன் இவளைக் கொலை செய்ய முற்படுகையில் சந்தர்ப்பவசத்தால் அவனே இறந்துவிடுகிறான். கடைசியில் சடலம்கூட கிடைக்கவில்லை. தன் கணவனின் சடலத்தைக் கட்டிப் பிடித்து அழவேண்டுமென்று துடிக்கிறாள். பழைய காதலன் சடலமாக நடிக்கிறான். பெண்ணைப் பெற்றவர் கள் நன்றி சொல்ல வருகையில் உண்மைக் காதலில் அவனே சடல மாகிப் போகிறான். ஆணின் காதலில் உண்மை இருக்கிறது.

---

4. 3:11:83—என்று குறிப்பிடுவது தேதி, மாதம், ஆண்டு என்ற வரிசையாகும். தலைப்பு "83இல் இதழ்ச்சிறுகதைகள்" என அமைவதால், அடுத்து வரும் இடங்களில் ஆண்டு சுட்டப்பட வில்லை.

இப்படிப்பட்ட காதல்தான் சமுதாயத்தில் உலவுகிறதா? என்பதைத் திறனாய்வாளன் மதிப்பிடமுடியுமா?

காதல் தொடர்பாக அமையும் பல கதைகள் உயர்ந்த கருப் பொருளாகக் கருதப்படாமல் நகைச்சுவையாகச் சொல்லும் போக்கே எடுபடுகிறது. எனவே, யதார்த்தத்திற்கு அங்கு இடமில்லை. கருவின் ஆழத்தைவிடக் கவர்ச்சி உத்திகள் மிகுதி.

நிறைவேறாக் காதலுக்கான தடையில் வலுவில்லை. தடைக்குத் தீர்வும் கூறப்படவில்லை. பொதுவாக ஆண்களின் உண்மைக் காதல் நிலைகாட்டப்படுகிறது. இதைவிடக் கலப்புத் திருமணம், பொருளாதார ஏற்றத்தாழ்வு போன்றவை வலுவுள்ள தடைகளாக இல்லையா? ஏன் இவைகளைக் கருவாக கொண்டு கதைகள் வரவில்லை என்ற சிந்தனைக்கு இடம் கொடுத்தால் யதார்த்தமற்ற கோரப்பிடியினின்றும் விலகலாம்.

குடும்பம்

கணவன் சம்பாதித்துக் குடும்பத்தைக் காப்பாற்றாத போது, மனைவியே குடும்பச் சுமையை ஏற்கிறாள். மனைவியிடம் எப்படிப் பணம் வந்தது என்று கணவன் கேட்க, சினிமாவில் கள்ள டிக்கெட் விற்றதால் வந்ததுஎன்று கேட்டவுடன் திருந்திவிடுகிறான் (16:11).

குடும்பம் என்றால் விட்டுக்கொடுத்துத்தான் வாழவேண்டும். ஊருக்குச் சென்று வந்த மனைவி புளியோதரை கொண்டுவரு கிறாள். ஊருக்குச் சென்ற அன்று ஹர்த்தால். கணவன் பசிக் கொடுமையினால் அனைத்தையும் சாப்பிட்டு விடுகிறான். அவள் சமைத்துச் சாப்பிடுவதாகச் சொல்லி அடுக்களைக்குப் போய்த் திரும்ப வந்து படுத்துக்கொள்கிறாள், கணவனின் மற்றொரு பசி யையும் தீர்த்து வைக்கிறாள். காலையில் கணவன் எழுந்து பார்த்த போது அவள் அடுக்களையில் சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். இரவு சாப்பிடவில்லையா என்று கேட்டதற்கு நீங்கள் தண்ணீர் பிடித்துவைக்கவில்லை; பேசாமல் படுத்துவிட்டேன்; குடும்பம் என்றால் இதனைப் பிரமாதப்படுத்தலாமா? என்கிறாள் (23;6).

தன் அத்தைமகன் நீரில் விழுந்து உயிர் தத்தளிக்கும் நிலையில் காப்பாற்ற முற்படும் மனைவியைத் தடுக்கிறான் கணவன். மீறிக் காப்பாற்றியதற்காகக் காலமெல்லாம் கணவனைப் பிரிந்து வாழும் மனைவியின் நிலையைக் காணலாம். (12:9).

கணவனிடம் வீட்டுச் செலவுக்கெனப் பணம் வாங்கி, இரவில் படுக்கைக்கும் பணம் வாங்குகிறாள் மனைவி. இந்தப் பணத்தை வேறு ஒருத்தியிடம் கொடுத்து அவன் வீட்டிற்கு வராத போது தன் தவற்றை உணர்கிறாள் (5:9). இப்படிப்பட்ட மனைவிதான் சமுதாயத்தில் உயர்த்திக் காட்டப்பட வேண்டியவளா? இதை-குமுதம் சிந்திப்பதாகத் தெரியவில்லை. கணவன் மனைவி என்ற கதையில் ஒரு விரசஉணர்வின் நெடியே வீசுகிறது.

கணவன்—மனைவி உறவுநிலைகளைச் சித்திரிக்கும் கதைகள் அவர்களிடையேயுள்ள சுமுகமான உறவு நிலைகளைச் சித்திரிப்பதில் கவனம் செலுத்தவில்லை. சுமுகமில்லாத உறவு நிலைகளுக்குக் கணவனின் வீண் சந்தேகமும், வக்கிரஉணர்வும், மனைவியின் பண்பற்ற நடவடிக்கையும் காரணங்களாகக் கூறப்படுகின்றன. இக்கதைகள் சமுதாயத்தின் ஒழுக்கக்கட்டுப்பாட்டிற்கு எதிரான அமைப்பையே உருவாக்கும், யதார்த்தப் பாத்திரங்களில் இந்தக் கணவன்—மனைவிப் பாத்திரங்களை உலவ விட்டால் நகமும் சதையும் புறஉறவு கூடிய பாத்திரங்களாக அமைவார்கள்.

**பிற உறவு நிலை**

**தந்தை – தாய்—மகன்**

மகன் பொறுப்பற்றநிலையில்; சம்பாதிப்பதில்லை. பெருந்தீனி தின்கிறான். பணம்கூடத் திருடுகிறான். ஒருநாள் இராணுவத்திற் சேர்ந்து தான் அப்படி நடந்தது எடையைக் கூட்டுவதற்காக என்று கூறுகிறான். அப்பாத்திரத்தின் அழுத்த குணம் கதையின் புதிர் அவிழ்ப்புநிலையில் விடுபடுகிறது (5:9).

**தாய்—மகன்—மருமகள்**

தாய்க்குப் பணம் அனுப்பும் கணவனை மனைவி கண்டிக்கிறாள். இதையறிந்த தாய் பணம் வேண்டாம் அவர்கள் மகிழ்ச்சியாக வாழ்ந்தால் போதும் என்ற நிலையில் தாய்மையின் தியாகம் வெளிப்படுகிறது.

**மாமனார்—மருமகள்**

மாமனாரின் பழங்காலப் பழக்கவழக்கங்களை வெறுக்கும் மருமகள் பிறக்கும் குழந்தைக்குத் தன் மாமனார் பெயரை வைக்க மறுக்கிறாள். ஒருநாள் ஓடும் பேருந்தில் அக்குழந்தை பிறந்து விடவே பேருந்தின் உரிமையாளர் பெயரையே வைக்கிறாள். அது மாமனாரின் பெயராக இருக்கவே மாமனார் மேல் மதிப்பு வைக்கிறாள் (23:6).

**தங்கை—கணவன்—மனைவி**

தங்கையின் விருப்பத்திற்காகக் கருகுமணிச்சரம் வாங்கிப் போட்ட கணவனிடம் மனைவி தனக்கும் வேண்டுமெனக் கேட்கையில், விட்டுக்கொடுக்காத மனைவியிடம் கணவன் படும்பாடு நன்கு சித்திரிக்கப்படுகிறது.

இவ்வாறு பல சிறுகதைகள் உறவு நிலைகளைப் பல கோணங்களில் சித்திரித்துக் காட்டுகின்றன. இந்த உறவுநிலைகளில் மாறி வரும் சமுதாய மதிப்புக்களையே காணமுடியும். ஏனெனில் இவர்கள் காட்டும் கணவன்—மனைவி நகரியப் பாத்திரங்களே. நகரியப் பாத்திரங்கள் அனைத்திலும் மாறிவரும் சமுதாயப் பாதிப்பையே பார்க்கலாம். பண்பாட்டு மதிப்பிற்கு இடமில்லை.

**சமுதாயம்**

வர்க்கப் போராட்டம், வேலையில்லாத் திண்டாட்டம், வரதட்சணை போன்ற பிரச்சினைகளைத் தொடாமல் விலகி ஓடும் குமுதம் சமுதாயத் தொடர்பான சிறுகதைகளையே மிகுதியாகப் புள்ளிவிவரமாகக் கொடுக்கிறது. சமுதாயப் பிரச்சினையைத் தாங்கி வருவதைக் காட்டிலும் திரைப்படத் திருப்புமுனைகளைத் தாங்கி யதார்த்தமற்ற பொழுதுபோக்குக் கதைகளையே கொடுப்பது எதனால்? வரதட்சணை கொடுக்காமல் வீட்டில் ஒடுங்கியிருக்கும் பெண்களுக்கும், வேலையில்லாப் பட்டதாரி இளைஞர்களுக்கும் தங்கள் கவலையை மறக்க, இல்லாத கற்பனையுலகத்தைக் காட்டிக்கொடுத்து விலகுகிறது குமுதம்.

**இறைபக்தி—அறக்கருத்து**

ஒருதரப்பட்ட வாசகர்களைத் திருப்திப்படுத்த வரும் இந்நிலை பாராட்டிற்குரியது. அறவுணர்வு (Moral value) மதிப்புப் பலவகைகளில் கோடிட்டுக் காட்டப்படுகிறது.

முருகனை நம்பியிருந்த தம்பதிகளுக்குக் குழந்தை செத்தே பிறந்தது என்று கவலைப்பட மறுபடியும் அவளுக்கு வலிகண்டு ஆண்குழந்தை பிறந்தது. முருகனை நம்பியது வீண்போகவில்லை. (29:2).

சுசீந்திரம் தாணுமாலயன் கோயிலில் குற்றம் செய்து ஒப்புக் கொள்ளாதவர்களைக் கைமுக்குச் செய்யச்சொல்வார்கள். கொதிக்கும் எண்ணையுள்ள கொப்பரையின் அடியில் இருக்கும் ரிஷபச்

சிலையை எடுக்கவேண்டும். கைகொப்புளிக்காமலிருந்தால் குற்றம் செய்யாதவர் (3:12).

கன்னிமங்கல சமீன்தார் பூபதியின் ஆவியும் அவரால் அநியாய மாகக் கொல்லப்பட்ட கோதண்டத்தின் ஆவியும் பழிவாங்க நினைக்கின்றன. சமீன் பரம்பரையில் வந்த பிரசன்னாவையும் கோதண்டத்தின் பரம்பரையில் வந்த ஜம்புவையும் இந்த இரு ஆவிகள் இயக்குகின்றன. பிரசன்னாவை ஜம்பு கொல்கிறான். காரணமறியா ஜம்பு போலீஸில் தன் குற்றத்தை ஒப்புக்கொள் கிறான் (3:3). இது ஆவிகள் பற்றிய நம்பிக்கையைத் தருவது.

மூடநம்பிக்கையைத் தவிர்ப்பது பற்றிய நிலையில் சகுனம் பார்த்தல் (17:2), அதிருஷ்டம் இல்லாதபொருள் துன்பம் தரும் (14:7), பாட்டியின் காலில் விழுந்ததால் ரவுடியின் கால் ஒடிந்தது (1:12) போன்ற கதைகளைக் கூறலாம்.

ஹோட்டலில் வேலை பார்க்கும் சர்வரிடம் சாப்பிட வந்தவர், ஓர் உயர்ந்த வேலையில் அவனை வைத்துக் கொள்வதாகக் கூறிய வுடன் அவர், சாப்பாட்டிற்கான பில்லைச் சர்வர் குறைக்கிறான். அவன் நாணயக் குறைவால் அவனை வேலைக்கு அமர்த்திக் கொள்ள அவர் மறுத்து விட்டார் (10:2).

உதவிக்குப் பதில் நன்றி (3:12), பிறர் நலம் பேணல் (21:7), தீமைசெய்தவர்க்குத் தீமைதானே விளையும் என்ற கருத்தினைக் கொண்டுப் பல கதைகள் அமைந்துள்ளன.

பிற

சமீன் பரம்பரையில் வந்த சாட்டையை வைத்து சந்திரபூபதிக் குச் சினிமாவில் நடிப்பதற்கு வாய்ப்புக் கிடைத்தது. வில்லனை அடிக்கும் காட்சியில் சாட்டையால் வில்லனை அடித்துக் கொன்று விடுகிறார். வக்கிர உணர்வு உளவியல் தொடர்பாக (2,6) அமைகிறது.

கண்ணாடியணிந்த பெண் தனக்கு மனைவியாக அமைய வேண்டுமென்று விரும்பிய இளைஞனுக்கு அப்படிப்பட்ட பெண் கிடைக்கவில்லை. தற்செயலாக, கீழே விழுந்த பெண்ணைத் தூக்கி உதவுகிறான். அப்பெண்ணிற்குக் கல்யாணம் நடக்கவில்லை. காரணம் கண்ணாடி அணிந்திருப்பதுதான். அவளையே தன் மனைவியாக ஏற்றுக் கொள்ளும் விசித்திரப் பண்பாளன். இது ஒரு வகைப்பட்ட தனிமனித உணர்வு (26:8).

இதுபோன்று நகைச்சுவை, துப்பறிதல் சார்ந்த கதைகள் உண்டு. ஹம்சா, யோகேஷ் போன்ற வாடிக்கையாளர்கள் அக் கதைகளைத் தருகின்றனர். அவைகள் உரையாடல் சார்ந்த நிலையில் நாடகத் தன்மை பெறுகின்றன. மருத்துவம், அறிவியல் துறையில் கதைகள் இடம் பெறவில்லை.

## கலைக்கூறு (Literary Technique)

### வடிவம் (Form)

குமுதம் பலதரப்பட்ட வாசகர்களைத் திருப்தி செய்யவேண்டி யுள்ளதால் அதற்குத் தகுந்தபடி சிறுகதைகளையும் பலதரப் பட்டவைகளாக அமைகின்றன. ஏறக்குறைய ஓர் இதழில் ஐந்து சிறுகதைகள் அமையும்.

1. ஒருபக்கச் சிறுகதைகள் — 2
2. அறக்கருத்து தொடர்பானவை — 1
3. வக்கிர உணர்ச்சி சார்ந்த சமூகக்கதை — 1
4. சிறுகதையா—நாடகமா என்று மதிப்பிட முடியாதபடி அமையும் உரையாடல் கதை — 1

இதில் இறுதிவகை, சிறுகதையிலக்கணத்திற்குப் பொருந்தாது. எனவே, ஆய்விற்குட்படுத்தப்படவில்லை. அவைகளின் எண்ணிக்கை வரையறுக்கவும் முடியாது. சமயத்தில் இரண்டா கவும் அமையும்.

ஒருபக்கச் சிறுகதைகள் கவர்ச்சி கலந்த ஆர்வப் பொருளைக் கருப்பொருளாகக் கொண்டிருக்கும். எடுத்துக் காட்டிற்கு ஒரு கதையைப் பார்க்கலாம். இந்த வயசில் இது (28:7)—இது கதையின் தலைப்பு.

''உறுதியாகத்தான் கூறுகிறேன். இனியும் தாமதிப்பதில் அர்த்தமில்லை. நாளை நான் பண்ணிக்கொள்வதென்று முடிவு செய்துவிட்டேன் என்றான் சந்திரன்''. இதுகதையின் தொடக்கம்; புதிரைத் தன்னுள் அடக்கி அவன் என்ன முடிவு செய்துள்ளான் என்ற நிலையில் ஆர்வம்.

வளர்ச்சிநிலை கதைப்பின்னலில் அடுக்கடுக்காகக் கோர்க்கப் படுகின்றன. தன் மனைவி உமாவோடு சேர்ந்து வெளியில் வர வெட்கமாயிருப்பதால் இந்த முடிவு எடுத்துவிட்டான், வளர்ச்சி நிலை—1.

சந்திரனைவிட வயதில் மூத்தவரான நாகராஜ் போனமாதம் பண்ணிக்கொண்டு இப்பொழுது அவனைவிடப் பல வருடம் இளமையாகத் தோன்றும்படி இருக்கிறார். இது வளர்ச்சி நிலை-2.

எதிர்வீட்டு ஏகாம்பரம் எவ்வளவு இளமையாகத் தோற்ற மளிக்கிறார். நேற்றுத்தான் அந்த ரகசியத்தைச் சந்திரனிடம் சொல்லியிருந்தார். வளர்ச்சிநிலை—3.

மூர்த்தியைப் போனவாரம் ரோட்டரி மீட்டிங்கில் சந்தித்த போது இதைப் பற்றித்தான் பேச்சு. வளர்ச்சி நிலை—4.

சரி! எனக்கும் சம்மதம்தான் என்றாள் மனைவி. திடீர் திருப்பம். இத்தனை வளர்ச்சி நிலைகளுக்குப் பிறகு, 'எப்பொழுதோ நான் நினைத்துப் பார்த்ததுண்டு. நீங்களும் தலைமுடியை 'டை' பண்ணிக்கொள்ளலாம் என்று'. இது கதையின் முடிவு.

இவ்வாறு,

ஆர்வத் தொடக்கம் + வளர்ச்சிநிலை—4 + திடீர்திருப்பு முனையுடன் முடிவு → ஒருபக்கக்கதை.

துவக்கம் ஆர்வஉத்தியுடன் எதையோ மறைபொருளுடன் குறிப்பது. வளர்ச்சி நிலையில் கதையின் கட்டுக்கோப்பு சிதறுகிறது. அடுக்கடுக்கான வளர்ச்சி நிலையில் தனித்த உச்சநிலை (Climax) இல்லை. ஒவ்வொரு வளர்ச்சி நிலையும் மறைபொருளைத் தொட்டுக்காட்டி ஆர்வத்தை வளர்க்க வேண்டும். இறுதியில் மனைவியே சம்மதித்துவிட்டாள். திடீர் திருப்பம், புதிர் அவிழ்ப்பு நிலையில் தலைமுடி 'டை' அடிக்கிற செய்தி வெளிப்படுகிறது. அதற்குப்பின் அமையும் முடிவில் ஆர்வம் இல்லாமல் அமையும் புதிரின் விடை. எந்தச் சிறுகதையிலக்கணத்திலும் அடங்காத இந்தக் கதை ஒருதரப்பட்ட கற்பனை வாசகர்களுக்கு உரியது. அறக்கருத்துக்களை மையமாகக் கொண்டுள்ள கதைகளில் தொடக்கம், வளர்ச்சிநிலை, உச்சநிலை, புதிர் அவிழ்ப்புநிலை, முடிவு என்ற சிறுகதையிலக்கணக் கூறுகளைக் காணலாம்.

தந்தைமேல் ராஜேஸ் உயிரையே வைத்திருக்கிறான். இளம் வயதில் தன் மனைவியை இழந்தாலும் மகனின் எதிர்கால நலனுக் காகத் திருமணம் செய்யவில்லை. அவருக்கு மாரடைப்பு. மருத்துவ மனையில் சேர்த்துள்ளார்கள். அவரின் நல்ல குணங்களைப்பின் னோக்கு உத்தியில் ராஜேஸ் பாத்திரம் நினைப்பது நல்ல உத்தி. அங்குள்ள நர்ஸ் மிகவும் கண்டிப்பாக இருக்கிறாள். தந்தையிடம் பேசுவதைக்கூட அனுமதிக்கவில்லை. ஆகையால் அவளிடம்

வெறுப்பு. தந்தைக்கு அபாயம் என்று தொலைபேசியில் கேட்டவன் விரைந்து வந்து பார்த்தபோது அவர் பிழைத்திருந்தார். தொண்டையில் மூச்சுவிட முடியாதபடி கட்டியிருந்ததை அருவருப்புக் காட்டாமல் எடுத்தாள். அந்த நன்றிக்காகக் காதலிக்க ஆரம்பித்தான். காதலும் வளர்கிறது. மாரடைப்பும் தொடர்கிறது. இன்பமும், சோகமும் பின்னப்பட்ட விதம் பாராட்டிற் குரியது. இறுதியில் சோகத்தின் சாயல் படிவதுடன் குறியீட்டுப் பொருளில் நன்றி உருவாக்கிய காதல் உணர்த்தப்படுகிறது (1:9), இது போன்ற கதைகளில் அத்தனை கூறுகளையும் பார்க்கலாம். க.நா.சு குறிப்பிடும் குதிரையின் வேகத்தைத் தங்கு தடையின்றிக் காணலாம். இதுபோன்ற கதைகள் அத்திபூத்த கதைதான்.

வக்கிரஉணர்ச்சியைத் தூண்டும் கதைகளில் ஒரு கொலை நடக்கப்போவதை ஒவ்வொரு வரியிலும் ஆர்வத்துடன் வளர்த்து இறுதியில் புதிர் அவிழ்ப்பு நிலையில் எதிர்பாராத திருப்பத்துடன் கொலைக்கான நோக்கமல்லாமல் கொலையும் நிகழும். உடன் மறுகொலையும் எதிர்பார்க்காத நிலையில் ஏற்படும். அல்லது சில கதைகளில் இறுதியில் சாந்தப்படுத்துவது மாதிரி அமையும்.

தன் தங்கையைக் காதலித்து ஏமாற்றிய காதலனைப் பழி வாங்க நினைக்கிறான். அவளைக் காதலிக்கும் மேஸ்திரி அதற்கு உதவினால் இவள் கிடைப்பாள் என்று அவனைச் சதிசெய்து வெடி மருந்து வெடிப்பில் கொன்று விடுகிறான்; தன் கையால் சாகாமல் கோவாலுவின் சதியால் செத்ததால் வக்கிரமடைந்த அவள் தன் கத்தியால் அவனைக் குத்திக் கொல்கிறாள் (16:6).

## தலைப்பு

பொதுவாகத் தலைப்புக்கள் ஆர்வ உத்தியுடன் அமைக்கப்பட வேண்டும். அதற்காகக் கருவைவிடத் தலைப்பிற்குக் கவர்ச்சியின் சார்பு தரக்கூடாது. குமுதத்தில் வரும் சிறுகதைத் தலைப்புக் களாவன:

| | | |
|---|---|---|
| வடமொழித் தலைப்பு | : | பாலாபிஷேகம் |
| ஆங்கிலத் தலைப்பு | : | விசிட்டிங் கார்ட் (23:6) |
| பாத்திரப் பெயர் | : | குழலி நாச்சியார் சாப்பாட்டுக் கடை வடிவு (7:7)<br>பத்மஜா (11:8) |
| கருவை மையமிட்டது | : | ஒரு நன்றி காதலிக்கிறது (1:9) |

| | | |
|---|---|---|
| வினாத் தலைப்பு | : | பொரிசா? (7:1)<br>நம்புகிறமாதிரியா இருக்கு?(30:6) |
| வக்கிர உணர்வு | : | கொலையைக் கண்ணாரக் கண்டவர் (13:1) |
| கவர்ச்சி | : | கழற்று என்றால் கழற்று (14:7)<br>பிரா காணவில்லை (29:9)<br>மனைவி மீது (13:8) |
| பொதுக் கரு | : | தீர்ப்பு (13:8) |
| திரைப்படம் | : | இரண்டாவது கேஸ் அல்லது கோபுரங்கள் சாய்வதில்லை(16:6)<br>அறைத்தோழன் அல்லது பதினாறு வயதினிலே (16:6) |

இதில் வடமொழி, ஆங்கிலம், திரைப்படம், வக்கிரஉணர்வு, கவர்ச்சி இந்த நிலையில் அமைவதைக் குறைத்துக் கருவை மைய மிட்ட அல்லது குறியீட்டுத் தலைப்புக்கள் நல்லது.

பிரா காணவில்லை—இத்தலைப்பு பாலியல் சார்ந்த விரசத் துடன் அமைவது வரவேற்பதற்கில்லை. பக்கத்தில் நிர்வாணமாய் முகத்தைக் காட்டும் பெண்ணின் படம்.

குடும்பக்கதையில் கூடத் தலைப்பு கவர்ச்சியாக அமைகிறது. 'இந்த வயசில் இது' (28:7). கணவன் மனைவி கதை.

திரைப்படம் சார்ந்த தலைப்பிற்கு ஆர்வத்தை வளர்க்கப் பெண்ணின் அலங்கோலப்படம்.

தொடக்கம்

ஒரு பக்கச் சிறுகதைக்கும் மற்றவகைச் சிறுகதைகளுக்கும் துவக்கம் வேறுபடும்.

முதலில் புதிர் கலந்த கவர்ச்சி ஆர்வம் ஒருபக்கக் கதையில் அமையும்.

''உறுதியாகத்தான் கூறுகிறேன். இனியும் தாமதிப்பதில் அர்த்தமில்லை. நாளை நான் பண்ணிக்கொள்வதாக முடிவு செய்து விட்டேன்'' (28:7)

என்ன பண்ணிக்கொள்ள?—புதிர் ஆர்வத்துடன் தொடங்கும்.

குடும்பக்கதைகளில்—காதல்கதைகளிலும் மேற்சுட்டிய கவர்ச்சி அமைகிறது.

சமயங்களில் உரையாடலை வளர்த்துப் புதிர்க்கவர்ச்சி உத்தியுடன் விரசநிலை ஆர்வத்தைத் தூண்டுகிறது. (23:6)

"நீங்க என்ன புதுசா?" என்றாள் வீட்டுக்காரரின் மகள் சுதா.

எதுக்கு? ராஜு குழம்பினான்.

இந்தத் தொழிலுக்குத்தான்.

தொழிலா?

ஆமாம். நீங்கள் புரோக்கர்தானே!

புரோக்கரா..."

சில தொடக்கங்கள் பாத்திரக்குழுவின் அறிமுகத்துடன் அமைகிறது.

"கூடத்தில் சின்ன சட்டசபையே உட்கார்ந்திருந்தது. அப்பா ராமசாமி. அம்மா செல்வம், அத்தைகளும், வனஜா, வனஜாவின் அண்ணன்கள், வனஜாவின் அக்காக்கள்" (7:7).

முடிவு

ஒரு பக்கக் கதைகளின் முடிவில் புதிர் அவிழ்ப்பு நிலை இடம் பெறுவதாலும் புதிரை வளர்க்க முடியாமல் முடித்துவிட வேண்டிய நிலையிலும் தொகுப்புரை மாதிரியே உள்ளது.

"எல்லோரும் கொஞ்சம் பொறுமையாய்க் கேளுங்க. செல்வம், உன் அண்ணன் பெரியவராக இருக்கலாம், கனகத்தின் வீட்டுக்காரர் வனஜாவுக்கு வேலை வாங்கித் தந்திருக்கலாம். ராஜேசும் கோபியும் வனஜாவின் அண்ணன்களாக இருக்கலாம். மத்தவங்க நெருங்கினவங்களா இருக்கலாம். ஆனா, ரிடையரான நான் உள்பட. ஒருத்தர் கூட இந்தக் கல்யாணச் செலவுக்கு ஒரு பைசா தரலே. பாவம் வனஜா. தானே எட்டுவருஷமாய் உழைச்சுச் சம்பாதிச்சு. வீட்டுக்கும் கொடுத்து, தானும் நாலுகாசு சேர்த்து வச்சு, ஆபிஸிலே லோன் போட்டு இப்ப அந்தப் பணத்திலேதான் அவள் கல்யாணம் நடக்கப்போகிறது. இப்பச் சொல்லுங்க யார் பேரைப் போடறது சரின்னு?" (7:7)

வக்கிர உணர்வுக் கதைகள் கதையின் முடிவைக் கேள்விக் குறியாக்கிச் சிந்தனைக்கு விட்டுவிடுகின்றன.

"அவள் குத்திக்கிழித்த காண்டிராக்டர் கோவாலுவின் அசைவற்ற உடல்மீது ரூபாய் நோட்டுக்களைப் போட்டு மூடிக்கொண்டிருந்தாள் மங்கம்மா" (16:6).

ஏற்கெனவே கோவாலு ஒரு கொலைக்குச் சதிசெய்தவன்; அவனையும் கொலை செய்த மங்கம்மா; இவளின் அடுத்தநிலை — வாசகர்களின் ஊக்கத்திற்கும், சிந்தனைக்கும் விட்டுமுடிப்பது. இத்தகு முடிவுகள் அறக்கருத்தைச் சார்ந்த சிறுகதைகளுக்கும் அமைகின்றன.

சிறுகதைகளில் கருவை வளர்க்கும் கதைப் பின்னலில் அமையும் உவமை, பழமொழி, வருணனை, உரையாடல், மொழிநடை போன்றவைகளும் குறிப்பிடத் தகுந்தவைகளாகும். ஒரு சிறுகதை யின் உண்மை வெற்றிக்கு இவைகளும் உதவும்.

உவமை

காலத்திற்குத் தக்கவாறும், சூழ்நிலைக்குத் தக்கவாறும் பழைய உவமைக்குப் புதுமெருகு கொடுத்தும், நடைமுறைக் குறிப்புகளுக்கும் மெருகூட்டி உவமையாகக் கொடுக்கும் போக்குப் பாராட்டத்தக்கது.

''அனாவசியமான குறுக்கீடுபோல ஒரு காக்கைக் கூட்டம் கரைந்துகொண்டு அந்த இடத்தைத் தாண்டிச்சென்றது''.

''அவள் டிரான்ஸிஸ்டர்போல் தனக்குத்தானே முணுமுணுத் துக்கொண்டு கவலையுடன் தேடியது அவனுக்கு வேடிக்கையா இருந்தது.'' (29;9)

''செலபன் காகிதத்தின் வழியே பார்க்கிறமாதிரி மங்கலாகப் பரவியிருந்தது விளக்கு வெளிச்சம், வேப்ப மரங்களின் காற்று குழந்தைபோல் தவழ்ந்து வந்து...'' (1;9)

''சரளைக்கல் வாணாவிஸ்யை குனிந்தெடுத்துத் தலையில் வைக்கும்பொழுது வில்லில் நாணேற்றும் லாகவமும் வேகமும் தெரியும்''. (16:6)

இவ்வாறு விலங்கு, அறிவியல், இயற்கை, செயல் இவைகளில் அமையும் உவமைகள் திறம்படக் கையாளப்படுவதைக் காண முடிகிறது.

பழமொழி

தேவையான இடங்களில் பழமொழி பொருத்தமாகப் பயன் படுத்தப்படுகின்றது.

''அப்பா போயிட்டா என்ன? அவருக்கு வைத்தியம் பண்ணினது இல்லேன்னு ஆயிடுமா? வாணியன் கடனும் வைத்தியன் கடனும் வெச்சுக்கக் கூடாதுன்னு பழமொழியே சொல் கிறார்களே'' (13:1).

## வழக்குச் சொற்கள்

பாத்திரத்தின் சாதி, படிப்பு, தொழில், வாழுமிடம் இவைகளுக்கேற்ற வகையில் பாத்திரக் கூற்றின் சொற்களும் அமைகின்றன: கல்வியறிவில்லா, கூலித் தொழில் செய்யும் பாத்திரங்கள் வழக்குச் சொற்களைப் பயன்படுத்துகின்றன.

கூலி வேலை செய்யும் மங்கம்மா: "சத்தியமா? ஏமாத்த மாட்டியே?"

காதலன் பேசும்போது, "உமா ஒரு வழியா உன்னைப் பத்தி அம்மாகிட்ட சொல்லிட்டேன். நல்லவேளை, அம்மா நான் பயந்த மாதிரி கோச்சுக்கலை" (1:9)

## வருணனை

சிறுகதைகளில் வருணனை இடம் பெறலாம். ஆனால் தலைமைக் கதைப் பின்னலை அனுசரித்தே இடம்பெற வேண்டும். இயற்கை வருணனை இயல்பாக அமைகிறது.

"மூன்று பக்கமும் மலைகள் சூழ்ந்த இடம். நடுவில் பசுஞ் சோலையாக அமைந்திருப்பது சின்னமருதுபட்டி. கிராமத்தின் ஓரமாகச் சலசலத்து ஓடும் சிற்றோடை. பசேலென்ற வயல்கள். குயில் கூவும் கிளி கொஞ்சும் அந்த இடம்" (1:9)

பெண் பாத்திரங்களை வருணிக்கிற அளவு ஆண் பாத்திரங்கள் வருணிக்கப்படுவதில்லை. வருணனையில் பாலியல் கவர்ச்சி ஓங்குகிறது. "ஒவ்வொரு முறை அவளைப் பார்க்கும் போதும் அந்த நடையிலே, அவள் அசைவிலே என்னமோ ஒன்று புதுசா இருப்பது மாதிரியே அவனுக்குத் தோன்றும். அந்த புதுசுக்காக அவன் தன் உயிரையும் கொடுக்கத் தயாராக இருந்தான்," (16:6)

## உரையாடல்

இவ்வகையில் ஆங்கிலக் கலப்புத் தேவைக்கு அதிகமாகிறது. யதார்த்தம் பாத்திரங்களுக்குத் தேவைதான். ஆனால் அதுவே யதார்த்தமாக மாறாது.

"குடும்ப டாக்டரைக் கூப்பிட்டு மைல்டு ஹார்ட் அட்டாக் என்பதை அறிந்து முதலுதவியாக அவசர மருந்துகள் செலுத்தி ஆம்புலன்ஸ் வரவழைத்து இந்த நர்ஸிங்ஹோமில்..." இதுபோன்று ஆசிரியர் தலையீட்டில் ஆங்கிலக் கலப்பைத் தவிர்க்கலாமே.

"ஹி இஸ் கொயட் ஆல் ரைட்" என்று அவன் முதுகின் பின்னாலே குரல் கேட்டது." (1:9)

"விஷ் யூ பெஸ்ட் ஆஃப் லக்" வாழ்த்துச் சொல்லி வழி யனுப்பி வைத்தாள்" (23:6).

இவை போன்ற ஆங்கிலக் கலப்பு கதையின் வளர்ச்சிக்குத் தேக்கத்தை ஏற்படுத்துகிறது.

பொதுமதிப்பீடு

சமுதாயம் தொடர்பான சிறுகதைகள் மிகுதியாக இடம் பெறு கின்றமை வரவேற்கத்தக்கது. எனினும் சமுதாயப் பிரச்சனையைக் கோடிட்டுக் காட்டாமல் அழுத்தமாகத்தரவேண்டும். தீண்டாமை, வேலையில்லாத் திண்டாட்டம், வர்க்கப் போராட்டம் இவை பற்றிய சிந்தனை வளரவேண்டும்.

சமுதாயத்தில் பெண்மைப் பிரச்சினையாயுள்ள மதிப்பாகும். வரதட்சணைக் கொடுமை, அலுவல்மகளிர் நிலை, பெண்கல்வி, விதவைத் திருமணம் இவைகளையெல்லாம் குமுதம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

இறைநம்பிக்கை பற்றி ஓரிரு கதைகளே வந்துள்ளன. ஆனால் அறக்கருத்துக்கள் பற்றிய சிறுகதைகள் மிகுதியாக வந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. தவிர்க்கப்பட வேண்டிய மூட நம்பிக்கைகளைச் சிறுகதையின் வழிப் புலப்படுத்துவது பாராட்டப் படவேண்டியதாகும்.

குடும்பம் பற்றிய கதைகளில் கணவன் மனைவி உறவு நிலை களின் பிரதிபலிக்கும் சுமுகமில்லாத உறவு நிலைகள் உரியகாரணங் களில் யதார்த்தமாக இல்லை. பாலியல் தொடர்பான உணர்வுகளே பேசப்படுகின்றன. குடும்பத்தின் பிறஉறவுநிலைகள் பல கோணங்களில் காட்டப்படுவது வரவேற்கத்தக்கது.

காதலில் நகைச்சுவை, யதார்த்தமற்ற ஆர்வம் கலந்துகெடுத்து விடுகிறது. நிறைவேறாக் காதலுக்குச் சுட்டப்படும் தடைகளில் வலுஇல்லை. குறிப்பாக மூத்த தலைமுறையினரிடமிருந்து இளந் தலைமுறைகள் 'விலகி ஓடுவதை'க் காணமுடிகிறது.

கதைகளின் சுவைகளை மாற்றுவதற்கு, வக்கிர உணர்வு சார்ந்த கதைகள், துப்பறிதல் கதைகளில் நகைச்சுவை சார்ந்த உரையாடல் கைகொடுத்துச் செல்கின்றன.

ஒருபக்கச் சிறுகதைகள் சிறுகதையிலக்கணத்திலிருந்து விடுபடு கின்றன. அறக்கருத்துக்களை மையமிட்ட கதைகள் முறையான சிறுகதைக்கான இலக்கணங்களைப் பெறுவதைவிட புதுப்புது

உத்திகளைக் கொண்டு வருகின்றன. வக்கிர உணர்ச்சியைத் தூண்டும் கதைகள் எதிர்பாராத் திருப்பங்கள் ஒன்று அல்லது இரண்டினை இறுதியில் பெறுகின்றன.

சிறுகதையின் தலைப்பு ஏதோ ஓர் வகையில் ஆர்வத்தை உள்ளடக்கிக் கவர்ச்சி பெற்றுவிடுகிறது. கதையின் தொடக்கம் ஆர்வத்தை வளர்ப்பதற்குப் புதிர் உதவுகிறது. இப்புதிரில் உரையாடல் விரசநிலையில் அமைவதும் இயல்பாகிறது. ஒரு பக்கக் கதையின் முடிவுகள் தொகுப்புரையாக உள்ளன. வாசகரீ சிந்தனைக்கு விடும் கதைகள் வரவேற்கத்தக்கன.

உவமைகளைப் பயன்படுத்துவதில் புதுமையின் போக்குப் புதுவன புகுதலைக் காட்டுகிறது. அறிவியல் உவமைகள் சிந்திக்க வைக்கின்றன.

சிறுகதையில் பாத்திரத்திற்கேற்ற வழக்குச் சொற்கள், சிறு தொடர்களைக் கொண்ட உரையாடல், எளிமைப் போக்கு ஆகியன குறிப்பிடத்தகுந்தன. ஆங்கில உரையாடல்கள் தொடர்ச்சியாக அமைவதால் தொடரோட்டத்தில் தேக்கம் ஏற்படுகிறது.

எதிர்பார்ப்புகள்

காதல் சார்ந்த கதைப் பாத்திரங்கள் யதார்த்தப் பாத்திரங் களாக இருக்கவேண்டும். நிறைவேறாக் காதலுக்காகக் கூறப்படும் தடைகளில் வலு இல்லை. வரதட்சணையா? தீண்டாமையா? பொருளாதார வேறுபாடா? இப்படி அடுக்கிச் செல்லலாமே.

கணவன்—மனைவி என்ற தனிக்குடும்பம் சார்ந்த கதைகள் மிகுதி. மேலும் இவர்கள் நகரீப்புறத்தில் வாழ்பவர்கள். இவர்கள் உறவு நிலைகளில் விரசம் கவர்ச்சி தவிர்க்கப்பட வேண்டும். பிற உறவுநிலைகள் மேற்குறிப்பிட்ட கணவன்—மனைவியைச் சார்ந்த நகரப்பாத்திரங்களே. நகரப் பாத்திரங்களுக்குக் கைகொடுத்தால் மாறிவரும் புதுசமூக மதிப்புக்களுக்கு இடம் கொடுத்தது போலாகி விடும்.

கிராமப்புறத்து மனிதர்கள் குமுதத்தில் உலவ வேண்டும். கூட்டுக்குடும்ப பிரச்சினைகள் பேசப்பட வேண்டும். கிராமத்தில் இடம்பெறும் இயந்திரயுகத்திற்கும் விவசாய யுகத்திற்கும் இடையே ஏற்படும் போராட்டங்களை யதார்த்தமாகக் காட்டித் தீர்ப்பு வழங்கவேண்டும்.

அரசியல் மதிப்பில் கதைகள் இடம்பெறவில்லை. நடுவழி நின்று அரசியலில் உண்மை காண அல்லது தீர்வு காண விடுதலை போராட்டக் காலத்தில் என்ன செய்தார்களோ அதனை ஏன் தொடரவில்லை?

கவர்ச்சிப்படங்கள், விரசமான உரையாடல்கள், பிறமொழிக் கலப்புக்கள், கவர்ச்சித் தலைப்புகள் இவைகளைக் கூடுமானவரை குறைத்து நம் தமிழ்ப்பண்பாட்டின் மதிப்பையும் மொழியின் தூய்மையையும் வளர்க்க குமுதம் உதவ வேண்டும். அறிவியல் மருத்துவம், புதிய கண்டுபிடிப்புக்கள், சரித்திரம்—தொடர்பான செய்திகளில் சிறுகதைகளைப் படைக்க முன் வரவேண்டும்.

**ஆனந்தவிகடன்**

இதழ்களின் பரிணாமவளர்ச்சியில் ஆனந்தவிகடனுக்குத் தனித்த இடம் உண்டு. இவ்விதழுக்கும் வியாபாரக்கொள்கை, குறிக்கோள் உண்டுஎன்பது மறுப்பதற்கில்லை. இருப்பினும், தரமான எழுத்துக்களை, எழுத்தாளர்களை வளர்த்த பெருமை உண்டு. இவ்விதழ் தரும் சிறுகதைகள் ஆனந்தவிகடனை நமக்கு எப்படி அறிமுகப்படுத்திக் காட்டுகிறது என்பதை ஆய்வின் வழி உணரலாம். 1983இல் வந்த சிறுகதைகள் ஏறத்தாழ 158. அவை கீழ்க்கண்ட வகைப்பாட்டில் அடங்குகின்றன.

| | |
|---|---|
| காதல் | 18 |
| குடும்பம் | 50 |
| சமுதாயம் | 45 |
| இறை, அறக்கருத்துக்கள் | 25 |
| பொது | 20 |

சமுதாயச் சிந்தனைகள், குடும்பம், அறச்சிந்தனைகள், காதல், பொது என்ற வரிசையில் கதைகள் வெளிவருவதைக் காண முடிகிறது.

**காதல்**

காதல் பற்றிய கதைகளில், நிறைவேறாக்காதலுக்குக் காரணம் மூத்த தலைமுறையினரின் எண்ணங்கள். அது எந்த அளவுக்குப் பெண்ணின் வாழ்க்கையைப் பாதிக்கிறது? தீர்மானிக்கப்பட்ட தீர்ப்புக்களில் வரும் (23:1) சுசிலா சமுதாயப் பிரதிநிதியாகப் படைக்கப்பட்டிருக்கிறாள். சுசிலா சிறு பெண். விபரம் தெரியாது. அப்போது அவளின் விதவை அத்தை சுசிலாவின் தந்தையிடம் தன்

மகன் வரதனுக்குத்தான் உன் பெண்ணைத் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்று சத்தியம் வாங்கி விடுகிறாள். பெரியவர் களின் சத்தியம்தான் முக்கியம். சுசிலாவின் மனது முக்கியமில்லை. அவள் வரதனை வெறுக்கிறாள். எதிர் வீட்டு ராமுவை விரும்பு கிறாள். அவள் விருப்பம் ஏற்கப்படவில்லை. வரதனுக்கு மனைவி யாக மாறியபின் அவனின் கொடுமைகளிலிருந்து தப்பிக்க தற்கொலை முடிவெடுக்கிறாள். அவள் மகளின் வாழ்வையாவது சமுதாயம் நல்லபடியாகத் தீர்மானிக்கட்டும். "தீர்மானிக்கப்பட்ட தீர்ப்பே என் முடிவுக்குக் காரணம். என் மகளின் வாழ்வை அவளே தீர்மானிக்க, தயவு செய்து இந்த உலகம் அனுமதி கொடுக்குமா?" புரிந்தவர்களுக்கு ஒரு சவுக்கடி. புரியாதவர்களுக்கு எதுவும் சொல்லத் தேவையில்லை. அவர்களுக்கு எதுவும் எப்போதும் புரியாது.

காதல் கதைகளில் குடும்பப் பாத்திரங்களை உலவவிட்டு யதார்த்தச் சூழ்நிலையைக் காட்டும் ஆனந்தவிகடனின் முயற்சி குறிப்பிடத்தக்கது. வாக்குக் கொடுத்துவிட்டால் காப்பாற்றியே தீரவேண்டும் என்ற முறை ஒரு காதலைக் கொன்று அவளையே பலியாக்கிக் கொள்கிறது. அவள் விட்டுப்போகும் குழந்தைகள் எதிர்காலத்திற்கு விடை சொல்ல வேண்டும்.

கூட்டுக்குடும்பத்தில் ராமனுக்கு வாழ்க்கைப்பட்ட ராஜி; 'ஆண் என்பவன் ஆளப்பிறந்தவன், பெண் என்பவளுக்கு இரண்டு வேளைச் சோறு, இருக்க இடம்' என்ற கட்டுப்பாட்டிற்குள் அடை பட்டு, ப்ரியா என்ற பெண்ணைப் பெற்றெடுக்கிறாள். இத்தனைக் கும் ஜாதகம் பொருத்தம் பார்த்தலில் தவறில்லை. கட்டங்கள் பொருந்தின. நட்சத்திரங்கள் பொருந்தின. எல்லாமே பொருந் தின மனங்களைத் தவிர. ப்ரியா தன்னுடன் படிக்கும் குமாரை விரும்புகிறாள். தாய், தன் வாழ்க்கை தந்த படிப்பினையைக் கொண்டு, மகள், வாழ்க்கை நன்கு அமைய ஆதரவு தருகிறாள். ஏன் பாட்டிகூடத் தருகிறாள். மனைவியை மதிக்காத ராமன் மகளுக்கு எங்கே ஆதரவு தரப்போகிறான்? மனப் பொருத்தம் இல்லாத தன் வாழ்க்கையைப் பத்துக் கட்டங்களை வைத்துச் சிறைப்படுத்த முடிந்ததென்றால், மனப்பொருத்தம் உள்ள இரு உள்ளங்களை இணைக்க அந்தக் கட்டத்தைவிட்டு ஏன் சட்டத்தை நாடக்கூடாது என்ற பிடிப்பில் அவர்களின் பதிவுத் திருமணத்தைச் செய்துவிட்டுத் தன் தாய் வீட்டிற்குப் போகிறாள். தன் வாழ்க்கையைத் தியாகம் செய்யும் தாய் தன் மகளின் காதலை அங்கீகரிக்கிறாள் (15.5).

காதல் என்றால் பீச், சினிமா, கருத்துப் பரிமாற்றம் இவைகள் இல்லாமல் குடும்பப் பாத்திரங்களுடன் காதலையும் இணைத்துத் தீர்வுகளைக் கொடுக்கும் கதைகள் பல உள்ளன.

**குடும்பம்**

குடும்ப உறவுகள் தந்தை, தாய், பாட்டி, மகள், கணவன், மனைவி என்று பிரித்து உணர்த்தப்படுகின்றன. உறவு நிலைகள் யதார்த்தத்தைக் காட்டுகின்றன. கணவன்—மனைவி உறவுநிலை களுக்கு மட்டும் மிகுதி கொடுத்துச் சிறுஉணர்ச்சி விஷயங்களைப் பேசாமல் வலுவுள்ள பிரச்சினைகளுக்கு ஒவ்வொரு பாத்திரமும் பார்க்கும் விதம் அழகாயுள்ளது. ப்ரியாவின் காதலைத் தந்தை வெறுக்கிறான். தாய் ஆதரிக்கிறாள். பாட்டி ஆதரிக்கிறாள். காதல் நிறைவேறுகிறது. தன் கணவனைப் பிரிகிறாள் தாய். ஆண் வர்க்கச் சமுதாயம் அதிகார அந்தஸ்தில் இந்தப் பிரிவை வரவேற்கிறதோ, பாட்டி மட்டும் என்ன செய்வாள்?

**சமுதாயம்**

சமுதாயப் பிரச்சினைகளை அணுகுவது எளிது. ஆனால் தீர்ப்புக் கொடுப்பதுதான் அரிது. பெரும்பாலான கதைகள் தீர்ப்பை வழங்கத் தவறுவதில்லை. இலங்கையின் இனவெறி ஒரு குடும்பத்தைப் பாதிக்கும் நிலையில் குடும்ப மதிப்பைவிட சமுதாய மதிப்பாக மாற்றப்படும் முறை, குடும்பமே சமுதாயத்தின் சிறு அலகு என்று சுட்டும் போக்கு அருமையாக உள்ளது.

ஈழத்துத் தமிழ் அகதிகளை ஏற்றிக்கொண்டு கப்பலொன்று புறப்பட்டு வருகிறது. 'அப்பா சாப்பிட வாருங்கள்'— குழந்தை அழைக்கிறது. கடலையே வெறித்துப் பார்க்கிறான். அவன் எந்தச் சமயத்தில் கடலுடன் சேர்ந்து விடுவானோ?

நடுத்தர வயதைக் கடந்த பெண்ணைக் காவலுக்கு வைத்து விட்டுச் சேலையால் தன் உடலை இழுத்து மூடி உணவை வாங்கிக் களத்திற்கு வருகிறாள். அவன் உணவைத் தொடவில்லை, அவளை வக்கிர உணர்வுடன் பார்க்கிறான்.

அவளின் மனம் பாதிக்கப்பட்டது எதனால்? இந்தக் கப்பல் தாயகம் போய்ச் சேர்வதற்குள் அவன் இருப்பானா? அவன் பெற்றோர்களிடம் அவனை ஒப்படைத்து விட்டால் தன் பொறுப்பு முடிந்துவிடும். மனைவியின் பொறுப்பு இவ்வளவுதானா? இந்தச் சிந்தனையில் தன் கண்ணீர்க்கதையை நடுத்தரவயதைக் கடந்த பெண்ணிடம் கூறுகிறாள்.

மென்மையான மனம். என் மேல் கொள்ளைக் காதல். நல்ல செல்வச் செழிப்பு. திடீரென்று இனவெறியர்களின் கும்பல் அவள் வீட்டைத் தாக்கும் போது தன் குழந்தையையும். கணவனையும் காப்பாற்றும் நிலையில்... அவள் செய்த தியாகம். தனக்காக அல்ல, தன் கணவனுக்காக.

அப்படி என்ன செய்துவிட்டாள்? தன் புடவைத்தலைப்பை விலக்கிக் காண்பிக்கிறாள். மேல் மார்பு, கழுத்து எல்லாம்... விம்பி, வீங்கி, சிவந்து, சிவந்து சிதல் கட்டிய வேட்டை நாய்களின் பிறாண்டல்கள்! குதறல்கள்.

உயிருக்குயிரான கணவன் முன்னாலேயே தன்னை விலை கொடுத்து அவன் உயிரை மீட்டாள். கேட்டுக் கொண்டிருந்த சமூகசேவகி ஆறுதல்படுத்துகிறாள்: "இதெல்லாம் உடல்காயங்கள். உன்னை மாதிரி மனக்காயம் பட்டவர்களை வாழவைக்க ஆதரவு கொடுக்க நீ சாவைத் தேர்ந்தெடுக்கக் கூடாது. சமூக சேவகியாக மாற வேண்டும்."

சிறுகதைக்கே உரித்தான துவக்கம், வளர்ச்சி நிலையில் ஆர்வம் உச்ச நிலையில் அவளின் விலைமதிப்பு, புதிர் அவிழ்ப்பு நிலையில் அவளின் உள்ளக் குமுறல் வெளிப்படும் விதம், சமூக சேவகி தரும் முடிவு. தீர்வு கூறமுடியாத சமூகப்பிரச்சனைக்கு எவ்வளவு பொருத்தமான தீர்வு. (அவள் கொடுத்த விலை 4:9) முத்தாய்ப்பான கதை.

சமுதாய வர்க்க முரண்பாட்டில் தொடங்கும் போராட்டங்களுக்கு வன்முறை சரியான தீர்வு இல்லை. துப்பாக்கியைத் தூக்கினால் குருவி, காக்காய்கூடப் பறந்துவிடும், அஹிம்சா முறை தான் சிறந்த வழி. கூறுவது ஆனந்தவிகடன். தன் சொந்தமகள் ஆராயி. அவளின் முறைப் பையன் சாத்தையன் இருக்கிறான். நடுவில் மைனர் துரைசிங்கத்தின் பையன் வடிவேலு ஏன் குறுக்கிட்டான்? அவன் சதைக்குப் பசி. பசியைத் தீர்த்துக்கொள்ள ஆராயி கிடைத்தாள். இந்தக் கொடுமை பஞ்சாயத்திற்கு வந்து அவன் செய்த அநியாயத்திற்கு ஐந்து ரூபாய் அபராதம். தீண்டத்தகாத சாதியைச் சார்ந்தவர்களின் கற்பு விலை ரூபாய் ஐந்து. இந்த அவமானத்துக்காகப் போராட்டக் குழு சாத்தையன் தலைமையில் கூடியது. ஆராயின் தந்தை மறுத்துவிட்டான். நியாயமான தீர்ப்பு கிடைக்கவில்லைதான். ஆனால் போராட்டம் அதற்கான வழியில்லை. இவ்வளவு நாள் கெடு கொடுக்கிறேன். அதற்குள்

வடிவேலு ஆராயியை ஏற்றுக் கொள்ளாவிட்டால் தீப்பாய்ந்து உயிரைவிடுவேன். எங்களின் சாவு அவர்களுக்கு மட்டுமல்ல. சமுதாயத்திற்குப் பாடமாகட்டும் என்கிறான். என்றைக்குத்தான் அஹிம்சைக்குத் தோல்வி வரும்? (வெள்ளைநிறத்தொரு பூனை 4:9).

இறைநம்பிக்கை—அறக்கருத்து

இவ்வகைக் கதைகளும் சரியான முறையில் அமைந்துள்ளன. பியூனின் கல்யாணத்திற்குப் போகும் மேனேஜர் தன் அந்தஸ்தை விட்டு இறங்கித் தியாகம் செய்து போகிறோம் என்ற கர்வத்தில் இருக்கிறான். ஆனால் பியூனோ கால் ஊனமான நொண்டிப் பெண்ணுக்குத் தன் வாழ்க்கையையே தியாகம் செய்கிறானே! இதில் எது தியாகம்? (23:10).

பிற

அரசியல் தலைவர்களின் இன்றைய போக்கு யதார்த்தமாகப் படைக்கப்பட்டுள்ளது. உலகவங்கி கடன் கொடுக்க அதை வழங்க அந்தக் கிராமத்திற்குப் போனால் தனக்கு வசதி குறைவு. விளம்பரமும் கிடைக்காதே என விலகும் மந்திரி (15 5)

கலைக்கூறு வடிவம்

ஆனந்தவிகடனிலும் ஒரு பக்கக் கதைகள் அமைகின்றன. இவை அரசியல், சமுதாயத்தைப் பற்றி விமர்சனம் செய்யும் நிலையில் உள்ளன. அவற்றின் வடிவ அமைப்பு சிறுகதையிலக்கணத்தை இழக்கிறது (15,5), இரண்டு பக்கங்களில் அமையும் பெரும்பாலான கதைகள் நன்கு உள்ளன (22.10), சில சிறுகதைகள் 'தொடர்ச்சி' யென அடுத்த இதழில் முடிந்து குறுநாவல் தகுதியைப் பெறு கின்றன. (4.9). சமுதாயப் பிரச்சினை பற்றி விளக்கிய இடத்தில் ஒரு கதை பரிசோதனைக்கு எடுக்கப்பட்டு ஆராயப்பட்டுள்ளதைக் காணவும்.

தலைப்பு

தலைப்புகளில் பெரும்பாலும் ஆர்வத்தை வளர்க்கத் தூண்டும் வீணான கவர்ச்சி இல்லை.

| | | |
|---|---|---|
| பாத்திரப் பெயர் தலைப்பு | ; | சத்யா சொன்னபொய் (23.10) |
| வினாத் தலைப்பு | : | எது தியாகம் (23.10) |
| நிகழ்ச்சித் தலைப்பு | : | இரயில் பயணங்களில் (15.5) |
| குறைத்தலைப்பு | : | கல்லானாலும் (23,10) |

பாத்திரமில்லாத நிலையில்
பொதுத்தலைப்பு : அவர் (15:5)
அம்மா அம்மா (23:10)
குறியீட்டுத் தலைப்பு : வெள்ளை நிறத்தொரு பூனை (4:9)

பெரும்பாலும் சிறுகதையிலக்கண நிலையில் மேற்காட்டிய தலைப்புக்கள் ஆர்வத்தை வளர்க்கவே செய்கின்றன. செயற்கை மூலாம் எங்கும் பூசப்படவில்லை.

**துவக்கம்**

ஆனந்தவிகடனில் துவக்கங்களில் உரையாடல் தன்மையில்லை உரையாடலைக் கொச்சைப்படுத்தி ஆர்வம் வளர்க்காத தன்மை பெரும்பாலும் காணமுடிகிறது. எனினும் துவக்கங்கள் பெரும் பாலும் இடம்பற்றிய அறிமுகம், பாத்திரம் பற்றிய அறிமுகம் இவைகளைச் சார்ந்து அமைகிறது. இவைகளில் வருணனை அல்லது நிகழ்ச்சி பற்றிய செய்திதான் அமையும். எனவே, வாசகர் களுக்கு ஆர்வம் வெளிப்படையாக அமையாது. கருவைப் புதிருடன் வெளிப்படுத்தும் நிலை ஊடுருவலாகத் தொடக்கத்தில் அமைந்து விடுவதுமுண்டு.

கல்லூரிக்குச் செல்ல, ப்ரியா தயாராகிக் கொண்டிருந்தாள். புத்தகங்களை ஒழுங்காக வரிசைப்படி அடுக்கிக் கொண்டு "போயிட்டு வரட்டுமா அம்மா! என்பது போல ராஜியிடம் பார்த்தாள்" (15.5)

ப்ரியாவின் அறிமுகம்; கல்லூரிக்குச் செல்லும் வயது; தன் அம்மாவைப் பார்க்கிறாள். சிக்கலுக்குத் தேவையான தலைமைப் பாத்திரங்கள் அறிமுகப்படுத்தப்படுகின்றன.

**முடிவு**

பெரும்பாலான கதைகளின் சிக்கலுக்கான தீர்வுகள் கூறப் படுவதால் ஆசிரியர் படர்க்கை நிலையில் முடிப்பது மாதிரியும் அல்லது பாத்திரங்களின் செயல்களில் முடிப்பது மாதிரியும் அல்லது தீர்க்கமுடியாத பிரச்சினைகளைக் காலத்தின் மாற்றமும் சமுதாய மும் சேர்ந்து தீர்க்கவேண்டியது என விலகித் தனித்து முடிவைக் காட்டும் திறனும் காணமுடிகிறது.

"இந்தச் சூரியப் பெருவெளிச்சத்தில் அந்த மினுமினுப்பைக் காணவந்த தன்னுடைய பேதமையை எண்ணி சுப்பிரமணியன் வெட்கித் தலைகுனிந்தான்" (23:10)

மேற்குறிப்பிட்டது போல ஓர் உவமையைக் காட்டியும் முடிவு அமைகிறது.

''எதிர்காலத்தில் நம்பிக்கை வைத்து அவன் பின்னே செல்கிறாள் அந்த இளம்பெண். நிச்சயம் காலம் அவளுக்கு வழி காட்டும்'' (4:9)

காலம் என்பது இங்கு வருங்காலச் சமுதாயத்தைக் குறியீட்டுப் பொருளாகக் குறிக்கிறது.

ஆனந்தவிகடன் சிறுகதைகள் வழி வெளிப்படும் உவமை, வருணனை, உரையாடல் நடை இவைகளைக் காணலாம்.

**உவமை**

பாத்திரக் கூற்றின் வாயிலாகவும், ஆசிரியர் கூற்றின் வாயிலாக வும் வெளிப்படும் உவமைகள் சிறுகதையின் புவியியல் களத்திற்குத் தகுந்தபடி அமைகின்றன.

கிராமத்துப் பின்னணியில் அமையும் கதையில் அம்மண்ணிற் குரிய உவமை மணம் கமழ்வது யதார்த்தத்தை உயர்த்திக்காட்டும். ''பதர் அடித்துத் தூக்கி எறியப்பட்ட பயிராக அவளது வாழ்க்கை அத்தியாயங்கள் அற்ப ஆயுளில் மரிக்கப் போகின்றன'' (4:9) இது ஆசிரியர் கூற்றில் வெளிப்படுகிறது.

'கீழ்ச்சாதிப் பொண்ணு மானப்னா அது பொறம்போக்கிலே பூத்த அரளிப் பூவுன்னு நெனச்சுட்டாங்க'' (4:9)

**வருணனை**

இயற்கை வருணனையாகட்டும் அல்லது பாத்திர வருணனை யாகட்டும் அல்லது சூழல் வருணனையாகட்டும் அதில் ஓர் தனித் தன்மையைக் காணமுடிகிறது. வருணனைகளும் சிறுகதைக்கேற்ற வரையறையுடன் நறுக்குத்தெறித்தாற்போல அமைந்துள்ளன.

''தெளிவான ஆகாயத்தில் மிதக்கும் நட்சத்திரக்கூட்டம்'' (15:5) — இயற்கை வருணனை.

''ஆராதனைக்குக் கொய்துவந்த மலராக அக்கினி தேவனை அலங்கரிக்கும் துணிச்சலுடன் நின்றாள். கருவேல மரத்தில் கடைந்த பருவச்சித்திரம் அவள்! ஆணின் சபலக் கண்ணுக்கு அவள் ஓர் அமுதக்கலசம்'' (4:9) பெண் பாத்திரம் என்பதற்காக விரசத்தை ஊடுருவவிட வில்லை. தேவையான வருணனை.

**இலக்கிய மேற்கோள்**

சிறுகதைகளில் வளர்ச்சிநிலையின் கதைப்பின்னலில் பொருத்த முள்ள இடங்களில் பழம் இலக்கியங்களைச் சுட்டிச்செல்லும் போக்கு அரிதாகத் தெரிகிறது. ஆசிரியர் கூற்றில் அவைகள் அமைக்கப்படுகின்றன.

''இராமாயண மகாபாரதப் போர்களுக்கே காரணமான பெண்மானப் பிரச்சினை இப்போது இங்கு குருதிப் பசியில் வாய் பிளக்க ஆரம்பித்தது'' (4:1)

**வழக்கு**

பாத்திரங்களின் பின்புலத்திற்குத் தக்கவாறு வழக்குகள் அமைகின்றன. கிராமியப் பாத்திரங்கள் தங்கள் பேச்சுக்களையும் உரையாடல்களையும், உவமைகளையும் தங்கள் சூழலுக்குத் தக்க வாறு கூறுகின்றன. ஈழத்தில் உள்ள இனப்பிரச்சினையை வெளிப் படுத்தும் பாத்திரங்கள் (4:9) தங்கள் ஈழவழக்கை வெளிப் படுத்துவது யதார்த்தத்தைப் படம்பிடிக்கிறது: ''கலவரம் நிறைந்த சோகம் அவள் முகத்தில் கப்பியிருந்தது'' (4;9)

**நடை**

ஒரு சிறுகதையை எடுத்து எந்த இதழின் சிறுகதையென்று கண்டுபிடிக்கக் கூடிய அளவிற்குத் தரமான நடையும் விரசத்தை இலை மறை காயாய்க் கூறும் நளினமும், எதுகை, மோனை பேச்சுக் களையும் குறிப்பிட வேண்டியுள்ளது.

ஒரு பெண் விரும்பி அவளை அனுபவிக்கும் கணவனும் அவள் விரும்பாமல் பலவந்தப்படுத்தும் நிலையும் ஆனந்தவிகடனின் சொற்கள்தான் நயமாகக் கூறமுடியும். ''மெல்ல முகர்ந்து மெதுவாக மலர்த்தி அன்பின் எல்லைக்கு இட்டுச் செல்பவனின் முன்னிலையிலேயே அந்த மலர் பிய்த்துப் பிடுங்கிக் குதறப் பட்டது'' (4;9)

கீழ்க்கண்டவார்த்தைகளில் எதுகை மோனையைக் காணலாம். ''உயிரும் பயிரும் எங்கள் விளையாட்டுச் சித்து. சாதியும் வேலியும் உங்கள் விஷவித்து''(4:9)

**வடமொழிக் கலப்பு**

கதைகளில் பிராமணப் பாத்திரங்களின் பேச்சுக்களில் வட மொழி கலந்து வருவதைக் காணமுடிகிறது. ''அந்த சிவராமன் கண்ணீர் பிடை, நெஞ்சம் தழுதழுத்துத் தன் காலடியில்

பாதாபிஷேகம் செய்யப் போவதைக் கற்பனை செய்து பார்த்தேன்.''

## ஆங்கில உரையாடல்

எல்லா இதழ்களிலும் யதார்த்தம் என்ற பெயரில் ஒட்டிக் கொண்ட தடுக்கமுடியாத நிலை ஆங்கிலக் கலப்பு. பாத்திரங்கள் பேசட்டும். ஆனால், தொடர்ச்சியாகத் தமிழையும் ஆங்கிலத்தையும் கலக்காமல் பேசட்டும். ஆசிரியர் தன் கூற்றில் ஆங்கிலத்தைத் தவிர்ப்பது நல்லது.

''நான் நிச்சயமில்லாமல் பின்னே சென்றேன். ''நீங்க ரிஸப்ஷன்லே இருங்க. யூ கேநாட் ஹெல்ப்'' என்று சொல்லி விட்டு ஓர் அறைக்குள் நுழைந்து மறைந்து போனார்'' (26:6)

## பொது மதிப்பீடு

சமுதாயப் பிரச்சினைகளுக்குத் தீர்வு கூறப்படுகிறது. பிரச்சினை அணுகும் வழியில் அஹிம்சை வற்புறுத்தப்படுகிறது. மாறிவரும் சமூகக் கொள்கையையும் ஏற்கச் சமுதாயம் தயங்கக் கூடாது.

அறக்கருத்துக்களுக்குத் தரும் இடம் இறை நம்பிக்கைகளுக்குத் தருவது மாதிரி வெளிப்படையாகத் தெரியவில்லை. ஒன்றின் வளர்ச்சியில் அதுவும் உளப்பட்டு விடும் என்பது கணிப்பா?

காதலும், குடும்பமும் இணைந்து பேசப்படும் யதார்த்தம். பாத்திரங்கள் சமுதாயத்தில் எங்கோ இருக்கத்தான் செய் கிறார்கள். கற்பனையில்லை என்ற உணர்வு நிறைவு தருகிறது.

நிறைவேறாக் காதலுக்கு மூத்ததலைமுறையினரின் பிடிவாதம் வருங்காலத் தலைமுறைக்குப் பாடமாக அமையட்டும் என்ற தொலை நோக்குப் பார்வை தெரிகிறது. குடும்ப உறவுகள் ஒரு பிரச்சினையை எவ்வாறு அணுகுகின்றன என்ற முறை பயனுடையது.

தீர்வுகள் நடைமுறைக்குச் சாத்தியமா? என்பதற்குக் காலம் தான் பதில் சொல்லும் என்ற பெருந்தன்மையைக் காணமுடிகிறது.

எந்தப் பகுதியிலும் கவர்ச்சி, விரசம், பாலியலைத் தூண்டும் படங்கள் இல்லை. இதை மனதாரப் பாராட்டச் சமுதாயத்திற்குக் கடமையுண்டு.

எதிர்பார்ப்புக்கள்

காதல் கதைகளில் சாதி, வரதட்சணை போன்ற பிரச்சினை களைச் சேர்த்துத் தீர்வு கூறலாம்.

குடும்பம் பற்றிய கதைகள் கிராமத்துக் களத்திலும் அமையட்டும். சமுதாயப் பிரச்சினைகள் கிராமத்தைத் தொடும் அளவு குடும்பம் தொடவில்லை.

வேலையில்லாத் திண்டாட்டம், லஞ்சம், இளைஞர்கள் பிரச்சினை, மொழிப்பிரச்சனை, அரசியல் சீர் கேடு இவைகளை ஆனந்தவிகடன் பரிவுடன் பார்க்கவேண்டும்.

இறை நம்பிக்கையும் அறமதிப்பும் நமது சமுதாய பண்பாட்டிற்கு மிகவும் தேவை என்று வலியுறுத்த வேண்டும்.

ஒரு பக்கக் கதையை நிறுத்தலாம். மேலும் ஆங்கிலக் கலப் பைத் தவிர்க்கலாம்.

சிறுகதைகள் வளர்ந்த காலத்தில் மணிக்கொடி, போன்ற பத்திரிகைகள் எவ்வளவு பரிசோதனைகளில் இறங்கினவோ, அது மாதிரி ஆனந்தவிகடனும் இலக்கியத் தரத்தைப் பேணி, புது கலைத்திறன்களைப் புகுத்தி இலக்கிய வளர்ச்சிக்கு உதவவேண்டும்.

குங்குமம்

தற்காலத்தில் புதிதாகப் பல வார இதழ்கள் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டன. அவ்வகையில் இவ்விதழும் ஒன்று. கொள்கை அல்லது அரசியல் பின்னணியும் உண்டு. இவ்விதழில் வெளிவரும் கதைகள் மற்ற இதழ்களில் வெளிவரும் கதைகளி லின்று சற்றே மாறுபட்டமைகின்றன. அவைகளைப் பொது மதிப்பீட்டில் உறுதிப்படுத்தலாம்.

இவ்விதழில் 1983-ம் ஆண்டு வெளிவந்த சிறுகதைகளின் எண்ணிக்கை—162.

| | | |
|---|---|---|
| காதல் | — | 34 |
| குடும்பம் | — | 27 |
| சமுதாயம் | — | 43 |
| இறை நம்பிக்கை அறக்கருத்துக்கள் | — | 23 |
| பொது | — | 14 |

காதல்

காதல் கதைகளில் ஒரு கதையில் மட்டுமே காதல் வெற்றி பெறுகிறது. அதாவது நிறைவேறும் காதல் எனக் குறிப்பிடலாம்.

மூன்று கதைகள் காதலின் வெற்றி தோல்வி பற்றிக் குறிப்பிடாமல் காதல் நிகழ்ச்சிகள் பற்றி மட்டும் கூறிச் செல்கின்றன. மீதியுள்ள கதைகள் நிறைவேறாக்காதலாகவே உள்ளன. ஆறு கதைகள் ஒருதலைக் காதலாக அமைகின்றன.

அவன் அவளுக்காகக் கடற்கரையில் காத்திருந்தான். அவளும் வந்தாள். வந்ததும் அவளுக்காக வாங்கி வந்திருந்த புதுப்புடவை யினை அவளிடம் கொடுத்தான். இதன் விலை என்ன? என்றாள். ரூ 250 என்றான். சென்ற வாரம் எனக்கு வாங்கித் தந்தீர்களே? அந்தச் சேலையின் விலை என்ன என்றாள்? ரூபாய் 150 என்றான். அவள் எழுந்து புறப்பட்டாள். அவன் ஏன் என்றான். இப்பொழுது இருக்கின்ற விலைவாசியில் இப்படி செலவு செய்தால் கட்டுப்படி ஆகாது. வேறு ஒரு சிக்கனமானவரைத்தான் மணந்து கொள்வேன் என்று காதலை உதறித்தள்ளும் பெண்மையைக் காணலாம். இங்குக் காதல் மனத்தளவில் இல்லாமல் உலகியல் வாழ்க்கை நிலையில் அமைகிறது. அதனால்தான் இந்தச் சட்டையைக் கழற்றி அடுத்த சட்டையை மாற்றுவது போலக் காதலையும் மாற்றுகிறாள். இதுதான் இன்றைய யதார்த்தமா? நம் பண்பாட்டு மதிப்பா? மாறிவரும் சமுதாயப்போக்கா? (1:5)

சாதிப்பிரச்சினை காரணமாக இரண்டு கதைகளிலும், கல்வி யின் மீது கொண்டுள்ள ஆர்வத்தினால் ஒரு கதையிலும் காதல் தோல்வியடைகிறது.

வறுமை, வரதட்சணை, பொருளாதார ஏற்றத்தாழ்வு தனக்கு மூத்த சகோதரிகளுக்குத் திருமணம் ஆகாமலிருத்தல் போன்ற காரணங்களால் வரும் பிரச்சினைகளைக் கொண்டு ஒரு கதை கூட வெளியாகவில்லை.

### குடும்பம்

குடும்ப மதிப்பை வெளிப்படுத்தும் கதைகள் கணவன்—மனைவி உறவுநிலை சார்ந்த பிரச்சினைகளைப் பற்றி மட்டுமே எடுத்துக்காட்டுகின்றன. பிற உறவு நிலைகளைப் பற்றி அமையும் கதைகளின் வருகை எண்ணிக்கை குறைவு. அப்படியே வந்தாலும் வளரும் இளந்தலைமுறையினர் மூத்த தலைமுறையினரை எதிர்க்கும் போக்குக் காணப்படுகிறது.

நான்கு வருடங்களாக ஓர் அலுவலகத்தில் வேலை பார்த்து வந்த தனது அக்கா, வீட்டின் அனுமதியின்றி ஒருவனை மணந்து கொண்டாளே என்று அவள் மீது கோபப்படுகிறான் அவன். சம்பாதித்து வந்த அவள் வீட்டை விட்டு ஓடிவிட்டபடியால் இவன்

சம்பாதிக்க வேண்டிய கட்டாயம் வருகிறது. இவனது அப்பா ஒரு வாரமாக அலைந்து திரிந்து இவனுக்கு ஒரு வேலை தேடித் தருகிறார். எனது வேலைக்காக ஒருவாரமாக இரவு பகலாக அலைந்த அப்பா எனது அக்காவின் திருமணத்திற்காக ஒரு நாளாவது அலைந்திருந்தால் அக்கா ஓடியிருப்பாளா? என்று எண்ணித் தன் அக்காவின் மீது இரக்கப்படுகிறான் (5:6).

உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் அடக்க முடியாத மனக் குமுறல்களாகப் பல கதைகள் அமைந்துள்ளன. சுமுகமில்லாத உறவு நிலைகளை விளக்கும் கதைகள் தக்க காரணங்களைக் கூறத் தவறிவிடுகின்றன.

சமுதாயம்

சமுதாயப் போக்கின் மாற்றத்திற்குப் பாடுபடும் இதழ் என்ற கருத்தை இவ்விதழின் சிறுகதைகளின் வாயிலாக உணரமுடிகிறது.

சாதிப் பிரச்சினைகள் பற்றி ஒரு கதையிலும், பணக்காரர்களின் ஆதிக்கம் பற்றி ஆறுகதைகளிலும், வறுமையின் அவலத்தைப் பற்றி ஆறுகதைகளிலும் அறியமுடிகிறது இன்றைய சமுதாயத்தின் வரிப்பணத்திலிருந்து மாதவருவாய் பெற்று வாழ்க்கை நடத்தும் அரசாங்க அலுவலர்கள் தங்கள் முதலாளிகளான சமுதாயக் குடி மக்களிடம் நடந்து கொள்ளும் முறைகளைச் சித்திரித்து ஒரு கதை மட்டும் வெளியாகியுள்ளது.

வயதான பெற்றோரின் ஒரே மகளான வித்யா ஒரு முதுநிலைப் பட்டதாரி. வேலை கிடைக்காததால் அந்த பிராமணப் பெண் வறுமையில் வாடுகிறாள். அவளது அடக்க ஒடுக்கமான பண்பு களைக் கண்ட அவளது பணக்காரத் தோழியின் அண்ணனான வங்கி அலுவலர் அவளை மணக்க முன் வருகிறான். வேறு இனத்தைச் சார்ந்தவன் என்ற ஒரு காரணம் தடையாக அமைகிறது. ஏழைப் பிராமணனை மணந்து மனதையும் மாற்றி வறுமையுடன் வாழ்க்கை நடத்தத் தொடங்கிவிட்டாள். (4:12)

இவளை மணக்க விரும்பி இவளது விருப்பம் கோரப்படுகையில் இவளது உள்ளம் பூரித்துப் போகின்றது. 'இதுவரை எல்லோரும் என்னிடம். "நன்னாய் எழுதியிருக்கியோ? இண்டியன் பேங்க் இண்டர்வியூ என்ன ஆச்சு? இப்பொழுது நிறைய வேக்கன்சிக்கு கால்பார் பண்ணிருக்காங்க. பண்ணிப்பார்" என்று மட்டும்தான் விசாரித்திருக்கிறார்கள். வாழ்த்துபவர்கள் கூட உனக்கு ஒரு நல்ல வேலையாகக் கிடைக்கத்தான் வாழ்த்தியிருக்கிறார்களே தவிர

நல்ல கணவன் கிடைக்க வேண்டுமென்று வாழ்த்தியதில்லை. ஓர் உணர்ச்சியுள்ள பெண்ணாகக் கண்ட முதல் ஆள் உங்க அண்ணா தான்' என்று தன் தோழியிடம் கூறும் வரிகள் நெஞ்சைத் தொடுவன. சாதிக் கொடுமை இளம் உள்ளங்களைக் கெடுக்கும் விதம் நன்கு சித்திரிக்கப்பட்டுள்ளது.

### இறை நம்பிக்கை—அறக்கருத்து

சமுதாயத்தின் கட்டுக்கோப்பான வளர்ச்சிக்குத் தேவையான அறக்கருத்துகள் பேசப்படும் அளவிற்கு இறைநம்பிக்கை பற்றிய கதைகள் வெளிவரவில்லை. முன்பு குறிப்பிட்டதுபோல இவ் விதழின் பின்னணி, முற்போக்குச் சிந்தனைகள் வளர்ப்பது.

சிறிய திருட்டுகளில் பழக்கப்பட்ட தன் கணவன் ஒருநாள் அலுவலகத்தில் ஒரு லட்ச ரூபாயைத் திருடிக் கையும் களவுமாகப் பிடிப்பட்டுக் கொண்டான் என்ற பொய்யான செய்தி கேட்டுத் தற்கொலை செய்துகொள்கிறாள். திருடக்கூடாது என்ற வலுவான எண்ணம் கூறப்படுகிறது (21:8).

பெண்களைச் சுற்றித் திரிதல் கூடாது; குடிப்பழக்கம் போன்ற வற்றின் தீமைகள் வலியுறுத்தப்படுகின்றன.

### பொது

எந்த வகையிலும் சேர்க்கப்படாத ஒரு சில கதைகள் வெளி யாகி உள்ளன. இவ்விதக் கதைகள் எவ்விதக் கருத்தையும் கூறாமல் ஒரு நிகழ்ச்சியை மட்டும் சுவைபடக் கூறுகின்றன. இப்படிப்பட்ட பொழுதுபோக்குக் கதைகளில் கருத்துகளைப் பொதிந்து வெளியிடுதல் நன்று.

### கலைக்கூறுகள் வடிவம்

''குங்குமத்தில் ஒரு பக்கச்சிறுகதைகள் வரவேற்கப்படுகின்றன'' என்ற விளம்பரம் கொடுக்கப்பட்டுள்ளது (16:10). இவ்வகைக் கதைகள்—தலைப்பில் கவர்ச்சி; துவக்கத்தில் ஆர்வம்; வளர்ச்சி நிலையில் விரசம்; முடிவு நினைத்தது போலில்லாமல் வேறுமாதிரி அமையும். 'இன்பத் தொல்லை' கதையின் தலைப்பு (4:12)

மற்றபடி அமையும் சிறுகதைகளை மதிப்பிடும் பொழுது இறுக்கமான கட்டமைப்பு, முடிவுரை நெகிழ்வு படுத்தாமல் அமைத்துச் செல்லும் போக்கு இடம் பெறுகிறது.

நித்யா சுற்றுலா போவதற்குப் பெயரைக் கொடுத்தும், சங்கரும் வருகிறான் என்றவுடன் பயம் பிடித்துக் கொண்டது (துவக்கம்).

இருவரும் அமெரிக்காவிலுள்ள பல்கலைக்கழகமொன்றில் பி.எச்டிக்காக ஆராய்ச்சி செய்கிறார்கள். இந்தியாவிலிருந்து வேறுமொழி பேசும் ஏழுபேர் அவ்வாறு படிக்கின்றனர் (வளர்ச்சி நிலை—1)

அவர்களின் மொழி மாறுபட்டிருப்பதால் கலாச்சார ஒற்றுமை எப்படி அமைகிறது என்று அவர்களின் பேராசிரியர் லாரன்ஸ் கேட்கிறார். அதுதான் உங்கள் மொழி ஆங்கிலம் இருக்கிறது என்கிறான் சங்கர்.

அப்படி இருக்கக்கூடாது. மொழி வேறுபாடின்றி திருமணம் செய்ய வேண்டுமென்று ஏன் சங்கரும் (தமிழ்). நித்யாவும் (இந்தி) முன்னோடியாக இருக்கக்கூடாது என்று விஜய் கேட்கிறான். வளர்ச்சி நிலை 2) (திருப்புமுனை)

வெளிநாட்டில் படித்த பிள்ளைகள் இந்தியாவில் நல்ல விலைக்குப் போவார்கள் என்று குறிப்பிட சங்கர் தான் அப்படி யிருக்கப்போவதில்லை என்று கூறுகிறான்.

சங்கர் கடலில் குளிக்கும்போது ஆழத்தில் சென்று குளிப்பதை நித்யா தடைசெய்கிறாள். உங்கள் உயிர் பாதுகாப்பாக இருக்க வேண்டியதுதான். சீர் வரிசைகளோடு ராஜகுமாரன் வருவான்' என்கிறான். அது அவள் மனது வருத்தத்திற்கும் காரணமாகிறது. உண்மையில் அவள் ராஜாமகள் என்றும் சமஸ்தானங்களை ஒழித்த போது இராஜ்யத்தை இழந்தவர். அவளின் தந்தை அவள் தம்பி களையெல்லாம் நன்கு படிக்க வைத்தவர் எனவும் விஜய் கூறுகிறான். (உச்சநிலை)

சங்கர் தான் புண்படக்கூறியதற்கு மன்னிப்பு வேண்டுகிறான். வாசகர்களின் சிந்திப்பில் காதல் என்ற முடிவு விடப்படுகிறது. (முடிவு)

துவக்கம், வளர்ச்சிநிலை—1, வளர்ச்சி நிலை—2, திருப்பு முனை, உச்ச நிலை, புதிர் அவிழ்ப்பு நிலையில் காதல் சுட்டப் பட்டுச் சிந்திப்பில் முடிவு அமைகிறது.

**தலைப்பு**

ஒரு பக்கக்கதை. மொழிபெயர்ப்புக்கதை. இலக்கியத்தரம் வாய்ந்தது. பழம் இலக்கியவாதியின் படைப்புக்கதை, இக்கால

பிரபல எழுத்தாளர் வரிசையில் அமையும் கதை, பிற எனப் பகுத்துக் கொண்டால் தலைப்பும் அதற்கேற்றவாறு அமையும்.

வகை—1 : இன்பத்தொல்லை (4:12) கவர்ச்சி நிலை
வகை—2 : முருங்கைக்காய் (4:12) திரைப்படத்தாக்கம்
வகை—3 : கலையின் விழி (9:1) குறியீட்டு நிலை
வகை—4 : ஸ்...ஸ்...ஸ்.. ஸ் (9:1) ஆங்கிலத்தாக்கம்
வகை—5 : தூ......... (9:12) விரசம் சார்ந்த நிலை
வகை—6 : ராகப்பரம்பரை (27:11) பொது நிலை
வகை—7 : என்று விமோசனமோ! (16:10) வினாத் தலைப்பு

துவக்கம்

''அவனையும் அவளையும் யாரோ இலக்கியப் பித்தர் ஒருவர் அந்தக் கூட்டத்தில் அறிமுகப்படுத்தி வைத்தார். அவர்கள் இருவரும் ஒருவலர ஒருவர் பார்க்க அவ்வளவு ஊக்கம் கொண்டிருந் தார்கள் என்று அறிமுகப்படுத்தி வைத்தவருக்குத் தெரியாது'',

ஒரு பெண், ஒரு ஆண் சந்திப்பு, இருவரும் சந்திக்கவேண்டு மென்று நினைத்தவர்கள். இப்படி கர்வம், கர்வத்தில் தனிமை. அறிமுகப்படுத்தியவர் இனித் தேவையில்லை என்பதற்காக விலக்கும் போக்கும் குறிப்பிடத்தகுந்தது. இது கு. பா. ராவின் கலையின் விழி என்ற இதுவரை வெளியிட பெறாது, குங்குமத்தில் வெளியான கதை.

''சார்—கொஞ்சம் கேளுங்க. பொறந்தா மனுஷ ஜென்மமாய் பொறக்கக் கூடாது சார். அப்படியே பிறந்திட்டாலும் பத்தாத சம்பளத்துல பாதி வாழ்க்கையை ஓட்டிட்டு ரிட்டயர்மெண்டுக்கு அப்புறம் குறை பென்ஷனை வெச்சுக்கிட்டு சர்க்கஸ் பண்ற மனுஷனா பொறக்ககூடாது சார்'' (16.10)

பாத்திரம் வாசகர்களை விளித்துத் தனக்கேற்பட்ட துன்ப அவலங்களைக் கூறும் முறை.

முடிவு

சிலகதைகள் முடிவுகளை ஆசிரியர் கூற்றிலும் பாத்திரக் கூற்றிலும் வெளிப்படுத்தாமல் வாசகர் சிந்தனைக்கு விடுவதைக் காணமுடிகிறது (9:1)

''அவள் கைகளை இதமாய் பிடித்து மன்னிப்புக் கேட்டான் சங்கர். அவள் அவன் கண்களின் ஆழத்தில் மின்னிய அன்பும் பரிவும் நெஞ்சில் பன்னீர் தெளிப்பது போலிருந்தது,

'உங்களுக்குள்ளே ஒரு இணைப்பு இருக்கணும்' என்று புரொபசர் சொன்னதின் பொருள் இப்போது புரிந்தது'. (27:11)

அந்த இணைப்பு காதலாக அமையும் என்பது வாசகர் ஊகத்திற்கு விடப்படுகிறது.

ஒரு பக்கக் கதை, கவர்ச்சிகளடங்கிய கதைகளில், முடிவுகள் மனத்தில் பதிய வைக்கும் வெற்றியைப் பெறத்தவறிவிடுகின்றன.

சிறுகதைகளில் அமைக்கப்படும் சில உத்திகளைக் காணலாம்.

### உவமை

பழமையும், புதுமையும் கைகோர்க்கிறது. சூழலுக்குத் தக்க உவமைகள்.

"என்னம்மா ஓம் மூஞ்சி பேயறஞ்சவ மாதிரி இருக்கு" (4:12)-பழமை.

"வெள்ளிமணிகளைக் குலுக்குவது போல் நித்யாவின் சிரிப்பு அந்த ஸ்டேஷன் வாகனை நனைத்தது" (27:11)—புதுமை.

தற்காலத் திரைப்படம் உவமையையும் தாக்குகிறது" வயது இருபது கூட இல்லை. சில்க் மாதிரி" (9:1).

### நடை

பாத்திரங்களுக்கு உயிரூட்டும் வகையில் அவர்களின் பின்னணிக்குத் தகுந்த மொழி நடை, வழக்குநடை பின்பற்றப் படுகின்றன.

"உனக்குக் கொஞ்சம் எனக்குக் கொஞ்சம் என்று பிய்த்துப் போட்டால் குளத்துமீனுக்குப் பொரிபோட்ட கதையாய்ப் போகும்" (16:10)

"ஜெகன் அவனைத் தேட வேண்டுமே? இடித்த புளிமாதிரி இருந்து விட்டான்" (9.1) நகரியப் பாத்திரங்களில் ஆசிரியர் கூற்றில் வழக்குநடை அமைகிறது.

### இலக்கிய மேற்கோள்

ஆசிரியர் கதை கூறும் போக்கில், பாத்திரம் பேசும் உரையாடல் போக்கில் பயன்படுத்தப்படுகிறது. சிறுபான்மைச் சான்றுகளே கிடைக்கின்றன-

"சமயம் வரும்போது பல்டி அடிப்பாங்க. வாய்ச் சொல்லில் வீரரடின்னு பாரதி பாடியிருக்காரே" பாத்திரக்கூற்றில் வரும் பாரதி (27:11).

**விரசநடை**

சில கதைகளில் பாலியல் சார்ந்த உரையாடல் பயன்படுத்தப் படுவதையும் காணமுடிகிறது. இதுவும் சிறுபான்மை நிலையில் அமைகிறது.

''அங்கேயே ஜாக்கெட்டைக் கழட்டிப் புது உருப்படியைப் போட்டுப் பார்த்தாள் பூமா. ''கழுத்து இன்னும் இறங்கியிருக் கனும் டெய்லர்'' என்றாள்.

''பாடிக்குத் தக்க இறக்கம்தான் கொடுத்திருக்கேன். அதுக்கும் கீழே இறங்கினா...

''மோசம் என்கிறே... ஆனா அவருக்கு அது ஒண்டிதான் பிடிக்கும். லோ கட் ஒண்டிதான்''. (28:1)

**வடமொழிக் கலப்பு**

பிராமணப் பாத்திரங்களின் பேச்சுக்களில் இடம் பெறுகிறது. 'நேற்றுதான் ராஜகோபாலனுக்கு வருஷாப்தி முடிந்திருந்தது'' (16:10)

**ஆங்கில உரையாடல்**

இது பிரபல எழுத்தாளர்கள் வ ரிசையில் இடம்பெறும் கதை களில் காணக்கூடியதாய் அமைகிறது.

**ஆசிரியர் கூற்று**

''வாஷிங்டன் ஜார்ஜ்டவுன் யுனிவர்சிடியில் புரொபசர் லாரன்ஸின் கீழ் கெமிஸ்ட்ரியில் பி.எச்டி படிக்க இந்தியாவிலிருந்து வந்தவர்'' (27:11) 'மாக்ஸி, மினி, மிடி ஸ்கர்ட், பஃப். லோகட் போட்ட நெக்...இப்படி அவளுக்குப் பல'' (9:1)

**பாத்திரக் கூற்று**

'நீங்க ஒரு ஸ்காலர். யூ ஆர் ரியிலி கிரேட்'' (9:1)

மேலும் ஆங்கிலச் சொற்களும் பரவலாக விரவி வருவதைக் காணமுடிகிறது.

**மதிப்பீடு**

காதல் கதைகளில் சரியான முறையில் முடிவுகள் தீர்வு கூறாமல் போகின்றன. ஒருதலைக்காதலுக்கு மிகுந்த முக்கியத் துவம் தரவேண்டாம். நிறைவேறாக்காதலுக்கான தடையில் வலுவுள்ளது.

கணவன்—மனைவி உதவுநிலையை விளக்கும் கதைகள் மிகுதி. அவைகளும் உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் மனக்குமுறல்களாக உள்ளது.

சமுதாயப் பிரச்சினைக் கதைகள், அறக்கருத்துக் கதைகள் மாறிவரும் சமூகமதிப்பை வரவேற்கின்றன. அதில் அறஉணர்வு வலியுறுத்தப்படுகிறது.

எதிர்பார்ப்பு

ஒரு பக்கச் சிறுகதைகள், உவமையில் திரைப்படக் கவர்ச்சி. விரசநடை, ஆசிரியர் கூற்றில் வரும் ஆங்கிலக் கலப்பு இவைகளைத் தவிர்த்தால் குங்குமத்தின் கதைகள் இலக்கியத் தரத்தை உயர்த்திக் காட்டும் என்பதில் ஐயமில்லை.

சிலசெய்திகள் தவறாகக் கூறப்படுவது கவனத்திற்குக் கொண்டு வந்து தடை செய்ய வேண்டும். ''பாடாத குயில்கள்'' என்ற கதையில் ''பித்தகோரஸ் தேற்றத்தை நடத்திவிட்டு இது ராமானுஜத்தினுடையது என்று நாட்டுப்பற்றோடு கூறும் லட்சுமி டீச்சர்''.

பித்தகோரஸ் தேற்றம் கண்டுபிடிக்கப்பட்டது கி.மு. 7-இல். ஆனால் இராமனுஜம் கி.பி. 20ஐச் சேர்ந்தவர். தமிழ் தெரியாத பாத்திரம் தமிழ் இலக்கிய மேற்கோள் காட்டுவது எப்படியோ? (27:11) இவைகள் தவிர்க்கப்படவேண்டியவை.

இதயம் பேசுகிறது

புதியனவாக மலர்ந்த வாரஇதழ்களில் இதுவும் ஒன்று. வியாபார நுணுக்கங்களைப் பலவகையில் புகுத்தித் தன் நிலையைத் தக்கவைத்துக் கொள்வதற்கும் மற்ற இதழ்களின் வளர்ச்சிகளுடன் போட்டிபோட்டுத் தன்னை உயர்த்திக் கொள்ளவும் முயற்சிக்கிறது. இவ்விதழில் ஏறத்தாழ 170 சிறுகதைகள் வந்துள்ளன.

| | |
|---|---|
| காதல் | — 35 |
| குடும்பம் | — 40 |
| சமுதாயம் | — 55 |
| இறைநம்பிக்கை & அறக்கருத்து | — 20 |
| பொது | — 15 |

காதல்

காதல் கதைகளில் நிறைவேறாத் தன்மை ஒரு விதப்பிரிவு கலந்த சோகத்துடன் பலகதைகளில் அமைகின்றது நிறைவேறும் காதலில் வறுமையில் வீட்டைவிட்டு ஓடிவிடும் தன்மையைக் காண முடிகிறது. காதல் உயர்ந்த பொருளாகக் கருதி அணுகும் போக்குக் காணப்படுகிறது.

ஓவியம் வரைபவர், நிர்வாணமான அப்பெண்ணைப் பார்த்து வரைகிறார், இவனை மாதிரி இருபதுபேர்கள் உணர்ச்சியற்ற ஜடங்களாக அவளின் வெற்றுடம்பைப் பார்த்துக் கொண்டிருந்தும் இரசிக்கவில்லை. அவன் அவளிடம், தான் அவளை விரும்புவதாயும் இனி அவள் நிர்வாணமாய் நிற்கவேண்டியதில்லை என்கிறான். ஒருத்தனை நம்பி அவள் அவனிடம் தன்னை முழுசாய் ஒப்படைத்ததால் அவளை அவன் சமுதாயத்திற்குப் பொதுவுடைமையாக்கிவிட்டான். நீங்கள் அந்த ஆள் மாதிரி இல்லாமல் வித்தியாசப்பட்டிருக்கிறீர்கள் எனக் கூறிவிட்டு அவள் வழக்கமாகத் தன் தொழிலில் ஈடுபடுகிறாள். அந்த ஓவியன் தூரிகையை எறிந்து விட்டுத் தன் வாழ்க்கையைச் சூனியமாக்கிக் கொள்கிறான் (13:9). அவனுக்கு உண்மையில் காதலா? கவர்ச்சியினால் காதலா? இரக்கத்தால் காதலா? மனமிருந்தும் அவள் வெறுத்தது நியாயமா? பரிவு தோன்ற தூரிகையை விட்டெறிந்த ஓவியன் அவலப் பாத்திரமா? இதனால்தான் கவர்ச்சிகள் சூனியங்களாகின்றனவா?

**குடும்பம்**

குடும்ப மதிப்பை வெளிப்படுத்தும் கதைகள் இன்றைய தலைமுறையினரின் பொறுப்பற்ற போக்கையும் அதே சமயத்தில் பழந் தலைமுறையினரின் வக்கிரப் போக்கையும் காட்டத் தவறவில்லை.

ராஜசேஷன் தன் மனைவியை இழந்தவர். மனைவி இருக்கும் போது மூத்த பிள்ளைக்கும், பெண்ணுக்கும் திருமணம் நடந்து விட்டது. தன் கடைக்குட்டி பாலுவை ஹாஸ்டலில் விட்டிருந்தார். பிள்ளைகள் நலனுக்காகத் திருமணம் செய்து கொள்ளவில்லை. கடைக்குட்டி படிப்பில் அரசாங்க உதவிபெற்று ஜெர்மனி சென்று அங்கேயே தங்கிவிட்டார். ஓய்வுக் காலத்தில் தந்தையை யாரும் கவனிக்க முன்வராததால் அவரும் மறுமணம் செய்து கொள்ள முடிவுசெய்து செய்தித்தாளில் விளம்பரப்படுத்தி ஒரு முனிசிபல் அலுவலகத்தில் வேலைபார்க்கும் பெண்ணின் முகவரிக்குச் செல்கிறார். அப்பெண் அலுவலகத்திலிருந்து வரவில்லை. தாய் கோவிலுக்குச் சென்றிருக்கிறாள். சிறுவனிடம் விபரம் கேட்டுக் கொண்டிருக்கிறார். அவ்வீட்டில் தன் நண்பர் ரகுபதியின் போட்டோவைப் பார்க்கிறார். அவன் அந்தக் காலத்தில் செய்த உதவியை நினைத்துத் திருமணம் செய்து கொள்ளும் எண்ணத்தை விட்டு நிழல் தரும் தனிமரமாகிறார். (19:11) இளந்தலைமுறையினர் தந்தையின் தியாகத்தைப் பார்த்துக் கவனிக்காத பொறுப்பற்ற தன்மையைக் காணமுடிகிறது.

தன்னுடைய தாய்க்கு அடுத்தவனுடன் தொடர்பு உண்டு எனச் சாட்சியமற்ற குற்றச்சாட்டைக் காட்டி ஓடிப்போன தந்தையை விரும்பாத மகன். தாய்க்காக சுற்றுலா போன இடத்தில் திவசம் கொடுக்கிறான். ஐந்துபேருக்குச் சோறு போடும் சம்பிரதாயத்தில் தன் தந்தையும் இருப்பதைப் பார்த்து எழுந்து நடக்கிறான் (26:11) மூத்த தலைமுறையினரின் பொறுப்பற்ற நிலை.

குடும்பக் கதைகளில் நல்ல கருத்துக்கள் வலியுறுத்தப்படு கின்றன. ஒரு பக்கக் கதைகள் பெரும்பாலும் கணவன்—மனைவி பிரச்சினைகளைத் தாங்கிவிடுகின்றன. குடும்பக்கதைகள் கூட நியாயமற்ற விரச உறவுகளுக்கு இடம்தந்து நல்ல கருத்துக்களை வலியுறுத்தும் போக்குக் காணப்படுகிறது. (2;8)

குடும்பக் கதைகள் சமுதாயப் பிரச்சினையுடன் இணைந்து வருவதையும் காணமுடிகிறது. வறுமை சமுதாயப் பிரச்சினை, இதனால் குடும்பத்தின் போக்கு எப்படிச் சீரழிகிறது என்பது நன்கு உயர்த்திக் காட்டப்படுகிறது. (9:12)

### இறைநம்பிக்கை—அறக்கருத்து

அறக்கருத்துக்கள் பல இடம்பெறுகின்றன. கொலை செய்த வனுக்குத் தண்டனை கிடைக்கிறது. துன்பம் செய்தவனுக்கு இப் பிறவியிலேயே தண்டனை கிடைக்கும் போன்ற கருத்துக்கள். வறுமையில் உதவவேண்டும், பெண்களின் புனர்வாழ்வு பற்றிப் பேசப்படுகின்றன. ஒரு கதையில் கொலை செய்து மிரட்ட வந்த கொலையாளியைத் தந்திரமாகப் பைபிளின் வாசகங்களை வைத்துக் கொன்றுவிடுகிறான். (26:5)

### பிற

உளவியல், மருத்துவம் போன்ற செய்திகள் பொதுவகையில் அடங்குகின்றன. சுவாதி நல்ல அழகு. நல்ல படிப்பு. ஆனால் யாருடன் அவள் நெருங்கிப் பழகுகிறாளோ அவர்களை உரிமை யாக 'வாடா' 'போடி' என்று பேசுவாள். தன் நண்பனை அப்படிப் பேசியதற்காகக் கண்டிக்கும் அண்ணன் அந்தக் குணத்தை மாற்றமுடியாது என்ற நிலையில் நண்பனைச் சமாதானம் செய் கிறான். ஆனால் புதிதான தன் மனைவியிடம் அவள் அப்படி நடக்கவே தனிக் குடும்பப் அமைக்கிறான். சுவாதி ஒரு புதிர்தான். (21:5)

**கலைக்கூறுகள்**

**வடிவம்**

ஒரு பக்கக் கதையில் கவர்ச்சி, கணவன்—மனைவி பிரச்சினை அமைவதற்குத் தக ஆர்வ உத்தி அமைக்கப்படுகிறது.

டாக்டரிடம் சர்டிபிகேட் கேட்கிறார்கள். கணவனும் மனைவியும், அதுவும் பொய் சர்டிபிகேட் (புதிர்). அவர்களுக்கு குழந்தையில்லை. யாரிடம் குறையிருக்கிறது என்பதை அறிய மாமனார் விரும்புகிறார். (ஆர்வம்) இருவரும் டாக்டரிடம் கெஞ்சுகின்றனர். (ஆர்வம்)

அவரிடம் குறையென்றால் அவளால் தாங்க முடியாது. அவளிடம் குறையென்றால் அவனால் தாங்க முடியாது (உச்ச நிலை).

எங்களுக்கு குழந்தை முக்கியமில்லை. அவருக்கு நான் குழந்தை. எனக்கு அவர் குழந்தை. மறுமணம் செய்து கொள்ள விருப்பமில்லை. (தீர்வு)

டாக்டர் போலி சர்டிபிகேட் தருகின்றார். அவருக்கும் குறையில்லை. (முடிவு)

புதிர் ஆர்வம் 1, 2 உச்சநிலை, புதிருக்குத் தீர்வு, முடிவு என அமைகிறது.

இரண்டு பக்கங்களுக்கு மேல் அமையும் கதைகளில் சிறுகதையிலக்கணம் நன்கு அமைகின்றது.

ஏழைப் பாட்டு வாத்தியார். மனைவி திட்டுகிறாள். ஊரில் எல்லாப் பெண்களுக்கும் திருமணம் நடக்கிறது. நம் பிள்ளைக்குத் தான் இல்லை, (ஏன்—என்ற ஆர்வம்)

பொறு பார்த்துக் கொண்டிருக்கிறேன் என்கிறார். எனக்குள்ள பொறுப்பு உங்களுக்குமிருந்து பொறுப்பு வரவேண்டும். (வளர்ச்சி நிலை-1)

அவர் சம்பாத்தியம் சீவனத்திற்கே காணவில்லை. இந்நிலையில் வரதட்சணை கொடுத்து எப்படி முடியும். ஆகவே, வேளை வரும் என்று சமாதானப்படுத்துகின்றார். (வளர்ச்சி நிலை-2)

அவர் கிணற்றடியில் குளிக்கின்றார். மனைவி ஓடிவந்து தன் மகள் காதலனுடன் ஓடிவிட்டாள் என்று சொல்கிறாள். அவர் நிதானமாய் அதுதான் ‘வேளை வரும்’ என்று சொன்னேனே. அது தான் இந்த வேளை என்கிறார். (உச்சநிலை)

அடுத்த பெண் அவரிடம் வந்து நிற்கிறாள். அவர் அவளைப் பார்த்து உனக்கும் 'வேளை வரும்' என்கிறார். (வீழ்ச்சிநிலை)

முடிவாக வறுமையின் கோரப்பிடி சித்திரிக்கப்படுகிறது.

**தலைப்பு**

பொதுவாகத் தலைப்புகளில் நல்ல ஆர்வம் வெளிப்படுகின்றது (26:11) ''கவர்ச்சிகள் சூன்யங்கள்'' என்ற தத்துவத் தலைப்பில் காதல் கதை.

'ரம்யா' என்ற பாத்திரத் தலைப்பில் அமையும் கணவன்—மனைவி கதை. 'சுவாதி' என்ற பாத்திரத் தலைப்பு உளவியல் கதை. (21;50)

கருவைக் குறியீடாகக் குறிக்கும் 'நிழல் தரும் தனிமரம்' என்ற தலைப்பில் (19:1) குடும்பக் கதை.

''வேளை வரும்'' என்ற தத்துவத்தைப் பொதிந்து சமுதாயக் கதை. (26:11)

ஆங்கில உரையாடல் நிலையில், ''ஒரு போலி ஸர்டிபிகேட் ப்ளீஸ்...'' (29:12)

'சரியா'? (2:8) என்ற வினாத்தலைப்பில் குடும்பக் கதை.

பொதுவாக, 'பரிசு' (2:8) என்ற குறிப்பைக் காட்டும் கணவன், மனைவி கதைகள் அமைகின்றன.

பைபிளினைச் 'சட்டப்புத்தகம்' (21:5) என்று குறிக்கும் தலைப்பு.

**துவக்கம்**

இதயம் பேசுகிறது இதழில் வரும் துவக்கங்களில் பல முறைகள் இருப்பதைக் காணமுடிகிறது. உரையாடல், நிகழ்ச்சி, இடப் பின்னணி, வருணனை என வகைப்படுத்தலாம். எனினும் நவீன உயர்ந்த வர்க்கத்தினரிடம் விளையாடும் ஆங்கிலச் சொற்களைத் தாங்கி அமையும் வருணனைகள், அவர்களின் சூழல்வருணனைகள், இடவருணனைகள் மிகுதி.

**உரையாடல்**

''குழந்தை கோவிலுக்குப் போயிருக்காளா மீனா''? (26:11)

**நிகழ்ச்சி அறிமுகம்**

''திருச்சி மலைக்கோட்டை வாசலில் கும்பல் நெரிந்தது.

ஸார்...இது ஒன் வே. இப்படிப் போகக் கூடாது (21:5)

"தட... தட....தட....தட்... பாபரப்பாக இரண்டு கைகளாலும் கதவுகளைத் தட்டினான். சுவரில் தேடிக் காலிங் பெல்லை நசுக்கினான்." (21:5)

வருணனை

"நிசப்தமான சூழல், வெளியே இலைகள் காற்றில் சலசலப்பது மட்டும் அந்த ஹாலை ஊடுருவியது. போர்டுக்கும் பெயிண்ட் டிரேவுக்குமாக பிரஷ்கள் டிரிப் செய்து கொண்டிருந்தன. முன் சீட் சதீஷின் போர்டில் எக்ஸ்டிரீம்ஃபர் பைல்கள் முற்றுப் பெற்றிருந்தன". (26:11)

முடிவு

ஒரு பக்கச் சிறுகதைகளில் ஒரு புதிர் அவிழ்க்கப்பட்டதற்கு அடையாளமாய் முடிவு அமைந்திருக்கும்.

"வேடிக்கையாகத் தானிருக்கும், சரி...சரி.. வர நேரமாச்சு. இப்ப உன்னோட சந்தேகம் தீர்ந்துச்சா" (21:5). கணவன்-மனைவி உறவுநிலைகளில் பிரச்சினை தீர்ந்த குடும்பக் கதைகளில் எதிர் காலத்தில் அப்பிரச்சினையில்லை என்ற ஊகமுடிவு அமைந் திருக்கும்.

"சாரதி காத்திருந்தான். அவனுக்காக அவனுக்கு உரிமையான அவள் வரவை எதிர்நோக்கி". (13:9)

எதிர்பார்த்து இப்படித்தான் நடக்கும் என்ற நிகழ்ச்சி மாறி திருப்பு முனையில் முடிவு அமைவதுண்டு. இவ்வகையில் பாத்திரக் கூற்றில் முடித்து விடுவதையும் காணமுடிகிறது.

"நானும் நினைக்கலே என்றார் ராஜசேகரன்" (13:9)

உவமை, பழமொழி

உவமை, பழமொழி போன்றவற்றைப் பாத்திரங்கள் குறை வாக வரும் கிராமியக் கதைகளிலேயே காணமுடிகிறது. அவை களின் இடத்தை நாகரிக வருணனைகள் ஆக்கிரமித்துக் கொண்டன.

"அவள் வனப்பு அமர்ந்து எரியும் குத்து விளக்கைப்போன்றது கண்களைக் கூசவைக்கும் ஸ்பாட்-லைட் அல்ல" (13:9)

"இந்தக் கரிக்கட்டைக்குப் போய் ராஜாமாதிரி மாப்பிள்ளை யாரோ யாரிடமோ சொன்னது இவன் மனதில் பசுமரத்தாணி போல் பாய்ந்தது" (13:9)

வருணனை

இதில் தனக்கென ஒரு பாணியை வகுத்துக் கொண்டுள்ளது. இயற்கையை வருணித்தால்கூட அதன் தனித்தன்மைவெளிப்படும்.

"நொய்யல் ஆறு தலைகீழாக நின்றால் கழுத்துக்கு மேல் தண்ணீர்போகும் அளவுக்குப் போகையில் பூமியைத் தடவித் தடவி தடுமாறிப் போய்க்கொண்டிருந்தது" (26:11). தோப்புக்கள் அடர்த்தியாய் காவலைப் போல் நின்றன.

பாத்திர வருணனைகள் தனக்கே உரித்தான ஆங்கில நடையுடன் அமையும் விதம்.

"நல்ல சிவந்த முகம், அழகான முகம். சுருண்ட கேசம், 'டிரிம் செய்யப்பட்ட மீசை. நடையில் ஒரு மிடுக்கு. விழிகளாலேயே எல்லோரையும் வசப்படுத்தும் ஆள்" (13:9)

பாத்திரத்தின் வருணனையிலேயே உயிர்த் துடிப்புக் கொடுக்கும் முறை.

"அஞ்சுபேரில் நெடுநெடுவென்று கருடன் போல் பார்வை; கைவீசிக் கொண்டு, சிவப்பு வஸ்திரம் ஒல்லறப் போர்த்திக் கொண்டு, ரெண்டு மாதத் தாடி மீசையுடன் அகல நெற்றியும் சின்ன வாயும் சுருங்கிய தோலும் அலட்சியத் தோற்றமும்" (26:11)

தனக்கே உரித்தான கவர்ச்சி கலந்த விரச வருணனை.

"இருபத்தி ஐந்து வயது சின்னி...அசையவில்லை. சுவாசங்களின் ஏற்ற இறக்கங்கள் இல்லாமல் மிகத்துல்லியமாக நிற்கிறாள். சிறந்த "அனாட்டமி"யின் சொந்தக்காரி. இதோ நாங்கள் இருபது பேர் உணர்ச்சியற்ற ஜடங்களாக அவளை வெற்றுடம்பில் பார்த்துக் கொண்டிருக்கிறோம். ரஜிக்கவில்லை" (26:11)

நடை

கதைகூறும் உத்தி, வருணனை போன்றவற்றில் தனக்கென ஒரு பாதையுள்ளதைப்போல் நடையிலும் காணமுடிகிறது.

"கதவு திறக்கப்பட்டது. வாசல்விளக்கு அவன் முகத்தில் வெளிச்சத்தைத் துப்பியது" (2:6)

வடமொழிக் கலப்பு

"நிஜம் கறுப்புடன் சேர்த்திதான். ஸ்நானம் செய்துவிட்டுத் தலைமயிரைத் தூக்கி முடித்திருந்தாள்" (13:9)—பிராமணப் பாத்திரங்களில் இடம்பெறுகிறது.

**ஆங்கிலக் கலப்பு**

தனக்கென ஒரு உயர்வுநடை ஆங்கிலக் கலப்பு என்பது இவ் விதழின் நோக்கமெனத் தெரிகிறது.

தோழியுடன் பேசும் பெண்ணும் ஆங்கிலம் பேசுகிறாள். பொருள் புரிந்தவர்களுக்குத்தான் புரியும். "ஸ்காட்ச் அருந்தும் செகரட்டரியிடம் எங்கள் எதிரிலேயே Flirt செய்கிறாரடி" (8:10)

கணவன்—மனைவி கூடத் தம்வீட்டில் ஆங்கிலம்தான் பேசுவார்கள்.

"ஹாய்...ராஜி லுக் அட் மை ஸெலக்சன்" என்று ஒரு புதுப் புடவை. புது ஸெண்ட் ஏதாகிலும்...ஐ கம் டிஸ்கஸ்டட்..." (8:10)

கல்லூரியைவிட்டு வீட்டுக்கு வந்தாலும் நண்பர்கள் ஆங்கிலம் தான் பேசுவார்கள் "பழக்கமாயில்லாவிட்டாலும் யூ வில் என்ஜாய் இட்...கமான்" (21;5)

**இந்திக் கலப்பு**

இதிலும் புதுமை. இந்திப் பேச்சுக்களும் கலக்க ஆரம்பித்து விட்டன. "துமாரா ஹஸ்பெண்ட் பஹுத் போலா ஹை...சரியா கவனிச்சுக்க...ஓகே நான் வரேன். ஸண்டே அவசியம் வரணும்." (21;5)

**வழக்குச் சொல்**

வீட்டில் பேசும் பேச்சுக்கள், யாதார்த்தமாய் வழக்குச் சொல் பேசுவது அத்தி பூத்த கதை. "எனக்குப் பிடிச்சவா எல்லோரையும் நான்'டா 'போட்டுத் தான் கூப்பிடுவேன். அவாளுக்கு பிடிக்கலேன்னா என்னோட யாரும் பேசவேண்டாம். இது அவா... இஷ்டம்" பிராமண வழக்குநடை (21;5)

**மதிப்பீடு**

காதல் இருதலைக் காதலாகவும் அவலத்தை உருவாக்கும் காதலாகவும் அமைகிறது. யதார்த்தம் இல்லை, நிறைவேறாக் காதல் மிகுதியான தடைகள் சமுதாயப்பிரச்சினைகள் இல்லை' தனிமனித உணர்வுகளே,

குடும்ப உறவுகளில் வயதை மீறிக் காதல் வரும். பின்பு புத்தி வரும். மூத்ததலைமுறையினரிடம் விபரீதப்போக்கு, இளந்தலை முறையினர் பொறுப்பற்ற தன்மை. கணவன்—மனைவி செக்ஸ் பிரச்சினைகள் இவைகளே பேசப்படுகின்றன. விரல்விட்டு எண்ணக் கூடிய கதைகளே குடும்பத்தை யதார்த்த மதிப்புடன் காட்டு கின்றன.

குடும்பக்கதைகளில் சமுதாயப்பிரச்சினைகளைச் சேர்க்கும் போது யதார்த்தம் பிறக்கிறது. வறுமை, வரதட்சணை, பெண்களின் அவலநிலை போன்ற பிரச்சினைகள் பேசப்படுகின்றன.

அறக்கருத்துக்கள் இரு பக்கக்கதைக்குள் அடங்குவதால் வலியுறுத்தப்படும் அழுத்தம் பெறவில்லை.

இரண்டுபக்கக் கதைகளில் சிறுகதையிலக்கணம் நன்கு அமைகிறது.

தலைப்பில் ஆர்வம் பிறப்பதாகத் தொடுக்கப்படுகிறது. மற்ற இதழ்களைவிட இவ்விதழின் தொடக்கம் மாறுபட்டு அமையும். சொற்கள் உயர்தர மக்களிடம் புழங்கும் ஆங்கிலச் சொற்களாக இருக்கும். உவமை, பழமொழிகளை விட வருணனைகள் தனித்தன்மை பெறுகின்றன. புரியாத ஆங்கிலச் சொற்கள் மிகுதி.

**எதிர்பார்ப்புகள்**

காதல், குடும்பம்—கதைகளில் யதார்த்தம். பல்வேறுவகைப் பிரச்சினைகள் பேசலாம். இறைநம்பிக்கை, அறக்கருத்துக் கதைகளுக்கு இரண்டுபக்கத் தகுதி கொடுக்கலாம். ஆங்கிலம் மிதமிஞ்சி வருவதைத் தவிர்க்கலாம்.

**கல்கி**

இவ்விதழ் வரலாற்றில் பாரம்பரியத்தின் அத்திவாரம் உண்டு. மேலைநாடுகளில் வளர்ச்சி பெற்ற குறுநாவல், வரலாற்றுநாவல், சமூகநாவல் போன்றவற்றைப் பரீட்சித்துப் பார்த்த அனுபவம் உண்டு.எனவே வியாபாரக் கொள்கையைவிட இலக்கியத்தரத்திற்கு முதன்மை இடத்தை அளிக்கிறது. இவ்விதழில் அமையும் சிறுகதைகள் சமுதாய மேம்பாட்டிற்கு உதவும் தொலைநோக்குக் கதைகள் எனக் கூறலாம். அதே சமயத்தில் மாறிவரும் சமூக மதிப்புகளை ஏற்கவும் தயங்குவதில்லை. இந்தப் பின்னணியைக் கருத்தில் கொண்டால் அதன் சிறுகதைகளை மதிப்பிட ஏதுவாகும்.

வெளிவந்துள்ள சிறுகதைகள் ஏறத்தாழ 164

| | |
|---|---|
| காதல் | —20 |
| குடும்பம் | —50 |
| சமூகம் | —55 |
| இறைநம்பிக்கை, அறக்கருத்து | —22 |
| பொது | —17 |

**காதல்**

காதலுக்குப் பெற்றோர் துணையாயிருப்பதைப் பல கதைகளில் காணமுடிகிறது. (24;4., 10;4,. 6;3). காதல் என்பது உடல்நிலையில் அல்லாமல் ஆன்மநிலையுணர்தல் என்ற அடிப்படையைக் காணலாம். காதலி வேறு ஒருவனை மணந்து அபலையான நிலையிலும் பழைய காதலன் அவளின் பிள்ளையின் படிப்பிற்கு உதவுகிறான். (14;8)

கல்லூரியில் வம்பு செய்யும் காதலனை மறுதலிக்கும் பெண் வரதட்சணைக்கொடுமையால் நிச்சயிக்கப்பட்ட இராமனைவிடதனக்காகக் காத்திருக்கும் இராவணனே மேல் என்ற நிலைமையில் ஏற்றுக் கொண்டு சம்மதிக்கும் பெண்மையைக் காணலாம். (31;7)

**குடும்பம்**

குடும்பப்பாங்கில் அமையும் கதைகள் மூலம், தாய், தந்தை, பிள்ளைகள், சகோதரர். மாமியார், கணவன், மனைவி இவர்களின் உறவுநிலைகளை மையமிட்ட உணர்வுநிலைகளின் வெளிப்பாடுகளாகக் கதைகள் அமைகின்றன.

கணவன்—மனைவி உறவு நிலைகளைச் சித்திரிக்கும் கதைகள் புரிதல் இல்லாத நிலையைப் பிரதிபலித்துக் காட்டுகின்றன. மேலும் மோகமயக்கத்தால் வரும் விளைவுகளையும் தழுவிச் செல்லுகின்றன.

கணவனின் பரத்தமையைப் பொறுக்காத மனைவி சித்திரவதைக்குள்ளாகிறாள். பின், சுகமடைந்தபோது திருந்தி வந்த கணவனை ஏற்க மறுத்துவிடும் போக்கைக் காணமுடிகிறது (11:9).

பெண்மையைப் பூரணப்படுத்தும் தாய்மையுணர்வு சில பெண்களிடம் தெய்வீக நிலையில் அமைவதுண்டு. வந்தவர் எல்லோரையும் அன்பே உருவாய் உபசரித்து அன்னமிட்டுப் பாசம்பொழிகிறாள். தன் அருமைப்பிள்ளை இறந்த அன்றும் துக்கத்தை மறைத்துக் கொண்டு மற்றவர் உணவு கொள்ளாதது பற்றிப் பொறுப்பெடுத்துக் கவனிக்கிறாள் (29:5).

தங்கள் சண்டைகள் பிள்ளைகளைப் பாதிக்கும் என்பது புரியாமலேயே தங்கள் போக்கில் முரண்படும் பெற்றோர்களைக் காட்டி அவர்கள் இறுதியில் திருந்தும்படி அமையும் சிறுகதை நல்ல தீர்வைச் சுட்டிக் காட்டுகிறது, (6:11)

குழந்தைகள் சண்டையில் பெற்றோர் தலையிடல் தேவையில்லை என்பதை விளக்கும் கதை நன்மதிப்பைப் பெறுகிறது.

பெற்றோர்கள் தலையிட்டுப் பிள்ளைகளைச் சண்டையிட்டுக் கொள்வதில்லை என்று தவிர்க்கப் பிரித்துவைக்கிறார்கள். ஆனால், விளையாட்டு என்று வந்தவுடன் பிள்ளைகள் பெற்றோர்களைப் பார்க்காமலே சேர்ந்து விடுகிறார்கள். (13:3)

குடும்பத்தில் 'பாசத்தின்' மதிப்பைவிடக் கொண்ட கொள்கையின் 'நேர்மை' மதிப்புப் பாராட்டப் படுவதையும் உணரமுடிகிறது. நேர்மையாய்ச் சுண்டல் விற்று எளிமையாய் வாழும் ஒருவர் கள்ளச் சாராயத்தால் பணம் சேர்த்த தம்பியால் அலட்சியப்படுத்தப்பட்டாலும் சகோதரப் பாசத்தைவிடக் கொண்ட கொள்கைக்கு முதலிடம் கொடுத்துப் பாசத்தை உதறிவிடுவதைக் காணமுடிகிறது (23:1).

கணவன்—மனைவி உறவுநிலைகளைவிட தாய், சகோதரர், மகன் என்று பல கோணங்களில் உறவுநிலைகளைப் பிரதிபலித்துக் குடும்பத்தின் மதிப்பைப் படைக்கும் சிறுகதை பாராட்டத்தக்கது. எனினும் யதார்த்தத்தைவிட்டு மிகை உயர்வுநிலை காட்டப்படுவது போல் தோன்றுகிறது.

சமுதாயம்

சமூகச் சார்பில் தேவையான பிரச்சினைகளைச் சமுதாயத்திற்குத் தருவதன் மூலம் கல்கியின் உயர்வு தெரிகிறது வரதட்சணை, வேலையில்லாத் திண்டாட்டம், லஞ்சஊழல், வர்க்கப் போராட்டம் போன்றவைகளை இனம்காட்டுகின்றன.

அக்காவின் திருமணம் வறுமையால் தடைபட்டுக் கொண்டு போவதைத் தடுக்க, தம்பியின் வாழ்வு கொத்தடிமைப்படுத்தப்படுகிறது. தீப்பெட்டித் தொழிற்சாலைக்காரர் பெண்ணின் தம்பியைத் தட்சணையாகப்பெற்றுத் திருமணத்திற்கு உடன்படுவது (8:5)

வேலைக்காகப் போராடும் இளைய தலைமுறையினரை (18:9, 31:7) அழகாகச் சித்திரித்துக் காட்டிச் சரியான தீர்வு கூறாமல் தப்பித்துவிடும் கல்கியின் போக்குத் தவறானதே. மகனுக்கு வேலைகிடைப்பதற்காகத் தந்தை உயிரையே அடகு வைத்து விடுகிறான். பதவியுள்ளபோது இறந்தால் வாரிசுக்கு வேலையும் உதவித் தொகையும் கிட்டும் என்ற நிலையில் பேருந்து விபத்தில் சிக்கி வேண்டுமென்று இறக்கிறார். இதுபோன்று நடக்க முடியாத தீர்ப்புக்கள் சமூகத்திற்குத் தீய எண்ணங்களையே தரும். (23:10)

இலஞ்சச் சீர்கேட்டை விளக்கிக் கூறும் கதைகள் (3:4, 14:8, 8:12) தீர்ப்புக் கூறாமல் அப்படியே சித்திரித்துக்காட்டுகின்றன.

'இலஞ்சம்' சமுதாயத்தில் கட்டாயநிலையில் உள்ள மதிப்பாகத் திணிக்கப்பட்டிருப்பதை அவலமாகக் (18:12) காட்டுகின்றன.

பணம், அதிகாரம் இவைகளினால் ஏற்படும் வர்க்கப் போராட்டங்கள் பல நிலைகளில் காட்டப்படுகின்றன, பணம் வந்தவுடன் உறவும் நட்பும் முறிபடும் (9:1) தொழிலாளி—முதலாளிப் போராட்டங்கள் (11:12, 24:5) போன்றவை சிறந்தகதைகள்.

### அறக்கருத்து

ஏழைகளின் நேர்மையான உழைப்பு (23:1), கிராம மக்களின் மனித நேய உணர்வு (27:2), ஆஸ்த்துமா நோயுடையவளைத் திருமணம் செய்யும் தியாக இளைஞர் (3:4), பணக்காரியாய் இருந்தும் எளிமையாய்ப் பழகும் பெண் (22:5) போன்ற பல சிந்தனைகளைத் தாங்கி அமையும் கதைகள் அறக்கருத்துக்களைத் தன்னுள் பொதிந்து வைத்துள்ளன. அறக்கருத்துக்களை உள்ளடக்கிய கதைகள் இறைமதிப்பை வலியுறுத்தத் தவறுவதில்லை.

### பொது

ஆவியுலக நம்பிக்கை (29:11) அறிவியலில் கம்யூட்டர் (9:10) போன்ற கதைகள் இவ்வகையில் அமைகின்றன.

### வடிவம்

சிறுகதைகள் ஒரு பக்கமாய் பெரும்பாலும் அமைவதில்லை, பெரும்பாலும் போட்டிக்கதைகள், மாணவர் பக்கங்கள் போன்ற வரிசையில் அமையும் கதைகள் கல்கியின் இலக்கியத் தரத்தையறிந்து எழுதமுற்படுவதால் சிறுகதைகள் நல்ல வடிவத்தை மேற்கொள்ளுகின்றன. மாணவர் பக்கக் கதையில் வரும் ஒரு கதையை இங்கும் காணலாம்.

ஊர்வலம் போகிறது. இடையில் ஜானகிக்குப் பிரசவ வலி வந்துவிடுகிறது. தன் கணவனுக்குத் தொலைபேசியில் செய்தியைத் தெரிவித்துவிட்டுக் காரில் மருத்துமனைக்கு எடுத்துச் செல்லப்படுகிறாள் (வளர்ச்சிநிலை-1)

காரின் பாதையை ஊர்வலம் அடைத்துவிடுகிறது, சத்தியராஜ அலுவலகத்தில் வேலைபார்த்துக் கொண்டிருக்கிறான். தொலைபேசியில் அம்மாவுக்கு மார்புவலி என்று செய்திவருகிறது. அப்பாவைப் பார்க்காத சத்தியராஜ் அம்மாவின் மேற்பார்வையில் இவ்வளவு லட்சாதிபதியாக வந்திருக்கின்றான். அந்த அம்மாவைக் கடைசி நேரத்தில் பார்க்கப் புறப்படுகிறான். ஊர்வலம் தடை செய்கிறது. (வளர்ச்சிநிலை, 2)

இதுவரை எத்தனையோ இடங்களுக்கு இண்டர்வியூ போய் வந்தும் வேலை கிடைக்காத பால்ராஜ் இந்தத் தேர்வில் எழுத்துத் தேர்வில் தேர்ந்துவிட்டான். இன்டர்வியூ ஹைதராபாத்தில் நடக்க இருக்கிறது. இதற்காக பஸ்ஸைப் பிடித்து ரெயிலைப் பிடிக்க விரைந்தான். பஸ் ஊர்வலத்தால் தடைப்பட்டது. (வளர்ச்சி நிலை-3)

ஊர்வலத்தைப் பார்த்த தலைவர், 'இன்னும் கூட்டம் சேர்த்திருக்கலாம். இன்னும் சில லாரிகள் வந்திருக்கலாம் என்றார். (உச்ச நிலை)

பிரசவ வேதனை மிகுதியாகிறது. ஜானகி துடித்து இறக்கிறாள்.

மகனின் நினைவாக சத்தியராஜ் அம்மா இறந்து விடுகிறாள்,

பஸ் லேட்டாக அமைந்ததால் ரெயில் தவறவிட்டுவிட்டான் பால்ராஜ். வேலை கிடைக்கவில்லை.

ஊர்வலம் போய்க்கொண்டிருக்கிறது (முடிவு). துவக்கம் பிரச்சினையுடன், -1, 2, 3 ஆர்வத்துடன். உச்சநிலைக்குப் பின் வளர்ச்சிநிலைகள்; படிப்படியாக முடிவை நோக்கி வளர்ச்சி நிலைகள் வீழ்ச்சி நிலைகளாக மாறுகின்றன. முத்தாய்ப்பான முடிவில் அவலத்தை மிகைப்படுத்திக் காட்ட ஊர்வலம் போகிறது.

## தலைப்பு

பெரும்பான்மையான தலைப்புக்கள் பொதுத் தலைப்புக்களாக இருக்கின்றன. கவர்ச்சி அல்லது ஆர்வத்தைத் தூண்டும் நோக்கம் முதன்மையாகக் கருதப்படவில்லை. கருவை மையமிட்டு அமையும் தலைப்புக்கள் மிகுதி.

ஊர்வலம் (16:10)
பெற்றவள் (27 11)
விரல் (18:12)
நேர்மையின் அவதி (18:12)
புரிந்துகொள்ள முடியாதவர்கள் (18:13)
தண்டனை (6:11)
போலி நாடகத்திற்கு முற்றுப்புள்ளி (6:11)

ஆங்கிலச் சொற்களும், சில கதைகளில் தலைப்பாக அமைவதுண்டு.

லீவு (16:10)
ரேஸ் ரேஸ் சுரேஷ் (27;11)

வடமொழியின் சாயலில் சில கதைகள் அமைவதுண்டு.

அந்த ஸ்பரிசம் (16:10)

சில சமயம் நீண்ட தலைப்புக்கள் அமைகின்றன. அவைகள் தவிர்க்கப்படலாம். (எ-டு) போலி நாடகத்துக்கு முற்றுப்புள்ளி (6:1)

**துவக்கம்**

நிகழ்ச்சி, உரையாடல் இவைகளை வைத்துத் தொடக்கங்கள் அமைகின்றன. புதிர், ஆவியுலகநம்பிக்கை அடிப்படையில் (16:10), (27:11) அமையும் கதைகள் தொடக்கத்திலேயே ஆர்வஉத்தியைக் கையாளுகின்றன.

''கோரிக்கைகள் நிறைவேற...கோடிக்கைகள் போராடும். தன்னிகரில்லாத தலைவர்...வாழ்க! வாழ்க!'' இவ்வாறு கதை நிகழ்சியுடன் தொடக்கம் (16:10) அமைகிறது,

'காத்தாலே ஆருகிட்டப் பேசற அருக்காணி? என்று கேட்டுக் கொண்டு புளியமரத்துத் தோட்டக்கார அம்மாள் வந்தாள்' (27:11)

உரையாடல்—தொடக்கம்; தலைமைப்பாத்திரங்கள் இங்கு அறிமுகப்படுத்தப்பட்டு விடுகின்றன.

சில தொடக்கங்களில் ஆங்கிலச் சொற்கள் விரவிவிடுவதால் தொடக்கமே ஆர்வமின்றிக் குழப்பமாய் அமைந்துவிடுதலும் உண்டு.

''ஏம்பா எம்.சி! அந்த சி. சிலே ஒரு அக்யூஸ்ட்க்கு பெயில் ஆர்டராயிருக்கு, பாண்டைக் கொஞ்சம் சீக்கிரம் எழுதியனுப்பச் சொல்லப்பா''. (18:12)

**முடிவு**

சிறுகதையின் முடிவுகள் ஆசிரியர் கூற்றிலும், தலைப்பை இணைத்து முடிக்கும் உத்தியுடனும் முடிகின்றன.

''மகளின் தீர்க்கமான பேச்சு கீதோபதேசமாய் ஒலித்துத் தந்தையைக் கட்டிப் போட்டது'' (6:11)

''அவர்களின் உள்ளங்களில் மரகதம் மலையாய் உயர்ந்து இறுகிக் கொண்டிருந்தாள்'' (16:10)

''எங்கப்பாவுக்குக் கையிலே ஆறுவிரல்'' என்று தலைப்பில் விரல் என்ற குறிப்பிட்டதுடன் முடிகிறது (18:12)

''இதற்கெல்லாம் என்றைக்கு லீவு போடணும்?'' என்ற லீவு தலைப்பிற்குப் பொருத்தமாய் முடிவு அமைந்துள்ளதைக் காணலாம்.

### பழமொழி

நகரியப் பாத்திரங்களிலும் பழக்கப்பட்ட உவமைகளைப் பயன் படுத்தும் போக்குக் காணப்படுகிறது.

''தீபாராதனைக்காகக் காத்துநிற்கும் பக்தர்களைப் போல உள்ளே எக்கி எக்கிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்'' சினிமாவுக்கு டிக்கெட் எடுக்கும் இடத்தில் (16:10)

''அந்தச் சிறிய துவாரத்திற்குள்ளே. தரையில் விழுந்த மீன் களாய்த் துடித்துக் கொண்டிருந்த கைகளுடன் போராடிக் கொண் டிருந்த மரகதம்'' (16:10)

### பாத்திரத்திற்கேற்ற உரையாடல்

கிராமத்துப் பாத்திரம். ''அவங்க இங்க தங்கியிருக்கிற மூணு நாளைக்கும் எடங்கா முடங்கா வேலை செஞ்சு ஒதவுறதுக்குப் பொம்பளை ஆள் வேணுமாம்''. (27:11)

'':அழாதேடீம்மா. நான் எவ்வளவு கத்துண்டேன்? என் அக்கா, தங்கைகள் எல்லாரும் நல்லாபாடுவா. யாருக்கும் ரசிக்கிற ஆம்படையானா வாய்க்கலே'' (18:12) என்று பேசும் பிராமணப் பேச்சுக்கள்.

### வடமொழி

சில பாத்திரங்களில் பேச்சில் வடமொழிக் கலப்பு இருக்கிறது. ஆசிரியர் கூற்றிலும் வெளிப்படுகிறது.

''அவளுடைய பாட்டில் பிரமிப்பூட்டும் உத்திகளோ ஜோடனைகளோ கிடையாது'' (18:12)

### ஆங்கிலக் கலப்பு

இக்கலப்புத் தற்கால எல்லாச் சிறுகதைகளிலும் இடம் பெற்றிருப்பதைப் போல இவ்விதழிலும் இடம்பெற்றுள்ளது.

''மெக்கானிக்கலா வேலை செய்தா போதாது எம்.சி; இந்தக் கேசில் இரண்டு அக்யூஸ்ட் பல மாதமா வர்றாங்க. ஒருத்தன் அப்ஸ்காண்டிங்! வர்றதில்லை! இதைப் பார்க்க வேணாம்? இந்த கேசை ஸ்பிலிட் அப் செய்ய எழுத வேணாம்? சும்மா ஏதோ டாஜெட் எழுதறீயே! (18:12)

### வருணனை

சிறுகதைக்கேற்ற சுருக்க வருணனை பெரும்பாலும் இடம் பெறுகிறது. ''நாசித் துவாரங்களை மறைக்குமளவிற்குக்

கொத்தாய் வளர்ந்திருந்த அவரது நரைத்த மீசை ஆடித்துக் கொண்டிருந்தது" (16:11). இவ்வளவு தான் பாத்திர வருணனை.

## பொது மதிப்பீடு

காதல் நிறைவேறவில்லையென்றால் அவர்கள் மறுமணம் செய்து கொள்ளலாம். நிறைவேறாத காதலுக்கு வறுமை, வரதட்சணை போன்ற காரணங்கள் கூறப்படுகின்றன. அதாவது வருங்காலச் சமுதாய மேம்பாட்டிற்குப் பயன்படும்.

கணவன்—மனைவிக்கிடையே புரிதல் வேண்டும். குடும்ப உறவுகள் மிக மதிப்புக் கொடுக்க வேண்டுமென்பதற்காக யதார்த்தத்தினின்றும் விலகி மிகை உயர் நிலை காட்டப்படுகிறது.

சமூகப் பிரச்சினையைத் தொட்டுக் காட்டுகிறது. சில பிரச்சினைகளுக்குத் தீர்வு கூறப்படுவது வரவேற்கப்படுகிறது. ஆனால், இலஞ்சம், வேலையில்லாத் திண்டாட்டம், இக்கால அரசியல் இவைகளைத் தொட்டுக் காட்டி நடப்பியலை அப்படியே கொடுக்கிறது.

இறைநூற்கருத்துக்கள் நல்ல அறமதிப்பைத் தருவன. பொது நிலையில் வரும் கதைகள் பலதுறை சார்ந்தன.

சிறுகதைகள் இரண்டு பக்கங்களுக்குக் குறைவில்லாமல் அமைவதால் தம் வடிவத்தைச் சிதறவிடவில்லை. நல்ல கட்டமைப்பைப் பெறுகின்றன.

தலைப்புக்களில் வீணான கவர்ச்சி இல்லை, தொடக்கங்கள் பெரும்பாலும் ஆர்வ உத்தியைப் பெறுகின்றன. ஆங்கிலக் கலப்பைக் குறைத்தால் பெரும்பாலும் குழப்பம் நீங்கும். உவமை, பழமொழி, உரையாடல் பாத்திரப் பின்னணிக்கேற்றவாறு அமைந்துள்ளன.

## எதிர்பார்ப்புகள்

ஆபாசக் கதைகள் இல்லையென்ற பெருமை உண்டு. தீர்வு நிலை இல்லாத கதைகள் புறம்போக்குப் போல் இடம்பெறுவது களைந்தெறியப்பட வேண்டும்.

நகைச்சுவை இரசனையைச் சுவைஞர்களின் தரத்திற்கு ஈடு கொடுக்க முடியாமல் தளர்ந்து வரும் கதைகள் (18:9) (29:8) போன்றவைகளைத் தவிர்க்கலாம்.

பெண்மையில் புகுத்தப்படும் புதுமதிப்பு வரவேற்கத்தக்கது. சமுதாயச் சிந்தனைகள் மிகுதி. நெறிப்படுத்த அமையும் கதைகள் ஓரளவு சமுதாயக் கோணல்களைச் சரிபார்த்துக் கொள்ள உதவும்

வண்ணம் அமைகின்றன. எடுத்து நடைமுறைப்படுத்துவதில் வீரியமும் இணையவேண்டும்.

**கலைமகள்**

வியாபார நோக்கத்தைவிட சமுதாய மதிப்பிற்கும் (social value), மாற்றங்களை மேற்கொள்வதாகக் கூறி சிறுகதை யிலக்கணத்தைச் சிதறடிக்கும் மற்ற இதழ்களிலிருந்து வேறுபட்டு இலக்கியத்தரத்திற்கும் முதன்மை கொடுக்கும் பின்னணி இவ் விதழுக்கு உண்டு. மனித சமுதாயத்தின் சிந்தனை வளர்ச்சிக்கு உதவும் வண்ணம் தன் அமைப்பையும் போக்கையும் அமைத்துச் செல்லும் போக்குக் காணப்படுகிறது.

1983இல் ஏறத்தாழ அறுபது சிறுகதைகள் இடம்பெறுகின்றன. இறை நம்பிக்கை, அறக்கருத்து இவைகளை மையமிட்ட தரமான கதைகள் ஒவ்வொரு இதழிலும் இடம்பெறுவதைக் காணமுடிகிறது. இவ்வகையில் ஏறத்தாழ 12 சிறுகதைகள் அமைந்துள்ளன.

செய்த தவற்றினை உணர்ந்தால் இறைவனிடம் மன்னிப்புப் பெறலாம் என்று வலியுறுத்தும் வகையில். (சனவரி)

தன் மகளுக்கு ஏற்பட்ட பிணி தீருவதற்காக சனீஸ்வரனை அபிஷேகம் செய்வதற்காகத் தான் பூசை செய்யும் கோவிலிலிருந்து நெய்யைத் திருடுகிறார் சக்ரபாணி செட்டியார் (சனவரி), சாமிநாத சாஸ்திரிகள் (மார்ச்), ராமானுஜாச்சாரியார் (டிசம்பர்), நடிகை ஜெயந்தி (டிசம்பர்) ஆகிய கதைப்பாத்திரங்கள் இறை நம்பிக்கையால் வெற்றிபெறுவதாகப் படைக்கப்படுகின்றன. சமூகப் பணி இறைவனுக்குச் செய்யும் பணி என்ற கருத்தை உணர்த்தும் வெங்கடேசன் என்ற பாத்திரம் பாராட்டுதற்குரியது (நவம்பர்).

இறையுணர்வுக்கு அடுத்தபடியாகக் குடும்பங்களில் ஏற்படும் சிக்கல்களை அடிப்படையாகக் கொண்ட கதைகளுக்குக் கலைமகள் சிறப்பிடம் கொடுக்கிறது. சமூகப் பிரச்சினையான சீர்வரிசை முறையினால் குடும்பங்களில் ஏற்படும் அமைதியற்ற நிலை, பெற்றோர்களுக்கும் பிள்ளைகளுக்கும் சொத்துக்களினால் ஏற்படும் மனப் பூசல்கள், கணவன் மனைவி உறவில் ஏற்படும் சிறப்புக்களும் விரிசல்களும், தாய்மை. அண்ணன்—தம்பி உறவுகள், கூட்டுக் குடும்பத்தின் இன்றியமையாமை போன்றவற்றை மையக்கருத் தாகக் கொண்டு சிறுகதைகள் வந்துள்ளன. தனிக்குடும்ப நிலையில் கணவன்—மனைவி உறவு நிலைகளுக்கு மட்டும் முதன்மை

கொடுக்கும் நோக்கம் கலைமகளில் இல்லை. பிற உறவுநிலைகளைப் பல கோணங்களின் வழிநின்று சிறு மன உணர்வுகளைக் கூட சித்திரம் தீட்டும் நளினம் கூட்டுக் குடும்பத்தின் மதிப்பை உணர்த்துகிறதோ? என்று எண்ணத் தோன்றும்.

பொருள் இருந்தால்தான் பிள்ளைகள் கூட மதிக்கும் (மார்ச், டிசம்பர்) என்ற கருத்தை வலியுறுத்தும் கதைகள் குடும்ப மதிப்பை உணர்த்தும் கதைகளாக அமைகின்றன. கணவன்—மனைவி பிரச்சினைகளைச் சுட்டி முடிவில் நல்ல கருத்தைக் கூறும் முறை காணப்படுகிறது. 'கண்ணன் காட்டிய வழி' என்ற சிறுகதையில் வரும் மஞ்சுளாவிற்குத் தான் பணக்கார வீட்டில் பிறந்தவள் என்ற எண்ணம் உண்டு. ஆகவே, பார்த்தசாரதியின் வீட்டிலிருந்து அவன் தங்கை வந்திருந்தபோது மூன்றே நாட்களில் கடுஞ்சொற்களைச் சொல்லி அனுப்பி விட்டாள். தன் தங்கை வந்து இருபது நாட்கள் ஆகியும் மகிழ்ச்சியுடன் இருந்தாள். பார்த்தசாரதி நண்பனின் யோசனைப்படி மைத்துனியோடு நெருங்கிப் பழகுவதுபோல் நடித்தான். இதைக் கண்ட மஞ்சுளா மறுநாளே அவளை அனுப்பி விட்டாள். மனைவியின் தவற்றைத் திருத்தும் கணவனை இங்குக் காணலாம்.

'தனிக்குடித்தனம்' (மார்ச்சு) கதையில் வரும் ஷைலஜா கூட்டுக் குடும்பத்திலிருந்து பிரிந்து தனிக்குடும்பம் அமைத்து, பின் திருந்தி கூட்டுக் குடும்பத்தின் மதிப்பை உணர்ந்து கொள்வதாகக் காட்டப்பட்டுள்ளது.

பெரும்பாலான கதைகள்—குறிப்பாகக் குடும்பக் கதைகள்—நிகழ்ச்சிகளின் கோர்வைகளாக அமைந்து சிறுகதையின் தரத்தைக் குறைக்கின்றன.

50 விழுக்காட்டளவு சமூகக் கதைகள் இடம்பெறுகின்றன. வறுமை, தர்மம், மனிதாபிமானம், உழைப்பு, நேர்மை இவை கதைப்பொருளாக அமைகின்றன.

மகளுடைய காய்ச்சலுக்கு மருந்து வாங்க வேண்டுமென்றால் அன்று நடித்துக் கிடைக்கும் ரூபாயில்தான் வாங்கவேண்டுமென்ற நிலையிலுள்ள நடிகை விமலி (ஏப்ரல்), எச்சில் இலைகளில் சேகரித்த உணவைக்கூடத் தான் உண்ணாமல் தாய்க்குக் கொடுக்கும் மகன் முத்து (செப்டம்பர்) ஆகியோர் வறுமையின் வடிவங்களாகச் சித்திரிக்கப்பட்டுள்ளனர். சித்திரிப்பதோடு நின்றுவிடும் கலைமகள் தீர்வு கூறுவதைப் பற்றிச் சிந்திக்கவில்லை. இதுதான் இயல்புநிலை என நினைக்கிறதா?

'தர்மங்கள்' (மார்ச்) கதையில் வரும் சோமு அய்யர் திருமண வீட்டில் சமையல் வேலையில் ஈடுபட்டிருந்தார். மாப்பிள்ளையாக வந்திருப்பவன் தன் மகளைக் காதலித்துக் கைவிட்டு அவளுடைய இறப்பிற்குக் காரணமானவன் என்பதைக் கண்டு கொள்கிறார். அவனைப் பழிவாங்க, உணவில் ஊமத்தைப் பூக்களை அரைத்துக் கலக்க நினைக்கிறார். திடீரென்று தம் குருநாதர் நினைவுவர, சமையல்தொழிலின் புனிதத் தன்மையை உணர்ந்து பழிவாங்கும் எண்ணத்தைக் கைவிடுகிறார். பகைவனுக்கும் நன்மை செய் என்ற சமூக தருமத்தை வலியுறுத்தக் காணலாம்.

உழைப்பின் அருமை (ஏப்ரல்) சில கதைகளில் வலியுறுத்தப் படுகின்றது. நேர்மையாக நடக்கும் அதிகாரி சமூக விரோதி களால் பழிவாங்கப்படுவதைச் (முந்திரிக்காடு) சித்திரிக்கும் கதையும் உள்ளது. தற்கால அரசியல் தலையீட்டைச் சுட்டிக் காட்டி அதிகாரியின் அவலநிலை சமூகத்திற்கு உயர்த்திக் காட்டப் பட்டுள்ளது.

புதுமையை ஆதரிக்கும் கதைகளும் வெளிவருகின்றன. தந்தை ஒரு கண்கெட்டவர். தம்பிக்குத் திருமணம் செய்தபின் அவனும் குடும்பத்தைக் கவனிப்பதில்லை. தாயும் இறந்துவிடவே ஜமுனா தனிமரமாகிறாள். தற்கொலை முயற்சியில் ஈடுபடும்போது மனைவியை இழந்து சிறுகுழந்தையுடன் வரும் நடேசன் காப்பாற்றி அவளையே மணக்கிறான் (நவம்பர்). ஜெயகாந்தனின் யுகசந்தி —கீதா, அக்கினிப் பிரவேசம் —கங்கா போன்று ஜமுனா நம் மனத்தில் இடம்பிடிக்கவில்லை எனினும் கலைமகளைப் பொறுத்த வரையில் ஜமுனா சிறந்த படைப்பே.

**கலைக்கூறுகள்**

**வடிவம்**

ஒரு பக்கக் கதைகள் இல்லை. எனவே, சிறுகதையின் வடிவம் சிதறடிக்கப்படவில்லை. இரண்டும் அதற்கு மேற்பட்ட பக்கங்கள் சிறுகதைக்கு இடம் தருகின்றன. கதையில் துவக்கம், வளர்ச்சி நிலை, உச்ச நிலை, புதிர் அவிழ்ப்பு நிலை, முடிவுநிலை என்ற முறையைச் செயல்படுத்திப் பார்த்தால் ஆர்வ நிலையில்லா முறை எல்லா நிலைகளிலும் இடம் பெறுகிறது. நிகழ்ச்சிகளின் கோர்வைகள், உணர்ச்சி வெளிப்பாடுகள், அறக்கருத்துக் கூறும் கட்டுரைகள் போன்று அமைகின்றன.

**தலைப்பு**

கரு தொடர்பானது — தர்மங்கள் (மார்ச்)
தனிக்குடித்தனம் (மார்ச்)
நிகழ்ச்சி தொடர்பானது — ஐயாயிரத்தை மாற்றிய போது... (நவம்பர்)
தத்துவம் — வாழ்வெனும் வேள்வி (நவம்பர்)
தனிமனநிலை — நான் வேலைபார்க்கும் தாய் (டிசம்பர்)

கவர்ச்சி அமைக்கவேண்டும் என்ற ஆர்வமில்லை. இருப்பினும் கருவை மையமிட்டு அமையும் தலைப்புக்கள் பொதுப்படையாக அமைவதைக் குறைத்து ஆர்வத்தைத் தூண்டும் வகையில் அமைக்கலாம்.

**துவக்கம்**

கதைகளின் போக்கிற்குத் தக மாறுபடுகின்றது. தனி மன நிலை கதையை நடத்திச் செல்லும் முறை, ஆசிரியர் கூற்றுமுறை, பாத்திரக் கூற்று முறை எனத் தொடங்குகிறது.

''ஒருவித ஆயாசம் என்னைத் தொற்றிக் கொண்டது. நாலு நாளாக உடலும் ஓய்ந்து போயிருந்தது. ஏன் இந்த இயந்திர வாழ்க்கை? இதிலிருந்து என்னால் விடுபடவே முடியாதா? நினைவே கனத்தது'' — தனி மனநிலை ஓட்டம் துவக்கமாகிறது (நவம்பர்).

**முடிவு**

பாத்திரக் கூற்றின் முடிவிலும், ஆசிரியர் வரியிலும் கதையின் முடிவைத் தெளிவாகச் சுட்டி அமைகின்றன.

''ஆண்டவன் அருள்'' என்றாள். (நவம்பர்)

தன் விருப்பத்தை நிறைவேற்றுவதாகச் சொன்னவுடன், ''அப்படியே அவர் தோள்களில் சாய்ந்து விம்மினாள் பாரதி'' (நவம்பர்)

''அவள் கால்களைக் கண்ணீரால் கழுவத் துடித்தான் கமாலுதீன்'' என்று ஆசிரியர் கூற்றில் பாத்திரத்தின் செய்கை காட்டப்படுகிறது.

**பழமொழி**

எளிமை கருதி பழமொழி முழுவாக்கியமாகப் பயன்படுத்தப் படாமல் அமைகிறது. ''ஆகவே கமாலுதீன் நைப்பாசைக்குத் தகுந்தமாதிரி குட்டை யதார்த்தமாகவே குழம்பிவிட்டது. இனி மீன் பிடிக்க வேண்டியதுதான்'' (அக்டோபர்)

உவமை

ஆசிரியர் கூற்றில் பயன்படுவதைவிடப் பாத்திரக் கூற்றில் வரும் உவமை. யதார்த்தத்தை பெருகூட்டுகிறது. "...எனவே நான் நிரபராதி என்பதை நீ நம்பு; கடலைத் தேடிநதி சங்கமமாவதைப் போல, இந்த அன்புக் கடலைத் தேடி ஓடிய சிறிய நதிதான்" (நவம்பர்)

"பிரசவ வைராக்கியம் மயான வைராக்கியம் என்பது போல லாட்டரி வைராக்கியம் என்பது அவன் விஷயத்தில் விரைவிலேயே உண்மையாயிற்று" என்று ஆசிரியர் கூற்றிலும் உவமை வெளிப் படுகிறது.

நடை

கலைமகளின் கதைகளில் இலக்கிய நடை வெளிப்படும். அதில் சமகாலத்தைப் பற்றிய தாக்கல்களும் இடையிடையே நவீனமாக வெளிப்படும். "ஹி...ஹி...! இருக்கட்டும்." திட்டம் வெற்றி யடைந்த பூரிப்பில் பற்களை அதிகமாகவே விளம்பரப்படுத்தினான் அவன்." (நவம்பர்)

வருணனை

இதில் கலைமகளின் பாத்திர வருணனை குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய ஒன்று.

பொது மதிப்பீடு

இறை நம்பிக்கை அறக்கருத்துக்களை மையமிட்டுப் பெரும் பான்மையான கதைகள் அமைகின்றன. இவ்வகையில் பழமை மதிப்பு வேரூன்றப்படுகிறது. புதுமை மதிப்பு ஏற்கப்படும் நிலை ஒட்டுமொத்த மதிப்பீட்டில் குறைவே.

பெண்மை மதிப்புக்கள் வலியுறுத்தப்படுகின்றன. பெண்கள் வேலைக்குப் போகக் கூடாது. கூட்டுக் குடும்ப மதிப்பு போன்றவை களைக் கூறலாம். இவைகள் எல்லாம் காலம் கடந்த மதிப்புக்கள் என்று கலைமகள் ஒதுக்குவதில்லை.

எந்தச் சூழ்நிலையினாலும் தன்னை வளைத்துக் கொள்ளாமல் தன் இலக்கியத் தரத்தைப் பேணுவதில் கண்ணும் கருத்துமாக இருப்பதால்தான் கலைக் கூறுகளில் கவர்ச்சி போன்ற உத்திகளைக் கையாளவில்லை. ஆனால் ஆர்வ உத்தி இடம் பெறவில்லை. கதையின் வாசிப்பில் தேக்கநிலை ஏற்பட்டு கட்டுரை மாதிரி அமைந்துவிடுகிறது.

**முடிவுரை**

வெளியீட்டாளர்கள் ஆசிரியர்களுக்கு எழுத்துச் சுதந்திரம் கொடுக்க வேண்டும். வியாபாரக் கொள்கை எழுத்தாளர்களைப் பாதிக்கக்கூடாது. பெருகி வரும் மக்கள் சமுதாயத்தை நல்ல தொரு இலட்சியத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டியது இதழ்ச் சிறுகதைகளின் கடமையாகும். அறிவியல் வளர்ச்சி நம் அன்றாடத் தேவைகளையும், வளர்ச்சிவழி வசதிகளையும் நிறைவு செய்யலாம். ஆனால், இத்தகு சமுதாய வளர்ச்சிக்கு நம் பண்பாடு கால மெல்லாம் கைகொடுத்து வந்திருக்கிறது. பண்பாட்டு வளர்ச்சி சமுதாய வளர்ச்சியைக் கட்டுக்கோப்பாக அமைத்து வந்துள்ளது. பல நூறு ஆண்டுகளாகப் பாதுகாக்கப்பட்ட பண்பாட்டு மதிப்பு சிதறவிடாமல் காப்பது இலக்கியவாதிகளின் உரிமை. பண்பாடும் ஆன்மீகமும் கைகோர்த்துச் செய்து இந்தியப் பண்பாட்டு ஆன்மீகத்தில் இறை நம்பிக்கையும், அறக்கருத்துக்களும் அடங்கும். இவைகளின் வளர்ச்சி சமுதாயத்தின் வளர்ச்சிக்கு உதவியாக அமையும். இதழ்ச் சிறுகதைகள் நம் பண்பாட்டு மதிப்பில் முழுக் கவனம் செலுத்த வேண்டும்.

சமூகப் பிரச்சனைகள் யதார்த்தமாக்கப்பட்டு விலைச்சரக்காக மாற்றப்படுவது குறிக்கோளல்ல. தீர்வு கூறவேண்டியது இதழ்களின் பொறுப்பு. சிறுகதைகளில் பொழுது போக்குத் தன்மை குறைந்து முற்சுட்டிய போக்கு வளரவேண்டும். தனிமனிதம், காதல், குடும்பம், சமூகம் அவற்றில் உள்ள யதார்த்தங்கள் வக்கிரங்களைத் தூண்டவிடக்கூடாது. பாத்திரங்கள் பேச வேண்டும். உயிருடன் நடமாட வேண்டும். நல்ல தீர்ப்பைப் புகட்ட வேண்டும்.

ஆர்வம் வேறு கவர்ச்சி வேறு; முன்னது இலக்கியத்தரத்தை உயர்த்துவது. பின்னது தாழ்த்துவது. கவர்ச்சி தலைப்பிலும், படத்திலும், உரையாடலிலும் அமைவது தவிர்க்கப்பட்டு ஆர்வத் தில் வளர்க்கப்பட வேண்டும். மொழியின் வளர்ச்சியில் 'கலப்பு' ஏற்படுவது இயல்பு. ஆனால், வலிந்து புகுத்தப்படும் பிறமொழிச் சொற்கள் கதைப்போக்கைத் தடைசெய்கின்றன. நீண்ட ஆங்கில வாக்கியங்கள் தவிர்க்கப்படலாம். ஆசிரியர் கூற்றில் அமையும் பிறமொழிக்கலப்புகள் தவிர்க்கப்படலாம். சிறுகதையின் வளர்ச்சி யில் புதுப்புது இலக்கணங்கள் கற்பிக்கப்படுகின்றன. இலக்கியத் தரத்தையும் வாசகரின் நுகரும் பக்குவத்தையும் அவை இணைத்துப் பார்த்தால் நல்லது.

துணைநின்ற நூல்கள்

1. வி. மி ஞானப்பிரகாசம் சே. ச. (ப. ஆ) அகங்கள் (1984), வீரமாமுனிவர் தமிழ் ஆய்வுக்கழகம், பாளையங்கோட்டை, 1985.

2. வி. மி. ஞானப்பிரகாசம் சே. ச (ப. ஆ) இதோ தமிழ் இதழ்கள் (1970), வீரமாமுனிவர் தமிழ் ஆய்வுக்கழகம், இலயோலா கல்லூரி, சென்னை, 1972.

3, வி. மி. ஞானப்பிரகாசம் சே. ச. (ப. ஆ), இதோ தமிழ்இதழ்கள் (1974) வீரமாமுனிவர் தமிழ் ஆய்வுக்கழகம், அருள் ஆனந்தர் கல்லூரி, கருமாத்தூர், 1976.

4. வி. ரொனசரோ சே. ச, உள்ளத்தின் ஒலி, வீரமாமுனிவர் தமிழ் ஆய்வுக்கழகம், கருமாத்தூர், 1975.

கட்டுரைகள்

இரா. பாலசுப்பிரமணியன், 1984, குமுதம் சிறுகதைகள், அன்னையின் அருட்சுடர், கும்பகோணம், பிப்ரவரி, 1985.

V. M. Gnanaprakasam S. J., Tamil Short Stories, Vidyajyoti (Journal of Theological Reflection) Delhi, September, 1984.

# வானொலி நாடகம்

வை. சோமசுந்தரம்

இன்புறுத்தல், அறிவுறுத்தல் எனும் நோக்கங்களுடன் வானொலி நாடகங்கள் ஒலிபரப்பாகின்றன. சென்னை முதல் அலைவரிசையில் சுமார் 200 நாடகங்கள் இவ்வாறு ஒலிக்கப்பெற்றன. தமிழாக்க நாடகங்கள், வரலாற்று நாடகங்கள் என்பன அமைந்தபோதும், குடும்பச் சூழலை ஒட்டிய சமூக நாடகங்களின் எண்ணிகை மிகுதி, அறிவியல் நாடகங்களும், முறைகேடுகளை, ஒழுங்கீனங்களை எதிர்த்துக் குரல் கொடுக்கும் நாடகங்களும் வரவேற்புப் பெறுகின்றன, தொடர்நாடகம், சிறப்பு நாடகங்கள், நாவல்கள் நாடக வடிவம் பெறுதல், நகைச்சுவை நோக்குடையன. கிராமிய நாடகம், பிரச்சார நாடகம் எனப் பலவகை உள. 15 முதல் 60 நிமிடம் வரையும், 3 முதல் 17 பாத்திரங்களுடனும் இவை அமைகின்றன. மீண்டும் ஒலிபரப்பலுக்கும் இடனமைகிறது.

வானொலி நேயர்களை மிகவும் கவரும் நிகழ்ச்சிகளில் வானொலி நாடகங்களும் அடங்கும். இன்புறுத்தல். அறிவுறுத்தல் எனும் நோக்கங்களோடு வானொலி நாடகங்கள் ஒலிபரப்பாகின்றன. நாடகக் கருத்தும், அக்கருத்தினை வெளிப்படுத்தும் பாங்கும் நாடகத்தின் வெற்றிதோல்விகளுக்குக் காரணமாய் அமைகின்றன. சென்னை வானொலி நிலையம் 1983 ஆம் ஆண்டில் ஒலிபரப்பான நாடகங்களை அடிப்படையாகக் கொண்டு இவ் ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது,

### சில பொது நோக்கங்கள்

வானொலி நாடகங்கள் கண்டு அறிவன அல்ல; காதால் உணர்ந்து அறிவன. ஒலிக்கூறுகள் நம் செவிகளைத் தாக்குவதன் மூலம் மட்டுமே, நாம் நாடகத்தைக் கண்டு உணர்ந்தாற்போன்ற மனநிறைவை வானொலி நாடகங்கள் ஏற்படுத்தவேண்டும்.

''சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல், நன்மொழி புணர்த்தல், ஓசை உடைமை, ஆழமுடைத்தாதல்'' முதலிய நற்கூறுகள் பலவற்றையும் நாடகங்கள் பெற்றிருக்க வேண்டும்.

பொதுமக்கள் அனைவருக்கும் ஏற்றதாய் அமையவேண்டும் என்பதே வானொலி நாடகங்களின் நோக்கமாகும். சில வேளைகளில் இலக்கிய ஆர்வலர்க்கு விருந்தாகும் வகையில் உரைநடை இலக்கிய நாடகங்களும், கவிதை இலக்கிய நாடகங்களும் ஒலி பரப்பப்படும்.

வானொலி நாடகங்களின் மூலம் பல்வேறுபட்ட மக்களின் வாழ்க்கைப் போக்குகளையும், சிக்கல்களையும், அம்மக்கள்தம் வாழ்க்கையில் எதிர்ப்படும் பிரச்சினைகளை அவர்கள் சமாளித்து வெற்றி காண்டலையும் நேயர்கள் உணர்ந்துகொள்ள முடிவதால், வானொலி நாடகங்கள் வாழ்க்கைக்கு வளம் சேர்ப்பனவாய், பண்பாடு காக்கும் கருவிகளாய் அமைகின்றன.

தனி மனித சமுதாயம், நாடு, உலகம் ஆகியவை அமைந்துள்ள நிலைமைகளை, படம்பிடித்தாற்போன்று காட்டுகின்ற வானொலி நாடகங்கள், அவர்கள் 'இப்படித்தான் வாழவேண்டும்'—அவைகள் 'இப்படித்தான் அமையவேண்டும் என்ற நெறிமுறைகளையும் வகுத்துக்காட்டி, வளர்ந்து வரும் புதிய சமுதாயப் பாதைகளைத் தெளிவாகவும் பொலிவாகவும் காட்டும் வண்ண விளக்குகளாய்த் திகழ்கின்றன.

இனி 1983இல் ஒலிபரப்பான நாடகங்களின் கருத்துக்கள் சிலவற்றை அறியலாம்.

நாடகத்தின் வெற்றியை நிர்ணயிக்கும் கூறுகளும் நாடகக் கருத்துக்களும் அடங்கும்.

'அரசனை நம்பி புருஷனை கைவிட்ட கதை' என்பது பழமொழி; ஆட்டி வைப்பவரை நினைத்து பெண்டாட்டியை கைவிட்டவரின் கதையைச் சொல்கிறது சபலம் நாடகம்.

அன்பு, பாசம். மோகம், ஆசை, நிராசை, கோபம், தாபம் இவைகளுக்கு இடையே தனிமனிதனுக்கு ஏற்படுகின்ற சிக்கல்களைச் சித்திரிப்பது நெஞ்சே நீ வாழ்க

பணத்திற்காகத் தாயும் மகனும் பெண்ணைப் பிணமாக்கியதையும் அப்பிணமே அப்பணத்திற்கு ஒரு வழி செய்ததையும் விளக்குவது பேசும் பிணம் நாடகம்.

தான் திருமணம் செய்துகொண்ட பெண்ணை விட்டுவிட்டு. பண ஆசை காரணமாக மற்றொரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள நினைக்கும் ஆணினத்துக்குப் பலத்த அடியாக அமைகிறது நிமிர்ந்த நெஞ்சம் நாடகம்.

பெண் ஆசை காரணமாக, தன்னை வளர்த்து ஆளாக்கிவிட்ட சொந்த மாமாவுக்குத் துரோகம் செய்த ஒருவனின் வீழ்ச்சியும், அனாதையாக இருந்த தன்னை ஆளாக்கிவிட்ட மற்றொருவனின் நேர்மை அவனை உயர்த்திவிட்ட பாங்கும் உண்மையின் நிழல்கள் நாடகத்தில் விளக்கப்படுகிறது,

ஒருவன் வாழ்க்கையில் இரு பெண்களுக்கிடையில் எப் பெண்ணைத் துணைவியாகத் தேர்ந்தெடுப்பது என்ற வாழ்க்கைச் சிக்கலுக்கு விடைகாண்கிறது காதலோ காதல் நாடகம்.

ஆண்களுக்கு நிகராகப் பெண்களும் பல்வேறு துறைகளில் முன்னேறி வருவது இப்போதைய நிலையில் வியப்பில்லை, ஆயினும் அலுவலக நிர்ப்பந்தம் ஓர் பெண்ணின் வாழ்வில் எங்கெல்லாம் குறுக்கிடுகிறது என்பதை விளக்குகிறது அங்கும் இங்கும் நாடகம்.

குயில்களும் மயில்களும் பாடி ஆடும் இடங்களில் கூகையும் கோட்டானும் கேடுதான் விளைவிக்கும். அதே போன்று குடும்பச் சண்டைகள் கூரையைப் பிரிக்கும்படியான ஓர் சூழ்நிலையில் சண்டைக்கும் சமாதானத்திற்கும் பாலம் போடும் இணைப்பாக விளங்குகிறது விற்க முடியாத வீடு நாடகம்.

கலப்புத் திருமணங்கள் தேவை என்று வற்புறுத்துகிறது, ஒரு ரோஜாவின் புன்னகை நாடகம்.

பட்டதாரி ஒருவனுக்கு, வேலை கிடைக்காத காரணத்தால், அவன் குடும்பத்தில் கொடுமைகள் அதிகரித்துப் பின்னர் தணிவதைப் படம் பிடித்துக் காட்டுகிறது இந்தா எதிர்காலம் நாடகம்.

பணம், பகட்டு, ஆடம்பரத்தைவிட, பணிவும் நற்பண்புகளும் கொண்ட ஒரு இளைஞனைத் தேடும் பெண் உள்ளத்தைச் சித்திரிக்கிறது சோதனையால் ஒரு சாதனை.

கல்லூரி மாணவர்கள் தீய பழக்கங்களுக்கு அடிமையாகும் சூழலை விளக்கிக் காட்டுகிறது மனம் ஒரு சுரங்கம்.

ஊருக்கு நல்லவர்கள் போல் வேடமிட்டு மறைவில் தீவட்டிக் கொள்ளைக்காரர்களாய் வாழ்கின்றவர்களின் போலிவேடத்தைக் கிழித்தெறிகிறது கண்ணீர்விடும் முதலைகள்.

கால மாறுதலால், தாழ்உணர்ச்சிகளால், சூழ்நிலைக் கோளாறு களால், நல்லதொரு குடும்பம் அடையும் இன்னல்களையும்

பின்னர் அக்குடும்பம் அடையும் மீட்சியினையும் தோன்றாத் துணை நாடகம் சித்திரிக்கிறது.

தான் ஒருவரின் வெறுப்புக்குக் காரணமாக அமைவதை உணர்ந்து குற்றங்களை நிவர்த்தி செய்து குணங்களை அதிகரித்து வாழ்க்கையில் முன்னேறும் விதத்தைக் கூறுகிறது ஒருத்திக்கு ஒருவன்.

தவறு செய்தவன் இருக்க ஒரு நல்லவன் மீது பழி விழுந்து, கடைசியில் அம்பலமாகும் கதையை விளக்குகிறது உண்மை உறங்குவதில்லை.

அரசாங்கம் கொத்தடிமைகளைச் சட்டத்தின் மூலம் ஒழிக்க வகைசெய்வதுபோல உழைப்பாளர்களைக் கொத்தடிமைகளாக நடத்தும் பண்ணையார்க்குத் தக்க புத்திப் புகட்டித் திருத்துகிறது இரைபோடும் மனிதர்கள் என்ற நாடகம்.

கொத்தடிமைகளை மீட்டு வாழ்வளிக்கும் வள்ளல் பற்றிய நாடகமாக அமைகிறது தலைக்குவிலை என்பது.

முதியோர் கல்வியின் நன்மையை வலியுறுத்துகிறது நல்ல முடிவு.

நினைப்பதை நடத்தி முடிப்பதில் மனிதனுக்கு எண்ணற்ற தடங்கல்களும், தவறுகளும், சிக்கல்களும், சோதனைகளும் ஏற்படுவது இயல்பு. இவற்றுக்கு ஆட்படும் ஒருவன், இத்தகைய இடையூறுகளைக் கடந்து சொன்னபடி செய்வதை எடுத்துக் காட்டுகிறது மகுடி.

பல உயிர்கள் இழப்பிற்குக் காரணமான தீ விபத்துப் பற்றிய உண்மை செய்திகளைக் கண்டறிய முயலும் ஒரு பத்திரிகையாளர்க்கு உண்டாகும் துன்பங்களைப் பின்னணியாக வைத்து நடிக்கப் பெற்றுள்ள நாடகம் முடிந்துபோன முற்றுகை.

தொழிலாளி ஒருவனின் திறமைக் குறைவால் பாதிக்கப்படுவது, முதலாளியின் வருமானமும், தொழிலும் மட்டும் அல்ல; அதனால் தொழிலாளிக்கும் பேராபத்து உண்டு என்பதை விளக்குகிறது கானல் பார்வைகள்.

தன்னலக்காரர்களாகவும், திடமான குறிக்கோள்கள் இல்லாதவர்களாகவும், சந்தர்ப்பவாதிகளாகவும் விளங்கும் அலுவலகக் கும்பலிடம் சிக்கி, நேர்மையான ஊழியர் ஒருவர்படும் இன்னல்களுக்கு இடையில், விதியின் தர்மங்கள் வெற்றி பெறுவதை விதியின் தர்மங்கள் நாடகம் உணர்த்துகிறது.

இவ்வாறு மனித வாழ்வின் பல்வேறு கூறுபாடுகளை விளக்கிச் செல்லும் போக்கில் வானொலி நாடகங்கள் அமைந்துள்ளன.

பிறமொழிகளிலிருந்து தமிழாக்கம் செய்து வழங்கப்பட்ட நாடகங்கள், வரலாற்று நாடகங்கள் ஆகியனவும் ஒலிபரப்பப் பட்டுள்ளன; எனினும் குடும்ப மற்றும் சமூக நாடகங்களின் எண்ணிக்கை மிகுதி எனலாம்.

வானொலி நாடகச் சொற்கள்

தமிழ்க் கவிதை நாடகங்கள், இலக்கிய நாடகங்கள் ஆகியவற்றில் நற்றமிழ்ச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. மற்றவகை நாடகங்களில் பிறமொழிச் சொற்கள் வேண்டுமென்று புகுத்தப்படுவதில்லை. பரந்துபட்ட வானொலி நேயர்களைச் சென்றடைதல் பொருட்டும், பல்வேறுபட்ட வானொலி நேயர்களை ஈர்த்தல் பொருட்டும், அதிக எண்ணிக்கையில் புதிய நேயர்களை ஈர்க்கும் பொருட்டும் வானொலி நாடகங்களில் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்துவது தவிர்க்க இயலாததாகி விடுகிறது. நடைமுறை வாழ்க்கையில் பலருக்கும் அறிமுகமான சொற்கள், அன்றாடம் பயன்படுத்தப்படுகின்ற சொற்கள் வானொலி நாடகங்களில் பயன் படுத்தப்படுகிறது.

(எ-டு) 'ஹலோ' என்று நண்பரை அழைத்தல்.

உணர்ச்சி வெளியீட்டுச் சொற்கள்

இவ்வகையில் அடமடையா, திருட்டுப் பயலே' அயோக்கிய ராஸ்கல், போடா போக்கிரி என்பன போன்ற சொற்கள் கோபத்தை வெளிப்படுத்தும் உணர்ச்சி வெளியீட்டுச் சொற்களாக அமைந்தாலும், அவை வானொலியில் பயன்படுத்தப் பெறுவதில்லை. இவற்றை வானொலியில் பயன்படுத்துவதென்பது மக்களிடம் மென்மை தன்மைகளைத் தோற்றுவிப்பதற்கு மாறாக, வன்மையைத் தோற்றுவிப்பதாகிவிடும். எனவே இதுபோன்ற வேளைகளில்,

"உன்னிடம் இதைச் சொன்ன என்னை......"

என்று கோபத்தொனியில் இழுப்பது;

"உன்னை......

"உன்னைப் போல்......எவனும் இருக்கமாட்டான்"

என்று கோபத்தொனியில் கூறுவதாகிய முறை மேற்கொள்ளப்படுகிறது. வானொலி நாடகங்களில் பெரும்பாலும் பேச்சு வழக்குச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

வானொலி நாடகங்களில் குறிப்பிடும்படியாகப் புது சொற்றொடர்கள் புகுத்தப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

### பின்னணி

வானொலி நாடகங்களில் பின்னணி என்பது இன்றியமையா ஒன்று. நாடகத்தைக் கேட்பவர்கள், நாடகப் பாத்திரங்கள் செயற்படும் சூழலை நன்கு விளங்கிக் கொள்வதற்கு உதவுவது பின்னணி ஆகும். எடுத்துக்காட்டாக காதலர்கள் கடற்கரையில் உரையாடிக் கொண்டிருக்கின்றனர் என்பதைக் காட்ட அலையொலியை ஒலிக்கச் செய்வர். குறிஞ்சி நிலப் பின்னணியை விளக்குவதற்கு, அந்நிலத்துக்கே உரிய சில பறவைகள் ஒலி, விலங்குகளின் ஒலி, மரங்கள் காற்றில் அசைந்தாடும் ஒலி ஆகியவற்றை எழுப்புவர்.

### அதிகரித்து வரும் நாடக வகை

அறிவியல் அடிப்படையிலான நாடகங்கள் தற்போது, நேயர்களால் பெரிதும் வரவேற்கப்படுகின்றன. சில முக்கிய பதவிகள் வகிக்கும் காவல்துறை, மருத்துவத் துறை அதிகாரிகள் இவற்றை எழுதி வருவது பாராட்டுதற்குரியது; இவ்வகை அறிவியல் நாடகங்கள் மக்களிடையே அறிவியல் மனப்பான்மையைத் தோற்றுவிக்கும் என்பதில் ஐயமில்லை.

### தற்போதைய நிலை

வானொலி நாடக அமைப்பாளர்கள் குறிப்பிட்ட விதிமுறைகட்கு உட்பட்டு, நாடகங்களைத் தயாரித்து அளிக்க வேண்டிய நிலை இப்போது உள்ளது. இதனால், நாட்டில் காணலாகும் சிற்சில கூறுகளையே நாடகமாக்கித் தரவேண்டியுள்ளது. இதனால் நாட்டின் பல்வேறு இடங்களில், பல்வேறு நிலைகளில் நடைபெறும் முறைகேடுகளை மக்களுக்கு நாடகத்தின் மூலம் அறிவித்து, அம்முறைகேடுகளிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ளும் வழிவகைகளை உணர்த்த முடிவதில்லை.

### வானொலி நாடகங்கள் செல்ல வேண்டிய போக்கு

வானொலி நாடகங்களின் தற்போதைய நிலைமாறி தவறுகள்—முறைகேடுகள் எம்மட்டத்தில் நடந்தாலும்—அரசு அலுவலர்களாயினும் — அவர்களுடைய ஒழுங்கீனங்களையும் எடுத்துக்கூறி, அவர்களைத் திருத்தும் போக்கில் நாடகங்கள் அமைவது வரவேற்க தகுந்தது.

**நாடகத் தலைப்புகள்**

வானொலி நாடகங்களின் தலைப்புகளை ஆய்வு செய்யும் போது, பல உண்மைகள் வெளிப்படக் காண்கிறோம். பெரும்பாலும் நாடகத் தலைப்புகள், நாடகக் கருவைஒட்டி அமைந்துள்ளன; பல்வேறு நோக்கங்களில் உழன்று கொண்டிருக்கும் மனித மனத்தைச் சிக்கெனப் பிடித்து, ஈர்க்கும் வண்ணம் அவை அமைகின்றன. நூலுக்கு முன்னுரை போல் நாடகத்திற்குத் தலைப்பு இன்றியமையாததாகிறது. தலைப்பைக் கேட்ட அளவில், நாடகத்தைக் கேட்க வேண்டும் என்ற வேட்கையை உண்டாக்கும் வகையில் நாடகத் தலைப்புகள் அமைதல் வேண்டும். இவ்வகையில் எண்பத்துமூன்றில் ஒலிபரப்பபபட்ட நாடகங்களின் தலைப்புக்கள் அமைந்துள்ளன என்று கூறலாம். அவற்றைப் பின்வருமாறு பாகுபடுத்தலாம்.

| எண் | பாகுபாடு | நாடகத்தலைப்பு |
|---|---|---|
| 1 | முரண் இணைத்தலைப்பு | பூங்கொடியும் போர்வாளும் |
| 2 | விளித் தலைப்புகள் | நெஞ்சே நீ வாழ்க!<br>இந்தா எதிர்காலம்! |
| 3 | குறியீட்டுத் தலைப்புகள் | இறுகிய மண்<br>வேலி இல்லாத பயிர்கள்<br>கொம்புகளைத் தேடிய கொடிகள்<br>மண்ணில் ஒரு வெண்ணிலா<br>இரும்புக்கும் இதயம் உண்டு |
| 4 | வினாத் தலைப்புகள் | வேலைதானே வேண்டும்?<br>எங்களைப் பிரிக்க முடியுதா?<br>கல்யாணத்துக்கு இப்ப என்ன அவசரம்?<br>என்று தணியும் இந்த மோகம்?<br>கல்லும் கரையாதோ?<br>மாற வேண்டாமா?<br>கனவா? நனவா? |
| 5 | இல்பொருள் தலைப்பு | பேசும் பிணம் |
| 6 | வழக்குச் சொல் தலைப்புகள் | நல்லகாலம் வருகுது<br>தொரத்து தொரத்து |
| 7 | உம்மைத் தலைப்புகள் | புதரும் பூங்காவும் |

| எண் | பாகுபாடு | நாடகத் தலைப்பு |
|---|---|---|
| 8 | சொல்லெஞ்சுத் தலைப்புகள் | நாமொன்று நினைக்க...<br>டாக்டரைத் தேடி...<br>உறவுக்குப் பின்னால்...<br>வெளிச்சத்தைத் தேடி...<br>வாழ்வின் மடியில்...<br>முற்பகல் செய்யின்... |
| 9 | முற்றுத் தலைப்புகள் | உறவுகள் பிரிவதில்லை<br>சிரிக்காமல் விடமாட்டேன் |
| 10 | ஆங்கிலத் தலைப்புகள் | ஸ்மைல் ப்ளீஸ் |
| 11 | வடசொல் தலைப்புகள் | சுமங்கலி<br>ஜெயஜெய மங்கலம்<br>ஸ்தல விருட்ஷம்<br>சபலம்<br>அக்கினி பிரவேசம்<br>அசல்<br>மாளவி காக்னி மித்ரம்<br>வசியம் |
| 12 | இருமொழித் தலைப்புகள் | லாக்கரில் வைத்த பணம்<br>கமிஷன் கல்யாணம்<br>ஓஸி பாஸ் ஓராயிரம் |
| 13 | உணர்ச்சிச் சொல் தலைப்பு | அதிகமா—ஐயோ வேண்டாம் |

மேற்கண்ட பட்டியலை நோக்கும் போது, தமிழ் நாடகங்களே ஆயினும், வடசொல், ஆங்கிலச் சொற்களால் அமைந்த தலைப்புகளும் இடம் பெற்றிருப்பதை அறிய முடிகிறது. நேயர்களைக் கவர்ந்திழுக்கவேண்டும் என்னும் மனப்பான்மை, நாடக ஆசிரியனின் மனநிலை, பெருவழக்கு, பொதுவழக்கு ஆகியவை காரணமாக இத்தலைப்புகள் இடம்பெறுவது தவிர்க்க இயலாததாகிவிடுகிறது,

## 1—1—83 முதல் 31—12—83 முடிய, சென்னை-1

| வரிசை எண் | ஒலிபரப்பு நாள் | நாடகத்தின் தலைப்பு |
|---|---|---|
| 1 | 1-1-83 | ஓஸியாஸ் ஓராயிரம் |
| 2 | 5-1-83 | பூங்கொடியும் போர்வாளும் (வரலாற்று நாடகம்) |
| 3 | 7-1-83 | ஜெய ஜெய மங்கலம் |
| 4 | 8-1-83 | ஜாடிக்கு ஏற்காத மூடி (தொடர் நாடகம்-பகுதி 14) |
| 5 | 9-1-83 | பைத்தியங்கள் பலவிதம் (புத்தாண்டுச் சிறப்பு நாடகம்) நகைச்சுவை |
| 6 | 9-1-83 | கெட்டி மேளம் கொட்டும் |
| 7 | 10-1-83 | நாமொன்று நினைக்க |
| 8 | 14-1-83 | ஜெய ஜெய மங்கலம் (தொடர் நாடகம்-பகுதி 15) |
| 9 | 15-1-84 | சபலம் |
| 10 | 16-1-84 | அசல் |
| 11 | 16-1-84 | இதயம் நடிக்கிறது |
| 12 | 17-1-83 | மாலவிகா—அக்கினிமித்ரம் (காளிதாஸரின் சமஸ்கிருத காவியம்) |
| 13 | 19-1-83 | இறுகிய மண் (வரலாற்று நாடகம் ஆங்கிலேயர் காலம்) |
| 14 | 20-1-83 | அப்பாவுக்குக் கல்யாணம் |
| 15 | 21-1-83 | ஜெய ஜெய மங்கலம் தொடர் நாடகம் பகுதி—16 |
| 16 | 22-1-13 | ஏமாறாதே ஏமாற்றாதே |
| 17 | 23-1-83 | நெஞ்சே நீ வாழ்க |
| 18 | 24-1-83 | அவள் ஒரு புதிர் |
| 19 | 27-1-83 | தேசிய நிகழ்ச்சி—நாடகம் பிரபஞ்ச தம்கரா |
| 20 | 28-1-83 | ஜெய ஜெய மங்கலம் தொடர் நாடகம் பகுதி—17 |
| 21 | 29-1-83 | பேசும் பிணம் |

## அலைவரிசையில் ஒலிபரப்பப்பட்ட நாடகங்கள்

| நாடக ஆசிரியர் | நாடக அமைப்பு | பாத்திர எண்ணிக்கை | காலம் நிமிடம் |
|---|---|---|---|
| எம். தங்கசாமி | சபரிநாதன் | 4 | 15 |
| பொன் பரமகுரு | உதயராஜா | 13 | 30 |
| ஆர். பொன்னம்மாள் | — | 5 | 15 |
| கோ. தந்தசாமி | — | — | — |
| ஏ. எம். சாமி | சூத்தபிரான் | 4 | 15 |
| வாசவன் | — | 9 | 60 |
| கோவை ஜெஸ்டர் | — | 5 | 15 |
| நீலம் | — | — | — |
| ஸ்டீபன் ராஜா | மாரிமுத்து | 3 | 15 |
| பி. எம். இளங்குமரன் | — | — | — |
| மல்லிகைக்கண்ணன் | — | — | — |
| நாடக வடிவம் | பி. வி. கண்ணன் | 9 | 15 |
| ஆர். தியாகராஜன் | | | |
| எஸ். வி. ரமணி | எம். கே. மூர்த்தி | 10 | 30 |
| கெட்மேன் ஏஹார்டு | பார்வதி ராமநாதன் | 6 | 60 |
| ராயேஸ்லார் | | | |
| நாகை ராமதாஸ் | — | — | 30 |
| பாலூர் பல்லவராசன் | எம். கே. மூர்த்தி | 5 | 15 |
| காவல் ரமணி சந்திரன் | | | |
| நாடக வடிவம் | எம். கே. மூர்த்தி | 8 | 60 |
| வில்லிவாக்கம் சாக்ரடீஸ் | | | |
| பா. அண்ணாதுரை | எம். கே. மூர்த்தி | 4 | 15 |
| தெலுங்கு எல்.பி.ஸ்ரீராம் | | | |
| ஹிந்தி சுஷ்ரி தயவந்தி | எம். கே. மூர்த்தி | 17 | 60 |
| தமிழ் என். கோமதி | | | |
| ஜே. எம். சாலி | — | — | 30 |
| மன்சூர் அகமது | எம். கே. மூர்த்தி | | |

| வரிசை எண் | ஒலிபரப்பு நாள் | நாடகத்தின் பெயர் |
|---|---|---|
| 22 | 2-2-83 | முற்பகல் செய்யின்... |
| 23 | 4-2-83 | ஜெஜெய மங்கலம் தொடர் நாடகம்—பகுதி-18 |
| 24 | 5-2-83 | அதிகமா—ஐயோ வேண்டாம் |
| 25 | 7-2-83 | வசியம் |
| 26 | 11-2-83 | ஜெயஜெய மங்கலம் தொடர் நாடகம் பகுதி—19 |
| 27 | 12-2-83 | ஸ்மைல் ப்ளீஸ் |
| 28 | 13-2-83 | சாயாவனம் |
| 29 | 13-2-83 | நேரம் நல்ல நேரம் |
| 30 | 14-2-83 | பட்டை தீட்டிய வைரம் |
| 31 | 16-2-83 | மனம் ஒரு சுரங்கம் |
| 32 | 17-2-82 | வாடகை வீடு |
| 33 | 18-2-83 | கண்ணீர்விடும் முதலைகள் (கிராமம்) |
| 34 | 19-2-83 | மன சக்தி |
| 35 | 21-2-83 | பஸ் பயணம் |
| 36 | 25-2-83 | தோன்றாத் துணை |
| 37 | 26-2-83 | மன விஹாரம் |
| 38 | 28-2-83 | அக்கரை பச்சை 20 அம்சத்திட்டம்—சிறப்பு நாடகம் |
| 39 | 2-3-83 | நிமிர்ந்த நெஞ்சம் |
| 40 | 4-3-83 | உண்மையின் நிழல்கள் |
| 41 | 5-3-83 | கிழக்கும் மேற்கும் |
| 42 | 7-3-83 | நித்திரை கலைந்தது |
| 43 | 11-3-83 | சமையல் ராஜா |
| 44 | 12-3-83 | அவளும் தாயானாள் |
| 45 | 13-3-83 | காதலோ காதல் |
| 46 | 14-3-83 | சமாதி |
| 47 | 16-3-83 | ஒரு ஆன்மா பூரிக்கிறது |
| 48 | 17-3-83 | தர்மத்தின் வெற்றி |

| நாடக ஆசிரியர் | நாடக அமைப்பு | பாத்திர எண்ணிக்கை | காலம் நிமிடம் |
|---|---|---|---|
| நாவல் ஹேமா ஆனந்த் | எம்.கே. மூர்த்தி | 8 | 30 |
| தீர்த்தன், நாடகவடிவம் | | | |
| கோமதி சுவாமிநாதன் | | | |
| எஸ்.பி. பாலகிருஷ்ணன் | — | — | 30 |
| சங்கரப்பிரியா | எம்.கே. மூர்த்தி | 3 | 15 |
| திருச்செந்தூரான் | எம்.கே. மூர்த்தி | 4 | 15 |
| பி. சங்கரநாராயணன் | — | — | 30 |
| கோவை அனுராதா | கூத்தபிரான் | 9 | 15 |
| எஸ். கந்தசாமி | எம்.கே. மூர்த்தி | 8 | 60 |
| பரணி கோபு | — | — | — |
| ஜீவன் சந்த் | எம்.கே. மூர்த்தி | 7 | 15 |
| எஸ். ஜெகதீசன் | எம்.கே. மூர்த்தி | 7 | 30 |
| நாடோடி | — | 10 | 60 |
| பூவை. ராஜசேகரன் | எம்.கே. மூர்த்தி | 8 | 30 |
| அறிவுச்சுடர் | சபாிநாதன் | 5 | 15 |
| எம்.எஸ். மாரன் | — | — | — |
| எம்.எஸ். கோபால் | உதயராஜா | 10 | 30 |
| எம்.கே.மோகன்சுந்தர் | எம்.கே. மூர்த்தி | 5 | 15 |
| ஆற்றலரசு | எம்.கே. மூர்த்தி | 6 | 15 |
| சுடர்வண்ணன் | எம்.கே. மூர்த்தி | 8 | 30 |
| நித்யமூர்த்தி | எம்.கே. மூர்த்தி | 8 | 30 |
| பாலஜானகி | எம்.கே. மூர்த்தி | 7 | 15 |
| சின்னராசு | — | — | — |
| ஏ. சுவாமிநாதன் | எம்.கே. மூர்த்தி | 11 | 30 |
| வசந்த சிதம்பரம் | நெல்லைநா.முகுந்தன் | 5 | 15 |
| மூலம் மு. கந்தசாமி | எம்.கே. மூர்த்தி | 11 | 60 |
| நாடக வடிவம் | | | |
| ஜி. மாணிக்கவாசகம் | | | |
| ஜே. எம். சாலி | — | 5 | 15 |
| ஜோசப் ஆனந்தன் | நா. கிருஷ்ணன் | 8 | 30 |
| சரத் சந்திர சட்டோபாத்யாயா | — | — | 60 |
| மோனிகா சட்டர்ஜி | | | |

| வரிசை எண் | ஒலிபரப்பு நாள் | நாடகத்தின் தலைப்பு |
|---|---|---|
| 49 | 18-3-83 | வேலி இல்லாத பயிர்கள் (கொத்தடிமை ஒழிப்பு) |
| 50 | 19-3-83 | ஒருத்திக்கு ஒருவன் |
| 51 | 21-3-83 | எழுத்தாளர் இல்லத்தில் |
| 52 | 24-3-83 | மக்களின் எதிரி தேசிய நிகழ்ச்சி—நாடகம் |
| 53 | 25-3-83 | நல்லகாலம் வருகுது |
| 54 | 26-3-83 | கொம்புகளைத் தேடிய கொடிகள் |
| 55 | 27-3-83 | உலகத் திரைப்பட நாள் சிறப்பு நாடகம் ஜெரி ஆர்ச்சரிடு |
| 56 | 28-3-83 | நியாயம் வெளியேறாது |
| 57 | 30-3-83 | வாழ்வு தந்த பாரதி |
| 58 | 1-4-83 | கருணையின் முன் கடையன் |
| 59 | 2-4-83 | தலைக்கு விலை |
| 60 | 4-4-83 | உண்மை உறங்குவதில்லை |
| 61 | 6-4-83 | சீதை தேடிய ராமன் |
| 62 | 8-4-83 | சாகாத வாழ்வுக்குச் சஞ்சீவி |
| 63 | 9-4-83 | கடற்கரை விளக்கம் |
| 64 | 10-4-83 | இரைபோடும் மனிதர்கள் |
| 65 | 11-4-83 | மடைமையைக் கொளுத்துவோம் |
| 66 | 14-4-83 | நீதி பொதுவானது |
| 67 | 15-4-83 | காதம்பரி |
| 68 | 16-4-83 | பகட்டும் பாசமும்* |
| 69 | 18-4-83 | சங்கு ஊதியது |
| 70 | 20-4-83 | பெண்ணுக்கு அழகு |
| 71 | 21-4-83 | பெருக்கலைப் படிப்போம்* |

| நாடக ஆசிரியர் | நாடக அமைப்பு | பாத்திர எண்ணிக்கை | காலம் நிமிடம் |
|---|---|---|---|
| டி. துரைராஜ் | எம்.கே. மூர்த்தி | 8 | 30 |
| லெஷ்மி சுந்தரேசன் | எம்.கே. மூர்த்தி | 4 | 15 |
| ஏ.எம். தாஸ் | — | — | 15 |
| மூலம்: மெளனர்க் இப்சன் நாடக வடிவம் : கஸ்தூர் பாண்டே தமிழாக்கம் : கஸ்தூரி ரங்கன் | சபரி நாதன் | 7 | 60 |
| — | — | — | 30 |
| — | — | — | 15 |
| மூலம் ; ஆண்டோன் செக்கோவ் நாடகவடிவம் : உமா சந்திரா | — | 9 | 60 |
| — | — | — | 15 |
| பட்டுக்கோட்டை குமாரவேல் | — | 6 | 30 |
| பி.ஏ. தாஸ் | பொன். துரைசாமி | 12 | 30 |
| அரக்கோணம் ஜோதி | கோபால் | 9 | 15 |
| வி.டி. சந்தானம் | சபரிநாதன் | 6 | 15 |
| பி.எஸ். ரங்காச்சாரி | சக்தி சீனிவாசன் | 7 | 30 |
| கோமதி சுப்பிரமணியம் | எம்.கே. மூர்த்தி | 8 | 30 |
| லெஷ்மி ராமசாமி | — | 5 | 15 |
| மல்லிகைக் கண்ணன் | எம்.கே. மூர்த்தி | 11 | 60 |
| ரெங்கநாதன் | டி. சங்கரன் | 7 | 15 |
| கூத்தபிரான் | — | — | 15 |
| மூலம் : பிட்டானா வானொலி வடிவம் : பிட்டானுமாத்யூ எஜாக்கல் டால | — | — | 15 |
| அறிவுச்சுடர் | சபரிநாதன் | 4 | 15 |
| 'மாஹி' டி.ஆர். குருசாமி | எம்.கே. மூர்த்தி | 5 | 15 |
| பி.எம். இளங்குமரன் | எம்.கே. மூர்த்தி | 7 | 30 |
| எஸ்.பி. பாலகிருஷ்ணன் | — | — | — |

| வரிசை எண் | ஒலிபரப்பு நாள் | நாடகத்தின் தலைப்பு |
|---|---|---|
| 72 | 21-4-83 | எக்கல்* |
| 73 | 22-4-83 | ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு |
| 74 | 23-4-83 | இது சத்தியம் |
| 75 | 24-4-83 | கங்கை யமுனை |
| 76 | 25-4-83 | தொடும்வானம் |
| 77 | 28-4-83 | அம்மா அழைக்கிறாள்* |
| 78 | 29-4-83 | அக்கினிப் பிரவேசம் |
| 79 | 30-4-83 | உமாவின் தீர்ப்பு* |
| 80 | 2-5-83 | தேவை ஒரு பாயச பார்முலா |
| 81 | 4-5-83 | வேலைதானே வேண்டும்? |
| 82 | 5-5-83 | ஒரு பெண்மை ஊமையாகிறது* |
| 83 | 6-5-83 | மண்ணில் ஒரு வெண்ணிலா (பகுதி 1) |
| 84 | 6-5-83 | காட்டுப் பூங்கா* |
| 85 | 7-5-83 | இருண்ட உள்ளம்* |
| 86 | 8-5-83 | இரு நாடகங்கள் |
| | | 1. ஒரு மகுடம் ஒரு வால் இரு விழிகள் |
| 87 | ,, | 2. எங்களைப் பிரிக்க முடியுமா? |
| 88 | 9-5-83 | திருமணத்துக்கு ஒரு வரம் |
| 89 | 12-5-83 | கண்ணாயிரம் கண்ட முடிவு* |
| 90 | 13-5-83 | மண்ணில் ஒரு வெண்ணிலா (பகுதி-2) |
| 91 | 14-5-83 | உழைப்பதும் உண்பதும் |
| 92 | 16-5-83 | யார்கேட்டாலும் சொல்லாதே |
| 93 | 18-5-83 | மெல்லப் பறக்கும் மனங்கள் |
| 94 | 19-5-83 | அக்கறை* |
| 95 | 19-5-83 | நில் கவனி நட* |
| 96 | 20-5-83 | மண்ணில் ஒரு வெண்ணிலா (பகுதி-3) |
| 97 | 21-5-93 | இதோ ஒரு மனிதன் |
| 98 | 22-5-83 | தொரத்து தொரத்து |
| 99 | 23-5-83 | ஏழை உறவினன்* |

| நாடக ஆசிரியர் | நாடக அமைப்பு | பாத்திர எண்ணிக்கை | காலம் நிமிடம் |
|---|---|---|---|
| ராஜம் கிருஷ்ணன் | — | — | — |
| பொன் பரமகுரு | எம்.கே. மூர்த்தி | 9 | 30 |
| என். ராஜகோபாலன் | சபரிநாதன் | 4 | 15 |
| மூலம் : நாதம் | எம்.கே. மூர்த்தி | 7 | 60 |
| வானொலி வடிவம் : | | | |
| வில்லிவாக்கம் | | | |
| சாக்ரட்டீஸ் | | | |
| அனகாபுத்தூர் | சபரிநாதன் | 6 | 15 |
| ஜெபம்கொண்டான் | — | — | — |
| எஸ்.பி. பாலகிருஷ்ணன் | எம்.கே. மூர்த்தி | 10 | 15 |
| என்.வி.ஆர். சர்மா | — | 4 | — |
| சி. கிருஷ்ணமூர்த்தி | டி. சங்கரன் | 6 | 15 |
| மனோகர் | எம்.கே. மூர்த்தி | 6 | 30 |
| சுப்பு ஆறுமுகம் | — | — | — |
| ஏ.வி.எம். கணேஷ் | சபரிநாதன் | 8 | 15 |
| வில்லிவாக்கம் | — | — | — |
| சாக்ரட்டீஸ் | | | |
| பாலஜானகி | — | — | — |
| மூலம் : விக்ரமன் | எம்.கே. மூர்த்தி | 7 | 15 |
| வானொலி வடிவம் : | | | |
| எஸ்.வி. ரமணி | | | |
| பட்டுக்கோட்டை | — | — | 15 |
| குமாரவேலு | | | |
| ரா. பாலகிருஷ்ணன் | ,, | — | — |
| அமுதன் | — | — | — |
| ஏ.வி.எம். கணேஷ் | சபரிநாதன் | 8 | 15 |
| ஏ.சி. சீனிவாசன் | — | 5 | 15 |
| எல். அனந்தகிருஷ்ணன் | — | — | 15 |
| டி. கணேசன் | எம்.கே. மூர்த்தி | — | — |
| சங்கரப்பிள்ளை | — | — | — |
| குமாரவேல் | — | — | — |
| ஏ.வி.எம். கணேஷ் | சபரிநாதன் | — | — |
| ரா. தயாநிதி | எம்.கே. மூர்த்தி | 5 | — |
| ராஜேந்திரகுமார் | எம்.கே. மூர்த்தி | 11 | — |
| துன் | — | — | — |

| வரிசை எண் | ஒலிபரப்பு நாள் | நாடகத்தின் தலைப்பு |
|---|---|---|
| 100 | 26-5-83 | நில் கவனி நட* |
| 101 | 27-5-83 | மண்ணில் ஒரு வெண்ணிலா (பகுதி-4) |
| 102 | 30-5-83 | கல்யாணத்துக்கு இப்ப என்ன அவசரம்?* |
| 103 | 1-6-83 | முதலும் வாதியும் |
| 104 | 3-6-83 | மண்ணில் ஒரு வெண்ணிலா (பகுதி-5) |
| 105 | 4-6-83 | இதயப் பரிசு |
| 106 | 10-6-83 | மண்ணில் ஒரு வெண்ணிலா (பகுதி-6) |
| 107 | 16-6-85 | இரு நாடகங்கள் |
| | | 1. இன்னொரு பைத்தியம் |
| 108 | ,, | 2. இட்ட பணி |
| 109 | 1-7-83 | அங்கும் இங்கும் |
| 110 | 2-7-83 | நல்ல முடிவு |
| 111 | 4-7-83 | தென்றல் போகும் திசை |
| 112 | 6-7-83 | சஞ்ஜீரணி |
| 113 | 7-7-83 | பூங்கொடியும் பொன்வாளும் |
| 114 | 9-7-83 | விற்க முடியாத வீடு* |
| 115 | 9-7-83 | கௌரிக்குக் கிடைத்த டௌரி |
| 116 | 10-7-83 | அணைக்க ஒரு கை |
| 117 | 11-7-83 | இக்கரைக்கு அக்கரை பச்சை |
| 118 | 14-7•83 | நரகு வீடு |
| 119 | 15-7-83 | மகுடி |
| 120 | 16-7-83 | நியாயங்கள் அழிவதில்லை |
| 121 | 18-7-83 | மலர்கள் மணக்கட்டும் |
| 122 | 20-7-83 | தராசு |
| 123 | 21-7-83 | மாயமான்* |
| 124 | 22-7-83 | என்று தணியும் இந்த மோகம்? |
| 125 | 24-7-83 | ரசனா |
| 126 | 25-7-83 | ஒரு வீடு ஒரு தோட்டம்* |
| 127 | 28-7-83 | சங்கல்பம் |
| | | (தேசிய நிகழ்ச்சி-நாடகம்) |

| நாடக ஆசிரியர் | நாடக அமைப்பு | பாத்திர எண்ணிக்கை | காலம் நிமிடம் |
|---|---|---|---|
| ஏகவன் | — | — | — |
| ஏ.வி.எம். கணேஷ் | சபரிநாதன் | 9 | 15 |
| வி.என். சொர்ணா | — | — | — |
| கோமதி சுவாமிநாதன் | எம்.கே. மூர்த்தி | 10 | 30 |
| — | — | 8 | — |
| அறிவுச்சுடர் | — | 4 | — |
| — | — | — | — |
| ஏ.எம். சாமி | எம்.கே. மூர்த்தி | 4 | 30 |
| நா. கிருஷ்ணமூர்த்தி | — | 6 | 30 |
| ஸ்ரீரங்கம் நரசிம்மன் | எம்.கே. மூர்த்தி | 7 | 30 |
| ஆராவமுதன் | எம்.கே. மூர்த்தி | 6 | 15 |
| தமிழ்நம்பி | — | — | 15 |
| கோபிநாத் வியாதித் மொழிபெயர்ப்பு: கோமதி | எம்.கே. மூர்த்தி | 5 | 30 |
| பொன் பரமகுரு | — | — | 30 |
| வில்லிவாக்கம்சாக்ரட்டீஸ் | — | — | 30 |
| எஸ் டி,எஸ். திருமலை | புனிதவதி இளங்கோவன் | 5 | 15 |
| மூலம் : லெஷ்மி தழுவல்: நித்திய மூர்த்தி | எம்.கே. மூர்த்தி | 15 | 60 |
| ஏகவன் | — | 5 | 15 |
| பட்டுக்கோட்டை குமாரவேல் | எம்.கே. மூர்த்தி | 5 | — |
| பாலு | எம்.கே. மூர்த்தி | 10 | 30 |
| பி. வெங்கடாஜலம் | கோபால் | 6 | 15 |
| எஸ். ஜெகதீசன் | குமாரவேல் | 4 | 15 |
| ஜே.எம். சாலி | பொன் துரைசாமி | 6 | 30 |
| இ. கோவிந்தராஜுலு | — | 15 | 60 |
| கே. சுவாமிநாதம் | எம்.கே. மூர்த்தி | 12 | 30 |
| ஆர். நாகராஜன் | சியாம் சுந்தர் | 7 | 60 |
| ஏ.சி. சீனிவாசன் | — | 4 | 15 |
| மூலம் : சுனில்சங்கோபாத்யாய. ப்ரசூன்மித்ரா சுஷில் குப்தா தமிழில் : என். கோமதி | எம்.கே. மூர்த்தி | 15 | 60 |

| வரிசை எண் | ஒலிபரப்பு நாள் | நாடகத்தின் பெயர் |
|---|---|---|
| 128 | 28-7-83 | பாசப்பிரிவினை |
| 129 | 29-7-83 | கவசம் |
| 130 | 30-7-83 | இரவல் நகை |
| 131 | 1-8-83 | ஞானக்கண்* |
| 132 | 3-8-83 | தெளிந்த நீரோடை |
| 133 | 4-8-83 | மோட்டார் கார்களில் முப்பது நிமிடங்கள் |
| 134 | 5-8-83 | ஒரு ரோஜாவின் புன்னகை |
| 135 | 6-8-83 | இந்தா! எதிர்காலம் |
| 136 | 8-8.83 | வானவில் |
| 137 | 11-8-83 | தேவை ஒரு சேவை |
| 138 | 12-8-83 | நிழலில் நிகழும் நிஜங்கள் |
| 139 | 13-8-83 | கமிஷன் கல்யாணம் |
| 140 | 14-8-83 | இரும்புக்கும் இதயம் உண்டு |
| 141 | 17-8-83 | சுமங்கலி |
| 142 | 18-8-83 | கல்லும் கரையாதோ?* |
| 143 | 18-8-83 | மாறவேண்டாமா |
| 144 | 20-8-83 | என் வழி உன் வழி |
| 145 | 22-8-83 | கற்பனைக் கோலங்கள் |
| 146 | 25-8-83 | ஊருக்கு நல்லது |
| 147 | 27-8-83 | அவள் போட்ட கணக்கு |
| 148 | 28-8-83 | ஊர் உறங்கும் வேளை |
| 149 | 29-8-83 | நாமொன்று நினைக்க* |
| 150 | 30-8-83 | குருஷேத்ரம் பிறந்த நாடு |
| 151 | 1-9-83 | டாக்டரைத் தேடி |
| 152 | 2-9-83 | முடிந்துபோன முற்றுகை |
| 153 | 3-9-83 | தலைக்கு விலை* |
| 154 | 5-9-83 | அதிகமா, ஐயோ வேண்டாம்* |
| 155 | 7-9-83 | ராணி நாயகிதேவி |
| 156 | 8-9-83 | நறுமணம் |
| 157 | 9-9-83 | நிலவுக்கும் களங்கம் உண்டு |

| நாடக ஆசிரியர் | நாடக அமைப்பு | பாத்திர எண்ணிக்கை | காலம் நிமிடம் |
| --- | --- | --- | --- |
| முத்துக் காளத்தி | — | — | 15 |
| பூவை ராஜசேகரன் | எம்.கே. மூர்த்தி | 6 | 30 |
| ஆர். பொன்னம்மாள் | சபரிநாதன் | 3 | 15 |
| ரா. தயாநிதி | — | — | 15 |
| லியோ பிரபு | எம்.கே. மூர்த்தி | 8 | 30 |
| — | — | — | — |
| எஸ். குலசேகரன் | எம்.கே. மூர்த்தி | 12 | 30 |
| ரவிவர்மா | எம்.கே. மூர்த்தி | 8 | 15 |
| வி. விஜயன் | — | 6 | 15 |
| அ. தியாகராஜன் | — | — | — |
| ஆர்.எஸ். மணி | எம்.கே. மூர்த்தி | 7 | 30 |
| முரளிகிருஷ்ணன் | — | 5 | 15 |
| புனிதன் | எம்,கே. மூர்த்தி | 11 | 60 |
| நாவல் மூலம் : பி.சி. கணேசன் வானொலி வடிவம் : ஜி. மாணிக்கவாசகம் | எம்.கே. மூர்த்தி | 9 | 30 |
| உமாசந்திரன் | — | — | — |
| தூரன் | — | — | — |
| எஸ். கஜேந்திரகுமார் | மாரிமுத்து | 7 | 15 |
| கே. ஜெயலஷ்மி | புனிதவதி இளங்கோவன் | 9 | 15 |
| எஸ்.பி. ராதாகிருஷ்ணன் | — | — | — |
| ஸ்டீபன் ராஜா | சபரிநாதன் | 5 | — |
| வி. பாண்டியரசன் | எம்,கே, மூர்த்தி | 8 | 60 |
| கோவை ஜெஸ்டர் | — | 5 | 15 |
| நாகர்கோயில் கிருஷ்ணன் | — | 11 | 30 |
| கும்பகோணம் சுவாமிநாதன் | — | — | 15 |
| சுடர்வண்ணன் | எம்.கே. மூர்த்தி | 12 | 30 |
| — | — | — | 15 |
| சங்கரபிரியா | — | — | 15 |
| பட்டுக்கோட்டை குமாரவேல் | எம்.கே. மூர்த்தி | 13 | 30 |
| எஸ். கருணானந்தம் | எம்.கே. மூர்த்தி | — | — |
| எஸ்,வி. ரமணி | எம். கே. மூர்த்தி | 10 | 30 |

| வரிசை எண் | ஒலிபரப்பு நாள் | நாடகத்தின் பெயர் |
|---|---|---|
| 158 | 10-9-83 | கானல் பார்வைகள் |
| 159 | 11-9-82 | விதியின் தர்மங்கள் |
| 160 | 12-9-83 | உறவுக்குப் பின்னால் |
| 161 | 15-9-83 | ஒரு ஆன்மா பூரிக்கிறது |
| 162 | 16-9-83 | தொம்மி நீ எங்கே? |
| 163 | 19-9-83 | ராஜபுத்தரைக் காத்த ரட்சை<br>1. மொகலாய மன்னன் ஹுமாயூன் வரலாற்றிலிருந்து சில காட்சிகள்<br>2. ராஜபுத்திர மன்னன் ராணா சங்கரம்சிங் வரலாற்றிலிருந்து சில காட்சிகள் |
| 164 | 21-9-83 | சாகாத வாழ்வுக்குச் சஞ்சீவி |
| 165 | 22-9-83 | அபிஷகாப்த் காந்தா (தேசிய நிகழ்ச்சி – நாடகம்) |
| 166 | 23-9-84 | சுவப்ன வாசவதத்தர் 'கனவா நனவா?' |
| 167 | 24-9-83 | குரு சந்திரயோகம் |
| 168 | 30-9-83 | பிடிவாதமே உன் பெயர் |
| 169 | 1-10-83 | வெளிச்சத்தைத் தேடி தொடர்நாடகம் பகுதி-2 |
| 170 | 3-10-83 | தொட்டால் சுடாது |
| 171 | 5-10-83 | கங்கை வந்தாள் |
| 172 | 6-10-83 | கரங்கள் இரண்டு கண்கள் ஆயிரம் |
| 173 | 7-10-83 | உழைப்போம் உயர்வோம் |
| 174 | 7-10-83 | சீதை தேடிய ராமன்* |
| 175 | 8-10-83 | வெளிச்சத்தைத் தேடி தொடர் நாடகம் பகுதி-2 |
| 176 | 9-10-83 | கனவுகள் கற்பனைகள் |
| 177 | 10-10-83 | புதரும் பூங்காவும் |

| நாடக ஆசிரியர் | நாடக அமைப்பு | பாத்திர எண்ணிக்கை | காலம் நிமிடம் |
| --- | --- | --- | --- |
| ஏர்வாடி எஸ். ராதா கிருஷ்ணன் | எம். கே. மூர்த்தி | 5 | 15 |
| டி.என். சுகிசுப்ரமணியன் | எம்.கே. மூர்த்தி | 11 | 60 |
| சரோஜா மூர்த்தி | — | 8 | — |
| — | — | — | — |
| குரு. சுப்ரமணியன் | புனிதவதி இளங்கோவன் | 4 | 30 |
| பொன் பரமகுரு | கோபால் | 11 | 15 |
| கோமதி சுப்ரமணியன் | — | 8 | 30 |
| மூலம் : டாக்டர் சங்கர் சேஷ் | எம்.கே. மூர்த்தி | 8 | 60 |
| தமிழில் : காந்தாரி | | | |
| மாகவிபாசர் | எம்,கே, மூர்த்தி | 8 | 30 |
| நாடக வடிவம் : ஆர். தியாகராஜன் | | | |
| ஏ.எம். தாஸ் | எம்.கே, மூர்த்தி | 5 | 15 |
| ரவிந்தர் பட் | | | |
| உஷா பிரபா பாண்டே | — | 4 | 30 |
| எம்.எஸ், கோபால் | எம்.கே. மூர்த்தி | 10 | 15 |
| பாலூர் பல்லவரசன் | புனிதவதி இளங்கோவன் | 6 | 15 |
| பானுமதி ராஜகோபாலன் | எம்.கே. மூர்த்தி | 11 | 30 |
| எஸ். ஜெகதீசன் | — | — | — |
| இனியவன் | எம்,கே. மூர்த்தி | — | 30 |
| பி.எஸ். ரங்காச்சார் | — | — | — |
| எம்.எஸ். கோபால் | எம்.கே. மூர்த்தி | 10 | 60 |
| இ. கோவிந்தராஜலு | எம்.கே, மூர்த்தி | 10 | 60 |
| மண்ணடி கோபி | எம்.கே. மூர்த்தி | 5 | 15 |

| வரிசை எண் | ஒலிபரப்பு நாள் | நாடகத்தின் பெயர் |
|---|---|---|
| 178 | 14-10-83 | எல்லார்க்கும் பெய்யும் மழை |
| 179 | 15-10-83 | வெளிச்சத்தைத்தேடி தொடர்நாடகம் பகுதி-3 |
| 180 | 17-10-83 | வாழையடி வாழை |
| 181 | 19-10-83 | வாழ்வெனும் விளையாட்டு |
| 182 | 20-10-84 | கலக்கல் |
| 183 | 22-10-83 | வெளிச்சத்தைத் தேடி தொடர் நாடகம் பகுதி-4 |
| 184 | 22-10-83 | கொன்றை மலர்க் குமரி |
| 185 | 22-10-83 | சிரிக்காமல் விடமாட்டேன் |
| 186 | 24-10-83 | உறவுகள் பிரிவதில்லை |
| 187 | 27-10-83 | முடிந்துபோன முற்றுகை |
| 188 | 28-10-83 | வாழ்வின் மடியில் |
| 189 | 29-10-83 | வெளிச்சத்தைத் தேடி தொடர் நாடகம் பகுதி-5 |
| 190 | 31-10-83 | ஸ்தல விருட்சம் |
| 191 | 2-11-83 | வேருக்கு நீர் வேண்டும் |
| 192 | 3-11-83 | சாகாத வாழ்வுக்கு சஞ்சீவி |
| 193 | 4-11-83 | இட்ட பணி |
| 194 | 4-11-83 | தித்திக்கும் தீபாவளி |
| 195 | 4-11-83 | பாண்டியன் மகுடம் |
| 196 | 5-11-83 | வெளிச்சத்தைத் தேடி தொடர் நாடகம் பகுதி-6 |
| 197 | 7-11-83 | அதிர்ஷ்ட தேவதை வந்தாள் |
| 198 | 10-11-83 | பெண்ணுக்கு அழகு |
| 199 | 11-11-83 | தவிப்பு |
| 200 | 12-11-83 | வெளிச்சத்தைத் தேடி தொடர் நாடகம் பகுதி-7 |
| 201 | 13-11-83 | விடுதலை வேள்விகள் |

| நாடக ஆசிரியர் | நாடக அமைப்பு | பாத்திர எண்ணிக்கை | காலம் நிமிடம் |
|---|---|---|---|
| பி.எம். இளங்குமரன் | உதயராஜா | 9 | 30 |
| எம்.எஸ். கோபால் | எம்.கே. மூர்த்தி | 10 | 15 |
| பொள்ளாச்சி சுவாமிநாதன் | எம்.கே. மூர்த்தி | 6 | 15 |
| கும்பகோணம் சுவாமிநாதன் | எம்.கே. மூர்த்தி | 8 | 30 |
| ஆற்றலரசு | — | 5 | — |
| எம்.எஸ். கோபால் | எம்.கே. மூர்த்தி | 11 | — |
| நாவல் : விக்ரமன் நாடக வடிவம் : டி.எஸ். கலியபெருமாள் | — | — | — |
| ஏ.எம். சாமி | கூத்தபிரான் | 5 | 60 |
| கே.பி. அடைக்கலம் | சபரிநாதன் | 4 | 15 |
| சுடர்வண்ணன் | — | — | — |
| — | எம்.கே. மூர்த்தி | 5 | 30 |
| எம்.எஸ். கோபால் | எம்.கே மூர்த்தி | 10 | 15 |
| சுப்பு ஆறுமுகம் | புனிதவதி இளங்கோவன் | 6 | 15 |
| மல்லிகைக் கண்ணன் | கூத்தபிரான் | 6 | 30 |
| கோமதி சுப்ரமணியன் | — | — | — |
| நா. கிருஷ்ணமூர்த்தி | — | 6 | 30 |
| சுகிசுப்பிரமணியம் | — | — | — |
| மூலக்கதை : விக்ரமன் நாடகமாக்கம் : டி.எஸ். கலியபெருமாள் | எம்.கே. மூர்த்தி | 9 | — |
| எம்.எஸ். கோபால் | எம்.கே. மூர்த்தி | 9 | 15 |
| திருச்செந்தூரான் | ராமநாதன் | 5 | 15 |
| பி.எம். இளங்குமரன் | — | — | — |
| கோமதி சுவாமிநாதன் | எம்.கே. மூர்த்தி | 5 | 30 |
| எம்.எஸ். கோபால் | எம்.கே. மூர்த்தி | 10 | 15 |
| எஸ். ஜெகதீசன் | எம்.கே. மூர்த்தி | 10 | 60 |

| வரிசை எண் | ஒலிபரப்பு நாள் | நாடகத்தின் பெயர் |
|---|---|---|
| 202 | 14-11-83 | வாழ்த்துக்கள் |
| 203 | 16-11-83 | அக்கினிப் பிரவேசம்* |
| 204 | 17-11-83 | சாயாவனம்* |
| 205 | 17-11-83 | எங்களைப் பிரிக்க முடியுமா? |
| 206 | 17-11.83 | ஊமை நெஞ்சம் |
| 207 | 18-11-83 | ,, |
| 208 | 19-11-83 | வெளிச்சத்தைத் தேடி தொடர் நாடகம் பகுதி-8 |
| 209 | 20-11-83 | உணர்ச்சி பாசறைக்குள்ளே |
| 210 | 21-11-83 | பவழமலை ரகசியம் |
| 211 | 24-11-83 | இட்ட பணி |
| 212 | 25-11-83 | திமிர்* |
| 213 | 25-11-83 | அபூர்வ ராமாயணம் |
| 214 | 26-14-83 | வெளிச்சத்தைத் தேடி தொடர் நாடகம் பகுதி-9 |
| 215 | 28-11-83 | தலைப்பு விநோதம் |
| 216 | 16-11-83 | துளி விஷம்* |
| 217 | 30-11-83 | திருத்தமுடியாத பிறவிகள் |
| 218 | 1-12-83 | இன்னொரு பைத்தியம் |
| 219 | 3-12-84 | வெளிச்சத்தைத் தேடி தொடர் நாடகம் பகுதி-10 |
| 220 | 5-12-83 | கோயில் பொதுவானது |

| நாடக ஆசிரியர் | நாடக அமைப்பு | பாத்திர எண்ணிக்கை | காலம் நிமிடம் |
|---|---|---|---|
| மேலப்பட்டு | எம்.கே. மூர்த்தி | 4 | 15 |
| கே. அமீர்ஜான் | | | |
| எஸ். பாலகிருஷ்ணன் | — | — | — |
| எஸ், கந்தசாமி | — | — | — |
| பட்டுக்கோட்டை குமாரவேல் | எம்.கே. மூர்த்தி | 9 | 45 |
| நாவல்: சொர்ணம் நாடகவடிவம் : பட்டுக்கோட்டை குமாரவேல் | எம்.கே. மூர்த்தி | — | — |
| ,, | ,, | ,, | ,, |
| எம்.எஸ். கோபால் | எம்.கே. மூர்த்தி | 10 | 15 |
| மூலம்: கஸ்தூரிரங்கன் நாடக வடிவம் : ஏ,வி.எம். கணேஷ் | புனிதவதி இளங்கோவன் | — | 60 |
| எல். அனந்த கிருஷ்ணன் | டி.கே. சங்கரன் | 9 | 30 |
| நாடக வடிவம் : ந. கிருஷ்ணமூர்த்தி இந்திமூலம் : இட்டாநகர் அரத்திதாஸ் பைரகி | — | — | — |
| மூலம் : சுபாஷினி நாடக வடிவம் : கி. மாணிக்கவாசகம் | — | — | 30 |
| கன்னடம் : எஸ்.ஜி. கிருஷ்ணமூர்த்தி தமிழ் : என் கோமதி | — | 9 | 30 |
| எம். எஸ், கோபால் | எம்.கே. மூர்த்தி | 9 | 15 |
| ஆற்றலரசு | பட்டுக்கோட்டை குமாரவேல் | 5 | 15 |
| பொன் பரமகுரு | டி. கணேசன் | 11 | 15 |
| மு. தங்கசாமி | — | 6 | 30 |
| ஏ.எம். சாமி | எம்.கே. மூர்த்தி | — | — |
| எம்.எஸ். கோபால் | எம்,கே. மூர்த்தி | 8 | 15 |
| தமிழ்நம்பி | டி. மோகன் | 6 | 15 |

| வரிசை எண் | ஒலிபரப்பு நாள் | நாடகத்தின் பெயர் |
|---|---|---|
| 221 | 7-12-83 | வைரமோதிரம் |
| 222 | 8-12-83 | முற்பகல் செய்யின்* |
| 223 | 9-12-83 | அவள் கொண்ட முடிவு |
| 224 | 10-12-83 | வெளிச்சத்தைத் தேடி தொடர் நாடகம் பகுதி-11 |
| 225 | 11-12-83 | வானம் தொட்டுவிடும் தூரம்தான் |
| 226 | 12-12-83 | தாலிக்கு வேலி |
| 227 | 16-12-83 | போராட்டம் |
| 228 | 16-12-83 | வெளிச்சத்தைத் தேடி தொடர் நாடகம் பகுதி-12 |
| 229 | 17-12-83 | லாக்கரில் வைத்த பணம் |
| 280 | 24-12-83 | விலங்கு |
| 231 | 25-12-83 | நம்பிக்கை நட்சத்திரம் |
| 232 | 29-12-83 | பாசக்கயிறு |
| 233 | 30-12-83 | வேல்விழி வேங்கை |
| 234 | 31-12-83 | மாமருந்து |

| நாடக ஆசிரியர் | நாடக அமைப்பு | பாத்திர எண்ணிக்கை | காலம் நிமிடம் |
|---|---|---|---|
| மாயாவி | டி.வி. ராமானுஜம் | 5 | 30 |
| கோமதி சுவாமிநாதன் | — | — | — |
| வி.டி. சச்சிதானந்தன் | எம்.கே. மூர்த்தி | 7 | 30 |
| எம்.எஸ். கோபால் | ஜே. ரவீந்திரன் | 8 | 15 |
| * | | | |
| நாவல்: வைரமுத்து | சிவசங்கரன் | 11 | 60 |
| நாடக வடிவம்: | | | |
| ஜி. மாணிக்கவாசகம் | | | |
| ரா. தயாநிதி | — | 6 | 15 |
| சுடர்வண்ணன் | — | — | — |
| எம்.எஸ். கோபால் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 10 | 30 |
| சூளை | ஜே. ரவீந்திரன் | 4 | 15 |
| பி.ஆர். மகேந்திரநாத் | | | |
| லீலாவினோதன் | எம்.கே. மூர்த்தி | 7 | 15 |
| பி.ஏ. தாஸ் | பொன். துரைசாமி | 7 | 60 |
| எம்.எஸ். கோபால் | — | — | — |
| எஸ்.வி. ரமணி | — | — | — |
| பொன். பரமகுரு | — | 12 | 15 |

குறிப்பு : இப்பட்டியல் வானொலி நிலையத்தில் கிடைத்த பதிவுகளின் அடிப்படையில் தயாரிக்கப்பட்டது. எவ்விதத்திலும் முழுமை நிறைந்தது அன்று.

* மறு ஒலிபரப்பு

# தொலைக்காட்சி நாடகம்

வெ. நல்லதம்பி

தொலைக்காட்சி நாடகங்கள் பொழுதுபோக்கு அம்சத்தைக் கொண்டனவாயினும் அவற்றில் ஏதேனும் நீதி சொல்லப்படல் எதிர் பார்க்கப்படுகிறது. முன் ஆண்டுகளைப் போன்றே இவ்வாண்டும், சமுதாய நாடகங்களோடு வரலாற்று, இலக்கிய, நகைச்சுவை நாடகங் கள் இடம் பெற்றன. நிலையத் தயாரிப்பாளர் பெரும்பான்மை நாடகங்களை உருவாக்கினர், பழம்பெரும் நாடக ஆசிரியரான சங்கர தா ஸ் சுவாமிகள், பம்மல் சம்மந்த முதலியார் ஆகியோர் படைப்புடன் தற்கால எழுத்தாளர், பேராசிரியர் நாடகங்களும் ஒளிப்பரப்பாயின. ஆங்கிலத் தலைப்பிட்ட தமிழ் நாடகம் இந்தஆண்டின் புதிய போக்கு.

பொதுமக்கள் தொலைக்காட்சியைப் பொழுதுபோக்குச் சாதன மாகவே பெரிதும் கருதுகின்றனர். கல்விக்கென நிகழ்ச்சிகளை அமைத்தாலும் அப்படிப்பட்ட நிகழ்ச்சிகளும் பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளைப் போல் சுவையானதாக இருக்கவேண்டும் என்றே பார்வையாளர்கள் விரும்புகின்றனர். இந்தப் போக்கு, பொழுது போக்குத்துறையெனவே கருதப்படும் நாடகத் துறைக்குப் பெரிதும் பொருந்தும்.

தொலைக்காட்சி நாடகம் பொழுதுபோக்கு அம்சத்தைக் கொண்டதாயினும் நம்நாட்டைப் பொறுத்தவரை அதில் ஏதேனும் ஒரு நீதி சொல்லப்படல் வேண்டும் என்று எதிர்பார்க்கின்றனர்.

கடந்த ஆண்டுகளைப் போலவே இந்த ஆண்டிலும் சமுதாய நாடகங்களோடு, வரலாற்று நாடகங்கள், இலக்கிய நாடகங்கள், நகைச்சுவை நாடகங்கள் முதலியனவும் இடம் பெற்றுள்ளன.

நாடக ஆசிரியர்கள் பெரும்பாலும் தொழில் முறை ஆசிரியர் களாகவும் மேலும் சிலர் பயில்முறை ஆசிரியர்களாகவும்

இருந்துள்ளனர். ஓரோவழி பழம் பெரும் நாடக ஆசிரியரான பம்மல் சம்மந்த முதலியார், தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள் ஆகியோரின் படைப்பும் இந்த ஆண்டு தொலைக்காட்சி நாடகத்தில் இடம் பெற்றுள்ளன.

இவ்வகையில் நோக்கினால் கடந்த ஆண்டுகளை விட இந்த ஆண்டு தமிழ்நாடகத் துறைக்குத் தங்களை அர்ப்பணித்துக் கொண்ட கலைஞர்களின் படைப்புகள் தொலைக்காட்சியில் இடம் பெற்று, தொலைக்காட்சியின் அன்பளிப்பாய் அவை விளங்கி உள்ளன.

நாடகங்களை மக்கள் பெரிதும் விரும்புகிறார்கள் என்பதால் ஒவ்வொரு செவ்வாய்க்கிழமையும் நாடகங்கள் இடம் பெற்று வந்துள்ளன. ஆண்டுத்தொடக்கத்தில் ஒரே ஒரு செவ்வாய்க் கிழமை மட்டும் பொதுத் தேர்தல் முடிவுகளை இடைவிடாமல் மக்களுக்கு அறிவிக்க வேண்டிவந்ததன் காரணமாக நாடகம் இடம் பெறவில்லை.

நாடகங்கள் பெரும்பாலும் முக்கால் மணி நேரத்திற் கென்றே தயாரிக்கப்பட்டு ஒளிபரப்பாகி உள்ளன. ஒரு சில நாடகங்கள் இந்த நேர எல்லையை விஞ்சியதால் இரண்டு பகுதி களாக்கப்பட்டு ஒளிபரப்பாயின. ஒரே ஒரு நாடகத்தின் முதல் பகுதி, நிகழ்ச்சி அமைப்பில் ஏற்பட்ட சிக்கலால் நாடக தினமான செவ்வாய் இடம் பெறாமல் வேறொரு நாளில் ஒளிபரப்பாகி, அதன் இரண்டாம் பகுதி (இறுதிப் பகுதி) மட்டும் செவ்வாய்க் கிழமையில் இடம் பெற்றது.

இந்த ஆண்டில் நிலைய நாடகத் தயாரிப்பாளர்கள் ஒன்பதின்மர் தங்கள் கை வண்ணத்தைக் காட்டினர். அதிக எண்ணிக்கையில் நாடகங்களைப் படைத்த கோவிந்த ராமானுஜம் என்ற தஞ்சைவாணன் பதின்மூன்று நாடகங்களைத் தயாரித்துள்ளார். இவற்றில் பத்து சமுதாய நாடகங்கள்; இரண்டு வரலாற்று நாடகங்கள்; ஒரு தெருக்கூத்து நாடகம் ஆகியன அடங்கும். கடந்த ஆண்டுகளில் இவரது தயாரிப்பில் உருவான, **அஜாத சத்ரு** என்ற வரலாற்று நாடகமும், **சந்திர ஹரி** என்ற பழம்பெருமை மிக்க தெருக்கூத்து நாடகமும் இந்த ஆண்டு மறு ஒளிபரப்பாயின. இவர் தயாரித்த **முடிச்சுக்கு மேல் முடிச்சு** எனும் நாடகம், இரண்டு பகுதிகளாக இடம் பெற்றது. பம்மல் சம்மந்தனார் அவர்களின் **சந்திர ஹரி** நாடகத்தை இவர்

கடந்த ஆண்டு தயாரித்திருந்தார். இந்த ஆண்டு அது மீண்டும் ஒளிபரப்பாயிற்று.

தற்போதைய சமுதாயத்தைப் படம் பிடிக்கும் முறையில் இந்த நாடகங்களை ஆக்கியுள்ளனர். திருமணக் கொள்கை, பெண்களால் முடியும், மனமும் மணமும், சிறிய தியாகம், நல்லவனுக்கு நல்லவன், எமகண்டம் முதலியவற்றைச் சான்றாகக் கொள்ளலாம்.

வே. சேனாபதி இந்த ஆண்டில் ஆறு சமூக நாடகங்களைத் தயாரித்துள்ளார். முந்தைய ஆண்டில் இவரால் தயாரிக்கப் பட்ட **ஊமைக் குயில்கள், மத்தளம்** ஆகிய நாடகங்கள் இந்த ஆண்டில் மீண்டும் இடம் பெற்றன. இவரது தயாரிப்புகளில் இடம் பெற்ற நாடகங்கள், ஆண், பெண் இரு பாலரின் பிரச்சனைகள் குறித்தும், மனித மனங்களின் மாறுபாடு குறித்தும் ஆராய்கின்றன.

வேறு ஆறு சமூக நாடகங்களைத் தயாரித்தவர் யு.எம். கண்ணன். நலம் நலமறிய அவா, நிழலுக்காக, கடிதம் ஜாக்கிரதை, வெயிட்டிங் லிஸ்ட், நியாயங்கள் என்பன அவை. இந்த நாடகங்களை எழுதி நடித்தவர்கள் பெரும்பாலும் அலுவகப்பணியில் இருந்து கொண்டு நாடகத்துறைக்குத் தொண்டாற்றுபவர்கள். தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளின் பவளக்கொடி நாடகத்தையும் இவர் தயாரித்துள்ளார்.

இந்த ஆண்டின் முன் பாதிவரை, நாடகத்துறையின் ஒருங்கிணைப்பாளராக இருந்த வெ. நல்லதம்பி ஆறு நாடகங் களைத் தயாரித்துள்ளார். அவையாவன : தோப்பில் தனிமரம், நட்பிற்கு இருவர், மனிதர்கள் மாறலாம், பரஞ்சோதி, திரும்பப் பெற்ற திருமேனி, மனுச புத்திரன்.

நட்பிற்கு இருவர் என்ற நாடகம் சங்க இலக்கியப் பாடல் களை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டது. பரஞ்சோதி, திரும்பப் பெற்ற திருமேனி என்ற இரு நாடகங் களும் வரலாற்று நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு பின்னப்பட்டவை. தமிழ்த்தாத்தா உ.வே.சா. அவர்களின் எழுத்தினை அடிப்படையாக கொண்டது **திரும்பப் பெற்ற திருமேனி**யாகும்.

மூன்று நாடகங்களை இந்த ஆண்டில் தயாரித்து வழங்கி யிருப்பவர் கே.எஸ். நாராயணசாமி என்ற கோபாலி. இவரது

நாடகங்கள் அனைத்தும் சமூக நாடகங்கள் ஆகும். நாதாபிஷேகம் என்ற நாடகத்தை நாதஸ்வரக் கலையை அடிப்படையாகக் கொண்டு அமைத்தார். கோயில்மாடு, பத்து வருஷப் பைத்தியம் என்ற இரு நாடகங்களும் ஒரு குறிப்பிட்ட குணச் சித்திரத்தை எடுத்துக் காட்டுவதாக அமைக்கப்பட்டன. இவையன்றி இவர் முந்தைய ஆண்டுகளில் தயாரித்த இரு நாடகங்கள் இந்த ஆண்டில் மறு ஒளிபரப்பாயின.

எம். எஸ். பெருமாள் இந்த ஆண்டில் இரண்டு நாடகங்களையும், ஜி. பாண்டுரங்கராவ், எஸ். சம்பத்குமார், சி. வி. ஆனந்த பத்மநாபன் ஆகியோர் ஆளுக்கொரு நாடகமும் தயாரித்துள்ளனர். பின்னர் இருவரது படைப்புக்கள் இரு பாகங்களாக இடம் பெற்றுள்ளன. இவர்களது நாடகங்கள் அனைத்துமே சமுதாய நாடகங்கள். எம். எஸ். பெருமாள், பொய் முகங்கள் என்ற நாடகத்தைத் தாமே எழுதித் தயாரித்துள்ளார். காந்தி நூற்றாண்டினை ஒட்டி மறு ஒளிபரப்பான நாடகம் புதிய நந்தன்; சாதி வித்தியாசம் பாராட்டக்கூடாது என்ற கருத்தைச் சொல்லும் இந்த நாடகத்தின் கதை புதுமைப் பித்தனுடையது. தாமரை மணாளன் வசனம் எழுதியிருந்தார்.

தமிழ் நாடகத்திற்கு ஆங்கிலத் தலைப்பிடும் புதிய போக்கு இந்த ஆண்டில் தலைகாட்டியது. ஒப்பன் சேலஞ்ச், வெயிட்டிங் லிஸ்ட் என்பன இதற்குச் சான்று. தமிழ்ப் பற்றாளர் இதை எந்த அளவிற்கு வரவேற்பர் என்பது ஐயத்துக்குரியது. தலைப்பினைப் போலவே உரையாடல்களிலும் ஆங்கிலச் சொற்களைக் கலக்கும் போக்கும் ஓரளவு இருந்ததாகத் தமிழறிஞர் குறை கூறியிருக்கின்றனர்.

நாடகத் தயாரிப்பாளர்களில் பெரும்பாலானோர்—ஏன்—அனைவருமே தமிழ் இலக்கியம் கற்றவர். எனவே பிறமொழிக் கலப்பு தமிழ் நாடகத்துறையில் தொடராது என நம்புவோமாக!

தொலைக்காட்சியில் தமிழ் நாடகம் வளர்ந்து வரும் ஒரு துறையாகும்; மக்கள் பெரிதும் விரும்பும் ஒரு துறையுமாகும். தமிழ் நாடகங்களைப் பார்க்கும் நேயர் அவற்றைத் திரைப்படங்களோடு ஒப்பிட்டுப் பார்த்துத் திறனாய்வு செய்கின்றனர். திரைப்படம் தயாரிப்பதற்கு ஆகும் காலமும், உத்திகளும் தொலைக்காட்சி நாடகத் தயாரிப்புக்கானவற்றினின்றும் வேறுபட்டவை என்பதை அவர்கள் உணர வேண்டும். அந்த உண்மை பரவலாக அறியப்படும் போது தொலைக்காட்சி நாடகங்களின் தரமும், திறனாய்வும் உயரும் என்பதில் ஐயமில்லை.

# 1983ஆம் ஆண்டு இடம் பெற்ற தொலைக்காட்சி நாடகங்கள்

| வரிசை எண் | ஒளிபரப்பு நாள் | நாடகத்தலைப்பும் ஆசிரியரும் | தயாரிப்பாளர் |
|---|---|---|---|
| 1. | 4-1-83 | தேர்தல் முடிவுகள் அறிவிப்பால் நாடகம் இடம்பெறவில்லை | — |
| 2. | 11-1-83 | திருமணக் கொள்கை<br>எஸ். கல்பனா | கோவிந்தராமானுஜம் ''தஞ்சைவாணன்'' |
| 3. | 18-1-83 | புதிய நந்தன்* | எம். எஸ். பெருமாள் |
| 4. | 25-1-83 | தோப்பில் தனி மரம்<br>ரமணி | வெ. நல்லதம்பி |
| 5. | 1-2-83 | சத்திர ஹரி<br>பம்மல் சம்மந்தமுதலியார் | தஞ்சை வாணன் |
| 6. | 8-2-83 | நட்பிற்கு இருவர்<br>க. அண்ணாமலை | வெ. நல்லதம்பி |
| 7. | 15-2-83 | ஓடும் ரயிலில் ஒருஇரவு*<br>பி. சங்கர நாராயணன் | ஜி. பாண்டுரங்க ராவ் |
| 8. | 22-2-83 | பொய் முகங்கள்<br>எம். எஸ். பெருமாள் | எம். எஸ். பெருமாள் |
| 9. | 1-3-83 | பெண்களால் முடியும்<br>ரேணுதேவி | தஞ்சை வாணன் |
| 10. | 8-3-83 | மனிதர்கள் மாறலாம்<br>ஈ. ஆர். ஈஸ்வரன் | வெ. நல்லதம்பி |
| 11. | 15-3-83 | ஒப்டங்சேலஞ்ச்(பகுதி-2)<br>காரைக்குடி சுவர்ணவேலு | ஜி. பாண்டுரங்கராவ் |
| 12. | 22-3-83 | ஒரு ஊன்றுகோல் ஊனமாகிறது<br>ஆர். பத்மநாபன் | எம். எஸ். பெருமாள் |
| 13. | 29-3-83 | மார்கழி மழை<br>பி. எஸ். பாலகிருஷ்ணன் | தஞ்சைவாணன் |
| 14. | 5-4-83 | வந்தேன் கண்டேன் சென்றேன்*<br>பி எம். புருஷோத்தமன் (அகஸ்டோ) | கே. எஸ். நாராயண சாமி ''கோபாலி'' |

| | | | |
|---|---|---|---|
| 15. | 12-4-83 | பத்து வருஷ வைத்தியம்<br>கே. விஸ்வநாதன் | கோபாலி |
| 16. | 19-4-83 | கோயில் மாடு<br>ஆர். கிருஷ்ணமூர்த்தி | கோபாலி |
| 17. | 26-4-83 | பரஞ்சோதி<br>ஞா. மாணிக்கவாசகன் | வெ. நல்லதம்பி |
| 18. | 3-5-83 | கொந்தளிப்பு*<br>என். மாத்ரு பூதம் | ஜி. பாண்டுரங்க ராவ் |
| 19. | 10-5-83 | மனமும் மணமும்<br>எஸ். கல்பனா | தஞ்சை வாணன் |
| 20. | 17-5-83 | நலம் நலமறிய அவா<br>லியோ பிரபு | யு. எம். கண்ணன் |
| 21. | 24-5-83 | பவளக்கொடி<br>தவத்திரு. சங்கரதாஸ் சுவாமிகள் | யு. எம். கண்ணன் |
| 22. | 31-5-83 | ஊமைக் குயில்கள்*<br>ஜபராஜ் | வே. சேனாபதி |
| 23. | 7-6-83 | ஒரு நாள் கூத்து<br>ஆர். எஸ். மணி | தஞ்சை வாணன் |
| 24. | 14-6-83 | ஒரு தேனிலவு (பகுதி-1)<br>கிரேசி மோகன் | சம்பத்குமார் |
| 25. | 21-6-83 | ஒரு தேனிலவு (பகுதி-2) | சம்பத்குமார் |
| 26. | 28-6-83 | சகோதர பந்தம்<br>பொன் பரமகுரு | தஞ்சைவாணன் |
| 27. | 5-7-83 | கண்ணிருந்தும்...<br>சிவந்தி கே. செல்வராஜன் | வே. சேனாதிபதி |
| 28. | 12-7-83 | மத்தளம்*<br>என். மாத்ரு பூதம் | வே. சேனாபதி |
| 29. | 19-7-83 | நிழலுக்காக......<br>கல்கிதாசன் | யு. எம். கண்ணன் |
| 30. | 26-7-83 | கடிதம் ஜாக்கிரதை<br>ஜி. கிருஷ்ணமூர்த்தி | யு. எம். கண்ணன் |
| 31. | 2-8-83 | அஜாத சத்ரு*<br>பொன். பரமகுரு | தஞ்சைவாணன் |
| 32. | 9-8-93 | முடிச்சுக்கு மேல் முடிச்சு,<br>(பகுதி-1) ஆர். எஸ். மணி | தஞ்சைவாணன் |
| 33. | 16-8-83 | முடிச்சுக்கு மேல் முடிச்சு<br>(பகுதி-2) | தஞ்சைவாணன் |

| | | | |
|---|---|---|---|
| 34. | 23-8-83 | மனம் ஒரு ஊஞ்சல்<br>எஸ். ஆர். சந்திரன் | வே. சேனாபதி |
| 35. | 30-8-83 | திரும்பப் பெற்ற திருமேனி<br>இறை குருவனார் | வெ. நல்லதம்பி |
| 36. | 6-9-83 | கல்லுக்குள் தேரை<br>பி. எஸ். பாலகிருஷ்ணன் | தஞ்சைவாணன் |
| 37. | 13-9-83 | என் உயிர் நீதானே<br>ஆர். பத்மநாபன் (செல்வா) | வே. சேனாதிபதி |
| 38. | 20-9-83 | விடுதலை வீரன்<br>வேலுத்தம்பி<br>ஏ. என். பெருமாள் | தஞ்சைவாணன் |
| 39. | 27-9-83 | பொருத்தங்கள் (பகுதி-1)<br>எஸ். வெங்கட் | அனந்த பத்மநாபன் |
| 40. | 4-10-83 | பொருத்தங்கள் (பகுதி-2) | அனந்த பத்மநாபன் |
| 41. | 11-10-83 | மனுஷ்ய புத்ரன்<br>ஜ. ஜோசப் ஆனந்தன் | வெ. நல்லதம்பி |
| 42. | 18-10-83 | வெயிட்டிங் லிஸ்ட்<br>ஏர்வாடி<br>எஸ். ராதாகிருஷ்ணன் | யு. எம், கண்ணன் |
| 43. | 25-10-83 | முகவரிகள் மாறினால்...<br>எம். மகேஷ்குமார் | வே. சேனாபதி |
| 44. | 1-11-83 | சிறிய தியாகம்<br>எஸ். கல்பனா | தஞ்சைவாணன் |
| 45 | 8-11-83 | நியாயங்கள்<br>முரளி மனோகர் | யு எம். கண்ணன் |
| 46. | 15-11-83 | கனவு நனவாகிறது<br>மகேந்திரவர்மன் | வே. சேனாபதி |
| 47. | 22-11-83 | நாதாபிஷேகம்<br>பூவை ராஜசேகரன் | கோபாலி |
| 48. | 29-11-83 | நல்லவனுக்கு நல்லவன்<br>ஆர். எஸ் மணி | தஞ்சைவாணன் |
| 49. | 6-12-83 | சந்திரஹரி* | தஞ்சைவாணன் |
| 50. | 13-12-83 | விடி விளக்கு<br>சிவந்திகே செல்வராசன் | வே. சேனாபதி |
| 51. | 20-12-83 | அம்மாவுக்குத்<br>தெரியக்கூடாது*<br>எம். எஸ். ராதா | கோபாலி |
| 52. | 27-12-83 | எமகண்டம்<br>ஏ.எஸ். அப்துல் ரஹ்மான்<br>(பட்டூர் பாபு) | தஞ்சைவாணன் |

* மறு ஒளிபரப்பு செய்யப்பட்டவை.

# மேடை நாடகம்

தா. நீலகண்டபிள்ளை

***எண்பத்தெட்டு நாடகங்கள் இவ்வாண்டில் மேடையேறியுள்ளன. நான்கு புதிய புராண நாடகங்கள் ஆக்கம் பெற்றன. வரலாற்று நாடகங்களுள் ஹெரான் இராமசுவாமி இயக்கிய சேதுபந்தனம் குறிப்பிடத் தக்கது. சமுதாய நாடகங்களே மிகுதியாக அமைந்து குடும்பச் சிக்கல், உறவு விரிசல், ஆண் ஆதிக்கம், துன்புறும் பெண்மை, வரதட்சணை, கல்வி, வேலை இன்மை, அரசியல் தாக்கம் போன்றமையப் பொருண்மையிலமைந்தன. நகைச்சுவை என்ற பெயரில் தரம் குறைவது தவிர்க்கப்பட வேண்டியது. இளங்கலை நாடகமன்றம் இவ்வாண்டு புதிதாகத் தோற்றம் கொண்டது. தமிழ்ப் பல்கலைக் கழகம் நாடகக் கருத்தரங்கு நடத்தியது.***

நாடகம் என்பது ஒரு நடமாடும் இலக்கியம். நாடகத்தைப் படித்து ரசிப்பதை விட, பார்த்து ரசிப்பதே சாலச் சிறந்தது. 1983ஆம் ஆண்டு பல நாடகங்கள் மேடையேற்றப்பட்டன. அவை பல சபாக்களில் பல குழுக்களின் மூலம் அரங்கேற்றப் பட்டன. பொதுவாக நாடகக் கலைஞன் தன்னுடைய உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் இடமே நாடக மேடையாக அமைகின்றது. நாடகக் கூறுகள் சங்க இலக்கியங்களிலே சிறந்து அமைந்தமையைக் காணலாம். எனினும் இன்றைய நிலையை நாடக வளர்ச்சியில் ஒரு சிறந்த இடமாகக் கருதலாம். 1983ஆம் ஆண்டு நடத்தப்பட்ட நாடகங்களை இக்கட்டுரை ஆராய்கிறது.

**ஆவி புகுந்த வீடு**

ஒரே காம்பவுண்டில் வசிக்கும் ஐயங்கார் ஆத்துப் பையன் இராசாவிற்கும், எதிர் வீட்டு கிறித்தவப் பெண் மேரிக்கும் காதல். இந்தக் காதலுக்கு மேரியின் அண்ணன் சோபியும் இராசாவின் தங்கை இராதாவும் துணை நிற்கின்றனர். ஆனால்

இந்த இரு குடும்பத்தைச் சேர்ந்த பெற்றோர்கள் சாதி–மத பேதங்களால் காதலுக்குத் தடை போட எதிர்பாராத விதமாகக் காதலர்கள் இருவரும் தற்கொலை செய்து கொள்கின்றனர். காதலர்கள் இறப்பிற்குப் பின் நாடகம் சூடு பிடிக்கிறது. இராசாவின் ஆவி சோபியின் உடலிலும் மேரியின் ஆவி இராதா வின் உடலிலும் புகுந்துவிட்டதாக இருவரும் நாடகமாடித் தங்கள் காதல் வெற்றிபெறச் செய்வதுடன் தங்கள் பெற்றோர் களின் சாதி மதபேதங்களையும் தகர்த்தெறிகின்றனர். இது ஒரு நகைச்சுவை நாடகம். சாதிமத ஒழிப்பிற்கு மூடநம்பிக்கையை கருவாகக் கொண்டுள்ளது. இந்நாடகம் சத்யா ஸ்டேஜ் குழுவினரால், கார்த்திக்ஃபைன் ஆர்ட்ஸ் ஆதரவில் ஆர்.ஆர் சபாவில் நடைபெற்றது. இதனை 'ஐசரிவேலன்' இயக்கியுள்ளார்.

**இப்படியும் சிலர்**

திரைப்படம் தயாரிக்கிறோம் என்று சொல்லி எடுத்தவர் களும் உண்டு; பலரை ஏமாற்றிவிட்டுத் தலை மறைவாகிவிடும் போலி தயாரிப்பாளர்களும் உண்டு என்பதே இந்நாடகத்தின் மையக்கருவாகும். குறுக்கு வழியில் பணம் சேர்த்து படமெடுக்க நினைக்கும் ஏமாற்றுப் பேர்வழியாக இடிச்சபுளி செல்வராஜ் வரும்போதெல்லாம் கோடம்பாக்கத்தில் திரிகின்ற சிலர் நம் கண்ணுக்குத் தெரிகிறார்கள். தன்னை இயக்குநராகப் போட்டுப் படமெடுக்க வரும் தயாரிப்பாளரின் பணத்தைத் தீர்த்து விட்டுக் கம்பி நீட்டிவிடும் டைரக்டர் வரும் இடம் எல்லாம் நாடகம் பார்ப்பவர்களின் சிந்தனைக்கு விருந்தாகிறது. 'பணம் கொடுத்து உங்களால் நாயை மட்டும் தான் வாங்க முடியுமே தவிர நாய் வாலை .. ... .. அது விருப்பப்படிதான் ஆட்டும்' என்பன போன்ற சிந்தனையைத் தூண்டும் கருத்துக்கள் அடங்கிய நாடகத்தை ஸ்ரீஸ்வரம் ஆர்ட்ஸ் குழுவினர் தந்துள்ளனர்.

**இரண்டாவது பாரதம்**

இருநூறு நடிகர்கள், எண்பது காட்சிகள் கொண்ட இந் நாடகத்தில் சகுனி, துரியோதனன் செயல்கள் நியாயப்படுத்தப் பட்டுள்ளன. 'தர்மயுத்தம்' என்றழைக்கப்படும் கௌரவர்கள் பாண்டவர்கள் போரின் தர்ம நியாயங்களை அலசும் வண்ணம் நாடகம் அமைகின்றது. பஞ்சபாண்டவர்கள் திரௌபதியை அழைத்து வந்தபோது, 'ஒரு கனி கொண்டு வந்திருக்கிறேன்' என்று சொல்ல தாயும், ஐவரும் பகிர்ந்து கொள்ளுங்கள் என்று கூறுகிறாள். உண்மையில் கனி என்ன என்பது அறிந்து தாய்

உள்ளம் எப்படி பதறியிருக்கும், அதன்பின் அவள் என்ன வெல்லாம் பேசியிருப்பாள் என்று நடைமுறையில் எண்ணிப் பார்த்தால் எப்படி எல்லாம் புலம்பியிருப்பாளோ அதை யெல்லாம் புலம்புகிறாள். இந்நாடகத்தின் ஆசிரியர், அடியார்.

**உண்மைக்கு ஏது உறக்கம்**

ராஜு பிரதர்ஸ் பைன் ஆர்ட்ஸ் இந்த நாடகத்தை சுவாமி சங்கரதாஸ் கலையரங்கில் மேடையேற்றினர். கீதா காதலித்தது தமிழாசிரியரை, விதி வசத்தால் கை பிடித்தது டாக்டரை. அதனால் உள்-வெளி போராட்டங்கள். முடிவு கீதா கொல்லப் படுகிறாள். காதலன் கைது செய்யப்படுகிறான். முடிவில் உண்மை வெளிப்பட்டு டாக்டர் தண்டிக்கப்படுகிறார். காதல் டுயட், காமெடி, கணக்கு அய்யர் காமெடி, கோர்ட்டு நிகழ்ச்சி இப்படி பல மசாலாக்களைக் கலந்து அளிக்கிறார், கதாசிரியர். இதன் தயாரிப்பாளர் இயக்குநர் ஏ. ஜெயராமன்.

**உயிருள்ள இறந்த காலங்கள்**

வெங்கிட சுப்பிரமணி தன் நண்பனின் வேண்டுகோளுக்கு இணங்கி காதல் கவிதை ஒன்று எழுதிக் கொடுக்க, அதை அவன் தன் காதலி பாமாவுக்குக் கொடுக்கிறான். கவிதையில் மயங்கிய அவள் கவிதை எழுதியவனையே அடையாளம் கண்டு, மனத் தைப் பறிகொடுக்கிறாள். எதிர்பாராத இந்தக் குழப்பத்திற்கு வெங்கிட சுப்பிரமணி எவ்வளவோ வருத்தம் தெரிவித்தும் ஆத்திரமடைந்து நண்பன் பாமாவைக் கெடுத்து அவள் அழிவிற்கே காரணமாகிறான். இப்படி நாடகக் கதைசுழலுகிறது.

**உரிமைக்கு குரல் கொடுப்போம்**

நாடகத்தின் அடிப்படை வேலையில்லாத் திண்டாட்டம். இரு சகோதரரில் ஒருவன் வேலை இல்லாமல் இருக்கிறான். ஒருவன் யூனியனில் சேர்ந்து அதன் தலைவனாகி விடுகிறான். வேலையில்லாத தம்பிக்கு வேலை கிடைப்பதற்கு அண்ணனின் யூனியனே தடையாக நிற்கும் சூழல் உருவாகிறது. இது ஒரு நகைச்சுவை நாடகம். ஆசிரியர் ராது.

**எந்தரோ மகானு பாவலு**

துணுக்குத் தோரணங்களே நாடகம் என்று நிலவி வந்த நிலையை முறியடித்து இந்நாடகம் அமைந்துள்ளது. இசைக் கலைஞனை மையமாக வைத்து எத்தனையோ திரைப்படங்கள் நாடகங்கள் வந்துவிட்டன. இது இசையை உயிராய் நேசிக்கும்

ஒரு ரசிகனைப் பற்றிய கதை. இசையிலே தனக்கு ஏற்பட்ட இலயிப்பின் காரணமாகத் தன் குடும்பம் நட்பு எதிலும் கவனம் செலுத்தாமல் தவிக்கும் கதாபாத்திரம் இங்குச் சித்திரிக்கப் படுகிறது. நல்ல திறமையாளர்கள் வாய்ப்புக் கேட்கும் போது அவர்களைப் புறக்கணித்து விட்டு அவர்கள் சொந்த முயற்சியில் பேரும் புகழும் பெற்றுவிட்டபிறகு சபாக்காரர்கள் அவர்கள் பின்னால் அலைவதைச் சிறப்பாக நடித்துக் காட்டி இருக்கிறார், தயாரிப்பாளர் பாலா. ரசிக்கத்தக்க வசனங்களைக் கொண்ட இந்நாடகம், நாடகரசா குழுவினரால் நடத்தப்பட்டது.

### கடலின் அமைதி

பரபரப்பூட்டும் தோரண நாடகங்களிலிருந்து இது தனித்த ஒரு அமைதியான நாடகமாகத் திகழ்கிறது. மன அதிர்ச்சி உடைய ஒரு சகோதரன். அவனுக்காக அவன் சகோதரி தன் காதலைத் தியாகம் செய்கிறாள். அவர்களது வாசம் எதிர்வீடு, பக்கத்துவீடு, மாடிவீடு என்னும் மூன்றினுக்கும் நடுவே அமைந் துள்ளது. பெண்ணைக் கிண்டல் செய்யும் அரசியல்வாதி, அந்தப் பெண்ணை அடைய விரும்பும் எதிர்வீட்டு வாலிபனுக்கு உதவுகி றான். அரசியல் தாக்குதல் நெருங்குகிறது. மாடியில் இருக்கும் இந்திப் பெண்ணும் தகப்பனாரும், வளர்சசி இல்லாத வாலிபருக்கு உதவியாக இருக்கிறார்கள். இது எதிர் வீட்டு அரசியல்வாதிக்குப் பொறாமையாக இருக்கிறது. பெண்ணைத் தன்வயப்படுத்த, பல ரௌடித்தனமான காரியங்களைச் செய்து இறுதியில் தோல்வியைத் தழுவுகின்றனர். சகோதரி இடர் நீங்கி காதலனைக் கைப்பிடிக்கக் காத்திருக்கும் நேரத்தில் திருமணப் பத்திரிகையுடன் வருகிறார், காதலன். இதை அறிந்து வருத்தத்தை மறைத்துக் கொண்டு சகோதரனுக்கும் இந்திப் பெண்ணுக்கும் திருமணத்தை முடித்து தன் மனக்கொந் தளிப்பை அமைதிப்படுத்துகிறார், சகோதரி. இதன் ஆசிரியர் பிரபு.

### கடவுள் தந்த காவியம்

இது ஒலி ஒளி நாடகமாக மதுரையில் நடத்தப்பட்டது. கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றை சித்திரிக்கும் வண்ணம் நாடோடி கூத்தாடிகள் கதை சொல்வது போன்று மூன்று மேடையில் நடத்தப்பட்டது. இந்நாடகம் மூன்று மேடைகளில் மட்டும் அன்றி தேவையான சில காட்சிகளை அமைக்க

உயரமான இடங்களில் அரங்குகள் அமைத்து ஒலி ஒளி மூலம் பல்வேறு கோணங்களில் மக்களின் கவனத்தை ஈர்க்கும் வண்ணம் அமைக்கப் பெற்றது. தபசுகாலங்களில் நடத்தப்பட வேண்டிய நாடகமாக அமைந்துள்ளது. இதில் கிறிஸ்துவின் கொள்கைகளான பகைவனுக்கும் அன்பு, இருப்பதில் மற்றவனுக்குப் பகிர்வு, பிறர் நலம், சேவை, தியாகம், மன்னிப்பு போன்ற முக்கிய நிகழ்ச்சிகள் காட்டப்பட்டன.

**கர்ப்பக் கிரகம்**

கதாநாயகியை ஒரு செல்வந்தரின் மகன் காதலிக்கிறான். ஆனால் அவளோ ஒரு சமூக சேவகனை மணக்கிறாள். செல்வந்தரின் பிள்ளை அவளை விடாமல் இன்னும் விரும்பிக் கொண்டே தான் இருக்கிறான். சமூக சேவகன் விபத்தில் சிக்கி மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லப்படுகிறான். அவனுக்கு இரத்தம் தேவைப்படுகிறது. செல்வந்தரின் பிள்ளை இரத்த தானம் செய்கிறான். பின் கதாநாயகியிடம் வந்து, "நீ என்னை விரும்பாமலேயே இருந்தாய். உன்னை எப்படியும் அடைந்து விடுவது என்று சபதம் கொண்டிருந்தேன். இப்போது உன் கணவன் உடம்பில் ஓடிக்கொண்டிருப்பது என் இரத்தம்தான். உன்னை நான் அடைந்துவிட்டேன்" என்றான். இதுகேட்டு அவள் தற்கொலை செய்து கொள்கிறாள். இது நாடகப் போட்டிக்காக வேண்டி நடத்தப்பட்ட நாடகம்.

**கலையாத கனவுகள்**

அடுத்தவன் பலவீனத்தை வைத்து தான் முன்னேற வேண்டும் என்ற கொள்கையுடையவன் கணேஷ். அவன் நண்பன் ஆனந்த், "என்னை நீ ஜெயிக்க முடியாது" என்று சவால் விடுகின்றான். எனவே ஆனந்த் மணக்க இருந்த பெண்ணை அவனுக்குத் தெரியாமல் கணேஷ் மணமுடித்துக் காட்டுகிறான். தன் மனைவி மல்லிகா வேலைக்குச் செல்ல மறுப்பதால் அவளை கணேஷ் விவாகரத்து செய்வதாகக் கூற அவள் தன் பழைய காதலன் ரமேஷின் உதவியை நாடுகிறாள். இப்போது கணேஷின் பலவீனத்தைப் பற்றி ஆனந்த் குறிப்பிடும் போது, அவன் அடையும் குழப்பத்தை அபாரமாகச் சித்திரித்துக் காட்டுகின்றார் டைரக்டர் எஸ். செயபாலன்.

**கிருஷ்ண லீலா**

நாடகக் கலைஞனான கிருஷ்ணன் தன் மனைவிக்குத் தெரியாமல் நாடகத்தில் நடிக்க ஒரு பொய் சொல்லிவிட்டு

பாண்டிச்சேரிக்குச் செல்கிறான். அவன் நண்பன் கிருஷ்ணனைத் தேடி அவன் வீட்டுக்கு வந்து உண்மையைக் கூறுகிறான். கிருஷ்ணன் மனைவி ருக்மணியும் அவள் அப்பாவும் பாண்டிச்சேரிக்குச் சென்று நாடகமேடையை கலக்கிவிடு கின்றனர். அங்கு ஸ்ரீ கிருஷ்ண வேடத்தில் கிருஷ்ணன் படும் பாட்டைவிட நமது வயிறு படும்பாடு பெரும் பாடாக உள்ளது. ஸ்ரீ கிருஷ்ணன் மேல் மானசீகக் காதல்கொண்ட மீராவின் அடம்பிடிக்கும் நகைச்சுவை நடிப்பு மனதைக் கவரும்படி உள்ளது. இதன் ஆசிரியர் ராது.

**கிருஷ்ணா கிருஷ்ணா**

வாரத்திற்கு ஒரு கிருஷ்ணன் பொம்மையைச் சிரத்தையோடு கையினால் உருவாக்கும் சாவகாசமான சூழ்நிலைமீது நிமிடத் திற்கு ஒரு பொம்மை உற்பத்தி பண்ணக்கூடிய நவீன யந்திரம் படையெடுத்தால் என்னவாகும்? அதன் விளைவுகளைக் கூறு கிறது இந்நாடகம்.

**குடத்தில் வைத்த தீபங்கள்**

மனைவியைக் கொடுமைப்படுத்தும் ஆண்களின் சுயநலம் மேடை போட்டுக் காட்டப்பட்டுள்ளது. வேலைக்குப் போகும் மனைவியின் பிரச்சினைகளை, அதனால் எழுகின்ற உள்மனப் போராட்டங்களைக் காணலாம். பெண் தனக்கு ஒரு பாதுகாப்புத் தேவை என்றுதான் ஒருவனை மணக்கிறாள். அது எப்போது அவளுக்குக்கிடைக்கவில்லையோ அப்போது அவள் அவனுடன் அல்லல்பட்டுக் கொண்டு வாழ்க்கை நடத்தவேண்டும் என்று என்ன கட்டாயம் இருக்கிறது? என்று கதாநாயகி கூறு மிடம் பெண்ணுரிமைக்கு வழிகாட்டியாக விளங்குகிறது.

**கொடியவன்**

மதுரை சதங்கை கலைத் தொடர்பகம் மூலம் நடத்தப் பட்டது. சோறு கொழஞ்சு போச்சு என்ற பெயரிலும் இந் நாடகம் நடத்தப்பட்டது. மிதவாதி, தீவிரவாதி, பொதுநல வாதி இம்மூவருடைய மனநலன்களையும், தங்கள் கொள்கை களில் இவர்களின் பற்று, மனமாற்றம், விளைவு இவைகளைக் குறித்தும் காட்டும் அமைப்பினது.

**கோவில் மணி ஓசை**

மதுரையில் சிறந்த அரங்க அமைப்புகள் மூலம் நடத்தப் பெற்றது, இந்நாடகம். கிராமங்களிலே நிலவிவரும்

தாழ்ந்தவன் உயர்ந்தவன் கொத்தடிமை போன்ற எண்ணங்களைக் கண்டித்தும், சமூக சேவகர் என்ற ஒரு கதாபாத்திரத்தின் மூலம் இளம் உள்ளங்களை வகைப்படுத்தி, இனவேறுபாடு,பாமர மக்களின் ஏமாற்றத்தைத் தவிர்க்கும் வழிவகை போன்றவைகளைச் சித்திரிக்கும் வண்ணமும், விதவை மறுமணத்தையும் சமாதானத்தை வலியுறுத்தியும் நடத்தப்பெற்ற நாடகம். இதன் வசனம், பாடல்கள் மக்களிடையே நல்ல மதிப்பையும் வரவேற்பையும் பெற்று, கதாபாத்திரங்களின் தன்மையையும் உயர்த்திக் காட்டியது.

**சமபந்தி**

மக்களிடையே பரபரப்பையும் மன எழுச்சியையும் உருவாக்கிய நாடகம். 1983ஆம் ஆண்டு ஆறுமுறை பல்வேறு இடங்களில் நடத்தப்பட்டது. இந்நாடகம் சாதி, மத, இன வேறுபாடுகளால் வரும் விளைவுகளைச் சுட்டிக்காட்டியது. கிறித்துவ இந்து முசுலிம் குடும்பங்களோடு ஒரு முற்போக்கு வாதியையும் இணைத்துக் குடும்பப் பிரச்னையையும், தூண்டுதலால் வரும் இன வேறுபாட்டின் விளைவுகளையும் வலியுறுத்தி வெற்றி கண்டது. மேடையமைப்பைப் பொறுத்த மட்டில் ஒரே அரங்க அமைப்பிலேயே நடத்தப்பட்டது. அந்த ஒரே அரங்க அமைப்பு ஒரு காம்பவுண்டின் நான்கு வீடுகளை வைத்து நடத்தப்பட்டது.

**சூப்பர் ஸ்டார்**

இது ஒரு நகைச்சுவை நாடகம். கதை அமைப்பு சிரிப்புக்கு அதிகம் இடம் அளிக்கிறது. வழக்கமான வில்லன் அப்பா ஒரு பணத்தாசை பிடித்த கலப்பட வியாபாரி. படத் தயாரிப்பாளரும் கூட. தமது ஒரே மகளை ஒரு சூப்பர் ஸ்டாருக்குத்தான் மணம் செய்து கொடுப்பேன் என்று அசட்டுப் பிடிவாதம் பிடிக்கிறார். பெண்ணோ அப்பாவிற்குப் பரம்பரைப் பகையான தன் மாமாவின் மகனைக் காதலிக்கிறாள். மாமன் மகன் சூப்பர் ஸ்டாராக வேடம் போட்டு வருங்கால மாமனாரை ஏமாற்றி அத்தைப் பெண்ணை மணம் செய்து தரச் சொல்லிக் கேட்கும் போது குட்டு உடைபட்டு விடுகிறது. ஆனால் அவரே கலப்பட வழக்கில் மாட்டிக் கொள்ளும் போது, மனம் திருந்தி திருமணத்திற்குச் சம்மதிக்கிறார். கோவை அனுராதா கதை வசனம் எழுதி நாடகத்தை இயக்கியிருப்பதோடு, கலப்பட வியாபாரியின் குமாஸ்தா திருப்பதியாக வந்து தமது சிரிப்பு வெடிகள் மூலம்

சபையைக் கலகலக்க வைக்கிறார். நகைச்சுவை நாடகத்தின் கூறுகளனைத்தும் இதில் காணப்படுகின்றது.

**டவுட் தேசிகன்**

இது ஒரு மனோதத்துவமும் நகைச்சுவையும் கலந்த நாடகம். தலைக்கு மேலே மின் விசிறி சுற்றினால் அது தன் தலையில் விழுமோ என்ற சந்தேகம். அலுவலகத்தில் கோப்புகளைப் பிரித்ததும் அதில் சந்தேகம். வீட்டில் குழந்தை தான் மறந்து வெளியே வைத்துவிட்ட பிளேடை முழுங்கி விடுமோ என்ற சந்தேகம். சந்தேகம் என்ற நோயை மனோ தத்துவ ரீதியில் அணுகியுள்ளனர். இந்நாடகத்தை வியட்நாம் வீடு சுந்தரம் இயக்கியுள்ளார்.

**திருமலை நாயக்கர்**

ஹெரான் ராமசாமி குழுவினர் தயாரித்த திருமலை நாயக்கர் நாடகம் 1983ஆம் ஆண்டின் சிறந்த நாடகமாகும். ஆபாச வசனங்களும் பிறமொழி தலைப்புகளும் அடங்கி வரும் இக்காலத்தில், இது ஒரு சிறந்த நாடகமாக அமைந்தது.

**நல்ல மனம் வாழ்க**

நாடகத்தின் நாயகன் ஒரு கொலையில் தொடர்புபடுத்தப் பட்டுக் கூண்டில் நிற்கிறான். ஆனால் அவனோ கொலை நடந்த போது அந்த இடத்தில் இல்லை. அவன் இருந்த இடம் ஒரு விபச்சாரியின் வீடு. இதற்கு ஒரே சாட்சி மிகப் பிரபலமான நீதிபதி. அவரோ தான் விபச்சாரி வீட்டில் இருந்ததை வெளிப் படையாகச் சொல்லத் தயங்குகிறார். சிக்கலான வழக்குகளை எடுத்து வாதாட விரும்பும் அவர் மகள் இந்த வழக்கையும் எடுத்து நாயகனை நிரபராதி என்று நிரூபிக்கிறாள். வழக்கில் வெற்றி பெற்றாலும் தந்தையான நீதிபதியை வெற்றிபெற முடியவில்லை. அதுதான் நாடகத்தின் 'க்ளைமாக்ஸ்' காட்சி. இந்நாடகம் எம். ஆர். ஆர். தியேட்டர்ஸ் குழுவினரால் நடத்தப் பட்டது.

**நலம் நலமறிய அவா**

'நீயூரோ ப்ளாஸ்மா' வியாதியால் அவதிப்படும் சூலி, மானசீகமாக, முறைப் பையன் ஜான்சனைக் காதலிக்கிறாள். தன் தந்தையின் சாவிற்குக் காரணமான, டேவிட்டைப் (சூலியின் தந்தை) பழிவாங்க வருகிறான் ஆனால் டேவிட்டைக்

கொல்லாமல் சூலியைக் கொன்று பழி தீர்த்துக் கொள்ளப் போவதாக மோகன் கூறுகின்றான். சூலிக்கு அவன்தான் ஜான்சன் என அறிமுகப்படுத்துகிறான். டேவிட் சிறுகச் சிறுகச் செத்துக் கொண்டிருக்கும் மகளுக்கும் தனக்கும் நிம்மதி வேண்டி மகளைச் சீக்கிரம் கொல்லும்படி மோகனை வேண்டுகிறான். உண்மையிலேயே மோகன் சூலியைக் காதலிக்கிறான். ஆகவே மறுக்கிறான். ஒருநாள் சூலி இறக்கிறாள். அவள் மரணம் இயற்கையல்ல என்பது போலிசுக்குத் தெரிகிறது. பலர் பேரில் சந்தேகம். விசாரணை முடிவில் சூலியின் கடிதம் மூலம் தற்கொலை என்பது தெரியவருகிறது. இதை நாடகமாக்கி இயக்கி உள்ளார் லியோ பிரபு. நல்ல வசனங்களுடன் நகைச் சுவைக் காட்சியும் உள்ளன.

**பகுதி நேர கணவர்**

இது சவுதாமினியின் முதல் நாடகம். 12 மணி நேரம் ஒரு அப்பாவி மனிதனை சூப்பர் மேனாக மாற்றும் வித்தையை ஓர் அரை குறை கற்றுக்குட்டி விஞ்ஞானி கண்டுபிடித்தார். சில பழைய கதைகளில் வருவது போன்ற கதை. பணக்காரப் பெண்ணுக்கு, அவள் வீட்டுச் சமையற்காரனுக்கு அதிசய மாத்திரையை வில்லன் கொடுத்து சமையல்காரனை சூப்பர் மேனாக்கி, கல்யாணமும் நடத்தி வைத்து விடுகிறார்கள். முதலிரவு கழித்து காலையில் கண் விழிக்கும்போது தன் வீட்டுச் சமையல்காரன் தன்னுடன் படுக்கையில் இருப்பதைப் பார்த்துத் திடுக்கிடுகிறாள் கதாநாயகி. சமையல் வேலையை விட்டுவிட்டு முழுநேர கணவனாகலாம். அப்படிச் செய்தால் தலைப்பிற்கு இடமில்லையே; அதனால் கதாசிரியர் பகுதியாக்கிக் கதையைப் பின்னிவிட்டார். இந்தக் குறை தெரியாமல் கதையுடன் கலந்த காமெடி வசனங்கள் குலுங்க வைக்கின்றன. குடிகாரனாக நடிக்கும் நடிகர் சென்னைத் தமிழ் பேசுவது நகைச்சுவை ததும்பும் இடமாக உள்ளது. தயாரித்தளித்தவர் டி.வி. சீனிவாசன்.

**பொய்யா மொழி**

புராணக் கதையை மையமாக வைத்துப் பின்னப்பட்டது. 13ஆம் நூற்றாண்டு பொய்யாமொழிப் புலவரின் கதை. மனைவியின் தியாகம், புராண நிகழ்ச்சி இவற்றைவைத்துக் கதையை நாடகமாக வடித்துள்ளார் முகவை மாணிக்கம். முற்காலத் தன்னடக்கம், அறிவுச் செருக்கு, புலமை, அஞ்சாததிறம்

போன்றன சுட்டப்படுகின்றன. தெள்ளு தமிழ் வசனம் தேனாக இனிக்கின்றது.

**மதமே தெருவுக்கு வா**

ஒலி ஒளி நாடகம். ஒரே மேடையில் நடத்தப்பட்டது. காட்சிகளுக்கு ஏற்றாற்போல் நாடக அரங்கு திரை அமைப்புகள் அமைக்கப்பெற்றன. இந்நாடகம் வின்செண்ட் - தே – பவுல் சபையை உருவாக்கிய ஓசான்னா என்பவரின் வாழ்க்கை வரலாற்றை மையமாகக் கொண்டு எழுதப்பட்டது. இதில் பணம் பட்டம் அனைத்தையும் துறந்து இறைவனுக்காக ஊழியம் செய்து வாழ்ந்து முடிந்த கதையைக் கவரும் வண்ணம் ராசாராணி இருவர் கதை சொல்வது போன்று தனி மேடை அமைத்துக் காட்டப்பட்டது. இந்நாடகம் மதுரை சதங்கை கலைக் குழுவினரால் நடத்தப்பட்டது.

**மாறுதல் வரும்**

ஆசிரியர் சுஜாதா. ஓரங்க நாடகம். ஆரம்பத்தைப் பார்த்த மாத்திரத்திலே அதன் நெற்றியில் புதுமை என்று எழுதி ஒட்டியிருப்பதை உணரலாம். மனிதாபிமானமும் சமூக பிரக்ஞையும் இதன் மூலக்கருவாக உள்ளன. நகைச்சுவை நாடகம் நடத்துவதையும், பிராமணர்களது கதையைச் சொல்வதையும், எல்லாத் துறையிலும் மாறுதலுக்கு, வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை முதியவர்கள் என்று அறிவிக்கும் முகமாக நாடகம் முடிவுறுகிறது. சுஜாதா இத்துறைக்குப் புதியவர் எனினும் நல்ல நாடகத்தை அளித்துள்ளார்.

**மைடியர் ஆஷா**

ஓம் கணேஷ் கிரியேஷன்ஸின் இரண்டாவது படைப்பு மை டியர் ஆஷா. நல்ல குணமும், பணமும் நிறைந்த வக்கீல் கணேஷ் தனது ஏழை நண்பனைப் படிக்க வைத்து டாக்டராக்குகிறான். தான் காதலிக்கும் பெண்ணையும் சந்தர்ப்ப வசத்தால் தன் நண்பனுக்கே மனைவியாக்கி அவர்கள் வாழ்க்கை நலனுக்காக இறுதிவரை போராடுகிறான். ஒரு நல்ல சீரியஸான கதையை எப்படி சுவையோடு சொல்லவேண்டும் என்பதற்கு இந்த நாடகம் எடுத்துக்காட்டாக உள்ளது. "மல்லிகைப் பூ வாங்கிக் கொடுங்கன்னு மனைவி கேட்டால் எவ்வளவு முழம்னு ஆசையா மனைவியைக் கேட்காமல், முழம் எவ்வளவுன்னு பூக்காரியைக் கேட்டு கணக்கு பார்க்கும் புருஷன் நீ"—என்ற வசனங்கள் நம் நெஞ்சத்தைத் தொடுவன. கதையாசிரியர்

ரமணி. டெல்லி கணேசும் ஆனந்தியும் நன்றாக நடித்துள்ளனர்.

**மை ஃபேர் லேடி**

ஊதாரித் தனமான குடும்பத் தலைவன். அவனது ஊதாரித் தனம் தனது செயல்களுக்குச் சாதகமாக இருப்பதால் அதனைத் தட்டிக்கேட்காத குடும்பத் தலைவி. தந்தையோடு அமர்ந்து சரி நிகராகக் குடிக்கும் தம்பி......அவர்களுக்கு நடுவே மெல்லவும் முடியாமல். விழுங்கவும் முடியாமல் தத்தளிக்கும் மூத்த பிள்ளை யைப் பற்றிய கதைதான் மை ஃபேர் லேடி (My fair lady). அவள் உண்மையில் ஹ்யூமரஸ் லேடி (Humorous lady).

சீட்டாட்டத்தையே தொழிலாகக் கொண்ட தந்தை, வீட்டுப் பொறுப்பின்றி மாதர் சங்கத் தலைவியாய்த் திரியும் தாய், பி.ஏ. படிப்பில் எப்படியாவது தோற்றுப்போவதையே இலட்சியமாகக் கொண்ட தம்பி, போலி நோயாளியாக இருந்து கொண்டு வீட்டை விட்டுப் போகாத விருந்தாளி மாமா. இப்படிப்பட்டவர்களைத் திருத்தமுடியாமலும், குடும்பச் சுமை யினாலும் அந்த வீட்டு மூத்தபிள்ளை சந்துரு தற்கொலைக்கு முடிவெடுக்கிறான். சானகி என்ற பெண் அவனது முடிவை மாற்றி அவன் குடும்பத்தினரையும் திருத்திக் காட்டுகிறாள். இறுதியில் அவள் அவனை விரும்ப அவனோ தனக்கு ஏற்கெனவே காதலி இருப்பதாகக் கூறி அவளைத் தனிமரம் ஆக்குகிறான். நகைச்சுவையுடன் நல்ல வசனம் கலந்த நாடகம். நாடக ஆக்கம் கிரேஸி மோகன், இயக்கம் தில்லை இராஜன்.

**வந்தவன்**

பூர்ணம் ஓட்டல் நடத்துகிறார். வியாபார நுணுக்கம் தெரியாதவர். மனைவியும் திறமையில்லாதவள்; ஆனால் நெஞ்சில் ஈரம் உண்டு. பசியோடு ஒருவன் வருகிறான். எல்லாம் காலியாகிவிட்டது, எனினும் மனது கேட்காமல் மளிகைக் கடைக்கு ஓடிப்போய் சாமான்களை வாங்கி வந்து உப்புமா கிளறிப்போட்டு உபசரிக்கிறார். சாப்பிட்டபின் வேலையில்லாத பட்டதாரி, காசு கொடுக்காததுடன் கத்தியைக் காட்டி மிரட்டி கல்லாவில் இருந்த பணத்தையும் கைக்கடிகாரத்தையும்சுருட்டிக் கொண்டு போகிறான். அந்நிலையிலும் ‘சார் கடிகாரத்தை அடிக்கடி ஆட்டவேண்டும் இல்லாவிட்டால் ஓடாது!’, ‘அய்யோ டயம் தெரியாமல் திண்டாடப் போகிறாரே’ என்று பூர்ணம் அங்கலாய்க்கிறார்.

**வாண வேடிக்கை**

தாயை இழந்த அசோக் தாய்ப் பாசத்திற்காகப் பரிதவிக்கிறான். அவனது நண்பன் இராசாவோ உலகில் எதை வேண்டுமானாலும் வாங்கலாம்; ஆனால் தாயை மட்டுமே பெறமுடியாது என அடித்துக் கூறுகின்றான். என்னையும் ஒரு தாய் மகனே என்று அழைக்கத்தான் போகிறாள் என்று அவனுக்குச் சவால் விடுகிறான் அசோக். இறுதியில் தன் உயிரையே பலியாக்கி அந்தச் சவாலில் வெற்றியும் பெறுகிறான். இந்நாடக நடிகர்கள் நடிக்கவில்லை; வாழ்ந்தே காட்டினார்கள். இது ஒரு குதூகல நகைச்சுவை நாடகம்.

**வீணையடி நீ எனக்கு**

நந்தகோபால் எழுதியுள்ள புதிய நாடகம். உலகத்தோல் பொருட்காட்சி அரங்கில் அரங்கேற்றப்பட்டது. கண்ணன் ஒரு மாஜி குற்றவாளி. மனிதனாக வாழத்துடிக்கிறான். அவனை மனிதனாக மதிக்க மறுக்கிறது இந்தச் சமூகம். ஆனால் அதே சமூகம் பணம் படைத்த வேலப்பனை, அவன் ஒரு கொலைகாரனாக இருந்தும் மதிக்கிறது. இத்தகைய மக்களின் மனோநிலை மாறுபட வழி என்ன? இதற்குக் கல்வியே சரியான கருவி. அது ஒன்றுதான் இதனை மாற்றும் என்பதை வலியுறுத்துகிறது.

**புராண நாடகங்கள்**

20ஆம் நூற்றாண்டில் தமிழ் மேடை நாடகங்கள் தலை நிமிர்ந்து உலா வரக் காரணமாக இருந்தவை புராண நாடகங்கள். இன்றைய நாகரிக வளர்ச்சியில், மக்கள் ரசனையில் ஏற்பட்ட பாதிப்பால் புராண நாடகங்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டனவோ என எண்ண இடமளிக்கின்றது. ஆயினும் அவை முற்றுப்பெற்றுவிட்டன என்றும் கூறமுடியாது. 1983ஆம் ஆண்டைப் பொறுத்தவரையில் சுமார் ஏழு நாடகங்கள் புராணம் தொடர்புடையதாக உள்ளன. அதிலும் அந்த ஆண்டு இயற்றப்பட்டவை 4. பிற முன்னைய ஆண்டும் நடத்தப்பட்ட நாடகங்கள் என அறியமுடிகிறது. புராண நாடகங்கள் நடத்த அதிகமான நடிகர்கள் தேவை. காட்சி அமைப்பு, சுண்ணப் பூச்சு, உடை போன்ற பொருட்செலவு அதிகம். பற்றாக்குறை வருமானத்தில் வாழும் இக்கால நாடகக் குழுவினரால் இவை அத்துணை எளிதல்ல.

புராண நாடகங்களின் நோக்கம் பண்டைய இதிகாச புராணச் செய்திகளில் புதைந்து கிடக்கும் நல்ல கருத்துக்களை

சிந்தனைச் செய்திகளைத் தோண்டி எடுத்து வெளி உலகிற்குத் தெரிவிப்பதேயாகும். ஆர். எஸ். மனோகர், ஹெரான் இராம சுவாமி போன்றவர்கள் மட்டுமே, பெயர் குறிப்பிடும்படி புராண நாடகங்களை இயக்கியும் நடித்தும் வருகின்றனர். இவர்கட்குப் பின்னர் புராண நாடகங்களின் நிலை என்ன என்பது கேள்விக் குறியாகவே உள்ளது.

**வரலாற்று நாடகங்கள்**

புராண நாடகங்களைப்போல வரலாற்று நாடகங்களும் அருமையாகவே நடத்தப்படுகின்றன. புராண நாடகங்களைப் போல இதற்கும் மக்கள் ரசனை குறைவாகவே உள்ளது. தற் காலத்தில் புராண வரலாற்று நாடகங்கள் எழுதுவதில் யாருக் கும் அதிக ஆர்வம் இல்லை. வரலாற்று நாடகங்கள் எழுத வரலாற்று அறிவும் வரலாற்று நூல் புலமையும் தேவை. அதன் அமைப்பினுள் நின்றே எழுதவேண்டும் என்பதால் அது சற்றுக் கடினம்; வரலாற்றுச் செய்தியில் மாறுபாடு ஏற்படும் ஆயின் நாடகமே வீணாகிவிடும். வெறும் துணுக்குகளை வைத்து எழுதுவதுபோல இதை எழுத முடியாது.

**சேது பந்தனம்**

இந்த வரலாற்று நாடகத்தை ஹெரான் இராமசுவாமி இயக்கியுள்ளார். ஐரோப்பியர்களின் ஆதிக்கம் மதமாற்றம் கோவில்களைச் சூறையாடல் போன்ற கொடுமைகளை எதிர்த் துப் போரிடும் ஒரு வீர இளைஞனை மையமாக வைத்து புனையப்பட்ட நாடகம். மதுரை திருமலை நாயக்கர் ஆட்சிக் காலத்தில் போர்ச்சுகீசியர்களும் டச்சுக்காரர்களும் வாணிபப் போர்வையில் தமிழகத்தில் புகுந்து தூத்துக்குடி, திருச்செந்தூர் போன்ற கடலோரப் பகுதிகளை ஆக்கிரமித்துக் கொள்ள முயன்றனர். அரசியலிலும் தலையிட்டுக் குழப்பங்களைத் தோற்றுவித்தனர். மதுரைநாட்டிற்கும் மறவர் நாட்டு இராமநாதபுரத்திற்கும் இடையில் தீராப்பகை ஏற்பட்டிருந்தது. திருச்செந்தூர் பகுதியைச் சேர்ந்த இளையபெருமாள் என்ற இளைஞன் போர்ச்சுக்கீசியர்களையும் டச்சுக்காரர்களையும் எதிர்க்கிறான். டச்சுக்காரர்களால் கொள்ளையடிக்கப்பட்ட திருச்செந்தூர் முருகனைக் கடலில் சென்று போரிட்டு மீட்டு வருகிறான்.

**சமுதாய நாடகங்கள்**

1983ஆம் ஆண்டு மட்டுமல்லாது தற்காலத்தில் மேடை யேறிய நாடகங்கள் எல்லாம் அநேகமாகச் சமுதாய நாடகங்

களாக உள்ளன. குடும்பத்தில் எழுகின்ற சிக்கல்கள், உறவுமுறைகளில் ஏற்படும் விரிசல்கள், பெண்கள் படும்பாடு, வரதட்சணை கொடுமை, ஆண்களின் அடக்குமுறைகள், காமம், மாமியார் கொடுமை, பெண்கள் கல்வி போன்ற பல்வேறான சமுதாயச் சிக்கல்களை நடைமுறை வாழ்க்கையுடன் ஒப்புவித்துக் காட்டி உள்ளனர். அரசியல் கட்சிகள் அங்கங்கே புகுவதால் ஏற்படும் சமுதாய விளைவுகளும் காட்டப்படுகின்றன.

**நகைச்சுவை நாடகங்கள்**

நகைச்சுவைக்காகப் பல முறையான வழுநடைகள் வருவதை மக்கள் வழுவாகக் கருதாது சுவைத்து மகிழ்கின்றனர். நகைச்சுவையில், விடயங்களை எவ்வளவு மிகைப்படுத்தி வேண்டுமானாலும் சொல்லலாம். மக்கள் அதைக் கேள்வி கேட்காமல் ஒப்புக்கொண்டு ரசிப்பார்கள். நகைச்சுவை மூலம் மக்களை எளிதில் வசப்படுத்தலாம். இது தற்கால நாடக உத்தியாகவே உள்ளது.

பலநாடகங்கள் துணுக்குகளைக் கோர்வையாக்கி அழகுடன் அமைத்து பார்வையாளர்களைச் சிரிக்க வைப்பது என்ற ஒரே நோக்கில் அமைவதாய் உள்ளன. இந்த ஆண்டு பல்வேறு நகைச்சுவை நாடகங்கள் நடத்தப்பட்டன. அவற்றுள் சில நாடகங்கள் நூற்றுக்கும் மேற்பட்ட முறை மேடையேறி வெற்றிநாடகம் என்ற பட்டியலில் சேர்க்கப்பட்டன.

**வேலையில்லாத் திண்டாட்டம்**

இன்றைய சமுதாயத்தில தவிர்க்கமுடியாத தொத்து வியாதியாக இளைஞர்களைத் தாக்கியிருப்பது வேலை இல்லாத் திண்டாட்டமாகும். வேலையில்லாத் திண்டாட்டத்தைத் தவிர்க்க இளைஞர்கள் பாடுபடவேண்டும். எல்லோரும் குலத்தொழிலை ஏற்று, தொழிற்கல்வி பயின்று சுயமாக வேலையில் ஈடுபடல் வேண்டும். அனைவருக்கும் அரசு வேலை என்பது எளிதல்ல— என்பன போன்ற கருத்துக்களை உள்ளடக்கியே 'அசோகவனம்' என்ற நாடகத்தைக் கோமல் சுவாமிநாதன் படைத்துள்ளார். தன்னுடைய 'ஸ்டேஜ் பிரண்ட்ஸ்' மூலம் இதை இவ்வாண்டு பல சபாக்களில் நடத்தினார். அசோகவனத்துச் சீதை போல, யார் துணையுமின்றி ஆதரவற்று இன்றைய இளைஞர் உள்ளனர். அவர்களைக் காப்பாற்ற அவர்களேதான் முயற்சிக்க வேண்டும்.

**காதல்**

பல அமெச்சூர் நாடக மன்றங்கள் நடத்தும் நாடகங்களில் காதல் காட்சிகளைத் தவிர வேறு எதுவும் இருக்காது. அந்த நாடகத்திற்குத் தலை எது முடிவு எது என்று சொல்ல முடியாமல் இருக்கும். சில நாடகங்களில் கவர்ச்சிக்கே முதலிடம் உள்ளது. சில நாடகங்களில் சோகத்திற்கும் நகைச்சுவைக்கும் முதலிடம் அளித்துள்ளனர்.

**சினிமா ஊடுருவல்**

சில அமெச்சூர் நாடகக் குழுவினர் சினிமாவில் புகுந்து கொண்டு நாடகங்களைச் சினிமாவாக மாற்றுவதில் தீவிரமாக இருந்து வருகிறார்கள். திறமை மிகுந்த அந்த நாடக நடிகர்கள் நடிக்கும் படங்கள் நாடகமாகவே இருந்து வருகின்றன. நாடக மேடையாகவே திரைப்படங்களைப் பயன்படுத்தி வருகின்றனர். மேற்படி படங்கள் இதன் காரணமாக அமெச்சூர் சினிமா என்னும் பெயர் சூட்டும்படி ஆகிவிடும். நாடகம் மதிப்பிழந்து விட வாய்ப்பு உள்ளது. சினிமாவை மனத்தில் கொண்டே பெரும்பாலான நாடகங்கள் எழுதப்பட்டுள்ளன. இதனால் சினிமாப் பாணி அதில் அதிகம் காணப்படுகின்றது.

**சொல் விளையாட்டு**

1983இன் நாடகங்களிலும், மக்களை மகிழ்வித்தற்கு வேண்டி அவர்கள் புலமைக்குச் சவால் விடுவது போல விடுகதைகள் போடுவதை வழக்கமாகக் கொண்டனர். அதுவும் நாடகத்திற்கு நல்ல மதிப்பும் பெயரும் கிடைக்க வழி செய்தன. கலையாத கனவுகள் என்ற நாடகத்தில் "படிச்சிருந்தாலே சம்பாதிக்கணும் அதுதான் நியாயம். எனவே தான் ஆங்கிலத்தில் Learning என்ற வார்த்தையிலே Earning என்ற வார்த்தையும் சேர்த்து வைக்கப்பட்டுள்ளது." "ஆறும் ஐந்தும் பதினொன்று. பதினொரு சுளைக்கு மேலே அந்த பழத்திலே இருக்காது அதனால்தான் அதற்கு ஆரஞ்சுபழம் என்ற பெயர் வந்தது!' என்று வசனம் இடம் பெற்றுள்ளது. 'பொய்யாமொழி' நாடகத்தில் நோயுற்ற ஒருவன், தானுற்றுத் துன்புறும் நோயை மருத்துவரிடம் "முக்காலை கையிலெடுத்து மூவிரண்டு போகையிலே இக்காலில் ஐந்துதலை நாகம் அழுத்தக் கடித்ததுவே"— என்று விடுகதையாகவே கூறுகின்றான். அதற்கு வைத்தியர்; "பத்துரதன் புத்திரன் மித்திரனின் சத்ருவின் பத்தினியின் கால் வாங்கித் தேய்" எனப் பதிலும் விடுகதை உத்தியிலேயே

உள்ளமை அறியமுடிகிறது. மூன்றாவது காலாகப் பயன்படுத்தும் கைத்தடியை எடுத்துக்கொண்டு ஆற்றுக்குப் போகும் போது இடதுகாலில் ஐந்து முட்களைக் கொண்ட நெருஞ்சிமுள் அழுத்த மாகக் குத்திவிட்டது.—பத்துரதன் மகன்—தசரதன் மகன் இராமன், இராமனின் நண்பன் சுக்ரீவன், அவன் பகைவன் வாலி, வாலியின் மனைவி தாரை, தாரையின் கால் வாங்கித் தேய்-தரையில் தேய் என்பதே பதிலாகும். இது ஒரு தனிப்பாடல் ஆகும். தனிப்பாடல்கள் நாடக வளர்ச்சிக்கும் சுவைக்கும் உதவும் விதமும் தெரிகிறது. இது போன்ற சொல் விளை யாட்டுக்கள் நாடகத்தில் அமைவது நம்முடைய எண்ணத் திற்கும் சிந்தனைக்கும் நல்விருந்தாக அமைவது திண்ணம்.

**நாடகத்துள் உவமை**

நாடக நடிகர்கள் தாம் நடிக்கும் நாடகங்களில் பல்வேறு விதமான உவமைகளைக் கையாளுவது வழக்கம். பொருள் விளக்கத்திற்காகப் பயன்படுத்தப்படும் பல்வேறு அணிகள் நாடக நடையை நயமுறச் செய்கின்றன. சிறப்பாக உவமை உருவகங்கள் மிகுதியாக இடம் பெறுகின்றன. பேச்சுவழக்கு உவமை, பழமொழி உவமை, மரபுமுறை உவமை, உய்த்துணர் உவமை எனப் பல வகைகளில் உவமைகள் நாடகத்துள் காணப் படுகின்றன. மேடை நாடகத்தில் 1983ஆம் ஆண்டு கையாண்ட உவமை உத்திகள் முன்னைய ஆண்டுகளில் கையாளப்பட்டனவே ஆகும். புதியன எனச் சொல்ல எதுவும் இல்லை.

**புதியவர்கள்**

புதியவர்கள் பாராட்டுக்குரியவர்கள், விமர்சனத்திற்கு உரியவர்கள் அல்ல. ‘மை டியர் ஆஷா’ நாடக நடிகை ஆனந்தி புதிய நாடக நடிகை, ‘அம்சவாகினி’ என்னும் புதிய நாடகக் குழு ஆரம்பிக்கப்பட்டது. பல்லவன் போக்குவரத்துக் கழகத் தைச் சார்ந்த இராசா முகம்மது என்பவர் ‘இளங்கலை நாடக மன்றம்’ என்ற அமைப்பை 1983இல் நிறுவினார். அதன் முதல் நாடகம் சிரித்தாலும் கணணீர் வரும். தமிழ்ப் புத்தாண்டு நாளன்று மதுரையில் இலக்குமிசுந்தரம் ஹாலில் கீதாஞ்சலி சபாவின் துவக்கவிழா நடைபெற்றது. ரோகிணி கல்சுரல் அகாடமி சபா நிறுவப்பட்டது. முன்னணி நடிகர்கள் இதன் தலைவராக, செயலாளராக, பொறுப்பாளராக உள்ளனர்.

**புதிய கல்லூரி**

நாடகக் கலையைக் கற்றறியவும், மேடை நாடகத்தின் மேன்மையை உணரவும் ஒரு நாடகக் கல்லூரி தேவை என்று

அதன் பொருட்டு 13–8–83 அன்று ஔவை சண்முகம் இல்லத்தில் ஒரு அமைப்புக் கூட்டம் நடந்தது. அதில் நாடகக் கல்லூரி அமைப்பதற்கான வரைமுறைகள், வகுப்பு நடத்த திட்டங்கள் யாவும் கலந்து பேசப்பட்டன. மீண்டும் இதுபற்றி 28–8–83 அன்றும் பேச்சுநடந்தது. பல நாடக வல்லுநர்களும் ஆய்வாளர் களும் கலந்து கொண்டனர். எவ்வகையிலும் நாடகக் கல்லூரி அமைய இவ்வாண்டு வித்து ஊன்றப்பட்டது மகிழ்ச்சி தரும் செய்தியாகும்.

**நாடகக் கட்டுக்கோப்பு**

நாடகக் கட்டுக் கோப்பு அல்லது கதைப்பின்னல் நாடக ஆக்கத்தில் மிக முக்கியமானதாகும். அதனை அறிமுகம், சிக்கல், உச்சநிலை, வீழ்ச்சி, முடிவு, என்ற நிலையுடன் பொருத்தலாம். இவற்றை நாடகக் கட்டுக் கோப்பின் ஐந்து கட்டப் பகுப்புகள் என்று கூறலாம். அண்மைக் காலத்துச் சோதனை நாடகங்கள் போன்றவற்றில் அறிமுகப்பகுதி இல்லையோ என்று கருதும் அளவில் உள்ளது. எடுத்த எடுப்பில் சிக்கலைக் காட்டி அதை வளர்க்கும் போக்கில் அறிமுகம் கலைத்திறமுடன் நடைபெறுகிறது. இதனை நாடகப் படைப்பில் ஒரு மாற்றமெனக் கூறலாம். இது நாடக விறுவிறுப்பைப் பெருக்கி வளர்ச்சியைக் காட்டுகிறது. 1983இல் நாடக வளர்ச்சி நிலை உரையாடல் நடிப்பு இணைய விளக்கப்படுகிறது. நடிப்பின் வாயிலாக உணர்ச்சிகளையும், உண்மைகளையும் வடித்துக் காட்டும் போக்கு வளர்ந்துள்ளதையே இது காட்டுகிறது. வரலாற்று நாடகங்கள்-மிகுதியான உரையாடலுடனும், சமூக நாடகங்கள்–பாத்திரங்களின் செயற்பாடுகளுக்கு முக்கியத்துவம் அளித்தும், புராண நாடகங்கள்–பாடல் கலந்தும் முற்காலத்திப புராணச் செய்திகளைச் சிறப்பித்துக் கூறும் வகையிலும் அமைந்துள்ளன.

**நாடகப் போக்கு**

உலகம் என்பது சட்டங்களாலேயோ, நீதி மொழி களாலேயோ, மட்டும் நடத்தப்படவில்லை. அழகான, அற்புத மான எடுத்துக்காட்டாக விளங்கும் தலைவர்கள், ஞானிகள் நடந்து வந்த வழி முறைகளைத் தொடர்ந்தே நடைபெறுகிறது. வள்ளுவர், காந்தி, அண்ணா, காமராசர் போன்றவர்கள் இப்படி இப்படி வாழ்ந்தார்கள் என்று அடிக்கடி ஒருவருக் கொருவர் சொல்லிக்கொள்வதாலேயே வாழ்க்கையிலும் கடை

பிடிக்க ஆர்வம் ஏற்படுகிறது. பொய் சொல்லாதே, திருடாதே, ஏமாற்றாதே என்று மொட்டையாகச் சொல்வதை விட அரிச்சந்திரன் பொய்யே சொல்லாமல் வாழ்ந்தான் என்ற வரலாற்றைச் சொல்லும் போது பாதிப்பு அதிகமாகிறது. இந் நிலையில் புராண நாடகங்களே அவற்றைச் செய்கின்றன எனலாம். மற்ற நாடகங்கள் காதலுக்கும் ஆபாசத்திற்கும் அதிக இடம் கொடுத்துள்ளன. நாடகங்கள் பொழுது போக்காக மட்டும் இல்லாமல் ஒரு நல்ல செய்தியைச் சொல்லும் தன்மை யில் அமைய வேண்டும்.

**மக்கள் ரசனை**

அனுபவம் இல்லாதவர்களும் மக்கள் ரசனையைப் புரிந்து கொள்ளாதவர்களும் நாடகத் தயாரிப்பாளர்களாக இருப்ப தாலும் பயிற்சி இல்லாமல் நேரடியாக வந்து மேடை ஏறி நடிப்ப தாலும், மக்கள் மத்தியில் நாடகங்கள் வரவேற்புப் பெறாது போய் விடுகின்றன. நல்ல நாடகம் இங்கு நடைபெற சாத்தியக் கூறுகள் இல்லை. காரணம் மக்கள் ரசனையை யாரும் வளர விடவில்லை. இளைஞர் குழுவோ, பத்திரிகையோ ஏன் யாருமே இதைச் செய்ய முன் வரவில்லை.

**நாடகத் தன்மைகள்**

தண்ணீர்ப் பஞ்சம் இவ்வாண்டு இருந்தமையாலோ என்னவோ நல்ல நாடகங்கட்குக் கூட பஞ்சமாகி விட்டதோ, என எண்ணத் தோன்றுகிறது. திறமையான நடிகர் நடிகை கட்கு வாய்ப்பு அளித்தல் வேண்டும். சிறப்பாக உள்ள நவீன உத்திகளைத் திறம்படப் பயன்படுத்தும் பக்குவம் வேண்டும். 22–4–'83 இந்து நாளிதழில் நாடக விமர்சகர் எழுதிய கருத்துக் கள் ஐந்தும் துணிச்சலானது, வரவேற்கத் தக்கது, பாராட்டத் தக்கது. இக் கருத்துக்களைப் புரிந்து கொண்டு இன்றைய நாடக எழுத்தாளர்கள் செயல்பட்டால் நாடக உலகில் இன்றைய தொய்வைச் சரிப்படுத்தலாம்.

**நாடக சபாக்கள்**

நாடகங்கள் பல்வேறு கோணங்களில், பல இடங்களில் உருவாயினும் அவை ஈன்றெடுக்கப்படும் இடங்கள் நாடக சபாக் களே ஆகும். சென்னை மாநகரில் அதிகமான சபாக்கள் உள்ளன. கோவை, மதுரை, திருச்சி, தஞ்சை மாவட்டங்களிலும் நாடக சபாக்கள் இருக்கின்றன. நெல்லை குமரி முகவை புதுவை போன்ற மாவட்டங்களில் நாடகம் நடைபெறும் போது மட்டும் மேடையமைத்து, அல்லது ஊர் பொது மூன்றிலில் நாடகம்

நடைபெறும். இந்தச் சபாக்களின் மூலம் நாடகம், நாட்டியம், நடனம் போன்றன அரங்கேற்றவும், நடத்தப்படவும் செய்யப் படுகின்றன. இவ்வாண்டு நாடகங்கள் நடத்தப்பட்ட சபாக்க ளாவன: ஈரோடு கல்சுரல் அகாடமி, சிவகாசி ஆர்ட்ஸ்கிளப், மதுரை சங்கீதா, கோவை ஃபைன் ஆர்ட்ஸ், பாண்டிச்சேரி ஃபைன் ஆர்ட்ஸ், பம்பாய் தமிழ்ச் சங்கம், பெங்களூர் கலா ராதன சபா, நெய்வேலி நிலக்கரி சுரங்க—கலை மன்றம் போன்றனவும், பொள்ளாச்சி தமிழிசை சங்கம், பிரபாத் கல்சுரல் அகாடமி, காஞ்சிபுரம் அம்மனாட்சி சபா முதலியன சென்னையை விட்டு வெளி இடங்களில் உள்ள சபாக்களாகும். சென்னையில் சுமார் 30க்கும் மேற்பட்ட நாடக சபாக்கள், குழுக்கள் உள்ளன. இவற்றில் எல்லா நாட்களிலும் நாடகங்கள் நடந்தன என்று கூறமுடியாவிடினும் வருடத்திற்கு இருநூறு நாட்களாவது கலை நிகழ்ச்சிகள் நடந்தமை பற்றி அறிய முடி கின்றது. சில சபாக்களில் நாள்தோறும் நாடகம் நடைபெற்ற மையும் தெரியவருகிறது.

### நாடகப் போட்டிகள்

தூத்துக்குடி ஸ்பிக் கல்சுரல் சார்பில் ஆண்டுதோறும் கலை நிகழ்ச்சியும், நாடகப்போட்டியும் நடைபெறுகின்றன. நல்ல நாடகங்களை நடத்தி அவற்றில் சிறந்த ஒரு நாடகத்திற்குப் பரிசு வழங்கிக் கலை உணர்வுக்கு ஊக்கம் அளிக்கின்றனர். பல்வேறு குழுவினர்கள் இந்நிறுவனம் மூலம் பல்வேறு நாடகங்களை அரங்கேற்றி உள்ளனர்.

### கலைவிழா

கல்லூரிகளுக்கு இடையேயான கலைவிழா பத்து ஆண்டு களாகத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. கல்சுரல் வீக் என்ற சாதாரணப் பெயருடன் தொடங்கப்பட்டு குல்தூர் என்ற செர்மானியப் பெயர் தாங்கி இப்போது ஃபண்டாசியா என்ற பெயரைத் தாங்கியுள்ளது. சென்ற ஆண்டு முடிய திருச்சி நகரக் கல்லூரிகளை மட்டுமே கவர்ந்த இவ்விழா இவ்வாண்டு நகருக்கு அப்பால் உள்ள கல்லூரிகளையும் கவர்ந்திருக்கிறது. சுமார் 25 கல்லூரிகள் தமிழகத்தில் சென்னை, மதுரை, கோவை, தஞ்சை, முகவை மாவட்டங்களில் இருந்து கலந்துகொண்டன. இந் நிகழ்ச்சியில் 'மிஸ் கண்ணகி ஒரு மிஸ் நோமர்' என்ற நாடகம் நடத்தப்பட்டது. இது வரலாற்றைக் குழப்பும் நகைச்சுவை நாடகம். இதில் இராபர்ட் கிளைவ் பல்லவ மன்னனாகவும், ஆண்

வேடம் பூண்ட கண்ணகியும், சிலம்பிற்குப் பதில் கைக்கடிகார மும், மதுரைக்குப் பதில் திருச்சியும், பாண்டியனுக்குப் பதில் சோழனும் பாத்திரங்களாக உள்ளனர். இது ஒரு எள்ளல் நாடகம். சிலப்பதிகாரத்தை வைத்துப் படைக்கப்பட்ட மாற்று நாடகம். கலைவிழாவின் நோக்கம் மாணவர்களிடம் உள்ள கலை ஆற்றலை வளர்த்தலே ஆகும். இம்முறை எல்லா மாணவர்களிடத்தும் பரவும் ஆயின் கலை ஆற்றல் பெற்று வளரும்.

**நாடகக் கருத்தரங்குகள்**

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் இவ் ஆண்டு மார்ச் 24-26 தேதிகளில் இருபதாம் நூற்றாண்டில் தமிழ் நாடகங்கள் என்ற தலைப்பில் ஒரு கருத்தரங்கை நடத்தியது. தமிழ் நாடகம் வளர வில்லை. கதையம்சம் இல்லை. ஆங்கிலச் சொற்கள் இடம் பெறுகின்றன-என்பன போன்றவை ஆய்வு செய்யப்பட்டன. நாடக நடிகர்கள் எழுத்தாளர்கள், இயக்குநர்கள் இன்று சினிமா உலகத்தை நம்பி இருக்க வேண்டியுள்ளது. தமிழ் நாடக வளர்ச்சி யில் பிறமொழி நாடகங்களின் பாதிப்பு எவ்வகையில் ஏற்பட் டுள்ளது என்பதும், இருபதாம் நூற்றாண்டிற்கு முன்னர் நாடக வளர்ச்சியின் தொய்வும் ஆராயப்பட்டன. தமிழ் நாடகத் துறையை நுண்ணிய நோக்குடன் காண்போம் என்று முடி வெடுத்த தமிழ்ப் பல்கலைக் கழக நாடகப்பிரிவைப் பாராட்ட வேண்டும். சினிமாவும் நாடகமும் பிணைந்துள்ள காரணத் தினால் அவற்றிலுள்ள தனித்தன்மை அவ்வளவு அழுத்தமாக எடுபடவில்லை என்றார் ஏ.எஸ். இராமன். நடந்த கருத்தரங்கு தமிழ் நாடக மேடை வளர்ச்சியின் பெருமையை எடுத்துக் காட்டியது. தமிழ் நாடக மறுமலர்ச்சியில் சிறந்த சிந்தனை யாளர்களும் பேராசிரியர்களும் பங்கு கொள்கின்றனர் என்ற செய்தி தமிழ் நாடக உலகில் ஒரு சிறந்த எதிர்காலத்தை உருவாக்கும், என்ற நம்பிக்கைச் சுடரை ஒளிவிடச் செய்கிறது.

புதுவை கம்பன் கலை அரங்கில் 10-4-83 அன்று நாடகக்கலை 'சிறப்பு முதல் மாநாடு' நடந்தது. நாடகக் கலையின்பம், நாடக மறுமலர்ச்சி, நாடகப் போக்குகள், நாடகக் கலை அன்றும் இன்றும் – என்னும் தலைப்புகளில் கருத்துக்கள் அலசப்பட்டன. நெய்வேலியில் 30–3–83 முதல் 3–4–83 வரை நெய்வேலி கலை மண்டபத்தில் நாடகக் கருத்தரங்கு நடத்தப்பட்டது. தொலைக் காட்சி நாடகமும், மேடை நாடகமும் பற்றி ஆய்வு நடத்தப் பட்டது.

**இதழ்கள்**

நாடகத்திற்கு எனத் தனி இதழாக வெளிவருவது சபா நாயகன் ஆகும். வேறு எதுவும் நாடகத்திற்கு எனத் தனி யிதழாக வெளிவருவதில்லை. சினிமாவிற்கே நாளும் நேரமும் பணிசெய்யும் வார மாத நாளிதழ்கள் சிலபோது நாடகச் சிறப்பிதழ் என இதழ்கள் வெளியிடுவதும் உண்டு; இவ்வகையில் இவ்வாண்டு ஆனந்தவிகடன், தாய், கல்கி போன்றனவும் தினமணிச்சுடரும் நாடகச் சிறப்பிதழ்களை வெளியிட்டுள்ளன.

**நாடகச் சேவை**

சென்னையிலுள்ள சபாக்கள், தனிக்குழுக்களான ஹெரான் தியேட்டர்ஸ், நேஷனல் தியேட்டர்ஸ், ஸ்டேஜ் ப்ரண்ட்ஸ் போன்றன அல்லாமல் மதுரையிலுள்ள சதங்கை – கலைத் தொடர்பகமும், இயல் இசை நாட்டிய நாடகத் துறையில் சரித்திரம் படைத்து வருகிறது. இதன் இயக்குநர் விமலா அமலன் இது சார்பாக இருபது நாடகங்களை இவ்வாண்டில் மேடையேற்றி உள்ளார். ஒலிப்பதிவுப் பதிவகம் மூலம் ஒலிப் பதிவு நாடாவில் நாடகங்களைப் பதிவு செய்து விற்பனை செய்து வருகின்றனர். இக்கலைத் தொடர்பகம் பாராட்டப்பட வேண்டிய, ஊக்குவிக்கப் படவேண்டிய நிறுவனமாகும்.

**நாடகம் நலம்பெற**

நாடகங்கள் மக்களை நல்வழிப்படுத்தவேண்டும். பொய் யான செய்திகளைக் கூறுதல் கூடாது. 'கர்ப்பகிரகம்' என்னும் நாடகத்தில் "ஒருவருடைய இரத்தத்தை இன்னொருவர் உடம்பில் செலுத்தினால் முதலாமவர் குணம் பின்னவருக்கு வந்துவிடும்." என்ற கூற்று உள்ளது. இரத்த அணுக்கள் அழிந்து உருவாகிக் கொண்டிருப்பன. ஒருவர் இரத்தம் இன்னொருவர் உடம்பில் செலுத்தப்படுவதால் குணம் மாறுபடும் என்ற கருத்து தவறானது. இதுபோன்ற பொய்யான தகவல்களைக் கொடுத்தல்கூடாது. நாடகம் சினிமா போன்றவற்றைப் பார்த் துப் பழகிவரும் மக்கள் அதையே கடைபிடிக்கவும் செய் கின்றனர். இதுபோன்ற தவறான கருத்து உயிர் இழப்பிற்கு, பண்பாட்டு இழப்பிற்கு ஏதுவாக அமைந்துவிடும்.

ஆங்கிலேயர்கள் விட்டுச் சென்ற எச்ச மேலாண்மை ஆங்கில மோகத்திற்கு அடிகோலுகின்றது. வளர்ந்து வரும் அறிவியலின் தேவையை நிறைவு செய்யும் வண்ணம் பரந்த நோக்குடன் சொற்களை இணைத்தும் புதியனவாக வடித்தும்

எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்னும் நிலையை அடையும் நாளே நாடகத்துறைக்கு நல்ல நாளாகும்.

நல்ல தமிழ் நாடகம் தோன்ற வேண்டுமாயின் நாடகத் துறையில் வியாபார நோக்கம் இருத்தல் கூடாது. தமிழையும் வளர்த்துத் தாமும் வளரவேண்டும். முடிந்த அளவில் மக்கள் மத்தியில் பதியக் கூடாத கருத்துக்களைக் கூறாது கொச்சை யான, இரட்டை அர்த்தம் தொனிக்கும் வார்த்தைகளைத் தவிர்த்து, சொல்லக்கூடிய கருத்துக்களை மட்டுமே கூறல் வேண்டும். பணமும் புகழும் கிடைக்க வேண்டி எதையும் எழுதி விடக்கூடாது. நாடகத்தால் எல்லோரையும் திருத்தமுடியும், திருந்த வேண்டும் என்னும் குறிக்கோளை மனத்தில் கொண்டு எழுதவேண்டும், நடிக்க வேண்டும்.

## 1983ல் நடைபெற்ற நாடகங்கள்

1 அசட்டு காதலர்கள்
2 அசோக வனம்
3 அத்தி மரம்
4 அந்தஸ்து
5 அலாவுதினும் 100 வால்ட் பல்பும்
6 அழியாச் செல்வம்
7 அழைப்பு
8 ஆவி புகுந்த வீடு
9 இணைந்த இதயங்கள்
10 இப்படியும் சிலர்
11 இரண்டாவது உயிர்
12 இரண்டாவது பாரதம்
13 இன்பத் தென்றல்
14 இன்ஸ்பெக்டர் சிவா
15 உண்மைக்கு ஏது உறக்கம்
16 உயிருள்ள இறந்த காலங்கள்
17 உரிமைக்குக் குரல் கொடுப் போம்
18 எந்தரோ மகானு பாவலு
19 எமதர்மன்
20 ஒரு கல் கனியாகிறது
21 கடற்கரையில் ஒரு கதை
22 கடமை தூங்குவதில்லை
23 கடவுள் தந்த காவியம்
24 கண் + அவன்
25 கர்ப்பக்கிரகம்
26 கரையைத் தொடாத அலைகள்
27 கல் நெஞ்சன்
28 கலையாத கனவுகள்
29 காதல் எதுவரை
30 கிருஷ்ண லீலா
31 கிருஷ்ணா கிருஷ்ணா
32 கிறிஸ்தவ வீரன்
33 குடத்தில் வைத்த தீபங்கள்
34 குற்றவாளியின் குற்றவாளி
35 கொடியவன்
36 கோவில் மணி ஓசை
37 சங்கீதம்
38 சப்தஸ்வரங்கள்
39 சம பந்தி
40 சிரித்தாலும் கண்ணீர் வரும்
1 சூப்பர் ஸ்டார்

42 செங்களம்
43 டவுட் தேசிகன்
44 தங்கைக்காக
45 திருமணங்கள் திருத்தப் படலாம்
46 திருமலை நாயக்கர்
47 துரோகி
48 தொட்டரும் நினைவுகள்
49 தேவசகாயம் பிள்ளை
50 தேவை ஒரு நட்சத்திரம்
51 நல்ல மனம் வாழ்க
52 நலம் நலமறிய அவா
53 நியாயங்கள் தர்மங்களாகின்றன
54 நினைவெல்வாம் நீதான்
55 நெஞ்சு பொறுக்குதில்லையே
56 ப்ளாட் நெ. 172
57 பகுதி நேர கணவர்
58 பாலைவனக்கள்
59 பிராயசித்தம்
60 பிரியமுள்ள ப்ரியா
61 புதிய திருப்பங்கள்
62 புலி ஆடு புல்லுக்கட்டு
63 பூவே இளைய பூவே
64 பொய் விளக்கு
65 பொய்யா மொழி
66 மதமே தெருவுக்கு வா
67 மன்னிப்பு
68 மாறுதல்
69 மிஸ் கிருஷ்ணா பராக்
70 மிஸஸ் கண்ணகி ஒரு— மிஸ் நோமர்
71 மை டியர் ஆஷா
72 மை ஃபேர் லேடி
73 மேரேஜ் மேட் இன் சலூன்
74 மௌன விழிகள்
75 யார் துரோகி
76 ரத்தத்தின் நிறம் சிகப்பு
77 ராக மாளிகை
78 வந்தவன்
79 வரிசை மாறிய எழுத்துக்கள்
80 வாசல்
81 வாசல்படி குனிந்து செல்லவும்
82 வாண வேடிக்கை
83 விசுவாமித்திரர்
84 விளக்கு — வெளிச்சம் பாதை
85 வீணையடி நீ எனக்கு
86 வெள்ளிப் பேழை
87 வெற்றி திருமகன்
88 ஹீரோயின்—27

# சொல்லகராதி

(எண் : பக்க எண்)